# GNANASAMBANDAM

**(WITH PICTURES)**

A TAMIL NOVEL

**1475**

BY

Rai Sahib T. M. Ponnoosawmy Pillay,

Retired Treasurer, Paper Currency Office, Rangoon,

(Author of Kamalatchi, Vijayasundaram, Gnanambikai, Sivagnanam, Gnanapragasam and Harischandra.)

SECOND EDITION

MADRAS:

PRINTED AT THE JUSTICE PRINTING WORKS

16-A, MOUNT ROAD.

1920



*Wrapper : Re.* 1-4.] [*Postage Extra.*

உ

கடவுள் துணை

# ஞானசம்பந்தம்

(படங்களுடன்)

(கமலாக்ஷி, விஜயசுந்தரம், ஞானம்பிகை,
சிவஞானம், ஞானப்பிரகாசம், அரிச்சந்திரன்)
இயற்றியவர்

இரங்கூன் பேபர் கறென்ஸி ஆபீஸ் பொக்கிஷதாரராக இருந்த
ராய் சாயிப்
திரிசிரபுரம் ம. பொன்னுசாமி பிள்ளை
இயற்றியது.

இரண்டாம் பதிப்பு

சென்னை :
"ஜஸ்டிஸ்" அச்சுக்கூடம்

1920



ராப்பர் ரூ 1 4 0] [தபால் வர்த்தனை வேறு.

# INTRODUCTION.

TWO years ago I had the pleasure of introducing to the Tamil world "Vijayasundaram" a Tamil Novel by Rai Sahib T. M. Ponnoosawmy Pillai, late of the Paper Currency Department, Rangoon. I have again the pleasure of introducing "Gnanasambandam," another Tamil Novel by the same author.

In our country where widow-marriage is yet a bitter cup, a widower can hardly find a partner in life, advanced in years and ripe in experience. Many are the evil consequences thereof. Jealousy and petulance lead the husband to a series of self-inflicted miseries. Avarice and hatred lead half-brothers to discord and crime. The finale is the general ruin of the family. This forms the burden of this novel. The evil of meaningless early marriage and the folly of allowing an only son to grow up in indulgence, form side currents of the main stream, and give a romantic colouring to the novel.

The beneficence of the hero, the folly of his father, the machinations of his half-brother, the calamities of his orphaned sister, the romantic marriage of a prodigal son, the vagrancy of a husband and wife in monastic disguise as saint and disciple, all these lead to the catastrophe. The father returns a millionaire. A puzzle reveals to the mother her long lost and forgotten children. An accident turns the life of the saint and disciple into a Comedy of Errors. All are reunited in happy bliss. Virtue triumphs, and vice falls.

The triumph of virtue and the fall of vice are beautifully portrayed by the author. The picture

presents a panoramic view of Vellala life in Southern India. The minute observation and close study of human nature by the author makes his novel realistic in one sense. His fertile imagination makes them idealistic in another sense. His wit and humour, his pathos, his satires, and the easy flow of his style make his novels pleasant reading. His power of holding the reader in suspense till the very end seems really remarkable. Some one phase of the life of Nattukottai Chetties, the world-wide bankers in the Southern hemisphere, is presented in every one of his novels. The trend of presentation is generally towards the remedying of some one weakness in their life and transactions. This being interwoven with the main thread does not mar the artistic effect of the novel. Only the XIX chapters of his novels may appear to be eyesores to general readers. But they may, I am sure, prove to be a panacea to young men who go away from schools and colleges with only a secular education. They may also perhaps lead some to a comparative study of religions.

I may add for the information of the reader that another very interesting novel (Gnanambikai) by our author, now in the press, will be coming out by the first or second week of July. One other novel now in embryo may see light ere long. Without intruding further upon the valuable time of the reader, I beg to take my leave of him, leaving him with "Gnanasambandam" now.

T. CHELVAKESAVAROYAN, M.A.

PERAMBUR, MADRAS,
*1st May* 1913.

கடவுள் துணை

# முகவுரை

இதற்குமுன் கமலாக்ஷி, விஜயசுந்தரம் என்னும் இரண்டு கற்பனைக்கதைகளை யான் எழுதி வெளியிட்டிருந்தேன். இப்பொழுது ஞானசம்பந்தம் என்னும் இதனை வெளியிடுகிறேன். அடுத்த மாதத்தில் ஞானம்பிகை என்பது வெளிவரும். வேறொன்றையும் இப்பொழுது எழுதிக்கொண்டிருக்கிறேன்.

கௌரவமான துரைத்தன உத்தியோகத்தில் நெடுநாள் சேவைசெய்து இப்போது உபகாரச் சம்பளம்பெற்று தேகயாத்திரை செய்துகொண்டிருப்பினும், என் காலத்தை வீணில் கழிக்காமல் சிறுவர் சிறுமியர்களுடைய நன்மையையும், விநோதத்தையும் கருதி உலகானுபவத்தை யொட்டி இக்கதைகளை எழுதத் துணிந்தேன்.

திரிசிரபுரம் எனது ஜன்மபூமியாதலால், இளமையில் தென்னாட்டுத் தமிழ் மக்களிடையில் வளர்ந்து வேளாளர் முதலாயினோருடைய குடிவாழ்க்கை வகைகளையும் அவர்கள் இயல்பையும் நான் நெருக்கமாகப் பழகி யறிந்திருந்தேன். இரங்கூன் நான் துரைத்தன சேவை செய்திருந்த இடமாகையால், நாட்டுக்கோட்டை நகரத்து ஸாவகாரிகளான வேளாண் செட்டிகளோடு கொடுக்கல் வாங்கல் ஸம்பந்தமாக நெருங்கிப் பழகி அவர்கள் இயல்பையும் அறிந்திருக்கிறேன். ஆகவே என்னுடைய கதைகள் பெரும்பாலும் வேளாண்குடி மக்களையும் வேளாண் செட்டிகளையுமே பற்றியிருக்கும்.

பொருள் உற்பத்திக்குக் காரணமான வேளாண் குடிகளும் பொருள் பரவுதற்குக் காரணமான வேளாண் செட்டிகளும் நெடுங் காலமாய்த் தென்னாட்டின் வளப்பத்துக்கு ஆதாரமானவர்கள் என்பது பழைய தமிழ் நூல்களாலும் கர்ன பரம்பரையான வரலாறுகளாலும் தெளிவானவிஷயம். இப்படிப்பட்டவர்களிடத்தில் காலாந்தரமாக வழங்கிவருகின்ற ஸதாசாரங்களின் இடையில் சில துராசாரங்களும் கிளைத்துத் தலைகாட்டி வருவது தற்காலத்தில் பிரத்தியக்ஷமான விஷயம். அவைகளுள் எளிதில் சீர்திருத்திக்கொள்ளக் கூடிய சிலவற்றை எடுத்துக்காட்டினால், அவர்கள் அவைகளை விலக்கவும் அதனால் நமது தேசம் சிறப்படையவும் ஒருவாறு முகாந்தரம் ஏற்படுமென்பதே இக்கதைகளை எழுதுவதில் நான் முக்கியமாகக் கொண்டிருக்கும் உட்கருத்து.

லௌகிகஸித்தி யடைவதே தற்காலத்தில் பாலர்களுக்கு நோக்கமாக இருக்கின்றது. ஆத்ம விசாரணை செய்வது ஏகதேசமாக இருக்கின்றது. இதற்குப் பரிகாரமாகச் சில பெரியோர்கள் அங்கங்கே ஆத்மார்த்தமான காலக்ஷேபங்களை நடத்தி வருகின்றனர். அவைகள் ஸங்கீத ஸாஹித்யத்தைச் சார்பாகக்கொண்டு நடத்துதலால் பாலர்களுடைய மனம் ஸங்கீதத்தில் மாத்திரம் செல்லுகின்றது. ரஸமான கற்பிதக் கதைகளின் இடையில் கதாநாயகர்கள் ஆத்ம போதம் அடையுமாறு முயற்சி செய்து ஸமய சித்தாந்தத்தை உணர்ந்ததாகப் புனைந்துரைப்பின், பாலர்களுடைய மனம் அதில் செல்லுதலாய் நமது தேசத்தில் வைதிக மார்க்கமும் தளிர்த்தோங்குவதற்கு ஒரு முகாந்தரம் ஏற்படும் என்பதும் இக்கதைகளை எழுதுவதில் யான் ஒருபுடை கொண்டிருக்கும் உட்கருத்து.

கற்பனைக் கதைகளின் அமைபபையும் போக்கையும் நடையையும் முடிவையும் ஆராய்ந்து நிதானிப்பது ரசிகர்களுக்கே இயலுதலான காரியம். ஆகவே என் கதைகளைப்பற்றி நான் வேறு பாயிரங்கூறல் இயலாது. என்னுடைய கமலாக்ஷி

யின் இரண்டாம் பதிப்பு ஈராயிரமும் இரண்டு வருடகாலத்தில் செலவாகி மூன்றும் பதிப்பை விரைவில் வெளியிட நேர்தலால், வினைக் கதைகளும் தமிழ் மக்களுக்கு அங்கீகாரம் ஆகக்கூடும் என்கிற நிச்சயத்தோடு நான் இப்போது வெளிப்போந்தேன். அவர்களுடைய அங்கீகாரமே எனக்கு சிரமபரிகாரம். நான் பெறுதற்கரிய பேறும் அதுவே.

தி. ம. பொ.

---

எச்சரிக்கை.—ஞானசம்பந்தன் என்னும் இதே பெயருடன் வேருெரு கற்பனைக் கதையை யாரோ எழுதி வெளியிடுவதாகச் செவிப்பட்டேன். யான் இதுவரையில் அந்த நூலேயும் அந்நூலாசிரியரையும் அறியேன். பெயரால் மயங்காமல், இதனை வாங்க விரும்புவோர், எனக்கும் புஸ்தக வியாபாரிகளுக்கும் இன்னூர் எழுதிய ஞானசம்பந்தம் என்று தெரிவித்துவிட்டால் விற்போருக்கும் வாங்குவோருக்கும் எவ்விதமான கஷ்டமும் உண்டாகாது.

தி. ம. பொ.



இது யாருடைய குழந்தை? என்று கேட்டாள்.

(3-ம் பக்கம் பார்க்க).



உ

கடவுள் துணை

# ஞானசம்பந்தம்

## 1—ம் அத்தியாயம்



திருவருளை முன்னிட்டு நாம் எழுதும் இக்கதை 19-ம் நூற்றாண்டைப் பற்றியது. அனேக சிவாலயங்களும் விஷ்ணுவாலயங்களும் நிறையப்பெற்று திருக்குடந்தை என்றும் கும்பகோணம் என்றும் பெயர்கொண்ட மஹாக்ஷேத்திரத்தில், மஹாமக உற்சவகாலத்தில், எல்லா ஆலயங்களிலும் ஏககாலத்தில் உற்சவம் நடப்பது வழக்கம். அக்காலத்தில் அந்நகரினர் அவைகளை அலங்கரித்து, வீதிகளை சுத்தப்படுத்தி, பூம்பந்தல்கள் போட்டு, மகர தோரணங்கள் நாட்டுவர். மஹாமகத்தன்று காலையில் ஆறுமணிக்கு வீதி கொள்ளாத ஜனங்கள், மஹாமக குளத்தை நாடிச்சென்று, சுவாமிதீர்த்தம் கொடுத்தவுடன் யாவரும் அக்குளத்தில் தீர்த்தமாடுவர். அப்பால் காவேரியாற்றிலும் தீர்த்தமாடித் திரும்புவர். அங்ஙனம் திரும்புங்கால், மூன்று அல்லது நான்கு வயதென்று மதிக்கத் தகுந்த ஒரு ஸுந்தரமான குழந்தை, வலது கையில் அற்புத வேலை செய்த திரட்சியான பொன் காப்பொன்றும், இரு காதுகளிலும் பொன்னால் கட்டிய மத்திக்காய்களும், இடுப்பில் பொன் அரைநாணும் அணிந்து, ஒரு கடையோரத்தில் நின்று அழுதுகொண்டிருப்பதை,

அவ்வழியே போவோர் பார்த்துக்கொண்டே போனார்கள். அவர்களில் ஒரு வாலிபன் அக்குழந்தையின் அருகிற்சென்று, "தம்பி! ஏன் அழுகிறாய்?" என்று கேட்டான். அக்குழந்தை அவனைக் கட்டிப் பிடித்துக்கொண்டு, "ஆயா கிட்டே போ" என்றது. வாலிபன் குழந்தையைத் தூக்கிக்கொண்டு, "ஆயா எங்கிருக்கிறார்கள்?" என்று கேட்டான். குழந்தை ஒரு பக்கத்தில் கையைக் காட்டியது. வாலிபன், குழந்தை காட்டிய இடத்திற்குப் போகும்பொழுது, "தம்பி! உன் பெயர் என்ன?" என்று கேட்டான்.

குழந்தை.—தம்பி.

வாலிபன்.—உன் ஆயா பேரென்ன?

குழந்தை.—ஆயா.

வாலிபன்.—உன் அம்மா பேரென்ன?

குழந்தை.—அம்மா!

வாலிபன்.—உன் அப்பா பேரென்ன?

குழந்தை.—அப்பா!

வாலிபன்.—உங்கள் ஊரெங்கே?

குழந்தை.—ஊர்.

வாலிபன்.—நடந்து வந்தீர்களா வண்டியில் வந்தீர்களா?

குழந்தை.—பண்டி!

வாலிபன்.—உன் கையில் ஒரு காப்புதானே இருக்கிறது. இன்னொரு காப்பு எங்கே?

குழந்தை.—அம்மா பூச்சிக்கு குடுத்தாங்கோ.

குழந்தை சொடுக்கும் விடைகளால் அக்குழந்தை யாருடையதென்று அறிந்துகொள்ள முடியாமல், அவ்வாலிபன் பெண்பிள்ளைகள் நின்றிருக்கும் இடங்களிலெல்லாம் போய், "உன் ஆயாளைக் காட்டு" என்று நெடுநேரம் தேடி யலைந்தும் பிரயோசனப்படாமல், தான் இறங்கியிருந்த இடத்திற்கு வந்தான். வாலிபன் மனைவி "தாங்கள் என்னைக் கொஞ்சமும் கவனியாமல், நான் பெண்களோடு நீராடிக்கொண்டிருக்க, ஜனசந்தடியில்

விட்டு நீங்கி, இப்பொழுது வந்தீர்களே" என்று கோபங்காட்டி, "இது யாருடைய குழந்தை?" என்று கேட்டாள்.

வாலிபன்.—"அடுத்த வீட்டுப் பெண்டுகளோடு நீ குளித்துக் கொண்டிருந்ததால், அவர்களுடைய துணையோடு வீட்டுக்கு வருவாய் என்று நினைத்து, ஈரவேஷ்டிகளை ஈரச்சேலையோடு வைத்துவரும்படி உன்னிடத்தி லனுப்பிவிட்டு, நான் தனித்து வந்தேன். வரும்பொழுது, இக்குழந்தை ஒரு கடைக்கருகில் நின்று அழுதுகொண்டிருந்தது. அருகிற் சென்று "ஏன் அழுகிறாய்?" என்று கேட்க, உடனே அது என்னைப் பிடித்துக்கொண்டு, "ஆயா கிட்டே போ" என்றது. நான் பரிதாபப்பட்டு, குழந்தையைத் தூக்கிக்கொண்டு, காலையிலிருந்து இதுபரியந்தம் பார்க்காத இடமெல்லாம் தேடிப்பார்த்தேன். பார்த்தும் குழந்தையின் தாயாவது தந்தையாவது எவரும் அகப்படவில்லை. காலையிலிருந்து ஒன்றும் சாப்பிடாமலிருப்பதால், அதற்கு உணவு கொடுக்கவேண்டுமே யென்று குழந்தையை இங்கே கொண்டுவந்தேன். நீ விரைவில் எனக்கும் குழந்தைக்கும் சாதம் வட்டி. சாப்பிட்ட பின் மீண்டும் போய்த் தேடிப் பார்க்கவேண்டும்" என்றான்.

வாலிபன் மனைவி, தன் நாயகனுக்கும் குழந்தைக்கும் சாதம் வட்டித்துக்கொண்டே, "குழந்தைக்கு ஒரு கையில்மட்டும் காப்பு இருப்பதின் காரணம் என்ன? யாராகிலும் கழற்றிக்கொண்டு போனார்களோ என்னமோ தெரியவில்லையே. யாராகிலும், நம்மேல் பழியேற்றிவிட்டால் என்ன செய்கிறது?" என்றாள்.

வாலிபன்.—குழந்தை போட்டிருக்கும் மற்ற நகைகளெல்லாம் அப்படியே இருப்பதால், நாம் அதைக்குறித்துக் கவலைப் பட வேண்டியதில்லை. குழந்தை சாதம் அள்ளிச் சாப்பிடத் தெரியாமல் விழிக்கிறது. நீ அதற்குச் சாதம் ஊட்டிவிடு. நான் குழந்தையைக் கொண்டுபோய்ப் போலீஸாரிடம் ஒப்படைக்க வேண்டும்" என்றான்.

வாலிபன் சொல்லியவிதம் அவன் மனைவி குழந்தைக்கு வயிறு நிரம்பச் சாதம் ஊட்டிவிட்டு, "குழந்தை கையிலிருக்கும் காப்பைப் பார்த்தீர்களா! யாளிமுகம் வைத்து, யாளியின் கண்களுக்கு நீலக்கல் புதைத்திருக்கிறது. இது ஒருவித விசித்திரமான வேலையாக இருக்கிறது. இவ்விதமான காப்பை நான் எப்பொழுதும் பார்த்ததில்லை" என்றாள்.

வாலிபன்.—"ஆம்! நானும் இவ்விதமான வேலையுள்ள காப்பைப் பார்த்ததில்லை" என்றான்.

சாப்பிட்டபிறகு வாலிபன் குழந்தையைத் தூக்கப்போனான். குழந்தை ஓடி வாலிபன் மனைவியைக் கட்டிப் பிடித்துக்கொண்டு, "நான் அழவில்லை. சும்மா இருக்கிறேன். என்னைப் பூச்சாண்டியிடத்தில் கொண்டுபோக வேண்டாம்" என்று அழுதது. அவள் அதிக துக்கப்பட்டு "குழந்தை அதிகம் பயந்திருக்கிறது. தாங்கள் குழந்தையை விட்டுப் போலீஸ் சேவகனைக்கொண்டு தேடச்சொல்லுங்கள். குழந்தை என்னைப் பிடித்துக்கொண்டு விடமாட்டேன் என்கிறது" என்றாள்.

வாலிபன்.—"குழந்தையைப் பார்க்கப் பார்க்கப் பரிதாபமாக இருக்கிறது. குழந்தையைக் குறித்துப் போலீஸாரிடம் யாராகிலும் சொல்லிவைத்திருக்கிறார்களா என்று நான் விசாரித்து வருகிறேன்" என்று சொல்லி வெளியில் சென்றான்.

வாலிபன் மனைவி, குழந்தையைத் தூக்கி முகமெல்லாம் முத்தங்கொடுத்து, "உன்னைத் தூக்கிக்கொண்டு போய்விடுவார்களென்றோ பயந்து என்னைக் கட்டிப் பிடித்துக்கொண்டாய்? பயப்படவேண்டாம். உன்னை ஒருவரும் தூக்கிக்கொண்டு போகமாட்டார்கள்" என்று குழந்தையை எடுத்துக்கொண்டு போய்க் கட்டிலில் படுக்கவைத்து, தானும் அருகில் படுத்துக் குழந்தையைத் தூங்கச்செய்தாள். பின், தான் சாப்பிட்டு வேலைகளைப் பார்த்துக்கொண்டிருக்கையில், மாலை நாலுமணிக்கு ஒரு போலீஸ்

இன்ஸ்பெக்டர் சேவகர்களோடும் வாலிபனோடும் வீட்டுக்குள் வருவதைக் கண்டு அவள் சமையலறைக்குள் சென்றாள்.

நித்திரைசெய்யும் குழந்தையைப் போலீஸ் இன்ஸ்பெக்டர் நிதானித்துப் பார்த்து, "ஐயா, நீர் குழந்தையோடு போலீஸ் ஸ்டேஷனுக்கு வரவேண்டும். எனக்கு ஸந்தேகம் அதிகம் உண்டாகிறது. நன்றாய் நடக்கமுடியாத குழந்தையை நீர் கடையோரத்தில் நிற்கக்கண்டேன் என்றால், யார் நம்புவார்கள்? குழந்தையைப் பார்த்தால் அது தனவந்தன் பிள்ளைபோல் காண்கிறது. அது இன்னம் என்னென்ன நகைகள் போட்டிருந்ததோ தெரியவில்லை. குழந்தையின் பெற்றோர்கள் கண்டு குழந்தை அணிந்திருக்கும் நகைகள் சரியாக இருக்கிறதென்று சொன்னாலொழிய, உம்மை விட்டுவிடுவதற்கு நியாயமில்லை" என்றார்.

வாலிபன்.—"தாங்கள் போலீஸ் ஸ்டேஷனுக்கு வரச்சொன்னால், வரத் தடையில்லை. குழந்தைக்கு வயது மூன்றுக்கு மேல் இருக்குமென்று நினைக்கிறேன். நன்றாய் நடக்க முடியும். தாங்கள் சொல்லும் விதம் நகைகளுக்கு ஆசைப்பட்டிருந்தால், குழந்தை போட்டிருக்கும் நகைகளை இது பரியந்தம் எடுத்துக்கொள்ளாமல் வைத்திருக்க நியாயமில்லை" என்று நகைத்தான்.

போலீஸ் இன்ஸ்பெக்டர்.—"குழந்தை போட்டிருந்த அதிக விலையுள்ள நகைகளையெல்லாம் எடுத்துக்கொண்டு, இப்போதுள்ள இவ்வளவு நகைகள்தான் இருந்ததென்று சொல்லக்கூடாதோ?" என்றார்.

வாலிபன்.—ஐயாவே! தாங்கள் அவ்விதம் எண்ணக் காரணம் ஏதோ தெரியவில்லை.

இன்ஸ்பெக்டர்.—என்னகாணும் பைத்தியக்காரனா யிருக்கிறாய்! குழந்தைக்கு நற்பச்சை மத்திக்காயும் பொன் அரைநாணும் போட்டிருக்கையில், ஒரு காப்பு மட்டுந்தானா இருக்கும்? மற்றக் காப்பு எங்கு போனது? கழுத்தில் ஒன்றும் இல்லா

மலா போயிற்று? மற்றக் காப்போடு கழுத்திலிருந்ததை யும் எடுத்துக்கொண்டு என்னேடு வரவேண்டும். வீண் கதைகள் என்னிடத்தில் சொல்வது பிரயோசனப்படாது.

வாலிபன், நகைத்து, "ஐயா! அழுதுகொண்டிருந்த குழந் தையைத் தூக்கிக்கொண்டு வந்த தோஷத்தால் எனக்குத் திருட் டுப்பட்டம் கிடைத்தது. குழந்தை நன்ருய்ப்பேசுகிறது. ஆனதால் தாங்கள் குழந்தையைக் கேட்டால் அதுவே சொல்லும்" என்று தூங்கிக்கொண்டிருந்த குழந்தையைத் தூக்கிவந்து இன்ஸ்பெக்டர் முன் விட்டான். குழந்தை, அங்கு நின்றிருந்தவர்களைக் கண்டு பயந்து, வாலிபனைக் கட்டிப் பிடித்துக்கொண்டது. வாலிபன் "பயப்படவேண்டாம்" என்று வீட்டிலிருந்த வாழைப்பழத்தில் ஒன்றை இன்ஸ்பெக்டரிடம் கொடுத்து, "ஐயா வாழைப்பழம் கொடுப்பார், அவரிடம் போ" என்று சொல்லியும் போகாமல் கழுத்தைப் பிடித்துக்கொண்டிருப்பதைக் கண்டு, பலவந்தமாகக் குழந்தையை இன்ஸ்பெக்டர் தூக்கிக்கொண்டு வாழைப்பழத் தைக் கொடுத்து, "அப்பா, இந்தக் கையில் ஒரு காப்பிருக்கிற தே! அந்தக் கையில் இருந்த காப்பு எங்கே?" என்று கேட்டார்.

குழந்தை.—அம்மா பூச்சிக்கு குடுத்தாங்கோ.

இன்ஸ்பெக்டர்.—உன் அம்மா பெயர் என்ன?

குழந்தை.—அம்மா.

இன்ஸ்பெக்டர்.—உன் பெயர் என்ன?

குழந்தை.—தம்பி.

வாலிபன்.—நானும் சிறுவனைக் கேட்டபொழுது இவ்விதமாக வே பதில் சொன்ஞன்.

இன்ஸ்பெக்டர்.—உன் கழுத்திலிருந்தது எங்கே?

குழந்தை.—அண்ணன் எடுத்துப்போனுன்.

இன்ஸ்பெக்டர்.—(வாலிபனைக்காட்டி) இந்த அண்ணஞ எடுத் துக்கொண்டார்?

குழந்தை.—(தலையை அல்லவென்று அசைத்து) எங்கண்ணான் எடுத்துப்போனுன்.

இன்ஸ்பெக்டர்.—உங்க அண்ணன் பேர் என்ன ?

குழந்தை.—அண்ணன் !

இன்ஸ்பெக்டர், குழந்தையின் வாய்ப்பிறப்பால் ஒன்றும் அறியக்கூடாமல், வாலிபனைப் பார்த்து, "உம்முடைய மனைவி எங்கே ? கூப்பிடும். நான் சிலவற்றைக் கேட்கவேண்டும்" என்றார்.

வாலிபன், சமையலறையில் நின்று அழுதுகொண்டிருந்த தன் மனைவியை அழைத்துவந்து, அவர் முன் விட்டான். இன்ஸ்பெக்டரிடம் இருந்த குழந்தை ஓடிப்போய் வாலிபன் மனைவியைக் கட்டிப் பிடித்துக்கொண்டு, "அம்மா அழாதே. உன்னை அடிக்கமாட்டங்க. உன்னை அடிச்சா, நான் பெரம்பால் அடிப்பேன். எனக்குப் பழம் குடுத்தாங்க. உனக்குப் பழம் குடுப்பாங்க. நான் மிட்டாய் வாங்கிக் குடுக்கிறேன், அழாதே. நீ அழுதா நானும் அழுவேன்" என்றது.

வாலிபன் மனைவி, தன் கண்களைத் துடைத்துக்கொண்டு, குழந்தையைத் தூக்கி முத்தங்கொடுத்து, "நீ அழவேண்டாம் என் கண்மணீ" என்று அணைத்துக்கொண்டாள். இன்ஸ்பெக்டர், குழந்தை சொல்லியதைக் கேட்டு நகைத்து, "என்ன செய்கிறதென்று ஒன்றும் விளங்கவில்லை" என்றார்.

"என்ன விளங்கவில்லை யென்கிறீர்" என்று சொல்லிக்கொண்டே ஒருவர் வீட்டுக்குள் வருவதைக் கண்ட இன்ஸ்பெக்டர், வந்தவரைப் பார்த்து நமஸ்கரித்து, "எஜமான் இந்த ஸமயம் இவ்விடத்தில் வந்தது அதிசயம்" என்றார்.

வந்தவர்.—அதிசயம் ஒன்றுமில்லை. நான் அவசரமாக சுவாமி மலைக்குப் போகவேண்டி, உம்மிடத்தில் ஒன்றைச் சொல்லிப் போகவேண்டுமென்று வண்டியை ஸ்டேஷனுக்கருகில் நிறுத்தி, உம்மைக் கூப்பிடச் சொன்னேன். நீர் அங்கில்லை யென்றும் இவ்விடத்தில் வந்திருக்கிறீரென்றும் அறிந்து, நேரிற் சொல்லிப் போகலாம் என்று வந்தேன். இங்கு என்ன விசேடம் ?

**இன்ஸ்பெக்டர்.**—இச்சிறு குழந்தை ஒரு கடையருகில் நின்று அழுதுகொண்டிருந்ததாகவும், அதைத் தூக்கிக்கொண்டு எங்கும் திரிந்தும் இக்குழந்தையின் சொந்தக்காரர் கிடைக்காமல் தான் கொண்டுவந்து வைத்திருப்பதாகவும், அதன் கையில் ஒரு காப்பிருப்பதாகவும் சொன்னார். அது விஷயம் அதிக ஸந்தேகங்கொள்ள இடந்தருகிறது.

முதலாவது.—குழந்தையைப் பார்த்தால் தனவந்தர் பிள்ளை போல் இருக்கிறது. ஆனதால் இன்றுண்டான ஜனக் கூட்டத்தில் நகைகளோடு கடைக்கருகில் நின்று அழுது கொண்டிருக்க விட்டுவிடுவார்களா ?

இரண்டாவது.—குழந்தை கையில் ஒரு காப்பிருக்க, மற்றொரு கையில் காப்பில்லாமற் போகுமா ?

மூன்றாவது.—குழந்தை காதில் நற்பச்சையால் கட்டிய மத்திக்காயும் இடுப்பில் பொன் அரைநாணும் இருப்பதால், கழுத்திலும் எதாகிலும் நகைகள் இருந்திருக்கவேண்டும். குழந்தையும் கழுத்திலிருந்ததை அண்ணன் எடுத்துக் கொண்டு போய்விட்டான் என்கிறது. குழந்தை பேசுகிறதேயாயினும், ஒருவர் பெயரையும் சொல்லாமல் "அம்மா, அப்பா, அண்ணன்" என்றே சொல்லுகிறது. குழந்தை மூன்று நான்கு மணி ஸாவகாசத்தில் இவருடைய மனைவியின்மேல் அதிக ஆசையைக்காட்டி வார்த்தையாடுகிறது. எங்களை யெல்லாம் பிரம்பால் அடிப்பதாகவும் இவர் மனைவிக்கு மிட்டாய் வாங்கிக் கொடுப்பதாகவும் சொல்லி, 'அழவேண்டாம், அழுதால் நானும் அழுவேன்' என்கிறது.

**வந்தவர்.**—அக்குழந்தையைக் கீழே விடச்சொல்லிப் பார்த்து, "ஆ! ஆ! இது மிக்க அதிசயமே! நான் காலை காவேரியாற்றுக்குப் போகும்பொழுது, இந்தக் குழந்தை கடையருகில் நின்று அழுதுகொண்டிருந்ததைப் பார்த்தேன். இதன் கையிலிருக்கும் காப்புக்கு முகம் வைத்திருந்தது

போலிருந்தது. மற்றக் கையில் காப்பில்லாமல் இருந்தது. கழுத்திலும் ஒன்றுமில்லை. நான் அருகில்சென்று குழந்தை ஏனழுகிறதென்று விசாரிக்கலாம் என்றெண்ணினேன். ஆயினும் குழந்தைக்குரியவர் ஸமீபத்தில் எதாகிலும் வேலையாகப் போயிருப்பார்களென்று எண்ணிப் போய்விட்டேன். ஆனதால் இவர்மேல் குற்றஞ்சொல்ல நியாயமில்லை. நீர் எல்லா போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் எழுதி, குழந்தை காணுமற்போனதென்று யாராகிலும் போலீஸ் ஸ்டேஷனில் தெரிவித்திருந்தால், நமக்குத் தெரிவிக்கும் படியாகச் செய்யவேண்டும். குழந்தை அணிந்திருக்கும் நகைகள் இன்னின்னவென்றும் அவைகள் பெறுமதி இவ்வளவென்றும் எழுதிவைத்துக்கொள்ளும். (வாலிபனைக் காட்டி) இவர் இந்த ஊரா வெளியூரா ?

**வாலிபன்.**—ஐயாவே ! நான் இந்த ஊரல்ல, நான் மஹாமக உற்சவத்துக்கு என் மனைவியோடு வந்தவன். ஸமீபத்தில் இவ்வூரைவிட்டு நீங்கவேண்டியவனே. இக்குழந்தை எங்களோடிருப்பது எங்களுக்கு ஸந்தோஷமாயினும், இன்ஸ்பெக்டர் அவர்கள் எண்ண இடங்கொடுத்ததுபோல் மற்றவர்களும் எண்ண இடந்தரும். ஆதலால் தாங்கள் இக்குழந்தையை வேறு யாரிடத்திலாவது விட்டுவைத்திருந்தால் உத்தமமாயிருக்குமென்று எண்ணுகிறேன்.

**வந்தவர்.**—உம்மை இனிமேல் ஒருவரும் தொந்தரை செய்யார்கள். குழந்தையின் தாய்தந்தையர் அகப்படும்வரையில் (குழந்தை உங்களிடத்தில் அதிகம் பிரியத்தைக் காட்டுகிறதால்) அது உங்களிடத்தில் இருக்கட்டும். நான் அதற்கு வேண்டியதைச் செய்வேன்.

இன்ஸ்பெக்டர் "நான் உம்மேல் ஸந்தேகப்பட்டதைக் குறித்து மன்னிக்கவேண்டும். உமக்கு உத்தரவு செய்கிறவர் இவ்வூர் தாசில்தா ரானதால், நீர் ஒன்றுக்கும் பயப்படாமல் அவர் உத்தரவு பிரகாரம் நடக்கலாம்" என்று சொல்லிக் குழந்தை

போட்டிருக்கும் நகைகளைக்குறித்து எழுதிக்கொண்டார். அப்புறம் யாவரும் நீங்கினார்கள்.

வாலிபன் மனைவி குழந்தையை அணைத்து முத்தங்கொடுத்து, “ஆ! என் கண்மணி! என்னை அடிப்பவர்களை நீ அடிக்கிறாயா! எனக்கு மிட்டாய் வாங்கிவந்து தருகிறாயா!” என்று மீண்டும் முத்தங்கொடுத்து, பின் தன் நாயகனைப் பார்த்து, “இக்குழந்தைக்கு என்ன அறிவு பார்த்தீர்களா!” என்றாள்.

வாலிபன்.—ஆம்! ஆம்! உனக்குக் குழந்தை மிட்டாய் வாங்கிக் கொடுக்குமுன், நான் முதலில் குழந்தைக்கு வாங்கிக் கொடுக்கவேண்டும்.

வாலிபன் மனைவி.—தாங்கள் குழந்தையை வேறு யாரிடத்திலாவது விட்டு வைக்கும்படி சொன்னதைக் கேட்டவுடன் குழந்தையைக் கொண்டுபோய்விடுவார்களோ என்று பயந்திருந்தேன். அவர்கள் குழந்தை விஷயத்தில் சொன்னதெல்லாம் எனக்கு ஸந்தோஷமாகவே இருந்தது.

வாலிபன் தன் மனைவி சொல்வதைக்கேட்டு, மகிழ்வோடு குழந்தைக்கு மிட்டாய் வாங்கிவருவதாக வெளியில் சென்றான்.

---

## 2—ம் அத்தியாயம்

திருச்சிராப்பள்ளியில், காவேரி யாற்றுக்குப் போகும் வழியிலுள்ள கீழைச் சிந்தாமணியில், கடைகளை அடுத்திருக்கும் ஓர் மச்சுவீட்டில், மாலை ஐந்தரை மணிக்கு, இருபது அல்லது ஒன்றிரண்டு அதிகமென மதிக்கத் தகுந்த வயதுடைய ஓர் ஸௌந்தரமான பெண்பிள்ளை, ஜன்னலுக்கருகில் நின்று பார்த்துக்கொண்டிருந்தாள். அப்பொழுது இருபத்தைந்து வயதுடைய ஓர் ஸௌந்தரமான வாலிபன், அப்பெண்பிள்ளையைப் பார்த்து நகைத்து, அவ்வீட்டுக்குள் சென்றான். அப்பெண்

பிள்ளை, வீட்டுக்குள் வந்தவனை, வீட்டின் உட்கூடத்திலிருந்த விசிப்பலகையில் உட்காரச்சொன்னாள். வாலிபன் தன் கையி லிருந்த மூட்டையையும் வாழையிலையில் கட்டியிருந்த பொட்ட ணத்தையும் விசிப்பலகையில் வைத்து உட்கார்ந்தான்.

வாலிபன் பெண்பிள்ளையைக் கண்டு வீட்டுக்குள் போனதை, முப்பத்தைந்து அல்லது ஒன்றிரண்டு அதிகமென மதிக்கத்தகுந்த வயதுடைய வேறொரு ஸுந்தரமான புருடன் கண்டு, அவர்களறியாமல் வீட்டின் உள்வாசற் கதவின் ஓரத்தில் நின்று, என்ன பேசுகிறார்களென்று கேட்டுக்கொண்டிருந்தான்.

பெண்பிள்ளை.—அதென்ன மூட்டையும் பொட்டணமும் ?

வாலிபன்.—காமாக்ஷி ! உயர்ந்த வஸ்துக்கள் அல்ல ; மிட்டாயும் புட்பமுமே.

காமாக்ஷி.—மிட்டாயும் புட்பமும் யாருக்குக் கொண்டுபோகி றீர்கள் ?

வாலிபன்.—யாருக்குக் கொண்டுபோகிறது ? உனக்கே கொண்டு வந்தேன் (என்று நகைத்தான்).

காமாக்ஷி.—எனக்காகவா கொண்டுவந்தீர்கள் ! எனக்குக் கொண்டுவந்தால், வந்தவுடன் என்னிடத்தில் கொடுக்கா மல் தங்களிடத்தில் வைத்துக்கொண்டீர்களே ! உமதுமேல் அன்பு கொண்டவர்களுக்கு வாங்கிப்போகிறீர்கள்போல் காண்கிறது.

வாலிபன்.—காமாக்ஷி ! என்னிடம் அன்போடு வார்த்தையாடு பவர்கள் உன்னையல்லாமல் வேறு யார் இருக்கிறார்கள் ? உனக்கே கொண்டுவந்தேன் (என்று சொல்லிக்கொண்டே மிட்டாயையும் புட்பத்தையும் கொடுத்தான்).

காமாக்ஷி.—(நகைத்துக்கொண்டேவாங்கி விசிப்பலகையிலேயே வைத்துவிட்டு) தாங்கள் இவ்வளவு பிரியத்தோடு எனக்கு வாங்கிவந்ததைக் குறித்து ஸந்தோஷப்படுகிறேன். தாங் கள் உண்மையில் எனக்காகவா வாங்கிவந்தீர்கள் ?

வாலிபன்.—உனக்காகவே வாங்கிவந்தேன். உன் பிள்ளைகளும் பாட்டியாரும் எங்கே?

காமாக்ஷி.—அவர்கள் இல்லை. தங்களிடம் தனித்துப்பேச எப்பொழுது ஸமயம் கிடைக்குமென்று எதிர்பார்த்திருந்தேன். இன்று என்னைவிட்டு ஓடிப்போகாமல், நான் சொல்வதை முற்றிலும் கேட்டே போகவேண்டும். நான் கேட்பதற்கு பதில் சொல்லவேண்டும். தாங்கள் செய்கிறதெல்லாம் நியாயந்தானா?

வாலிபன்.—நான் என்ன தவறு செய்கிறேன் என்கிறாய்?

காமாக்ஷி.—தாங்கள் செய்யும் தவறு இன்னதென்று நானே சொல்லவேண்டும்? தங்களுடைய மனம் தங்களுடைய குற்றத்தைச் சொல்லவில்லையா? தாங்கள் இவ்விடம் வந்து போய் எத்தனை நாள் ஆகிறது?

வாலிபன்.—காமாக்ஷி! நான் என்ன செய்வேன்? நான் வரும் பொழுதெல்லாம் யாராகிலும் வீட்டில் இருக்கிறார்கள். நான் தனித்திருந்து வார்த்தையாட ஸந்தர்ப்பம் கிடைக்கிறதில்லை. ஆனதால் நான் அடிக்கடி வரத் தடையாகிறது.

காமாக்ஷி.—என் நாயகன் வெளியில் போயிருக்கிறார். அவர் வருமுன்னம் நான் கொண்ட கருத்தை முடித்துவிடவேண்டும். உமதுமேல் ஆசைகொண்டிருப்பவளை, விட்டு நீர் தேவடியாள் வீடே கதியாயிருப்பது நியாயமா?

வாலிபன்.—என்மேல் ஆசை கொண்டிருப்பவள் ஆர்? (என்று நகைத்தான்).

காமாக்ஷி.—தங்களை இச்சித்திருப்பவள் இன்னாளென்று தாங்கள் கண்டுகொள்ளாமலா இருக்கிறீர்கள்? நான் சொல்வதின் குறிப்பை அறிந்தும், தாங்கள் அறியாதவர்போல் பேசுவது நியாயமல்ல.

வாலிபன்.—காமாக்ஷி! நீ சொல்வதின் குறிப்பை அறிந்தாலும், உன்னுடைய இஷ்டம்போல் செய்யக் காலம் ஒத்துக்கொள்ள வேண்டாமோ?

**காமாக்ஷி.**—தாங்கள் சொல்லுவதெல்லாம் எப்பொழுதும் வேடிக்கையாகவே இருக்கிறது. வீண்காலம் போக்காமல் நான் சொல்லுவதுபோல் செய்கிறீரா இல்லையா?

**வாலிபன்.**—உன் நாயகன் விரைவில் வந்துவிடுவாரென்று நீ சொல்லுவதால், நான் மற்றொரு ஸமயம் வந்து நீ சொல்வதைக் கேட்கிறேன். இன்று எனக்கு ஓர் அவசரமான வேலை இருக்கிறது. என்னை இன்று மன்னித்து விடைகொடுக்கவேண்டும்.

**காமாக்ஷி.**—தங்களுக்கு எப்பொழுதும் அவசரமான வேலை அதிகம் இருக்கிறதென்பது எனக்குத் தெரியும். தாங்கள் இவ்விடம் வரும்பொழுதெல்லாம் அவசரமான வேலை இல்லாத காலம் உண்டோ? என் நாயகனைக் குறித்து நீர் கவனிக்கவேண்டாம். அவர் வர இன்னும் நெடுநேரம் செல்லும். தங்களுடைய அவசரமான காரியத்தை நிறுத்திவைத்து, என் வேண்டுகோளைச் செய்தால், தங்களை எந்நாளும் மறக்கேன். நான் எழுதியனுப்பிய கடிதத்தைத் தாங்கள் வைத்திருக்கிறீர்களா?

**வாலிபன்.**—நீ எழுதிய கடிதங்கள் யாவும் பதனமாக இருக்கின்றன. கடிதங்களில் கண்டவைகளைக் குறித்துப் பேச இப்பொழுது அவகாசமில்லை.

**காமாக்ஷி.**—அவ்விதம் சொல்லி இன்று என்னை ஏமாற்றிப் போக முடியாது.

**வாலிபன்.**—காமாக்ஷி! நீ என்னை விடமாட்டாய்போல் காண்கிறது.

**காமாக்ஷி.**—தாங்கள் இங்கே நெடுநேரம் இருக்கவேண்டிய அவசியம் இல்லை. என் எண்ணம் பழுதாகாமலிருக்கச் செய்ய வேண்டும் என்பதே என் வேண்டுகோள்.

**வாலிபன்.**—உன்னுடைய இஷ்டப்பிரகாரம் நடந்து உன் எண்ணத்தைப் பூர்த்திசெய்யத் தடையில்லை. மற்றொரு நாள் வருகிறேன். இவ்வார்த்தையை நம்பலாம்.

**காமாக்ஷி.**—இன்று கிடைத்த தருணம்போல் மற்றொருநாள் கிடைப்பது அருமை. ஆனதால் என் இஷ்டப்பிரகாரம் நீர் நடக்கவேண்டும்.

**வாலிபன்.**—காமாக்ஷி! உன்னுடைய இஷ்டம் அவ்விதமானால், உன் மனம்போல் நடக்கத் தயாராக இருக்கிறேன். உன் மனதிலுள்ளதைச் சொல்.

"மனம்போல் நடக்கத் தயாராகவா இருக்கிறாய்? ஆ! ஆ! துன்மார்க்கர்களே" என்று மறைவாயிருந்தவன் சொல்லிக் கொண்டே ஓடிவந்து, காமாக்ஷியின் கன்னத்தில் குத்தினான். அவள் அக்குத்தோடு நிலத்தில் சாய்ந்தாள். வாலிபன் "ஓ அண்ணா! இதென்ன காரியம் செய்தீர்? உமது மனைவியைக் கொன்றுவிட்டீரே" என்று காமாக்ஷியைத் தூக்க வந்தான். அவன் சொல்வதைக் கேட்டு "அடா துன்மார்க்கா! உன்னையும் கொல்லாமல் விடேன்" என்று வீட்டுக்குள் சென்று தடி யொன்றை எடுத்துவந்தான்.

வாலிபன் தடியைப் பார்த்து, இனி இங்கிருந்தால் பிர மாதமாக முடியுமென்று வெளியில் ஓடினான். உடனே அவனைப் பின்தொடர்ந்து போகாமல், வீட்டுக்காரன் உள்ளே சென்று பெட்டியைத் திறந்து ஏதோ சிலதை எடுத்து மடியில் வைத்துக் கொண்டு, வெளியில் தன் கைத்தடியோடு வாலிபன் சென்ற வழியே சென்றான். வாலிபன், பெருந்திகிலுடன், வழிப்போக் கர் அதிகமாகப் போகிறவர்களோடு விரைவாய் நடந்து, காவேரி யாற்றின் பாலத்தைக் கடந்து, ஜனங்கள் நடமாட்ட மில்லாத திருவளர்சோலைக்குப் போகும் மார்க்கமாகத் திரும்பிச் சிலதூரம் சென்றான். பின்பு இருள் மூடியதால் ஜனசந்தடியில்லாமல் தனித்துப் போகும்பொழுது, ஆளரவங்காட்டாமல் பின்னால் வந்தவன் ஒருவன் திடீரென்று வாலிபனைத் தன் கைத்தடியால் தலையில் அடித்தான். அவ்வடி தலையில் படாமல் தோளில் பட்டது. உடனே அவன் திரும்பிப் பார்த்து, அடித்தவன் கையிலிருந்த தடியைப் பிடித்துக்கொண்டு, "அண்ணா! நீர் ஏன்

யையும கவனாககாமல் இவ்விதம் கோபங்கொண்டு காமாக்ஷி யையும் அடித்ததல்லாமல், அசதியில் வந்து என்னையும் அடித் தீர். உம்முடைய கோபத்தை என்னிடத்தில் காட்டவேண்டாம்'' என்றான்.

**காமாக்ஷியின் நாயகன்.**—அடா துன்மார்க்கா! உன்னைக் கொல் லாமல் விடேன். உன்னைக் கொன்றுவிடவே உன்னைப் பின்றொடர்ந்து வந்தேன். நீ உயிரோடு வீடுபோய்ச் சேர்வாயென்று எண்ணவேண்டாம்.

**வாலிபன்.**—நான் சொல்வதைக் கேட்காவிட்டால் பின்பு அதிக துன்பம் அடைவீர். பேசாமல் வந்த வழியாகத் திரும்பிப் போய்விடுதல் உத்தமம்.

**காமாக்ஷியின் நாயகன்.**—நானு துன்பப்படப் போகிறேன்? பார் (என்று மீண்டும் கைத்தடியால் அடித்தான்).

**வா**லிபன் அத்தடியைப் பிடுங்கி எறிந்து, அவனைப் பிடித்துத் தள்ளினான். அவன் கீழ்விழுந்து எழுந்து மீண்டும் வாலிபனோடு போர்புரிய, இருவரும் கட்டிப்பிடித்துப் போரா டிக்கொண்டிருந்தார்கள். நெடுநேரம் போராடி, காமாக்ஷி புரு டன் நிலத்தில் சாய்ந்தான். வாலிபன் பயந்து, "நாம் இனி இங்கு நின்றிருப்பது நன்றல்ல" என்று அவ்விடத்தை விட்டு நீங்கினான்.

**மூ**ன்றாம் நாள் மாலை 6-மணிக்கு, காமாக்ஷி சுரத்தோடு பிரக்ஞையற்றுப் படுத்திருக்கும்பொழுது, ஒரு பெண்பிள்ளை அருகில் உட்கார்ந்திருந்தாள். அந்த ஸமயத்தில் பெரியவர் ஒருவர் வந்து, காமாக்ஷிக்கருகில் உட்கார்ந்திருக்கும் பெண்பிள்ளையைப் பார்த்து, எப்படியிருக்கிறதென்று கேட்டார்.

**பெண்பிள்ளை.**—எப்படியிருக்கிறதென்று சொல்லுவேன். பிரக் ஞையற்றுப் பாலும் குடிக்காமல் இருக்கிறாள். வைத்தியர் சொல்வதைப் பார்த்தால் பயமாக இருக்கிறது.

**பெரியவர்.**—என்ன அநியாயம்! நாதியற்ற பிணம்போல் அடக்கம் செய்ய நேரிட்டதே! (என்றார்).

**பெண்பிள்ளை.**—யாரை நாதியற்ற பிணம்போல் அடக்கம் செய்ய நேரிட்டது என்றீர் ?

**பெரியவர்.**—நான் பாவி, ஏன் அந்த மார்க்கம் வரவேண்டும் ? நரிகள் உருத்தெரியாமல் உடலையெல்லாம் தின்றும், அவன்மேல் போட்டிருந்த அங்கவஸ்திரம் துண்டுதுண்டாய்க் கிழிந்து அடையாளத்துக்கு அங்கே இருந்தது என்ன பரிதாபம் !

**பெண்பிள்ளை.**—யாருடைய அங்கவஸ்திரம் அடையாளத்துக்கிருந்தது ? தாங்கள் சொல்வது ஒன்றும் விளங்கவில்லை தெளிவாகச் சொல்லுங்கள்.

**பெரியவர்.**—நான் மாலை திருவளர்சோலையிலிருந்து வரும்பொழுது, காவேரியாற்றுக்கருகில் போலீஸார் கும்பலாக இருப்பதைக்கண்டு, என்னவென்று போய்விசாரித்தேன். மூன்று நாளைக்குமுன் இருவர் அவ்விடத்தில் கோபமாக வார்த்தையாடிச் சண்டை போட்டுக்கொண்டிருந்தார்களென்றும், அவர்களிலொருவன் மற்றவனைக் கொன்று போய்விட்டானென்றும், கொலை செய்தவன் பெயர் தெரியவில்லையென்றும், அவனைத் தேடித்திரிகிறார்களென்றும், இறந்து கிடப்பவன் இன்னானென்று கண்டுகொள்ள முடியவில்லையென்றும் சொல்லி, “பிணத்தின்மேலிருக்கும் துணிகளால் கண்டுகொள்ள முடியுமோ வென்று பார்த்துக்கொண்டிருக்கிறோம்” என்றார்கள். நானும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுது, பிணத்தின் அருகிற் கிடந்த அங்கவஸ்திரத்தை எடுத்துப் பார்த்தார்கள். அதில் முடிச்சொன்று இருந்தது. அதை அவிழ்த்தபொழுது அதில் பிரித்த கடிதம் ஒன்று உறையுடனிருந்தது. அக்கடிதத்தைப் பிரித்து அவர்கள் “தியாகராஜபிள்ளை” யென்று சொன்னவுடன், நான் அங்கவஸ்திரத்தைப் பார்த்து, “அவர் வெளியில் போகும் பொழுதெல்லாம் அவ்வித அங்கவஸ்திரத்தோடு போவதைப் பார்த்திருக்கிறேன்; அவர் இன்னொன்று

தெரியும்" என்றபின், என் வாக்குமூலத்தைக் கேட்டு, பிணத்தையெடுத்து அடக்கம் செய்துவிட்டார்கள். தியாக ராஜ பிள்ளைக்கு இவ்விதமான் மரணமா நேரிடவேண்டும்?

அத்தருணம், பிரக்கினையற்றிருந்த காமாக்ஷி கண் விழித்து, "என்ன சொன்னீர்? என் நாயகன் இறந்துவிட்டாரா?" என்று எழுந்து, தலையி லடித்துக்கொண்டு ஓவென் றலறி, "ஐயோ! நான் என்ன செய்யப்போகிறேன்?" என்று கீழ்விழுந்து மூர்ச்சையாய்விட்டாள். அருகிலிருந்த பெண்பிள்ளை அவளைப் படுக்கவைத்து, வைத்தியரை உடனே அழைத்துவரப் பெரியவரை அனுப்பினுள்.

பெரியவர்.—காமாக்ஷி பிரக்கினை யற்றிருக்கிறு ளென்று நினைத்தே நான் இதைச் சொன்னேன். இந்தக் கொடு மைக்கு என்ன செய்கிறது? நான் சொன்ன சொல்லே அவளைக் கொன்றுவிடுமே (என்று வெளியில் ஓடிஞர்).

காமாக்ஷிக்கு அருகிலிருந்தவள் அவளுக்கு வேண்டிய தைச் செய்துகொண்டிருக்கும்பொழுது, பெரியவர் வைத்திய ரோடு மற்றெரு பெண்பிள்ளையையும் அழைத்து வந்தார். வைத்தியர் கைநாடியைப் பார்த்து, "சுரம் அதிகரித்திருக்கிறது" என்று சொல்லிக்கொண்டிருந்தார். அப்போது மற்றொரு வாலி பன் வந்து நின்று, "இதென்ன? என் தாயாருக்கு என்ன செய் கிறது? என் தந்தை எங்கே?" என்றுன்.

பெரியவர்.—அப்பா துரைசாமி! உன்னுடைய தந்தையின் கதியைச் சொல்ல எனக்கு அதிக துக்கமாக இருக்கிறது. அவர் இறந்துவிட்டார். நீ இனிமேல் உன் தாயையும் ஸகோதரனையும் காப்பாற்றவேண்டும்.

அதைக் கேட்டவுடன் துரைசாமி கீழ்விழுந்து ஓவென் றலறி, "என்னுடைய கதி இவ்விதமாகவா முடியவேண்டும்? என் ஸகோதரனும் ஸகோதரியும் என் பாட்டியாரோடு வாந்தி பேதியால் முடிவு பெற்றதோடு, என் தந்தையுமா இறக்க வேண்டும்?" என்று கடகடவென்று புரண்டுபுரண்டு அழுதான்.

பெரியவரும் பெண்பிள்ளைகளும் "இதென்ன காலக்கேடு? புருடன் இறந்ததோடு பிள்ளைகளுமா இறக்கவேண்டும்? இனி காமாக்ஷியம்மாள் பிழைப்பாளென்று நினைக்க இடமில்லை" என்று யாவரும் துக்கப்பட்டுக்கொண்டிருந்தார்கள்.

---

## 3—ம அத்தியாயம்

மேன் அத்தியாயங்களில் குறித்த ஸம்பவங்கள் நடந்து பதினைந்து வருடங்கள் ஆயின. சேலம் செவ்வாய்ப்பேட்டையில், மாரியம்மன் கோவிலுக்கு ஸமீபத்திலுள்ள கடைத்தெருவில், ஓர் மெத்தைவீட்டுக் கூடத்தில், நாற்பது வயதென்று நிதானிக்கத்தகுந்தவர் ஒருவர், படுத்து நித்திரை செய்துகொண்டிருந்து விழித்தெழுந்து உட்கார்ந்து, 'வள்ளியம்மை' என்றழைத்தார். ஓர் பெண்பிள்ளை, அருகில் வந்து நின்று "ஏன் அழைத்தீர்கள்?" என்றாள்.

**பெரியவர்.**—பயல் வந்தானா? சாப்பிட்டானா?

**வள்ளியம்மை.**—அவன் காலையில் பழையது சாப்பிட்டுப் போனவன் இன்னும் வரவில்லை. நான் இதுபரியந்தம் சாப்பிடாமல் அவனுக்காகக் காத்திருந்தும், மணி இரண்டாய் விட்டதால் இப்பொழுதுதான் சாப்பிட்டேன்.

**பெரியவர்.**—வள்ளியம்மை! நானும் அவனைக் கண்டிக்கிறதில்லை. நீயும் கண்டிக்காமலிருக்கிறாய். பார்க்கிறவர்களெல்லாம் பெரியசாமி பிள்ளையின் மகனை அடக்குவார் இல்லாமையால் அவன் தன்மூப்பாய்த் திரிகிறான் என்று சொல்லார்களா?

**வள்ளியம்மை.**—பெற்றவரே கண்டிக்காமலிருந்தால், நான் என்ன செய்கிறது? நான் ஏதாகிலும் சொன்னால், என் வார்த்தையைக் கேட்பானா?

**பெரியசாமி பிள்ளை.**—நீ சொல்லியதைக் கேட்காமல் உன்னோடு சண்டை போடுகிறானோ? போ! போ! பைத்தியக்காரி!

அவனுக்கோ வயது பத்தொன்பது பூர்த்தியாய் இருபது நடக்கிறது. இனிமேல் அவனை நாம் போக்கிரிப் பிள்ளைகளோடு சேரவிடாமல் கவனமாய்ப் பார்த்துக்கொள்ள வேண்டும்.

**வள்ளியம்மை.**—தம்பிக்கு வயது இருபது ஆகிவிட்டதா ?

**பெரியசாமி பிள்ளை.**—இப்பொழுது வந்துபோன மாமாங்கத்துக்கு முன் வந்த மாமாங்கத்துக்கு நாம் கும்பகோணம் போயிருந்தபோது அவனுக்கு மூன்றுக்கதிகம் இருக்கும். ஆனதால் இப்பொழுது இருபது நடக்கிறது.

**வள்ளியம்மை.**—இனி தம்பியைச் சும்மா வைத்திருக்கக் கூடாது. அவனுக்கு விரைவில் விவாகத்தை முடித்து வைக்கவேண்டும்.

**பெரியசாமி பிள்ளை.**—தம்பிக்குப் பெண் எங்கே பார்த்திருக்கிறாய் ? தம்பியின் இரகசியத்தை அறிந்தவர்கள் பெண் கொடுப்பார்களா ?

**வள்ளியம்மை.**—நமது தம்பிக்குப் பெண் கொடுக்கமாட்டோ மென்றும் சொல்லுவார்களா ? நாளைக்கே பெண் கொண்டு வந்துவிடுகிறேன். தங்களுடைய ஸம்மதமும் தம்பியின் ஸம்மதமுமே வேண்டும்.

**பெரியசாமி பிள்ளை.**—நம்முடைய இனத்தில் பெண் இருக்கிறதா ?

**வள்ளியம்மை.**—அனேக இடத்தில் இருக்கிறது. என் தமையன் மகளை ஏன் கொள்ளக்கூடாது ?

**பெரியசாமி பிள்ளை.**—வள்ளியம்மை ! நீ பெரும் பைத்தியக்காரி ! நம்மை அவர்கள் எந்நாளும் நிந்தித்துக்கொண்டிருக்கவா வழி தேடுகிறாய் ?

**வள்ளியம்மை.**—அவ்விடத்தில் கொள்ளக்கூடாதென்றால் வேறிடத்தில் பார்க்கலாம்.

இங்ஙனம் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, ஸுந்தரமான பாந்த முகமும், முடித்துத் தொங்கவிட்ட கேசமும்,

பெருத்த நேத்திரங்களும், கறுத்தடர்ந்த புருவங்களும், அரும்பு கட்டிவரும் மீசையும், அழகிய பல்வரிசையும், மாநிறமும், ஐந்தரையடி உயரமுமுள்ள ஒரு வாலிபன் வீட்டுக்குள் வந்து, தன்மேலிருந்த அங்கவஸ்திரத்தை எடுத்துக் கொடியில் போட்டான். வள்ளியம்மை அவனைப் பார்த்து, "தம்பி! சாப்பிட வாராமல் இதுபரியந்தம் எங்கே போயிருந்தாய்?" என்று கேட்டாள். வாலிபன் பதில் சொல்லு முன்னம், பெரியசாமி பிள்ளை அவனைப் பார்த்து, "அப்பா திருஞானம், நீ காலையில் பழையது சாப்பிட்டுப்போனவன் இதுபரியந்தம் சாப்பிடாமலிருந்தால், உன்னுடைய தேகம் என்னத்திற்கு உதவும்?" என்றார்.

**திருஞானம்.**—அப்பா! நான் அப்பாசாமி வீட்டிற்குப் போயிருந்தேன். அவருடைய தாயும் தந்தையும் கட்டாயப்படுத்தி சாப்பிடச் சொன்னார்கள். நான் அவர்கள் வீட்டில் சாப்பிட்டுவந்தேன். அப்பாசாமியும் என்னோடு வந்து வெளித் திண்ணையில் உட்கார்ந்திருக்கிறார் (என்றான்).

வள்ளியம்மை வெளியிற்போய் அப்பாசாமியை வீட்டிற்குள் அழைத்துவந்தாள். பெரியசாமி பிள்ளை அவனைப் பார்த்து "தம்பி திருஞானத்தோடு நீ வந்தவன் ஏன் வெளித்திண்ணையில் உட்கார்ந்திருந்தாய்?" என்று கேட்டார்.

**அப்பாசாமி.**—ஐயா! நான் பெரிய சேலத்திற்குப் போக வந்தேன். திருஞானமும் என்னோடு வருகிறேனென்றதால், அவர் வரும்பரியந்தம் வெளித்திண்ணையில் உட்கார்ந்தேன்.

**பெரியசாமி பிள்ளை.**—பெரியசேலத்திற்கு ஏன் போகிறீர்கள்?

**அப்பாசாமி.**—ஐயா! அங்கு ஓர் சாமியார் வந்திருக்கிறார். அவர் மலையாளம் முதலிய இடங்களைச் சுற்றிவந்திருக்கிறாராம். அவர் அநேக அற்புதங்களைச் செய்கிறதாகக் கேள்வி. அவரைப் போய்ப் பார்க்கவேண்டுமென்பதே எங்களுடைய விருப்பம்.

**பெரியசாமி பிள்ளை.**—நீங்கள் போய்ப் பார்த்து வருவதானால்,

உங்களிருவருக்கும் விவாகம் எப்பொழுது முடியும் என்று கேட்டுவாருங்கள் (என்று நகைத்தார்).

**வள்ளியம்மை.**—சாமியாரைக் கேட்டால் என்ன சொல்லப் போகிறார்? விரைவில் ஆகுமென்றே சொல்லுவார். அவருக்குக் காசு பணம் கொண்டுபோக வேண்டாமோ?

**திருஞானம்.**—பாலும் பழமும் யாராகிலும் கொண்டுபோய்க் கொடுத்தால் அதை வாங்கி வைத்துக்கொண்டு மத்தியானத்திலும் இரவில் எட்டு மணிக்கும் சாப்பிடுகிறாராம். வேறு தின்பண்டங்கள் யாராகிலும் கொடுத்தால், அவைகளை வாங்கி அவ்விடத்திலிருப்பவர்களுக்குக் கொடுத்துவிடுகிறாராம். காசுபணம் ஒன்றும் வாங்குகிறதில்லை.

**வள்ளியம்மை.**—நாமும் ஒரு நாளைக்கு சாமியாரைப் பார்த்து வரவேண்டும் (என்று தன் நாயகனைப் பார்த்துச் சொன்னாள்).

**பெரியசாமி பிள்ளை.**—போகலாம்! போகலாம்! இன்று இவர்கள் போய்வந்து சாமியார் செய்யும் அற்புதத்தைச் சொல்லட்டும்.

அவர் சொல்லியபின், திருஞானமும் அப்பாசாமியும் விடைபெற்றுப் பெரிய சேலத்திற்குச் சென்று, அங்கு ஓர் பெரிய மெத்தைவீட்டுக்குள் போனார்கள். கூடத்தில், நீண்ட சடைகளும், அதிகம் நீண்டிருக்கும் தாடியும், மீசையும், நீண்ட அங்கியும், முகம் முற்றிலும் விபூதியும் அணிந்த சாமியார் உட்கார்ந்திருந்தார். அவரருகில் முப்பது அல்லது முப்பத்தைந்து இருக்குமென்று மதிக்கத்தகுந்த ஒருவரும், முடித்துத் தொங்கவிட்ட கேசமும், விசாலமான நெற்றியும், கறுத்த புருவங்களும், பாம்பு முகத்துக்கேற்ற கன்னக்கதுப்பும், நீண்ட நாசியும், வெண்மையான சரியொத்த பல்வரிசையும், அற்பமீசையும், விசாலமான மார்பும், நீண்ட கரங்களும், ஐந்தரையடி உயரமும், இருபது வயதுள்ள வாலிபன் ஒருவனும் இருந்தனர். நீண்ட கூந்தலைப் பின்னிவிட்ட சடையும், குறுக்கமில்லாத நெற்றியும்,

மையிட்டதுபோலுள்ள கறுத்த புருவங்களும், முகத்துக்கேற்ற நீண்ட நாசியும், சிறுத்த உதடுகளும், வெண்மையான சரி யொத்த பல்வரிசையும், அதிகம் பருத்திராத சரீரமும், 13 அல்லது 14 வயதுமுள்ள ஒரு பெண், பாவாடையும் இரவிக்கையும் தாவணி யென்ற மேற்போர்வையும் தரித்துச் சில நகைகள் அணிந்து, வாலிபன் அருகில் நின்றிருந்தாள். வந்த வாலிபர் இருவரும் சாமியாருக்கு நமஸ்காரஞ்செய்து நின்றார்கள். சாமியார், அவர்களை உட்காரச் சொல்லி, "யாரப்பா நீங்கள்" என்றார்.

**அப்பாசாமி.**—சுவாமி! நாங்கள் செவ்வாய்ப்பேட்டையில் இருப்பவர்கள். தங்களைப் பார்த்துப்போக வந்தோம்.

**சாமியார்.**—ஸந்தோஷம்! அடியேன் பரதேசி, உங்களுக்கு என்ன செய்யப்போகிறேன்? உங்களுடைய தாய் தந்தைகளெல்லாம் க்ஷேமந்தானே.

**அப்பாசாமி.**—தேவரீருடைய ஆசீர்வாதத்தால் க்ஷேமம். சுவாமி!

**சாமியார்.**—உங்கள் பேர் என்ன?

**அப்பாசாமி.**—சுவாமி! அடியேன் பெயர் அப்பாசாமி. இவர் பெயர் திருஞானம்.

**சாமியார்.**—அப்பா முத்துவேலுபிள்ளை! இவர்கள் யாரென்று உமக்குத் தெரியுமா?

**முத்துவேலு பிள்ளை.**—ஆம்! சுவாமி! திருஞானம் என் மைத்துனர் பெரியசாமி பிள்ளையின் குமாரன். அப்பாசாமி கறுப்பண்ண பிள்ளையின் குமாரர். இவர்களெல்லாம் எங்கள் குலத்தார்.

**சாமியார்.**—நீங்கள் எப்பொழுதும் இந்த ஊரில் இருக்கிறவர்களா?

**முத்துவேலு பிள்ளை.**—இல்லை சுவாமி! நான் திருப்பெருந்துறையில் என் தாய் தந்தையரோடு வசித்திருந்தேன். பெரியசாமி பிள்ளையின் பங்காளி தங்கையை நான் விவாகம் செய்தேன். என் தாய் தந்தையர் காலஞ்சென்ற

பின் என் மைத்துனருடைய தொந்தரவால் இவ்வூரில் வந்து சேர்ந்தேன்.

**சாமியார்.**—இந்த ஊரில் குடியேறி எத்தனை வருடம் இருக்கும் ?

**முத்துவேலு பிள்ளை.**—பத்துவருடம் இருக்கும்.

**சாமியார்.**—உம்முடைய மனைவிக்கு நெருங்கிய பந்துக்களாதலால், நீர் விவாகம் செய்துகொண்டபின், இவர்களெல்லாம் உமக்கும் பந்துவானார்கள் (என்று நகைத்தார்).

**முத்துவேலு பிள்ளை.**—இல்லை ! என் தாய் வழியிலும் இவர்களெல்லாம் எனக்கு பந்துக்களே.

**சாமியார்.**—உம்முடைய பந்துக்கள் எங்கெங்கு இருக்கிறார்கள் ?

**முத்துவேலு பிள்ளை.**—நாகை, தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி முதலிய இடங்களிலும் இவ்வூரிலும் இருக்கிறார்கள்.

**திருஞானம்.**—(சாமியாரைப் பார்த்து) சுவாமி ! தாங்கள் எங்கள் வீட்டிற்கு ஒருநாளைக்கு வந்து போகவேண்டும்.

**சாமியார்.**—அப்பா ! உன்னுடைய மனம் ஸந்தோஷமடையும்படி வரவேண்டியதே யாயினும், அடிமை விரைவில் இவ்வூரைவிட்டுப் போகவேண்டும். அவகாசமிருந்தால் அடிமை வரத் தடை ஒன்றுமில்லை.

திருஞானமும் அப்பாசாமியும் சாமியாரிடத்தும் மற்றவர்களிடத்தும் விடைபெற்றுப் போகும்பொழுது, அப்பாசாமி திருஞானத்தைப் பார்த்து, “ முத்துவேலு பிள்ளையின் குமாரத்தியைப் பார்த்தாயா ? ” என்று கேட்டான்.

**திருஞானம்.**—ஆ ! ஆ ! என்ன அழகு ! என்ன அழகு ! அப்பெண் பருவம் அடையுமுன் இவ்வளவு ஸௌந்தரமாக இருக்கிறாளே ! பருவமடைந்தபின் பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டுமென்றே நினைக்கிறேன்.

**அப்பாசாமி.**—அப்பெண் பருவமடைய அதிகநாள் செல்லுமென்று நான் நினைக்கவில்லை. உன் தாய் தந்தை உனக்கு

விவாகம் செய்யவேண்டுமென்று சொல்லுகிறார்களே ! அந்தப் பெண்ணை உனக்கு ஏன் கேட்கக்கூடாது ?

திருஞானம்.—நானும் அதையே யோசித்துக்கொண்டிருக்கிறேன். எவ்விதமும் அப்பெண்ணை மணம்புரிய முயல வேண்டும். நீர் சொல்வதுபோல் என் மனம் அப்பெண்ணையே நாடியிருக்கிறதென்று என் தாயிடம் சொல்லி விடும்.

இவ்விதம் வார்த்தையாடிக்கொண்டே அவர்கள் வீட்டிற்கு வந்தார்கள். வள்ளியம்மை வாயிற்படியில் நின்றிருப்பதைக் கண்ட திருஞானம், அப்பாசாமியைத் தன் தாயிடம் நின்று பேசவிட்டு வீட்டிற்குள் சென்றான். வள்ளியம்மை அப்பாசாமியைப் பார்த்து, "தம்பி! சாமியாரைப் பார்த்தீர்களா! உங்களுக்கு எப்பொழுது விவாகம் முடியும் என்று சொன்னார் ?" என்று நகைத்தாள்.

அப்பாசாமி.—அம்மணி! தாங்கள் விளையாட்டுக்குச் சொன்னது உண்மையாகவே முடியும்போ லிருக்கிறது. சாமியார் முத்துவேலு பிள்ளை வீட்டில் இருக்கிறார். அவருடைய மகன் வடிவேலையும் மகள் விசாலாக்ஷியையும் தாங்கள் அறிவீர்களல்லவா ?

வள்ளியம்மை.—நம்முடைய பந்துக்களை அறிவாயா என்று நீ கேட்பது ஆச்சரியத்தைத் தருகின்றது. திரிபுரஸுந்தரத்தின் மகனையும் மகளையும் நன்றாய் அறிவேன். அவர்களுக் கென்ன ?

அப்பாசாமி.—அந்தம்மாள் மகள் விசாலாக்ஷியை நாங்களிரு வரும் பார்த்து வந்தோம்.

வள்ளியம்மை.—திரிபுரஸுந்தரம் அடிக்கடி நம்முடைய வீட்டுக்கு வந்துகொண்டிருந்தவள் சில மாதங்களாக வருகிறதில்லை. காரணம் யாதோ அறியேன்.

அப்பாசாமி.—அம்மணி! விசாலாக்ஷியைத் திருஞானத்திற்கு

என் கேட்கக்கூடாது ? அவளைவிட ஸுந்தரமான பெண் வேறு கிடைக்குமன்றோ எண்ணியிருக்கிறீர்கள் ?

**வள்ளியம்மை.**—தம்பி ! நான் என்ன செய்கிறது ? திருஞானத்தின் இரகசியம் உனக்குத் தெரிந்திருக்கிறது. உள்ளூரிலுள்ளவர்கள் யாவரும் அவ்விரகசியத்தை அறிந்தவர்களே ; நான் பெண் கேட்டால் கொடுப்பார்களா ?

**அப்பாசாமி.**—அம்மணி ! நீங்கள் பொருள் பூமி இல்லாதிருந்தால், பெண் கொடுக்கமாட்டார்கள். உங்களுக்கிருக்கும் ஆஸ்தியை யெல்லாம் திருஞானத்துக்குத்தானே வைக்கப் போகிறீர்கள். வேறு யாருக்காகிலும் கொடுக்கப்போகிறீர்களா (என்று நகைத்தான்).

**வள்ளியம்மை.**—தம்பி ! பெண்ணைக் கொடுப்பவர்கள் தங்கள் மகள் பின் துக்கப்படாமல் ஸுகத்தோடு இருக்கவேண்டுமென்கிற எண்ணங்கொள்ளுவது உலகவழக்க மாதலால், நாம் என்ன செய்கிறது ? நாம் திருஞானத்துக்குப் பெண் பார்க்கவேண்டியதானால் வெளியூரில் பார்த்தால் கிடைக்குமேயல்லால், உள்ளூரில் கிடைக்காது. திரிபுரஸுந்தரியம்மாளை நான் என்ன கெஞ்சிக்கேட்டாலும் கொடுக்க மாட்டாள். அவளுடைய கருத்தை அறிந்திருக்கிறேன்.

**அப்பாசாமி.**—திரிபுரஸுந்தரம்மாளுக்குத் திருஞானத்தின் இரகசியம் எவ்விதம் தெரியும் ?

**வள்ளியம்மை.**—அவள் அடிக்கடி நம்முடைய வீட்டிற்கு வந்திருந்தமையால் திருஞானத்தின் இரகசியத்தை நன்றாய் அறிவாள்.

**அப்பாசாமி.**—திருஞானம் விசாலாக்ஷியைப் பார்த்தவுடன் அப்பெண்ணையே மணம்புரியவேண்டும் என்கிறார். நாளைச் சாகப்போகிறவனுக்கெல்லாம் பணத்துக்காசைப்பட்டுப் பெண்களைக் கொடுக்கிறார்கள். தங்கள் மகன் அழகில் குறைந்தவனோ வாசிப்பில் குறைந்தவனோ ? பொருள் பூமி உங்களுக்கு இல்லையா ? உலகம் எதை முக்கியமாக கவனிக்

கும் என்று தாங்கள் கருதாமல் பேசுகிறீர்கள். விசாலாக்ஷியைத் தங்கள் குமாரனுக்குக் கொடுத்தால் ஸந்தோஷமாய் இருக்கமாட்டார்களா? ஆனதால் திரிபுரஸுந்தரம் மாளைக் கண்டு பெண் கேட்பது அவசியம்.

**வள்ளியம்மை.**—பெண் கேட்டு அவமான மடைவதைவிட, கேட்காமலிருப்பதே நன்றென்று யோசித்திருந்தேன். இனி உன் அப்பாவைக் கொண்டாவது அந்த அண்ணனிடம் பேசிப் பார்க்கச் சொல்லவேண்டும்.

இருவரும் இவ்விதம் பேசியிருந்து வீட்டிற்குள் சென்ற பிறகு, அப்பாசாமி சொல்லியதையெல்லாம் வள்ளியம்மை தன் நாயகனுக்குச் சொல்லிக்கொண்டிருந்தாள்.

---

## 4—ம் அத்தியாயம்

மதுரைக்கருகிலுள்ள திண்டுக்கல்லில், காலை 9-மணிக்கு, ஓர் மச்சுவீட்டின் கூடத்தில் ஆண்பிள்ளைகள் சில உட்கார்ந்து தாம்பூலம் தரித்துக்கொண்டு வார்த்தையாடிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஏறக்குறைய நாற்பது வயதுடைய ஒருவர் வீட்டுக்குள் வந்து அவ்விடத்தில் உட்கார்ந்திருக்கும் விருத்தரைப் பார்த்து, "மாமா! நான் ஓர் விருந்தாளியைத் தங்கள் வீட்டுக்கு அழைத்துவந்தேன்" என்றார். அங்கிருந்தவரில் ஒருவர், "வந்த விருந்தாளியை இலக்கைய பிள்ளை தம்முடைய வீட்டிலேயே வைத்து அவருக்கு விருந்துசெய்து, நம்மையெல்லாம் அழைக்காமல் சித்திவிநாயகம்பிள்ளை வீட்டில் விட்டால், தம்மையும் விருந்தாளியோடு உட்காரவைத்துச் சாப்பாடு போடுவாரென்று இங்கு அழைத்துவந்ததுபோல் இருக்கிறது" என்றார்.

**இலக்கைய பிள்ளை.**—இல்லை தாதா! மாமனார் வீட்டின் சாப்பாட்டின்மேல் மருமகனுக்கு அதிகம் பிரியம் இருப்பது உலகவழக்கம்! 'மருமகனுக்குச் சமைத்ததை மகனுக்கிட்டு

வயிறெரிந்தாள்' என்ற பழமொழியைத் தாங்கள் கேட்ட தில்லையா? ஆனதால் விருந்தாளியை மாமனூர் வீட்டில் கொண்டுவந்து விட்டால், நம்மையும் அழைப்பார்கள் என்றெண்ணியது உண்மையே (என்று நகைத்தார்).

**சித்திவிநாயகம் பிள்ளை.**—அப்பா! விருந்தாளியை அழைத்து வந்தோ நீர் நம்முடைய வீட்டில் சாப்பிடவேண்டும். நீர் எப்பொழுதும் நம்முடைய வீட்டில் சாப்பிடலாம். விருந்தாளி எங்கே? அவரில்லாமல் நீர்மட்டும் தனித்து வந்தீரே!

**இலக்கைய பிள்ளை.**—அவரை வரும்படி சொல்லிவந்தேன்.

என்றபொழுது வேறொருவர் வருவதைக் கண்டு, "இதோ அவரும் வந்துவிட்டார்" என்றார். சித்திவிநாயகம் பிள்ளை, வருகிறவரைப் பார்த்து, "வருக தம்பி" என்று முகமன் கூறி, உட்காரவேண்டி, "துரைசாமி பிள்ளை எங்களையெல்லாம் மறந்துவிட்டாரென்று எண்ணியிருந்தேன். அஃதோ அத்தி பூத்ததுபோலவும், மேற்கில் சூரியன் உதித்ததுபோலவும், திருச்சிராப்பள்ளியை விட்டு இவ்வளவு தூரம் வந்தது எங்கள் பாக்கியம்" என்றார்.

**துரைசாமி.**—நான் அடிக்கடி வராமற்போன காரணத்தை அறிந்தால் தாங்கள் என்னைக் கோபிக்கமாட்டீர்கள். தனித்திருந்து எல்லாக் காரியங்களையும் நானே பார்க்கவேண்டிய வனாயிருப்பதால், எங்கு போகிறது எங்கு வருகிறது? இதைத் தாங்கள் கவனியாமல் கோபிக்கிறீர்கள்.

**பெரியவர்.**—தம்பி நீர் உம்முடைய மனைவி மக்களோடு பழனிக்குப் போய்த் திரும்பி இலக்கைய பிள்ளை வீட்டில் வந்திறங்கி யிருப்பதாகக் கேள்விப்பட்டு, உம்மைப் பார்க்க வேண்டுமென்று தேடிக்கொண்டிருக்கிறோம். தெய்வச் செயலால் நீரே வந்து விட்டீர்.

**துரைசாமி.**—தாதா! என்னையா தேடிக்கொண்டிருக்கிறீர்கள்?

**பெரியவர்.**—தம்பி! நான் சொல்வதைக் கேட்டுக் கோபிக்க வேண்டாம். உம்முடைய சிறிய தாயாரை நீர் கவனிக்காம லிருப்பது நியாயமல்ல. உம்மையன்றி உம்முடைய சிறிய தாயாருக்கு வேறு யார் இருக்கிறார்கள்?

**துரைசாமி.**—(நகைத்து) என் சிறிய தாயாருக்கு நான் என்ன குறைவு செய்தேன்? என் சிறிய தாயார் என்னோடிருக் கும்போது அவர்கள் மனம் ஸந்தோஷமடையும்படி நாங் கள் செய்ததையெல்லாம் குற்றமாகவே பாவித்து அவர்கள் எங்களை வெறுத்து வந்துவிட்டார்கள். இப்பொழுதும் அவர் களை அழைத்துப் போகவேண்டுமென்றே இவ்வூரில் காத்துக்கொண்டிருக்கிறோம்.

**பெரியவர்.**—நீர் சொல்வதைக் கேட்க யாவருக்கும் அதிக ஸந் தோஷம் உண்டாகிறது. நீர் உம்முடைய சிறிய தாயார் மேல் அன்பு வைத்திருப்பது உண்மையானால், அவர்கள் கண் கலங்காமலிருக்கச் செய்வதே உம்முடைய கடமை.

**சித்திவிநாயகம் பிள்ளை.**—உம்முடைய தந்தை காலஞ்சென்று நெடுநாளாயும், நீர் இதுபரியந்தம் கவனியாமல் விட்டுவிட் டீர். இனியாகிலும் நீர் சொல்வதுபோல் செய்தால், உம்மை யாவரும் புகழ்வார்கள்.

**துரைசாமி.**—நான் என் சிறியதாயாரை கவனியாமல் விட் டேன் என்பது தவறு. அவர்களே என்னை கவனியாமல் விட்டார்கள் என்று துணிந்து சொல்லுவேன்.

**பெரியவர்.**—தம்பி! இது முழுபூசனிக்காயைச் சோற்றோடு மறைப்பதுபோல் காணப்படுகிறது.

**துரைசாமி.**—நான் சொல்வது உண்மையோ அல்லவோ என்று இவ்விடத்திலிருப்பவர்கள் நிதானிக்கக்கூடும். என் தந்தை காலஞ் சென்றவுடன், என்னுடைய துயரை ஆற்றாமல், என்னைத் தனியாக விட்டுத் தம்முடைய தாய் வீடு வந்து சேர்ந்தார்கள். நான் அறியாமல் பட்ட கடன்களுக்கு ஒரு அற்ப உதவியும் செய்யாமல் நியாயமாக என்னைச் சேர

வேண்டிய நகைகளை யெல்லாம் கைப்பற்றிக்கொண்டது மன்றி, பின் நான் விவாகஞ்செய்துகொண்ட காலத்தும் ஒன்றிரண்டு தன் மருமகளுக்குப் போடவும் மனந்துணிய வில்லை. நான் எழுதிய கடிதங்களை கவனியாமலே இருந் தார்கள். முடிவாக, குழந்தைகளுக்கு முடிவாங்கிக் காது குத்தப் பழனிக்கு வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டும் வராமற்போனார்கள். இவ்விதமெல்லாம் நடத்திய பின் னர், என்மேல் குற்றங்கற்பிக்க நீங்கள் யாவரும் துணிந் தீர்களல்லவா ?

**சித்திவிநாயகம் பிள்ளை.**—தம்பி ! நீர் உம்முடைய சிறிய தாயா ரைக் குற்றத்திலழுத்திச் சொல்லியவைகளோடு நிறுத்தி னால், உம்முடைய சிறியதாயார்மேல் குற்றம் ஏற்படும்.

**துரைசாமி.**—நான் இதுபரியந்தம் சொல்லியது யாவும் அபத்த மென்று சொல்லப்போகிறீர்கள் ?

**சித்திவிநாயகம் பிள்ளை.**—அபத்தம் ஒன்றுமில்லை. ஆயினும் உண்மையை மறைத்துச் சொன்னதே உம்முடைய ஸாமர்த் தியம் என்று காண்கிறது.

**துரைசாமி.**—எதை மறைத்துச் சொன்னேன் ?

**சித்திவிநாயகம் பிள்ளை.**—உமது தந்தை இறந்த துக்கம் ஒன்றே உமக்கிருந்ததாக நீர் சொல்லியதால் விளங்கியது. என் மக ளுக்கு, தன் நாயகன் இறந்ததோடு தன் பிள்ளைகளும் தன் பாட்டியாரும் வாந்திபேதியால் ஏககாலத்தில் இறந்தத னால் உண்டான துக்கம் உமக்குத் தெரிந்ததே ! ஆனதால் யாருடைய துக்கத்தை யார் ஆற்றவேண்டும் ? அவ்வித மில்லாமல் உமது தந்தை இறந்தபின் உமது வயதுக் கேற்ற வாலிபர்களோடு சேர்ந்து, உமக்கு இருநூற்றைம் பது ரூபா யாராவது கடன்கொடுக்கத் துணிந்தால் அவர்க ளுக்கு ஒன்றுக்கு மூன்று நான்காகப் பத்திரம் எழுதி வீணாகப் பதினாயிரத்துக்கதிகம் கடனாக்கிக்கொண்டீர். உமது சிறிய தாயார் நலியாயிருந்த காலத்தில் அவள் வசம்

இருந்த பெட்டி சாவியைக் கைப்பற்றி, பெட்டியிலிருந்த பணத்தைக் கைப்பற்றியதோடு நகைகளையும் எடுத்து உம்முடைய மனம்போல் ஒன்றுக்கு அரையாக விற்றுக்கொடுத்துக்கொண்டு வருங்காலத்தில், உமது சிறியதாயார் கிஞ்சித்து தேகசௌக்கியம் அடைந்து உம்மிடத்தில் சாவியைக் கேட்டபொழுது, நீர் சாவியைக் கொடுக்காமல் கேவலமாகப் பேசினீர். நாங்கள் போட்ட இருநூறு முந்நூறு ரூபா பெறுமதியான நகைகளை எடுத்துக்கொண்டு இவ்விடம் வந்து காலத்தைக் கழித்துக்கொண்டிருக்கும் பொழுது, உமக்கு நகைவேண்டும் பணம்வேண்டுமென்று கேட்டால், எந்த நகைகளையும் எந்தப் பணத்தையுங் கொடுத்தனுப்புகிறது? இவைகளை யோசியாமல் உமது சிறியதாயார் மேல் குறைகூறுவது பயன்படாது. உமது தந்தை ஏறக்குறைய நாற்பதுகாணி நிலங்களை வைத்திருந்ததாக யாவரும் சொல்லுகிறார்கள். ஏராளமான சொத்தை வைத்துக்கொண்டு, உம்முடைய சிறியதாயாருடைய சாப்பாட்டுச் செலவுக்காக இரண்டொரு காணி நிலமாவது கொடுக்க உமக்கு மனம் வரவில்லை. இப்பொழுதாகிலும் உமது சிறிய தாயாருடைய சீவனும்சத்துக்கு ஏதாகிலும் கொடுத்தால், நான் சொன்னதுபோல் உம்மை யாவரும் புகழ்வார்கள்.

துரைசாமி.—தாதா! துஷ்டர்களோடு சேர்ந்து பணத்தைப் பணம் என்று மதிக்காமல் செலவுசெய்யுங் காலத்தில் என்னை அடக்கியாளாமல் என் சிறிய தாயார் விட்டுவிட்ட குற்றத்தால் நான் செய்ததை நினைப்பூட்டி என் மனதை வருத்துவதில் பலன் ஒன்றுமில்லை. தாங்கள் சொல்வது போல் என் தாயாருக்காக நிலத்தைக் கொடுத்தாலும், அதை மேல்பார்க்கவேண்டியவன் நானே யன்றி வேறு யார் இருக்கிறார்கள்? அது பிரயோசனப்படாது. என் சிறிய தாயாரை அழைத்துக்கொண்டுபோய் அவர்களுக்கு வேண்

டியதைச் செய்ய நான் சித்தமாயிருக்கிறேன். நீங்கள் யாவரும் என் சிறியதாயாருக்கு வேண்டியதைச் சொல்லி அவர்களை அனுப்புவதே உங்களுடைய கடமை.

**சித்திவிநாயகம் பிள்ளை.**—புருடன் போனபின் தன் தாய்வீடே கதியென்று வந்திருப்பவளை நாங்கள் எவ்விதம் போகச் சொல்லலாம்? உமது சிறியதாயாருக்கென்று கொடுக்கும் நிலத்தை விற்று இவ்விடத்தில் நிலம் வாங்கிக்கொள்ளுகிறோம். அல்லது விற்க உமக்கு ஸம்மதம் இல்லாமற் போனாலும் நிலத்தை யாரிடத்திலாவது வாரத்துக்கு விட்டு மாகூலைப் பணமாக்கி அனுப்பிவிட ஏற்பாடு செய்துகொள்ளுகிறோம். அதுவிஷயத்தில் உமக்கு யாதொரு கஷ்டமும் கொடுக்கவில்லை.

**துரைசாமி.**—தாதா! தாங்கள் யோசிக்காமல் பேசுகிறீர்கள். நிலத்தை வாரத்துக்கு விடுகிற பக்ஷத்தில், அறுப்புக் காலத்தில் ஒருவர் இருந்து பார்க்காமல் போனால், அவன் விளைந்ததைக் குறைத்துச் சொல்லக்கூடும். நிலம் விளையாமற்போனாலும் ஸர்க்கார் வரியைக் கட்டவேண்டும். கட்டாமற்போனால் நிலத்தை ஏலத்தில் விற்றுவிடுவார்கள். இந்தத் தொல்லையெல்லாம் எதற்கு? நான் என் சிறிய தாயார் வயிற்றிற் பிறந்திருந்தால் என்னோடு இருக்கமாட்டார்களா? எப்பொழுது என் தந்தைக்கு அவர்கள் மனைவியானார்களோ, அப்பொழுதே எனக்குத் தாயல்லவோ? அவர்களுக்கு வயிற்றிற்குச் சாதம்போட்டு ஆதரிக்க எனக்கு பாத்தியம் இல்லாமலா போய்விட்டது? (என்று துக்கத்தோடு சொன்னான்).

**இலக்ஷ்மைய பிள்ளை.**—மாமா! தம்பி துரைசாமி பிள்ளை சொல்லுவது நியாயமாக இருக்கிறது. காமாக்ஷியம்மாளைத் தம்பியோடு அனுப்பத் தடைசொல்வது உசிதமல்ல என்று நினைக்கிறேன்.

**சித்திவிநாயகம் பிள்ளை.**—நாயகன் இறந்து நெடுங்காலம்

ஆனபின் என் மகளை அனுப்பினால், பார்க்கிறவர்கள் என்னைக் கேவலமாக நினையார்களா ? தன் சிறியதாயாருக்கு ஏதாகிலும் கொடுத்தாலும் கொடுக்கட்டும், இல்லையென்று சொன்னாலும் ஸம்மதமே. நான் குடிக்கிற கஞ்சியைக் குடித்துக்கொண்டிருக்கிறார்கள். என் மகளுடைய ஜீவனம் வைக்கு ஏதாகிலும் பெறவேண்டுமென்னும் எண்ணம் எனக்கிருந்தால், இதுகாலம் நான் சும்மா இருப்பேனா ! பார்க்கிறவர்கள் மகளால் பூஸ்திதி தேடிக்கொள்ளப் பார்க்கிறான் என்று சொல்லுவார்கள் என்றே இதுகாலம் பயந்திருந்தேன். அவர்களைப்போல் தனவந்தனாயிருந்தால் நான் ஒன்றும் கேட்கவேமாட்டேன். என்ன செய்யலாம் ! அவரவர்கள் முன்போந்த சன்மத்தில் செய்த வினையின் பலனை அவரவர்களே அனுபவிக்கவேண்டும். வேறொருவர் அனுபவிக்க வருவார்களா ! தம்பி துரைசாமி இவ்வளவு பரிவோடு தன் சிறியதாயாரை அழைத்துப்போக இப்பொழுது இஷ்டப்பட்டவர், இதுகாலம் கனவிலும் நினையாமலிருந்தார். தன் பிள்ளைகளோடு பழனிக்குப் போனவர் தன் சிறிய தாயாரை ஒப்புக்காகிலும் அழைக்காமல் போனார். அல்லது பழனியிலிருந்து திரும்புங்கால் சிறிய தாயார் வீட்டில் வந்திறங்காமல், வேறு இடத்தில் இறங்கி என் மருமகனுடைய கட்டாயத்தால் இவ்விடம் வந்திருக்கிறார். நானும் அவரைப்போல் பணக்காரனாக இருந்தால், நம்முடைய வீட்டிலும் வந்து இறங்கியிருப்பார் (என்று துக்கத்தோடு சொன்னார்).

**பெரியவர்.**—அப்பா ! சித்திவிநாயகம் நீ கவனிக்காமல் பேசுகிறாய். நம்முடைய வினையின் பலன் எப்பொழுது பக்குவப்படுகிறதோ, அப்பொழுதல்லவோ அதன் பலனை அனுபவிக்கமுடியும். அதற்குமுன் நாம் அவசரப்பட்டாலும் கிட்டாதே ! நாம் வீணில் ஒருவரை ஒருவர் நோவதில் பிரயோசனம் இல்லை. தம்பி துரைசாமிபிள்ளை தன் சிறிய

தாயார்மேல் கவனம் வைக்காமலிருந்தது அவளுடைய வினையின் பயனே யன்றி வேறல்லவென்று நீ எண்ணு வாயாகில், அவரை நிந்திக்கமாட்டாய். அதைவிட்டு இப்பொழுது வேண்டியதைப் பேசுவதே உத்தமம்.

**சித்திவிநாயகம் பிள்ளை.**—நான் வேறென்ன சொல்ல இருக்கிறது? எல்லாவிஷயமும் தம்பி துரைசாமிக்குத் தெரிந்திருக்கிறது. அவரையே சொல்லச் சொல்லுங்கள்.

**துரைசாமி.**—ஐயாவே! பழனிக்குச் சிறுவர்களுடைய முடி வாங்கப் போகவேண்டு மாதலால், தாங்கள் வரவேண்டுமென்று கடிதம் எழுதவில்லையா? அதற்கு பதில் வருகிறேன் என்றாவது அல்லது வர மனமில்லை என்றாவது ஒரு வரி எழுதியனுப்பக்கூடாதா?

**சித்திவிநாயகம் பிள்ளை.**—நாங்கள் பதில் எழுதாமற்போனது குற்றமே. நீர் உம்முடைய மனைவி மக்களோடு இவ்வூர் மார்க்கந்தானே சென்றீர். என் மருமகன் வீட்டில் இறங்கி இருந்தவர் இங்கே வந்து அழைத்திருப்பீரா? போம்! போம்! உமக்குத்தானா பேசத்தெரியுமென்று நினைத்தீர்? உம்மைப்போல் அவ்வளவு சாதுரியமாகப் பேசத் தெரியாமற்போனாலும், உம்முடைய கருத்து இன்னதென்று கண்டுகொள்வது முடியாதா?

**துரைசாமி.**—ஐயாவே! நான் பழனிக்குப் போகும்பொழுது என் சிறிய தாயாரை அழைக்காமற்போனது குற்றம் என்றீர். நான் இப்பொழுது என் சிறிய தாயாரை அனுப்பக் கேட்டுக்கொண்டபொழுது அனுப்பத் தடை சொல்லுகிறவர்கள், அப்பொழுது அனுப்பிவிடுவீர்களோ? நான் பழனிக்குப் போகும்பொழுது தங்களைக் கேட்டுத் தாங்கள் அனுப்பத் தடைசெய்தபின் மனவருத்தத்தோடு ஸ்தலத்திற்கு ஏன் போகவேண்டுமென்றே என் சிறிய தாயாரை அழைக்கவில்லை. தங்கள் வீட்டில் வந்திறங்கினால் கட்டாயம் அழைக்க வேண்டும் என்றும், அழைத்தாலும் தாங்கள்

அனுப்பப்போகிறதில்லை என்றும் எண்ணி வராமலிருந்தேன். நான் நாளைக் காலையில் ஊருக்குப் போகவேண்டியவனுதலால், இன்னமும் தடங்கல் சொல்லாமல் என் சிறிய தாயாரை என்னேடு அனுப்பவேண்டும்.

**சித்திவிநாயகம் பிள்ளை.**—பழனிக்குப் போகும்பொழுது தடங்கலான வார்த்தையைக் கேட்டுப் போக மனமில்லாமல் இங்கு வந்திறங்கவில்லை. பழனிலிருந்து திரும்பி வந்தபொழுதாதிலும் இங்கு வந்து ஏன் இறங்கக்கூடாது ?

**இலக்கைய பிள்ளை.**—எங்கே இறங்கினுல் என்ன ? அது தங்களுடைய வீடல்லவா? நடந்துபோனதைக் குறித்துப் பேசுவதில் பலன் ஒன்றுமில்லை.

**பெரியவர்.**—ஆம் அப்பா ! சித்திவிநாயகம் ! இலக்கையன் சொல்லும் விதம் மிஞ்சிப்போனதைக் குறித்துப் பேசுவதில் பலன் ஒன்றுமில்லை. நீ அதை கவனிக்காமல் உன் மகளை அழைத்துக் கேட்டு பதில் சொல்லுவதே உத்தமம்.

**சத்திவிநாயகம் பிள்ளை.**—என் மகளைக் கேட்கவேண்டிய அவசியம் ஒன்றும் காணவில்லையே ! என் மகளுக்கு பதிலாக நான் சொல்லிக்கொண்டிருப்பதே போதும். என் மகளை அனுப்ப முடியாது. என் மகளுக்காக எதாகிலும்' கொடுக்க இஷ்டமிருந்தால் கொடுக்கட்டும், அல்லது ஒன்றும் இல்லை என்றுகிலும் சொல்லிவிடட்டும்.

**பெரியவர்.**—அப்பா ! சித்திவிநாயகம் ! நீ பதட்டமாக ஒன்றும சொல்லவேண்டாம். சிலவேளை உன் மகளுக்குத் தன் மகனேடு போயிருக்க இஷ்டமிருந்தால் நீ தடங்கல். சொல்லுவாயா ?

**சித்திவிநாயகம் பிள்ளை.**—என் கருத்துக்கு விரோதமாக என் மகள் செய்யாள். அதவா என் கருத்துக்கு விரோதமாக தன் மகனேடு போயிருக்க இஷ்டங்கொண்டால், பின்னெருகாலத்தில் தன் மகன்மேல் மனச்சலிப்பு உண்டாகும்போது

மீண்டும் என்னிடம் வரக்கூடாதென்றே சொல்லிவிடுவேன்.

பெரியவர், சித்திவிநாயகம் பிள்ளை கோபமாகப் பேசுவதைக்கேட்டு, எதற்கும் அவர் மகளைக் கேட்டுப் பார்க்கலாம் என்று நினைத்து, 'காமாக்ஷி' என்றழைத்தார். சமயற்கட்டிலிருந்தவள் 'ஏன்!' என்று கூடத்திற்கு வந்து, அவ்விடத்தில் உட்கார்ந்திருக்கும் துரைசாமியைப் பார்த்து "தம்பி! வருக! எப்பொழுது வந்தாய்? நீ பழனிக்கு உன் குடும்பத்தோடு போயிருந்ததாக அத்தான் சொன்னர்" என்ருள்.

**துரைசாமி.**—ஆம்! அம்மா! நாங்கள் இன்றே வந்தோம். நான் தங்களை அழைத்துக்கொண்டு நாளை ஊருக்குப் போக எண்ணி இருக்கிறேன்.

**காமாக்ஷியம்மாள்.**—அப்பா! என்னை அழைத்துப்போகத்தகுந்த நிலைமையிலா என்னை தெய்வம் வைத்திருக்கிறது? என் பிள்ளைகள் இறந்தபின் நீயே என் பிள்ளை என்று நினைத்திருந்தேன், நீயும் என்னைக் கருதாது விட்டாய். உன்னைப்போல் என்னுடைய தாயும் தந்தையும் என்னை ஆதரிக்காமல் கைவிட்டிருப்பார்களானல், என் கதி என்னவாகும்? நான் எக்கதியானலும் தோஷமில்லை. நீ க்ஷேமமாக உன் மனைவி மக்களோடு உன் தந்தையின் பெயரைச் சொல்லிக்கொண்டிருந்தால், அதுவே எனக்கு ஸந்தோஷம். நானும் அனேகமாக என் காலத்தைக் கழித்துவிட்டேன். இன்னும் கழிக்க வேண்டிய காலத்தை உன்னோடு வந்து உனக்கும் உன் மனைவிக்கும் பாரமாயிருந்து கழிக்க எனக்கு இஷ்டமில்லை.

**சித்திவிநாயகம் பிள்ளை.**—ஐயாவே! கேட்டுக்கொண்டீர்களா? நான் என் மகளுடைய கருத்தை அறிந்தே சொன்னேன் என்பது தெரிகிறதா? தன் சிறிய தாயாருக்கு ஏதாகிலும் கொடுக்கத் தம்பி துரைசாமிக்கு இஷ்டமிருந்தாலன்றி ஒருவரும் கட்டாயப்படுத்துவாரில்லை.

**காமாக்ஷியம்மாள்.**—நான் எந்தப் பிள்ளைக்கும் பெண்ணுக்கும்

ஆஸ்தி சேர்த்து வைக்கப்போகிறேன்? எனக்கு ஒன்றும் வேண்டியதில்லை. இதுகாலம் என்னுடைய வயிற்றுக்குக் கஞ்சி வார்த்தவர்கள் நான் சாகும்வரையிலும் கஞ்சி வார்ப்பார்கள். அவன் அவனுடைய தந்தையின் ஆஸ்தியை வைத்துக் கொண்டு ஸுகமாக இருக்கட்டும்.

**துரைசாமி.**—அம்மா! நான் இளமையில் தங்கள் மனம் வருந்தும்படி நடந்தேன். எனக்கு வயதேறியபின், நான் செய்தவைகளை நினைத்து நினைத்து துக்கப்பட்டேன். அந்த துக்கம் என்னைவிட்டு நீங்கும்படி என்னோடு சிலநாளாவது தாங்கள் வந்திருக்க வேண்டுமென்று வேண்டுகிறேன் (என்று கீழ்விழுந்து நமஸ்கரித்தான்).

**காமாக்ஷியம்மாள்.**—(அவனை ஆசீர்வதித்துத் தூக்கிவிட்டு) அப்பா! நீ என் விஷயத்தில் செய்தவைகளில் ஒன்றையும் என்மனதில் நான் வைத்திருக்கவில்லை. ஆனதால் அது விஷயத்தைக் குறித்து நீ கவலைகொள்ளவேண்டாம். நீ க்ஷேமமாக உன் மனைவி மக்களோடு வாழலாம். என் பிள்ளைகள் இறந்தபின் உன்னையே என் வயிற்றிற் பிறந்த மகனாக எண்ணியிருக்கிறேன். நான் இறந்த காலத்தில் நீயே எனக்குப் பிடிமண் கொடுக்கவேண்டும். அந்தக் கடமை ஒன்றே உனக்கு வைத்திருக்கிறேன். நீ அதைமட்டும் வந்து செய்துபோகவேண்டும். எனக்கு வேறொன்றும் வேண்டியதில்லை.

**துரைசாமி.**—அம்மணி! நான் செய்த கொடுமைகளை மன்னித்தேன் என்று தாங்கள் சொன்னதே என் கவலையை நீக்கியது. இனி என்னோடு வந்திருந்தால், நான் முன் செய்த குற்றங்கள் நீங்கத் தங்களுடைய மனம் ஸந்தோஷமடைய நடந்துகொள்வேன். ஆனதால் என் வேண்டுகோளுக்கு இரங்க வேண்டுகிறேன் (என்று மீண்டும் நமஸ்காரஞ் செய்தான்).

**காமாக்ஷியம்மாள்.**—அப்பா! நான் உன்னோடு வந்திருக்கத்

*தடையில்லை. இப்பொழுது என் தாய் நலியாயிருக்கிறுள். இந்த ஸமயத்தில் நான் என் தாய்க்கு உதவியாக இருப்பது அவசியம். நான் உன்னேடு வந்திருக்க வேண்டுமென்ற விருப்பம் உண்மையாயின், நீ மற்ருெரு காலம் வந்தால் நான் உன்னேடு வரத்தடையில்லை. நீ உன் மனைவி மக்களை எங்கே விட்டு வந்தாய்? அவர்களை ஏன் இங்கு அழைத்து வரவில்லை?*

**துரைசாமி.**—*என் மனைவி இவ்விடத்திற்கே போகவேண்டும் என்று பிடிவாதமாகச் சொன்னுள். 'ஒருவேளை நம்மைக் கண்டு கோபித்தால் என்ன செய்கிறது! நான் முதலில் போய்ப் பார்த்துவருகிறேன்' என்று வந்தேன். இதோ ஒரு நொடியில் அழைத்து வருகிறேன் (என்று வெளியிற் சென்ருன்).*

**பெரியவர்.**—*அப்பா! சித்திவிநாயகம்! உன் மகள் தன் மகனேடு உறவாடியதைப் பார்த்தாயா? எப்பொழுதும் தாய்க்கும் பிள்ளைக்கும் இல்லையென்ரு போய்விடும்.*

**சித்திவிநாயகம் பிள்ளை.**—*ஐயா! நான் துரைசாமியை நம்பேன். அவன் ஏதோ காரண நிமித்தமாக இவ்விதம் நடிக்கிருன். போகப்போகப் பார்க்கலாம்.*

**பெரியவர்.**—*உன் மகளிடத்தில் ஏதாவது பொருள் பூமி யிருந்தால், அதைப் பிடுங்கிக்கொள்ளப் பாசாங்கு செய்கிருன் என்று நினைக்கலாம். அப்படிக்கு ஒன்றும் இல்லாமலிருக்க, என்ன காரணத்தால் பாசாங்கு செய்யவேண்டும்?*

**சித்திவிநாயகம் பிள்ளை.**—*ஐயாவே! தாங்கள் கபடற்ற காலத்தில் பிறந்தவர்களாதலால் தங்களுக்கு ஒன்றும் தோன்றவில்லை.*

**காமாக்ஷியம்மாள்.**—*(தன் தந்தையைப் பார்த்து) அப்பா! துரைசாமி ஒன்றும் கபடத்தோடு செய்வதாகக் காணவில்லை. ஐயா அவர்கள் சொல்வதுபோல் என்னிடத்தில் என்ன இருக்கிறது?*

**இலக்கைய பிள்ளை.**—மாமா ? நாம் துரைசாமியின் இஷ்டப்பிர காரம் தங்கள் குமாரத்தியை அனுப்பி, அவன் தன் சிறிய தாயாரை எவ்விதம் நடத்துகிறான் என்று பார்க்கலாம். சில வேளை முன்போல் கொடுமையாக நடத்தினால் அப்பொழுது அவனிடத்தில் தங்கள் மகளுடைய சீவனும்சைக்கு எதாகிலும் கேட்டு வாங்க வழி உண்டாகும். நாம் இப்பொழுது அனுப்பாமற்போனால் 'நொண்டிக்குதிரைக்கு சறுக்கினதே சாக்கு' என்றவிதம் பேசக்கூடும் என்று நினைக்கிறேன்.

**பெரியவர்.**—ஆம் ! ஆம் ! சிலநாள் காமாக்ஷியம்மாள் அங்கே போயிருந்தால் என்ன நஷ்டம் ? ஒன்றுமில்லை. இலக்கையன் சொல்வதுபோல் நடப்பதே உத்தமம்.

**என்**று பேசிக்கொண்டிருக்கும்பொழுது, துரைசாமியின் மனைவி ஒரு பெண் குழந்தையை இடுக்கிக்கொண்டும், துரைசாமி மூன்று வருடத்துப் பையனொருவனைத் தூக்கிக்கொண்டும் வீட்டுக்குள் வந்தார்கள். காமாக்ஷியம்மாள் எதிர்சென்றாள். துரைசாமியின் மனைவி, தன்னிடமிருந்த குழந்தையைக் காமாக்ஷியம்மாளிடம் கொடுத்து, காலில் விழுந்து நமஸ்கரித்தாள். காமாக்ஷியம்மாள் அவளை ஆசீர்வதித்துப் பின்கட்டுக்கு அழைத்துப்போனாள்.

---

## 5—ம் அத்தியாயம்

**ப**ர்மாதேசத்துக்குப் பிரதான பட்டணமாகி, இரண்டு மூன்று அடுக்குகளைக்கொண்ட மாளிகைகளும், ஒழுங்கான வீதிகளும் நிறையப்பெற்ற இரங்கூனில், மொகல்தெருவில், நாட்டுக்கோட்டைச் செட்டிப்பிள்ளைகள் வசிக்கும் வீடுகளில் ஒரு வீட்டின் அறையில் அநேக பெட்டிகள் வரிசையாக வைத்திருந்தன. அவைகளுக்கருகில் அநேக சிறுவர்களும், வாலிபர்களும், நாற்பது ஐம்பது வயதுள்ள நாட்டுக்கோட்டைச் செட்டிப்பிள்ளைகளும்

உட்கார்ந்து தங்களுடைய வியாபாரத் தொழிலைப் பார்த்துக் கொண்டிருந்தனர். அப்பொழுது ஒரு பெட்டிக்கருகில், வயது நாற்பத்தைந்து அல்லது ஆறு என்று மதிக்கத்தகுந்த செட்டியார் ஒருவர், தமக்கு அடுத்தாளாக இருந்து கணக்கெழுதியிருக்கும் வேறு ஜாதியானைப் பார்த்து, "அப்பா! தம்புசாமி! கணக்குகளை யெல்லாம் எழுதி முடித்தபின் ஷேக்தாவுதைக் கண்டு, அவர் வேண்டுமென்ற ரூபா ஐம்பதினாயிரத்தையுங் கொடுத்து, நேற்று வட்டிகிடைத்த முப்பதினாயிரம் அண்டிமாண்டையும் சேர்த்து ஒரே அண்டிமாண்டாக நூற்றுக்கு ஒன்றரை ரூபா வட்டி போட்டு எழுதி வாங்கிக்கொண்டு, முன் அண்டிமாண்டிலுள்ள தொகையை வரவு வைத்து, பற்றெழுதிவிடு. பல இனத்தில் இருப்பதைவிட ஒரு நல்ல இனத்தில் தொகை இருப்பது நலம். ஷேக்தாவுது கொடுக்கவேண்டிய காலத்தில் பத்திருப்பதை கவனியாமல் வட்டியை அதிகமாகவே கொடுத்துப் போகிறார்" என்று இரகசியமாகச் சொன்னார்.

**தம்புசாமி பிள்ளை.**—ஆம்! அந்த இனம் தங்கத்துக்கு ஸமானம். சில ஸமயத்தில் நம்மிடத்தில் பெருந்தொகை வைத்து அதற்கு வட்டி கேட்காமல் இருக்கிறார்.

**செட்டியார்.**—ஆம்! மகமதியர் வட்டி வாங்குகிற வழக்கம் இல்லாததால் அவ்விதம் செய்கிறார்.

**தம்புசாமி பிள்ளை.**—நான் இப்பொழுதே சென்று தாங்கள் சொல்லியதைச் செய்துவருகிறேன்.

**செட்டியார்.**—நான் பன்னிரண்டு மணிக்கு ஈந்தட்டா (Henzada) வுக்குப் போகவேண்டும். நான் சாப்பிடப் போகிறேன். மணி பத்துக்கதிகம் ஆகிவிட்டது (என்றெழுந்தார்).

தம்புசாமியும் எழுந்து, பெரிய பெட்டியைத் திறந்து அண்டிமாண்டு புத்தகத்தை யெடுத்து, செட்டியார் கையெழுத்தைக் கொண்ட செக்புத்தகத்தில் ஒருதாளில் 50,000 எழுதி எடுத்துக்கொண்டு, பெட்டியைப் பூட்டி, சாவிகளை மடியில்

வைத்துக்கொண்டு, வேஷக்தாவுது வீட்டை யடைந்து மேலே ஏறிப்போனர். வீட்டுக்குள் வேஷக்தாவுதும் அவர் மனைவியும் கோபமாக வார்த்தையாடிக்கொண்டிருந்தனர். தம்புசாமி பிள்ளை, இந்துஸ்தானிபாஷை நன்றாய்த் தெரிந்தவ ராதலால், அவர்கள் பேசுவதை நெடுநேரம் கேட்டிருந்து மெதுவாகக் கீழிறங்கி, பின் "ஐயா! ஐயா!" என்று கூப்பிட்டுக்கொண்டே சந்தடியோடு படிக்கட்டேறிச்சென்றார். வேஷக்தாவுது வெளியில்வந்து "வாரும் தம்புசாமி பிள்ளை" என்றழைத்து வீட்டுக்குள் சென்றார்.

**தம்புசாமி பிள்ளை.**—ஐயா! என் முதலாளி தங்களிடத்தில் ஒருபகாரத்தைப் பெற என்னை அனுப்பியிருக்கிறார்.

**வேஷக்தாவுது.**—(நகைத்து) என்ன உபகாரம் நான் செய்ய வேண்டும்?

**தம்புசாமி பிள்ளை.**—தங்களுக்கு வேண்டுமென்ற ஐம்பதினாயிரத்தைக் கொடுத்துவரச் சொன்னதோடு, என் எஜமானரின் தமக்கை மகனுடைய ரூபா இருபதினாயிரம் செட்டிகளிடத்தில் தவணையில் இருக்கிறதென்றும், அதையும் தங்களிடம் கொடுத்துவைக்க வேண்டும் என்றும், தங்களுக்கு ஸம்மதமா யிருந்தால் கொடுத்தனுப்புவதாகவும் சொல்லி யனுப்பினார். அவருடைய தமக்கையின் மகனுக்கு அதிகமான பொருள் இல்லாததால், இருக்கிற கொஞ்சம் பொருளை நல்ல இனத்தில் கொடுக்கவேண்டுமென்றும் தங்களைப்போல் தக்க நாணயஸ்தர் கிடைப்பது அரிதென்றும் என் எஜமான் நினைத்திருக்கிறார். செட்டிகள் எல்லாருமே தங்களை அதிக நாணயஸ்தரென்று மதித்திருக்கிறார்கள்.

**வேஷக்தாவுது.**—எனக்குப் பணம் அதிகம் வேண்டுவதில்லையாயினும் இராமன் செட்டியார் சொல்வதைத் தடுக்க இஷ்டமில்லை. என்ன செய்கிறது? வேண்டாமென்றால் அவருக்குக் கோபம் வரும். கொண்டுவாரும்; வாங்கி எதிலாவது போடவேண்டியதே!

**தம்புசாமி பிள்ளை.**—அந்தப் பணம் ஒரு செட்டிக்கடையில் தவணைக்கிருக்கிறது. அதை நாளைக்காலையில் வாங்கிக் கொள்ளச் சொல்லிப் போயிருக்கிறார். அதை வாங்கி உடனே கொண்டுவந்து கொடுத்து அண்டிமாண்டு எழுதி வாங்கிக்கொண்டு போகிறேன். தங்களுக்கு நான் கொண்டு வந்திருக்கும் ஐம்பதினாயிரம் இன்று வேண்டியது அவசிய மாக இருந்தால் கொடுத்துப் போகிறேன். நாளைக்கு வாங் கிக்கொண்டால் எங்களுக்கு அனுகூலமாக இருக்கும்.

**ஷேக்தாவுது.**—என் நாளைக்கு வாங்கிக்கொள்ளச் சொல்லு கிறீர் ? இன்றே ஏன் கொடுக்கக்கூடாது ?

**தம்புசாமி பிள்ளை.**—என்னுடைய முதலாளி கவனிக்காமல் வங்கிக்கு இன்று அதிக தொகைக்குச் செக்குக் கொடுத்து விட்டு, நான் வரும்பொழுது நினைப்பூட்டினார். ஆனதால் தாங்கள் நாளை பெற்றுக்கொண்டால் நலம் என்றேன். தங்களுக்கு இன்றே அவசியம் வேண்டுமென்றாலும், எங் காகிலும் எங்களுக்கு வேண்டியதோடு வாங்கவேண்டியதே ! நாளை வங்கியில் மாற்றிக்கொள்ளுகிறதா யிருந்தால், இப் பொழுதே செக்குக் கொடுத்துப் போகிறேன்.

**ஷேக்தாவுது.**—இன்றைக்கு அவசரமில்லை. நாளை அவசியம் வேண்டியதால் இன்றே வாங்கி வைத்துக்கொள்ள யோசித்தேன்.

**தம்புசாமி பிள்ளை.**—மிக்க அநுகூலமாய் முடிந்தது. இன்று வங்கிக்குப் பெருந்தொகை கட்டவேண்டிய தவணை. இன்னம் தொகை வேண்டியிருப்பதால் நான் போய்த் தேடவேண்டும். நாளை எவ்வளவு வேண்டுமென்றாலும் கொடுக்கமுடியும். தங்களிடத்தில் ஏதாகிலும் தொகை யிருந்து கொடுத்தாலும் உதவியாயிருக்கும். நான் இப் பொழுதே அத்தொகைக்குச் செக்குக் கொடுத்துப் போகி றேன். நாளை வங்கியில் வாங்கிக்கொள்ளலாம்.

**ஷேக்தாவுது.**—(நகைத்து) உமக்கு எவ்வளவு வேண்டும் ?

**தம்புசாமி பிள்ளை.**—முப்பதினாயிரம் வேண்டும்.

ஷேக்தாவுது இருப்புப்பெட்டியைத் திறந்து ஆயிரரூபா நோட்டில் முப்பது எடுத்துக் கொடுத்து, "போதுமா?" என்று கேட்டார்.

**தம்புசாமி பிள்ளை.**—போதும்! போதும். நான் வீடு வீடாய்ப் போய்க் கடன்வாங்கும் தொந்தரவை நீக்கினீர்.

**ஷேக்தாவுது.**—நான் எப்பொழுதும் என் கையில் பணம் வைத்திராமல் இருக்கிறதில்லை.

**தம்புசாமி பிள்ளை.**—(நோட்டுகளை வாங்கி பதனமாக வைத்துக் கொண்டு, தன்னிடமிருந்த பொட்டணத்தை அவிழ்த்துப் பார்த்து) "செக்குப் புத்தகத்தை எடுத்துவர மறந்துவிட்டேன். வீட்டுக்குப் போனபின் உடனே தங்களுக்குச் செக்கெழுதி அனுப்புகிறேன்."

**ஷேக்தாவுது.**—உம்முடைய இஷ்டம்போல் செய்யும்.

**தம்புசாமி பிள்ளை.**—நான் ஒன்று சொல்ல மறந்துவிட்டேன். முன் தாங்கள் எழுதியிருக்கும் அண்டிமாண்டைப் பெற்றுக்கொண்டு ஒரே அண்டிமாண்டு எழுதி வாங்கிவரும்படி சொன்னார் (என்று அண்டிமாண்டை எடுத்துக்கொடுத்தார்).

**ஷேக்தாவுது.**—உம்முடைய முதலாளி இஷ்டப்பிரகாரம் மொத்தமாகவே சேர்த்து எழுதுவதனால், இது ஒரு தேதி அது ஒரு தேதியாக இருக்கிறதே, அதற்கென்ன செய்கிறது?

**தம்புசாமிபிள்ளை.**—இன்றைய தேதி பரியந்தம் வட்டிபோட்டு, சிட்டையில் எழுதிவைத்துக்கொள்ளுகிறோம். பின் தாங்கள் வட்டிகொடுக்கும்பொழுது சேர்த்து வாங்கிக்கொள்கிறோம்.

**ஷேக்தாவுது.**—"அந்தத் தொந்தரவு ஏன்? நான் இவ்வண்டிமாண்டுக்கு அதிகம் கொடுக்கவேண்டியதில்லை. இப்பொழுதே கொடுத்துவிடுகிறேன். பின் எழுதப்போகும் அண்டிமாண்டு புதிதாகவே இருக்கட்டும்" என்று கணக்குப் பார்த்து வட்டியைக் கொடுத்துவிட்டார்.

**தம்புசாமி பிள்ளை.**—ஐயா! முப்பதினுயிரத்துக்கு ஒருநாள் வட்டியை மீத்திக்கொள்ளவா இந்த யோசனை செய்தீர் (என்று நகைத்துப் பணத்தோடு நீங்கினுர்).

ஈந்தட்டாவுக்குச் சென்ற இராமன் செட்டியார் சில வாரங் களுக்குப்பின் திரும்பிவந்து, மறுநாள் காலையில் போஜன முண்டு, கணக்கு எழுதியிருந்த தம்புசாமியைப் பார்த்து, "ஷேக் தாவுதுக்கு நான் சொன்ன தொகையைக் கொடுத்து ஒன்றரை ரூபா வட்டிபோட்டு அண்டிமாண்டு எழுதி வாங்கிக்கொண் டாயா?" என்று கேட்டார்.

**தம்புசாமி பிள்ளை.**—இன்னம் கொடுக்கவில்லை.

**இராமன் செட்டியார்.**—கொடுக்கவில்லையா! என் கொடுக்க வில்லை? நான் சொல்வதில் ஒன்றையாவது கவனிக்காமலிருக் கிறது என்ன மடத்தனம்? நான் உனக்குப் படித்துப் படித் துச் சொல்லிப்போயும், என் வார்த்தையைக் கேட்காம லிருந்துவிட்டா யல்லவா? நான் உன்னை என்ன செய்கிற தென்று தோன்றவில்லை. நீ பேசாமல் என்னுடைய கடை யை விட்டு விலகிக்கொள்ளுகிறது உத்தமம். வேலைக்காரன் எஜமான் சொல்போல நடப்பது உலகவழக்கம். நீ இந் தக் கடைக்கு எஜமானுகவும் நான் உனக்கு வேலைக்கார னுகவும் இருக்கிறேன் என்று நினைத்துக்கொண்டிருக் கிறதுபோல் காண்கிறது. என்ன புத்தியற்ற தன்மை? நான் சொல்வதுபோல ஏன் நடக்கக்கூடாது? 'சொக்கனுக் குச் சட்டியளவு' என்ற விதம் உனக்கென்ன நஷ்டம்? கடைக்கு இலாபம் வந்தாலும் ஒன்றே, கடைக்கு நட்டம் வந்தாலும் ஒன்றே. உன்னுடைய சம்பளத்துக்குக் குறை வில்லை. எப்பொழுதும் வேறு ஜாதியானைச் சேர்த்துக் கொள்வதால் வரும் கெடுதியைப் பார்த்தீர்களா? ஷேக்தா வுதைவிட பணக்காரன் வேறு யார் இருக்கிறுர்கள்? அவ னுக்கு முதல் பத்து இலட்சத்திற்கு அதிகம் இருக்கும். வீடுகளில் குடிக்கூலியில் மட்டும் மாதம் ஐயாயிரத்துக்

கதிகம் வருகிறது. அவனுக்கு எந்தக் கம்பெனியில் வேலை இல்லாமலிருக்கிறது? தங்கமான இனத்தைக் கண்டு நான் கொடு என்றதற்கு நீ கொடுக்காமலிருந்ததின் காரணம் தெரியவில்லை (என்று கோபித்தார்).

தம்புசாமிபிள்ளை, செட்டியார் சொல்வதை கவனிக்காமல், தலைகவிழ்ந்து கணக்கெழுதிக்கொண் டிருந்தார். அந்த ஸமயத்தில் தந்தியொன்றைக் கொண்டுவந்து சேவகன் கொடுத்தான். அதைத் தம்புசாமி பிள்ளை பிரித்துப் பார்த்து "மாபீனுக்கு உடனே வரும்படி தந்தி வந்திருக்கிறது" என்றார்.

**இராமன் செட்டியார்.**—"நான் ஈந்தட்டாவிலிருந்து வந்தவன் மாபீனில் இறங்காமல் வந்தேன். கப்பல் எத்தனை மணிக்குப் போகிறது" என்று கேட்டார்.

**தம்புசாமி பிள்ளை.**—பகல் இரண்டு மணிக்குப் போகிறது.

**இராமன் செட்டியார்.**—நீ எனக்கு அடுத்தாளாக இருந்து நான் சொல்வதைக் கேட்பாயென்று உன்னைச் சம்பளத்திற்கு வைத்திருக்கிறதேயன்றி, நான் இல்லாத காலத்தில் உன் னிஷ்டம்போல் நடக்கவல்ல. சமையல் செய்திருந்தவனைக் கணக்கப்பிள்ளையாக்கினது என்மேல் குற்றம். நல்ல இலாபம் கிடைத்துக்கொண்டிருக்கும் இனத்தை ஒழித்துவிடத் துணிந்தாய். இப்பொழுது நாம் கொடுக்கிறோம் என்று சொன்னால் என்ன சொல்லுகிறானோ? பணம் வேண்டாமென்றால், என்ன செய்கிறது? நான் மாபீனுக்குப் போய் வருகிறதற்குள்ளாக அந்த இடத்தில் நான் சொல்லிய தொகை இல்லாமற் போனால், நீ அப்பொழுதே எங்கள் கடையை விட்டு விலகவேண்டிவரும் (என்று கடினமான உத்தரவைக் கொடுத்து இராமன் செட்டியார் போய்விட்டார்).

'தம்புசாமி பிள்ளை மிக்க யோக்கியன்: எஜமான் சொல்லைத் தள்ளி நடப்பவனல்ல' என்பதை அறிந்தவர்களாகையால், கடைகளிலுள்ள அடுத்தாள்கள் தம்புசாமி பிள்ளையை அழைத்து,

"நீர் என் முதலாளி சொல்லியவிதம் செய்யவில்லை?" என்று கேட்டார்கள்.

**தம்புசாமி பிள்ளை.**—"வங்கித் தவணை அதிகமிருந்ததால், பணத்தையெல்லாம் வங்கியிற் கட்டிவிட்டேன். பின்னால் வாங்கிக் கொடுக்கலாமென் றிருந்தேன். அதற்குள் என் முதலாளி அதிகம் கோபித்துக்கொள்ளுகிறார். நான் இன்றே அவர் சொல்லியவண்ணம் செய்துவிடுகிறேன். நாமெல்லாம் எஜமான் சொல்லைத் தள்ளி நடக்கக் காரணம் என்ன இருக்கப்போகிறது?" என்றார்.

அவர்களெல்லாம், "ஆம்! ஆம்! எதையும் எஜமான்கள் இருந்து பார்க்காமல் அடுத்தாள்கள் வசம் கடையை ஒப்பிவித்துவிட்டு ஓடிப்போகிறார்கள். நீர்மட்டும் கடையில் இல்லாமற்போனால், இராமன் செட்டியார் இவ்விதம் கடையை விட்டுவிட்டுப்போக முடியுமோ? தாம் இருந்து பார்த்தல்லவோ கடைவேலை பார்ப்பதின் கஷ்டம் தெரியும்? நீர் யாவையும் உமது தலையில் அள்ளிப் போட்டுக்கொண்டிருப்பதால், அவர் செல்வப்பிள்ளைப்போல் திரிந்துவருகிறார்" என்றார்கள்.

---

## 6—ம் அத்தியாயம்

சேலத்திலிருந்து திருச்சிராப்பள்ளிக்குப் போகும் மார்க்கத்தில் ஒருமைல் தூரத்திலுள்ள அனுமார்கோவிலில், ஒருபெண்பிள்ளை இருந்து, அம்மார்க்கம் போகிறவர்களுடைய உதவியைப் பெற்று, அக்கோவிலில் விளக்கேற்றி வைப்பதோடு தானும் ஜீவனம் செய்துவந்தாள். ஒரு நாள் காலை, ஏறக்குறைய இருபது வயதென்று மதிக்கத் தகுந்தவனாய், அழுக்கேறிய நீண்ட வெள்ளை அங்கியும் காதுமூடுகுல்லாவும் தரித்து, தோளில் சோல்நாவும் கையில் செம்பும் கொண்டு அம்மார்க்கம் வந்த பால சந்நியாசி யொருவன், அக்கோவிலுக் கெதிரில் உட்கார்ந்து, கோவிலிலிருந்த பெண்பிள்ளையோடு வார்த்தையாடிக்கொண்

டிருந்தான். அப்பொழுது வேறொரு சந்நியாசி சடைமுடியோடும் நீண்ட தாடிமீசையோடும் பெரிய சோல்நாவோடும் போவதை பால சந்நியாசி பார்த்து, பெருமூச்செறிந்து எழுந்து, இரண்டு மூன்று மைல் தூரம் அவரைப் பின்றொடர்ந்து போனான். அவர் திரும்பிப்பார்த்து "அப்பா! நீ யார்? எங்கே போகிறாய்?" என்று கேட்டார்.

**பாலசந்நியாசி.**—சுவாமி! அடிமை பெரியோருக்குத் தொண்டு செய்கின்ற பாலன்: சேலத்துக்குப் போக எண்ணங்கொண்டு வந்தவன் தேவரீரைப் பார்த்த அளவில் தங்களிடத்தில் மனம் லயமாகி விட்டமையால் தங்களோடு செல்லத் துணிந்தேன்.

**சாமியார்.**—அப்பா! நான் ஓர் பரதேசி! நீ என்னோடு வருவதில் பிரயோசனம் இல்லை. நீ போகவேண்டிய இடத்திற்குப் போவது உத்தமம். என்னோடு நீ வரவேண்டாம்.

**பாலசந்நியாசி.**—சுவாமி நானும் ஓர் பரதேசியென்று தங்களுக்குத் தோன்றவில்லையா? நான் யாராகிலும் பெரியோரை அடுத்து நற்கதி யடையலாம் என்று தேடித் திரிந்து வருங்கால், ஒரு சாமியார் அகப்பட்டார். அவரோடு நெடுநாள் சுற்றித்திரிந்தேன். அவர், இவ்வுலகத்தை விட்டு நீங்குங்காலம் ஸமீபித்தபொழுது, என்னை யழைத்து, "அப்பா! அண்ணாமலை! இனி நீ என்னோ டிருப்பதில் பயனில்லை. நீ பெரியோரைத் தேடிப்பார்த்து, யாரைக் கண்டால் உன் மனம் பற்றுகிறதோ, அவரையே நீ ஆசானாகக் கொண்டு கடைத்தேறுக" என்று சொல்லிப் பரகதி யடைந்தார். அதன்பின் எத்தனையோ பேரைப் பார்த்தும் என் மனம் பற்றவில்லை. தேவரீருடைய கடைக்கண் பார்வையாகிய சூரிய கிரணம் தாக்கியவுடன் என் மனமாகிய தாமரை மலர்ந்துவிட்டது. ஆனதால் தேவரீரே என்னை ஆட்கொள்ள வந்த ஆசிரியர் (என்று விழுந்து நமஸ்கரித்தான்).

**சாமியார்.**—அப்பா! அண்ணாமலை! எழுந்திரு (என்று தூக்கி

விட்டு) நீ என்னை உன் ஆசிரியனாக எண்ணுவது பொருந்தாது. உன்னைப் பார்த்தால் புத்திசாலியாகக் காண்கிறாய். வீணில் என்னோடு அலைந்து கெடாமல், போகவேண்டிய இடத்திற்குப் போய், பெரியோரை அடுத்தால் ஸுகப் படுவாய்.

அண்ணாமலை.—சுவாமி! தேவரீருக்குத் தொண்டுசெய்யத் திருவருள் கூட்டுவித்ததே என் பாக்கியம். என்னைத் தங்களுக்கு அடிமையாகச் சேர்த்துக்கொண்டு போக தேவரீர் திருவுள்ளங் கொள்ளவேண்டும்.

சாமியார்.—அப்பா! என்னால் முடியாத காரியத்தைச் செய்யச் சொல்லுகிறாய்.

முதலாவது.—நான் உணவுக்காக ஒன்றும் தேடுகிறதில்லை. யாராகிலும் இரக்கப்பட்டு எதாகிலும் கொடுத்தால் அதை உண்பவன்.

இரண்டாவது.—உன்னை அழைத்துக்கொண்டு போனால் உனக்காக நான் உணவு தேடுவது கட்டாயமாகிவிடும். ஆனதால், என்னோடு வரலாமென்கிற எண்ணத்தை விட்டுவிட்டு, நீ போகிற வழியே போ.

அண்ணாமலை.—சுவாமி! அடிமைக்காகத் தாங்கள் கவலைப்பட வேண்டாம். தங்களோடிருந்தால் தங்களுக்கு வேண்டிய உணவைத் தேடிக்கொண்டுவந்து கொடுப்பேனே யல்லாது, அடிமைக்காகத் தங்களை சிரமப்படும்படி விடமாட்டேன்.

சாமியார்.—அப்பா! உனக்கு முகத்தில் அரும்பு கட்டவில்லை. இந்த இளமைப் பருவத்தில் நீ இவ்வுடையோ டிருப்பதே அடுக்காது. இல்லறத்தை வெறுத்திருப்பினும், ஒரு ஸமயம் உன் வயதுக்கேற்ற சேஷ்டை வந்தாலும் வரும். நீ என்னோடு வரவேண்டாம்.

அண்ணாமலை.—சுவாமி! நான் பெரும்பொருளுள்ள குடும்பத்தில் பிறந்தவன். ஸௌகரியத்தோடு இருக்கவேண்டுமென்

கிற எண்ணம் இருக்குமாயின், நான் இவ்வுடையோடு வெளிக் கிளம்பவேண்டிய அவசியம் இல்லை. என் மனம் பற்றிய தொன்றை நாடியே வெளியானேன். அதை அடைதலான ஸமயம் கிட்டியபின் நான் இந்த நிலையை விட்டுப் போவேன் என்பது முடியாத காரியம்.

**சாமியார்.**—நான் சொல்வதைக் கேட்டுப் போகாவிட்டால் நீ பின் துக்கப்படுவாய்.

**அண்ணாமலை.**—சுவாமி! நான் தங்களை விட்டுப்போனால் துக்கப் படுவேனே யன்றி, தங்களோடிருந்தால் ஸந்தோஷமாகவே இருப்பேன்.

**சாமியார்.**—அடே! நான் சொல்வதைக் கேட்காமல் வாக்குவாதம் செய்துகொண்டிருக்கிறாய். நீ என்னைவிட்டுப் போகாவிட் டால் இதைப் பார்த்துக்கொள் (என்று தன் கைத்தடியைக் காட்டினார்).

**அண்ணாமலை.**—சுவாமி! தாங்கள் என்னை அடித்தாலும் அல்லது கொல்லத் துணிந்தாலும், நான் தங்களைவிட்டுப் போகமாட் டேன்.

**[சா]மியார்.**—இதேது; பெருந் தொல்லையாக இருக்கிறது. சனி யனைப்போல் பின்தொடருகிறான். போடா என்றாலும் போகமாட்டேன் என்கிறான். அடே! நீ இன்னம் என் னோடு வந்தால், கல்லால் அடிப்பேன் (என்று ஒரு கல்லைக் கையிலெடுத்துக் காட்டினார்.

**அண்ணாமலை.**—சுவாமி! பட்டணத்தடிகளால் ஆளப்பெற்ற பத்திரகிரியாரால் கொல்லப்பட்ட நாய் காசிராஜன் மக ளாய்ப் பிறக்கவில்லையோ? அதுபோல அடிமையின் தேக மும் தமது திருக்கரத்தால் முடிவு பெறுமாயின், அடிமையும் பெரும் பலனை அடைவேன். தாங்கள் எடுத்த கல் வீணாகா மல் என்னை முடித்துவிடுவது பெரும் புண்ணியம். நான் இவ்வுடலைப் பெற்று அனுபவித்த ஸுகம் போதுமானது. அடிமை முன்போந்த ஜன்மத்தில் செய்த புண்ணியத்தின்




ஐயோ ! அம்மா ! நான் என்ன செய்வேன்.

(56-ம் பக்கம் பார்க்க).

பலன் தேவரீரை அடையச் செய்தது. அப்புண்ணியத்தின் பலன் முற்றிலும் பக்குவப்படாமற் போனதால் தேவரீர் என்னைத் துரத்துகிறீர்.

அண்ணாமலை சொல்வதைக் கேட்டுக் கோபம் தணிந்து சாமியார் தன் கையிலிருந்த கல்லைப் போட்டுவிட்டு, "அப்பா! அண்ணாமலை! நான் சொல்வதை கவனமாகக் கேள். நீ அறியா தவனாய் இருந்தாலும், உன்னுடைய வாசகத்தால் நீ சாத்திர ஞானம் உள்ளவன் என்பது தெரியவருகிறது. ஆனதால் சாத் திரப் பயிற்சியுள்ள பெரியோர்களை யடுத்து உன் காலத்தைக் கழிப்பது மேன்மை. வீணில் கானலை ஜலம் என்று எண்ணும் மான் கூட்டங்களைப்போல் ஏமாறவேண்டாம். நான் சொல் வதை நம்பு. நீ வந்த வழியே திரும்பிச் செல்" என்றார்.

அண்ணாமலை.—சுவாமி! என்னை நீக்கிவிடும்படி தேவரீர் சொல் வதைக் கேட்டு நான் போய்விடுவேன் என்று எண்ண வேண்டாம். என்னுடைய ஆசான் எனக்கு உபதேசித்த வண்ணம் தேவரீரைக் கண்டவுடன் என் மனம் பற்றிய தால், நான் கிடைத்த பெருநிதியை விட்டு அற்பத்துக்கு ஆசைப்படேன். என்னைத் தாங்கள் சித்திரவதை செய் தாலும் ஸம்மதமே! தங்களுக்குப் பணிவிடை செய்யும் பாக்கியமே எனக்கு வேண்டும். வேறொன்றையும் நான் கருதவில்லை. என்னை அங்கீகரித்து ஆட்கொள்ளும் (என்று கீழ்விழுந்து நமஸ்கரித்து நின்றான்).

சாமியார்.—அப்பா! நீ முன்போந்த சனனத்தில் செய்த தீவினையின் பலனே உன்னை மேன்மை அடையவொட்டா மல் தடைப்படுத்துகிறது. 'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினுந் தான் முந்துறும்' என்ற வாக்குப் பிரகாரம் நடக்கிறது. பின்னால் துக்கப்படப் போகிறாய். நான் என்ன செய்வேன்? உன்னிஷ்டம்போல் வா (என்று நடந்தார்).

அண்ணாமலை.—"சாமி! என்னுடைய ஜன்மம் சாபல்யமானது.

தாங்கள் எண்ணியதுபோல் என் தீவினையின் பலனல்ல, நல்வினையின் பலனே தங்களோடு சேர்த்தது" என்று ஆனந்தத்தோடு அவர் பின் சென்றான்.

இருவரும் நெடுந்தூரம் சென்று மஸ்காளிபட்டி சத்திரத்தை அடைந்தவுடன், வழிப்போக்கர்கள் அச்சத்திரத்தில் தங்கியிருந்தவர்கள் சாமியாரையும் அவர் சீடனையும் கண்டு, அவர்களுடைய ஆயாசம் தீர உபசரித்து வார்த்தையாடிக்கொண்டிருந்தனர்.

அப்பொழுது, சத்திரத்து வெளித்திண்ணையில் படுத்துறங்கி நித்திரை தெளிந்தெழுந்த ஒருவர், சாமியாரையும் அவர் சீடனையும் பார்த்து, "இந்த சாமியாரை எங்கோ பார்த்தது போலிருக்கிறது" என்று தன்னருகி லிருந்தவரிடம் சொன்னார். அவர் "ஆம்! ஒண்டியாபிள்ளை! நீர் பார்க்காதவர் யாரிருக்கிறார்கள்?" என்று நகைத்தார்.

**ஒண்டியா பிள்ளை.**—ஆம்! மாமுண்டியாபிள்ளை! நான் சாமியாரைப் பார்த்திருப்பதாக நினைவிருக்கிறதாயினும், சீடனைப் பார்த்திருப்பதாக நினைவில்லை.

**மாமுண்டியா பிள்ளை.**—சீடனைப் பார்க்கவில்லை யென்பது அதிசயம். இல்லறத்தை வெறுத்தவர்கள் இருப்பிடமின்றி எங்கும் திரிவார்க ளாதலால், அவர்களைக் கண்ட கண்ட இடத்திலெல்லாம் பார்க்கக்கூடியது சகஜம். ஆனதால் நீரும் வியாபார நிமித்தம் பல ஊர்களைச் சுற்றுகிறதால், அவரை எங்காகிலும் பார்த்திருக்கக்கூடும்.

**ஒண்டியா பிள்ளை.**—ஆம்! நீர் சொல்வதுபோல் எங்கோ பார்த்திருக்கிறேன். ஆனால் இன்ன ஊரில் இன்ன இடத்தில் பார்த்தேன் என்பது ஞாபகத்துக்கு வரவில்லை.

**மாமுண்டியா பிள்ளை.**—நீர் சாமியாரைக் கண்டு வார்த்தையாடினால், அவரைக் கண்ட ஊர் இன்னதென்று கண்டுகொள்ளலாம். ஆயினும் அதைக் கண்டுகொள்வதால் நமக்கென்ன

பிரயோஜனம்? ஒன்றுமில்லை. வீண் தொந்தரை எடுத்துக்கொள்ளவேண்டாம். பேசாமலிரும்.

**ஒண்டியா பிள்ளை.**—நமக்குப் பிரயோசனம் இல்லையாயினும், பெரியோரைக் கண்டு வார்த்தையாடுவது விசேடமே! (என்று சாமியார் அருகிற்சென்று நமஸ்கரித்து), சுவாமி! தங்களை எங்கேயோ பார்த்ததுபோ லிருக்கிறது. ஆனால் எவ்விடத்தில் பார்த்தேன் என்பது ஞாபகத்துக்கு வரவில்லை (என்றார்).

**சாமியார்.**—அப்பா! அடிமை நாடோடி! இன்றோரிடத்திலும் நாளை யோரிடத்திலும் இருப்பேன். ஆனதால் என்னைப் பல தடவை பல இடத்தில் பார்த்திருக்கக்கூடும்.

**ஒண்டியா பிள்ளை.**—தாங்கள் எந்தெந்த ஊருக்குப் போயிருக்கிறீர்கள்?

**சாமியார்.**—அப்பா! அவ்விதம் கேட்காது எந்தெந்த ஊருக்குப் போகவில்லை என்றால், சுளுவாக பதில் சொல்லலாம். அக்கேள்விக்கு பதில் அடிமையே சொல்லிவிடுகிறேன். இந்தியாவில் நான் பார்க்காத இடம் இல்லை.

**ஒண்டியா பிள்ளை.**—தங்களுடைய சீடனும் தங்களோடு எப்பொழுதும் இருந்தாரோ?

**சாமியார்.**—இல்லை. இல்லை.

**ஒண்டியா பிள்ளை.**—தாங்கள் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, மதுரை முதலிய இடங்களுக்கு ஸமீபத்தில் போயிருக்கிறீர்களோ?

**சாமியார்.**—அநேக தடவை போயிருக்கிறேன்.

**என்**று மறுமொழி சொல்லித் தன்னோடு வரும் அண்ணாமலையைப் பார்த்து சாமியார், "அப்பா! நாம் இளைப்பாறினது போதும். புண்ணியவான்களால் உணவும் கிடைத்தது. நாம் இனி இங்கிருக்கவேண்டிய காரணம் இல்லை" என்று திண்ணை விட்டிறங்கினார். அங்கிருந்தவர்களில் ஒருவன், "சுவாமி! நாங்களும் இரவில் பிரயாணப்பட இருப்பதால், தாங்கள் என்

நடந்து போகவேண்டும்? இன்றைப் பகலை இவ்விடத்தில் போக்கி எங்களோடு வண்டியில் போகலாம்" என்றான்.

"அடிமைக்கு ஸுகம் வேண்டுவதில்லை. நாங்கள் போய் வருகிறோம்" என்று சொல்லி, சாமியாரும் அண்ணாமலையும் நீங்கினார்கள். அன்று மாலை மாமுண்டியா பிள்ளையும் ஒண்டியா பிள்ளையும் இரவில் பிரயாணப்பட்டுக் காலை சேலம் வந்து சேர்ந்து, தாங்கள் அவ்விடம் வியாபார நிமித்தியமாகப் போன வேலைகளை முடித்துக்கொண் டிருக்கும்பொழுது, ஒண்டியா பிள்ளை மிக்க களிப்போடு "ஓய்! மாமுண்டியா பிள்ளை, நாம் பார்த்த சாமியாரை எவ்விடத்தில் கண்டேன் என்பது எனக்கு இப்பொழுது ஞாபகத்துக்கு வந்தது. நாம் விரைவில் சென்று அந்த சாமியாரைப் பார்க்கவேண்டும்" என்றார்.

**மாமுண்டியா பிள்ளை.**—உமக்கென்ன பித்துப் பிடித்துவிட்டதா? நீரும் சாமியாராகப் பார்க்கிறீரோ! நாம் எங்கிருக்கிறோம்! அவர்கள் எங்கிருக்கிறார்கள்! என்ன ஒன்றும் யோசியாமல் பேசுகிறீர் (என்று நகைத்தார்).

**ஒண்டியா பிள்ளை.**—நாம் நாலைந்து ரூபா கொடுக்கிறோமென்றால் ஸவாரி வண்டி கிடைக்கும். அதில் ஏறிச் சென்றால் அவர்களைக் கண்டுகொள்ளலாம்.

**மாமுண்டியா பிள்ளை.**—நீர் அவ்வளவு கவலையோடு போய்க் காணவேண்டிய காரணம் என்ன?

"காரணத்தைச் சொல்லுகிறேன். ஸமீபத்தில் வாரும்" என்று காதில் இரகசியமாகச் சில வார்த்தைகளை ஒண்டியா பிள்ளை சொன்னார்.

மாமுண்டியா பிள்ளை, "ஆ! ஆ! கைக்கெட்டியது வாய்க்கெட்டாமற் போய்விட்டதே! இனி நாம் காலதாமஸம் செய்யக்கூடாது" என்று தாங்கள் சேலத்தில் முடிக்கவேண்டியவைகளை முடித்துக்கொண்டு ஸவாரி வண்டி தேடினார்கள். ஸவாரி வண்டி கிடைக்காமையால் பார வண்டியில் ஏறி அன்று மாலையே பிரயாணப்பட்டார்கள்.

## 7—ம் அத்தியாயம்

சேலத்துக்கு ஏழுமைல் தூரத்தில், மல்லூர் என்ற கிராமத்துக்கு ஸமீபமான சாலையில், அநேக பெண்பிள்ளைகள் பலவித காய்வகைகள் நிறைந்த கூடைகளைப் பாதையில் இறக்கி வைத்து இளைப்பாறிக்கொண்டிருந்து, பின் கூடைகளைத் தூக்கித் தலையில் வைத்துக்கொண்டு சேலத்தை நாடிச் சென்றார்கள். அக்கூட்டத்துப் பெண்பிள்ளைகளில், பதினாறு பதினேழு என்று நிதானிக்கத்தக்க வயதும், ஸுந்தரமான முகமும், சரியொத்த வெண்மையான பல்வரிசையும், நீண்ட கூந்தலும், அதிகம் பருத்திராத தேகமும், ஐந்தடி உயரமும் உள்ள பெண் ஒருத்தி தன் காலைத் தாங்கித் தாங்கி வைத்துக்கொண்டு மெதுவாக நடப்பதைப் பார்த்த மற்றப் பெண்பிள்ளைகள், "அடியம்மா! பாலம்பா! நீ இவ்விதம் நடந்தால் நாம் எப்பொழுது வீடுபோய்ச் சேருகிறது?" என்றார்கள்.

பாலம்பாள், "அம்மா! நான் என்ன செய்வேன்? கால் பெருவிரலில் கல்லடிபட்டு நகம் பேர்ந்துவிட்டதால் எனக்கு நடக்க முடியவில்லை. நீங்கள் போங்கள். நான் மெதுவாக நடந்துவருகிறேன்" என்றாள்.

பாலம்பாள் சொல்லியதைக் கேட்ட பெண்பிள்ளைகள் "ஆம் மெதுவாக அவள் நடந்துவரட்டும்" என்று அவளைப் பின்விட்டு, யாவரும் முன்சென்றார்கள். பெண்பிள்ளைகள் தன்னை விட்டுப் போனபின், பாலம்பாள் கால் உபத்திரவத்தோடு, மார்க்கத்தில் ஒருவரிருவர் போவதையும் வருவதையும் பார்த்து, அதிக தூரம் மெல்ல நடந்து, பொய்ம்மான் காட்டுக்கருகில் வந்தாள். அவ்விடம் இரண்டு வாலிபர் நின்று பொய்ம்மான் காட்டைப் பார்த்துக்கொண்டிருந்தனர். ஒருவன் மற்றவனைப் பார்த்து, "திருஞானம்! நான் நிற்கும் இடத்தில் வந்துபாரும். மான் நிற்பது நன்றாய்த் தெரிகிறது" என்றான்.

திருஞானம்.—அப்பாசாமி! நான் நிற்கும் இடத்திலிருந்தும்

நன்ருய்த் தெரிகிறது. அது உண்மையான மாரு அங்கு காண்கிறது?

**அப்பாசாமி.**—உமக்குப் பைத்தியமா? மான் போய்க் கற்பிளவில் நிற்குமா? கற்பிளவில் தோன்றும் வேறு கற்களே தூரத்தில் நின்று பார்க்கிறவர்களுக்கு மானுருவமாகக் காட்டுகிறது. ஸமீபத்தில் போய்ப் பார்த்தால் கல்தவிர வேறொன்றும் தோன்ருது.

**திருஞானம்.**—"பெண்மான் ஒன்றே போகிறது" என்று கூடைத்தலையோடு போகும் பாலம்பாளைக் குறித்துக் காட்டினன்.

**அப்பாசாமி.**—அப்பெண் தூரத்தில் போவதைப் பார்த்து நகைத்து "மிகு ஸுந்தரமாக இருக்கிருள்" என்ருன்.

**திருஞானம்.**—இவளை நான் மாரியம்மன் கோவிலின் பின்பக்கத்தில் கத்தரிக்காய் விற்கும்பொழுது பார்த்திருக்கிறேன்.

**அப்பாசாமி.**—அவள் பெயர் தெரியுமா?

**திருஞானம்.**—அவள் பெயர் தெரியாது. கேட்டால் சொல்லுகிருள்.

**அப்பாசாமி.**—நாமும் வீட்டுக்குப் போகவேண்டியவர்களாதலால், அவளோடு வார்த்தையாடிக்கொண்டே போகலாம், வாரும் (என்று சொல்லி இருவரும் நடந்து அவளருகில் வந்தார்கள்).

**அப்பாசாமி.**—அம்மா! ஏன் கால் தாங்கித் தாங்கி நடக்கிருய்?

**பாலம்பாள்.**—(திரும்பிப் பார்த்து) அண்ணு! கல் தடுக்கி விரலில் காயம்பட்டதால் நடக்க முடியவில்லை. அதனுல் என்னேடு வந்தவர்களெல்லாம் என்னைப் பின்விட்டுச் சென்ருர்கள். நான் மெதுவாக நடந்துபோகிறேன்.

**அப்பாசாமி.**—அம்மா! உன் பெயர் என்ன?

**பாலம்பாள்.**—அண்ணு! என் பெயர் பாலம்பாள்.

**அப்பாசாமி.**—உன் தாயோடு நீ வரவில்லையோ?

**பாலம்பாள்.**—எனக்குத் தாயும் இல்லை, தந்தையும் இல்லை. என் பாட்டியாரோடு இருக்கிறேன்.

**அப்பாசாமி.**—உன் பாட்டியாரும் நீயும் என்ன தொழில் செய்து வயிறு வளர்க்கிறீர்கள் ?

**பாலம்பாள்.**—என்ன தொழில் ஏழைகளுக்கிருக்கிறது ? என் பாட்டியாரும் நானும் காய் கிழங்குகளை விற்றுக் காலங் கழித்துவந்தோம். என் பாட்டியாருக்கு தேக அசௌக் கியத்தால் இப்பொழுது படுத்த படுக்கையிலிருந்து நடமாட முடியவில்லை. ஆனதால் என்னுடைய கஷ்டத்தால் காலங் கழிக்கிறோம்.

**அப்பாசாமி.**—ஐயோ பாவம் ! என்ன செய்யலாம் ? நீ என்ன குலம் ?

**பாலம்பாள்.**—நாங்கள் வேளாளர் குலம். உயர்குலத்தில் பிறந் தால் என்ன பிரயோசனம் ? குலம் என்ன சோறு போடுமோ ?

அப்பாசாமி அப்பெண்ணோடு வார்த்தையாடிப் போவ தைக் கேட்டுக்கொண்டு வந்த திருஞானம், அவன் தோளில் கையைவைத் தழுத்தினான். உடனே இருவரும் நின்று, பாலம் பாள் தூரத்திலே போனபின், "என்ன ஸௌந்தரம் ! இந்த ஸம யத்தைக் கைவிடக்கூடாது. நீர் என்ன சொல்லுகிறீர் ?" என்றான்.

**அப்பாசாமி.**—திருஞானம் ! நான் உம்முடைய இஷ்டத்துக்கு விரோதம் எப்பொழுதாகிலும் சொல்லியிருக்கிறேனா ?

**திருஞானம்.**—நீரே எனக்குப் பிராணசினேகன். என்னுடைய இஷ்டத்துக்கு எப்பொழுதும் விரோதம் சொன்னதில்லை. நாம் அவளைப் பின்தொடர்ந்து போகவேண்டும், வருக (என்று இருவரும் வேகமாக நடந்துபோனார்கள்).

பாலம்பாள் தன்னோடு வருகிறவர்கள் நின்றுவிட்டார்க ளென்று அறிந்து முன்னால் நடந்தவள், பின்னால் வருகிறவர்கள் சந்தடியால் திரும்பிப்பார்த்து, இருவரும் வேகமாக வருவதைக் கண்டு நடந்து சென்றாள். திருஞானம் பாலம்பாளை நெருங்கி,

அவள் தலையிலிருந்த கூடையைத் தள்ளிவிட்டான். கூடையும் அதிலுள்ள காய்களோடு விழுந்து போகவே, அவள் பயந்து "ஐயோ! அம்மா! நான் என்ன செய்வேன்" என்று கூடையைப் போய் எடுத்து, அதில் சிதறிப்போன காய்களைப் பொறுக்கிப் போட்டுக்கொண்டிருந்தாள். திருஞானமும் அப்பாசாமியும் ஓடி, "ஐயோ! அசதியில் கைப்பட்டு உன் தலையிலிருந்த கூடை விழுந்தது. நாங்களும் உனக்கு உதவியாகக் காய்களைப் பொறுக்கிப்போடுகிறோம்" என்று இரண்டு மூன்றை எடுத்துப்போட்டார்கள்.

**பாலம்பாள்.**—அண்ணன்மார்களே! நான் ஏழை. இந்தக் காய்களைக் கொண்டுபோய் விற்றபின், அதனால் ஏதாகிலும் இலாபம் கிடைத்தால் கஞ்சி கிடைக்கும். இல்லாமற் போனால், நானும் என் பாட்டியாரும் பட்டினியாய் இருக்கவேண்டியதே. இவ்வளவு நிர்ப்பாக்கிய ஸ்திதியிலிருக்கும் என்னைச் சோதிப்பது நியாயமல்ல. விசாலமான பாதையில் உங்களுக்குப் போக இடமிருக்க, நீங்கள் வேண்டுமென்று என் தலையிலிருந்த கூடையைத் தள்ளி அசதியில் கைபட்டது என்றீர். என் தலைவிதியை நானே அனுபவிக்கவேண்டும். நீங்கள் எனக்குக் காய்களை எடுத்துப் போடவேண்டாம். நீங்கள் போகலாம். நான் எடுத்துப் போட்டுக்கொள்ளுகிறேன்.

**அப்பாசாமி.**—என் கை உன் கூடையில் பட்டு விழவில்லை. என்னைச் சேர்த்துப் பேசவேண்டாம்.

**திருஞானம்.**—பாலம்பாள்! கோபித்துக்கொள்ளவேண்டாம். நான் வேறு நினைவாகச் சென்றதால் என் கைப்பட்டது. உனக்கு நேரிட்ட நஷ்டத்தை நான் கொடுத்துவிடுகிறேன். நான் உன்மேல் ஆசைகொண்டிருக்கிறேன். நீ என் இஷ்டத்தை நிறைவேற்றினால், நீ எக்காலமும் துன்பப்படாமலிருக்க நான் பார்த்துக்கொள்ளுகிறேன் என்று பிரமாணிக்கம் செய்கிறேன்.

**அப்பாசாமி.**—அவர் சொல்வதுபோல் நடப்பார். அவ்வார்த்தையை நம்பலாம். அவருக்குப் பொருள் பூமி அதிகம்

உண்டு. அவர் உன்மேல் அன்பு வைத்தது உன்னுடைய அதிஷ்டமென்றே சொல்லவேண்டும்.

பாலம்பாள்.—நீங்கள் தப்பெண்ணத்தோடு என் தலையிலிருந்த கூடையைத் தட்டிவிட்டதோடு, நான் ஏழையானதால் வாய்கூசாமல் என்னிடத்தில் சொல்லத்தகாதவைகளைச் சொல்லத் துணிந்தீர்கள். உங்களுக்கு இது நியாயமல்ல. பேசாமல் போவதே அழகு.

திருஞானம்.—நீ பெரும் பைத்தியக்காரி. உன்னைக் கண்டு நான் இச்சித்தபின், நீ ஏழையாயிருந்தாலும் பணக்காரியாக இருந்தாலும் எனக்கு ஒன்றே. நீயே என் கண்மணி! நீயே என் உயிர்! நீயே என் நாயகி! உன்னோடு இன்பத்தை அனுபவிப்பதே என் தவப்பயன். நம்முடைய நல்ல அதிஷ்டத்தால் இம்மார்க்கம் தற்காலம் போக்குவரத்தில்லை. என்னுடைய இஷ்டத்தைப் பூர்த்தியாக்கினால், உன்னுடைய கஷ்டகாலம் இன்றோடு நீங்கும். தடங்கள் சொல்லவேண்டாம். தயைசெய்யடி கண்மணி!

பாலம்பாள்.—அண்ணன்மார்களே! உங்களைப் பார்த்தால் நீங்கள் நற்குலத்தில் பிறந்தவர்களாகக் காண்கிறீர்கள். உங்களுடைய நற்குலத்திற் கிணங்க நடக்காமல், புத்தியற்று இழிகுலத்தவரைப்போல் பேசுவதைக் கேட்டால், யாவரும் நகைப்பார்கள். தம்முடைய கற்பை விற்றுப் பொருள் தேடும் பாதகிகளைப்போல் என்னை நினைக்காமல், என்னை விட்டுப்போவது நன்றேயன்றி, பெண் பிள்ளையால் அவமானம் அடைந்தபின் புத்தி கற்றுக்கொள்ள வேண்டாம்.

அப்பாசாமி.—எங்களைக் கேட்பவர்களுக் கெல்லாம் நீ கற்பிற் சிறந்த அருந்ததியென்று சொல்லிவிடுகிறோம். நீ அவர் சொல்வதை மட்டும் தட்டாமல் செய். எங்களுக்கு புத்தி கற்றுக்கொடுக்குமுன் நீயே புத்தி கற்றுக்கொள்வாய்.

திருஞானம்.—அடி! நானா புத்தியற்றவன்! நானோ அவமான

மடையப் போகிறேன்! இன்னும் வாதிட்டுக்கொண்டிராமல் நான் சொல்வதற்கு இணங்கு! வேண்டாம்! வேண்டாம்!

பாலம்பாள்.—அடா துன்மார்க்கர்களே! உங்களை நான் இதுபரியந்தம் மரியாதையாகப் பேசியது என்மேல் குற்றம். நீங்கள் மரியாதை கெட்டுப் போகவேண்டியது உங்கள் தலை எழுத்துபோல் காண்கிறது. நீங்கள் பேசாது போய்விடுங்கள். இல்லாவிட்டால் நான் ஓடி மார்க்கத்தில் போகிறவர்களை அழைத்துவருவேன், பாருங்கள்.

அப்பாசாமி.—'பனங்காட்டு நரி சலசலப்புக் கஞ்சுமா?' நீ ஓடுந்தனையும் உன்னை விட்டிருப்போம் என்று நினைக்கவேண்டாம்.

திருஞானம்.—உன்னுடைய இஷ்டத்துக்கு விரோதமாய் நடந்தபின் துக்கப்படுவதைவிட, நீ உன் ஸம்மதத்தோடு என் இஷ்டத்தை நிறைவேற்றினால், பெருமை அடைவாய். இன்றோடு உன்னையும் உன் பாட்டியாரையும் கத்தரிக்காய் விற்க விடாமல் செய்துவிடுவேன். என் வார்த்தையை உண்மையென்று நம்பு.

பாலம்பாள்.—நான் தனித்து உங்கள் கையில் அகப்பட்டுக்கொண்டேன் என்று கண்டவிதம் பேசவேண்டாம். துன்மார்க்கர்களே! நீங்கள் ஸகோதரிகளோடு பிறக்கவில்லையா? என்னை நீங்கள் பேசும்விதம் உங்கள் ஸகோதரிகளோடு ஒருவன் பேசினால், உங்களுக்கு எவ்விதம் இருக்கும் என்று நினையாதிருக்கிறீர்கள்! நான் நாதியற்றவள் என்றும், ஏழை என்றும் பலமுறை சொல்லியும், நான் சொல்வதைக் கொஞ்சமும் கவனிக்காமல் பேசுகிறீர்கள்! வீண்பழியை என் கட்டிக்கொள்ளுகிறீர்கள்? வேண்டாம்! வேண்டாம்! ஒருவரும் இம்மார்க்கம் வராமுன்னம் போய்விடுங்கள்.

திருஞானம்.—அடி! குழந்தைகளுக்கு பூச்சி! பூச்சி! என்று பயமுறுத்துவதுபோல் பயங்காட்டுகிறாய். நீ என் இஷ்டத்துக்கு உடன்படுகிறாயா? இல்லையா?

**அப்பாசாமி.**—என் சினேகனுக்குக் கோபம் வருமுன் அவருடைய இஷ்டத்துக்கு உடன்படு. வீணே கசக்கி முகா வேண்டாம். நீ சந்தோஷத்தோடு அவர் இஷ்டத்தைப் பூர்த்தியாக்கினால், நீ பெரும் பணக்காரி யாய்விடுவாய்.

**பாலம்பாள்.**—ஆ! தெய்வமே! நான் சொல்வதை கவனிக்காமல் இவர்கள் மேலும் மேலும் அவமானப்படுத்திப் பேசுகிறார்கள். நான் என்ன செய்வேன் (என்று அழுதாள்).

**அப்பாசாமி.**—கரும்பு தின்னக் கைக்கூலியா? நீ என்ன தவஞ் செய்தாயோ! இந்த ஸுந்தரபுருடன் உன்மேல் ஆசை கொண்டார். நீ உள்ளுக்கு இஷ்டங்கொண்டு வெளிக்கு இஷ்டமில்லாதவள்போல் நடிக்கிறாய். இவ்விதம் பேசும் பெண்கள் அனேகரைப் பார்த்திருக்கிறோம். உன் மாயஜால வித்தையை இன்னும் காட்டிக்கொண் டிருக்கவேண்டாம்.

**பாலம்பாள்.**—அடா! படுபாவிகளா! நான் காய் கிழங்குகளை விற்று வயிறு வளர்த்தாலும், எனக்கிருக்கும் ஸ்திதி என்னுடைய கற்பே என்றெண்ணி யிருக்கிறேன். அதை நீங்கள் அபகரிக்க வேண்டாம்! வேண்டாம்! (என்று கதறி யழுதாள்).

**திருஞானம்.**—அப்பாசாமி! இன்னமும் நாம் சும்மா இவள் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருப்பதில் பலன் ஒன்று மில்லை (என்றான்).

**பா**லம்பாள் பயந்து "இனி இங்கிருந்தால் மோசம்வரும்" என்று அழுதுகொண்டே ஓடினாள். அப்பாசாமி பின்தொடர்ந்தோடி அவளைப் பிடித்துக்கொண்டு, "உன்னுடைய ஓட்டம் எங்கள் ஓட்டத்தைவிட வேகமா?" என்று சொல்லியிருந்தான். இதற்குள் திருஞானமும் ஓடி, தாங்கள் மேல்போட்டிருந்த அங்கவஸ்திரத்தால் அவளுடைய கைகால்களைக் கட்டிவிட்டான். பிறகு பாதையைவிட்டு அவளைக் காட்டுக்குள் கொண்டுபோனார்கள். பாலம்பாள் பெருஞ்சத்தத்தோடு "என்னைக் கொல்லுகிறார்கள்!" என்று போட்ட சத்தம் பிரயோசனப்படவில்லை. அவள்

திமிறிப்பார்த்தும் பயன்படாமல் "ஐயா ! சாமி ! நான் ஏழை ! என்னை உயிரோடு கொல்லவேண்டாம். என்னுடைய ஆயுள் காலமெல்லாம் என் உயிரை வெறுத்திருக்கச் செய்யவேண்டாம். வீணைப் பெண்பழியைக் கட்டிக்கொள்ளவேண்டாம். என்னை விட்டுவிடுங்கள். ஏழையென்றும் உங்களிடத்தில் அகப்பட்டுக் கொண்டேனென்றும் என் கற்பைக் கெடுக்கவேண்டாம்" என்று கெஞ்சியும் அவர்கள் விடாமலிருப்பதைக் கண்டு, "அடா! படு பாவிகளா ? கொலைத்தொழிலுக் கஞ்சாத கொடும்பாவிகளா ?" என்று கோபமாகக் கூவினாள். எதையும் கவனிக்காமல் அவளைக் காட்டுக்குள் கொண்டுபோய் விட்டு அப்பாசாமி நீங்கினான்.

* * * * *

நெடுநேரத்துக்குப் பின் பாலம்பாள் அடங்காத துக்கத்தோடு அழுதுகொண்டு போவதைத் தனித்துப் போகும் வாலிபன் ஒருவன் கண்டு, "ஏனம்மா அழுகிறாய் ?" என்று கேட்டான். அவள் பதில் சொல்லாமல் ஓயாமல் கண்களில் தாரை தாரையாக நீர் வடிகிறதைக் கண்டு, தன் கண்களிலும் நீரை வடியவிட்டு, "அம்மா ! நீ அழுகிறதைப்பார்க்க எனக்கும் துக்கம் மேலிடுகிறது. உனக்குள்ள துக்கத்தைச் சொன்னால், என்னால் கூடுமானதைச் செய்கிறேன்" என்று சொன்னான்.

**பாலம்பாள்.**—எனக்கு நேரிட்ட அவமானத்தை எவ்விதம் சொல்லுவேன் அண்ணா ! (என்று ஓவென்றலறினாள்).

**வாலிபன்.**—அம்மா ! ஒருவரை அவமானப்படுத்திவிட்டால் சும்மா போகுமா ? கோர்ட்டில்லையா ? உன்னை யார் என்ன செய்தார்கள் ? அவர்கள் பேர் என்ன ?

வாலிபன் கோர்ட்டென்று சொன்னதால், கோர்ட்டில் தண்டனையடையச் செய்யவேண்டும் என்கிற அவாவோடு "அண்ணா ! இரண்டு துன்மார்க்கர்கள் என்னைப் பின்தொடர்ந்து வந்தார்கள். இம்மார்க்கம் ஒருவரும் நடமாட்டமில்லாத விடத்தில் என்னை ஒருவன்......" என்று சொல்லி அப்பால் மற்றொன்றும் சொல்ல வாயெழாமல், ஓவென்றலறியழுதாள்.

**வாலிபன்.**—அம்மா ! நீ மற்றொன்றும் சொல்லவேண்டாம். நான் எல்லாம் அறிந்துகொண்டேன். அந்தப் படுபாவிகள் இம்மார்க்கம் போனதாகக் கேள்விப்பட்டேன். அவர்கள் பேர் அப்பாசாமி திருஞானம் அல்லவா ?

**பாலம்பாள்.**—ஆம் ! அண்ணு ! அவர்கள் இருவரும் பொய்ம் மான் கரட்டருகில் நின்று வார்த்தையாடிக்கொண் டிருந் தார்கள்.

**வாலிபன்.**—அம்மா ! உன்னை அவமானப்படுத்தியதை யாராகி லும் பார்த்தார்களா ?

**பாலம்பாள்.**—ஒருவரு மில்லை அண்ணு (என்றழுதாள்).

**வாலிபன்.**—(நெடுநேரம் மௌனமாயிருந்து) உனக்குத் தாய்தந் தையர் இருக்கிறார்க ளல்லவா ?

**பா**லம்பாள் தன்னுடைய பந்துக்களுடைய நிலையைச் சொன்னதும், வாலிபன் தன் கண்களை அடிக்கடி துடைத்துக் கொண்டு, “அம்மா ! நீ நடந்ததை நினைத்து துக்கப்படுவதில் பிரயோசனம் இல்லை. உனக்கு நேரிட்ட அவமானம் எனக்கு நேரிட்டதுபோல் எண்ணி நான் வேண்டியதைச் செய்வேன். நீ இதை இரகசியத்தில் வைத்திருப்பதே அழகு. நீ என்னிடத்தில் சொல்லியதுபோல் வேறொருவரிடத்தில் சொன்னால் உன்னையே கேவலமாகப் பேசுவார்கள். நீ தனித்து இம்மார்க்கம் வந்ததே உன் பேரில் தப்பிதம்.

**பாலம்பாள்.**—அண்ணு ! நான் தனித்து வரவில்லையே. நான் அநேகரோடு வந்தேன். எனக்குக் காலில் கல்லடி பட்ட தால் அவர்களோடு நடந்துபோக முடியவில்லை. அவர்கள் என்னைவிட்டுச் சென்றார்கள் (என்று காலைக் காட்டினாள்).

**வாலிபன்.**—அம்மா ! எல்லாம் அவரவர்கள் செய்த வினைக் கீடாக நடக்கும். நீ விரைவில் சென்று உன் பாட்டியாருக்கு வேண்டியதைச் செய். நான் உன்னை என் தங்கையைப் போல் பாவிப்பதால், நான் சொல்வதைத் தட்டி நடக்க வேண்டாம் (என்று இருபது ரூபா கையில் கொடுத்தான்).

**பாலம்பாள்.**—அண்ணு! தாங்கள் கோபித்துக்கொள்ளவேண்டாம். நான் காய்கிழங்கு விற்றுக் கொஞ்சம் ரூபா சேர்த்து வைத்திருக்கிறேன். எனக்குப் பணம் வேண்டும்பொழுது தங்களை வந்து கேட்கிறேன். தங்களுடைய பேரைமட்டும் சொல்லவேண்டும்.

**வா**லிபன் "அம்மா? உன்னைக் கட்டாயப்படுத்த இஷ்டமில்லை. என்பேர் வடிவேலு" என்று இருவரும் வார்த்தையாடிக்கொண்டு தாதகாபட்டியை ஸமீபித்தவுடன் பாலம்பாளை அனுப்பிவிட்டு, வாலிபன் "அப்படுபாவிகள் இம்மார்க்கம் வருவார்கள். வந்தால் நம்முடைய கையிலிருக்கும் தடியால் அவர்களை எலும்பு முறிய அடிக்கவேண்டும்" என்று இரவு எழுமணி பரியந்தம் உட்கார்ந்திருந்தான். இருந்தும், திருஞானமும் அப்பாசாமியும் வாராமற்போனதால், அவர்கள் மல்லூருக்குப் போயிருப்பார்களென்று எண்ணிக்கொண்டு வந்தான்.

**வ**ரும்பொழுது, இரட்டை மாடுகள் பூட்டிய பெட்டி வண்டியொன்று வெறுமையாக இருந்தது. அதைக் கண்டு இருட்டில் இங்கு வண்டி நிற்கவேண்டிய காரணம் என்னவென்று பலபக்கமும் பார்த்தபொழுது, காட்டுக்குள் ஸமீபத்தில் வெளிச்சம் காணப்பட்டது. அங்கு சிலர் கோபமாக வார்த்தையாடுவது போல் சத்தம் கேட்டது. அது என்னவென்று வெளிச்சம் காணும் பக்கம் சென்று பார்த்தான். தனவந்தனென்று மதிக்கத்தகுந்த ஒருவனை இருவர் தழுவிப்பிடித்து, "இப்பாதகனை விட்டுவிடக் கூடாது. நம்முடைய தமயனைத் தூக்குபோட இவன் காரணமாக இருக்கிறான். இவனைக் கொன்றுவிடுவோம்" என்று சொல்லி இழுத்துக்கொண்டு போக, ஒருவன் சுளுந்தைக் கையிற் பிடித்து வழிகாட்டிக்கொண்டு போனான்.

**போ**கிறவர்களைக் கண்டு வடிவேலு ஓடி தனவந்தனைப் பிடித்துக்கொண்டிருப்பவர்களில் ஒருவனை முகத்தில் தன் பலங்கொண்டு குத்தினன். அவன் கண்கலங்கி அடித்தவன் யாரென்று வடிவேலைப் பார்த்து, "நீ இவனை விடாதே" என்று தன்னோடு

தனவந்தனைப் பிடித்திருப்பவனிடம் சொல்லி, வடிவேலைப் பார்த்து, "நீ யாரடா இங்கு நுழைந்து என்னை அசதியில் அடித்தாய்? நீயும் இப்பாதகனோடு தொலைய வேண்டியதே" என்று வடிவேலு முகத்தில் குத்தினான். அக்குத்தைத் தட்டிவிட்டு, மற்றொரு குத்தால் வடிவேலு அவனை நிலத்தில் படுக்க வைத்தான். சுளுந்து பிடித்திருந்தவன் நெருங்கி அடிக்கவந்த பொழுது, வடிவேலு அவனையும் அடித்து நிலத்தில் சாயவைத்தான். பின் தனவந்தனைப் பிடித்திருந்தவனையும் மார்பில் குத்த, அவனும் மூர்ச்சையோடு நிலத்தில் விழுந்தான்.

அதைக் கண்ட தனவந்தன் ஓடி வடிவேலைக் கட்டியணைத்துக்கொண்டு, "அப்பா நீ யார்? எனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்ததெய்வம் நீயா? என்னுயிரைக் காப்பாற்ற உன் உயிரைத் துரும்பாக மதித்து, நான் யாரென்று அறியாமலிருந்தும் பரோபகாரமாக வந்து, இத்ததியில் என்னைக் காப்பாற்றினாய். என்னைக் கொலைசெய்ய அப்பாவிகளில் ஒருவன் என்னிடம் வேலைக்காரனாக அமர்ந்து, ஒரு கொலைக்கேசின் ஸமாசாரம் இங்கிருக்கும் ஓர் பெண்பிள்ளையால் அறியலாம் என்று என்னைத் தனித்து வரச்செய்து, இவ்விடம் என்னைக் கொண்டுவந்தான். வந்தவுடன், இருவர் தோன்றி என்னைக் கட்டிப்பிடித்துக் காட்டுக்குள் கொண்டுபோய்க் கொலைசெய்ய இருந்த ஸமயத்தில் நீ தோன்றி என்னைக் காப்பாற்றினாய்" என்று சொன்னான்.

வடிவேலு.—ஐயா! தாங்கள் என்னை அதிகம் புகழ்வது அடுக்காது. நான் ஒருவனிடம் அகப்பட்டுக்கொண்டிருப்பதைத் தாங்கள் பார்த்தால், நான் செய்ததுபோல் தாங்களும் செய்யமாட்டீர்களா? நான் நூதனமாக ஒன்றும் செய்யவில்லை. இந்த துன்மார்க்கரைக் கைகால்களைக் கட்டி ஒவ்வொருவனாகக் கொண்டுபோய் நாம் வண்டியில் ஏற்றிச் சேலத்துக்கு அழைத்துப் போகவேண்டியதல்லவா?

தனவந்தன்.—தம்பி! நாம் இவர்களைக் கொண்டுபோகவேண்டிய

அவசியமில்லை. இவர்களைக்கட்டி இங்கு விட்டுப் போனபின் என்னுடைய சேவகர்களைக் கொண்டு வரவழைத்துக் கொள்ளுகிறேன்.

அதன்மேல் அம் மூவரையும் அவர்கள் கட்டிக்கொண்டிருக்கும்பொழுது, சேவகர்கள் அனேகர் வந்தனர். அதைக் கண்டு தனவான் "நான் இங்கிருப்பது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்று கேட்டான். சேவர்களில் ஒருவன் "எஜமானே! தாங்கள் தனித்து வண்டிக்காரனோடு போனதாகக் கேள்விப்பட்டு, தாங்கள் வராமையைக் கண்டு ஐயப்பட்டு இம்மார்க்கம் போகும்பொழுது, தங்களுடைய வண்டி வெறுமையா யிருப்பதைக் கண்டு இங்கு வந்தோம்" என்றார்கள்.

தனவந்தன் "நீங்கள் வராமுன்னம் நான் இறந்துபோயிருப்பேன். இப்புண்ணியவான் என் உயிரைக் காப்பாற்றினார். கட்டுண்டிருக்கும் மூவர்களையும் ஸ்டேஷனில் கொண்டு போய்ச் சேருங்கள். நான் அவ்விடம் வருகிறேன்" என்று அவர்களுக்கு உத்தரவு கொடுத்து, வடிவேலை அழைத்துக் கொண்டு வண்டியில் ஏறிச் சென்றான்.

---

## 8—ம் அத்தியாயம்

மாபீனுக்குச் சென்ற இராமன் செட்டியார், தான்போன காரியத்தை முடித்துக்கொண்டு, சில வாரங்களுக்குப்பின் கப்பலேறி இரங்கூன் வந்தவுடன், துறைமுகத்தில் மற்றொருவர் அவரைப் பார்த்து, அண்ணை! ஸமாசாரம் கேட்டீர்களா" என்றார்.

**இராமன் செட்டியார்.**—தம்பி! பழனியப்பா! என்ன ஸமாசாரம்?

**பழனியப்ப செட்டியார்.**—அந்தப் படுபாவி ஷேக்தாவுத் எல்லாரையும் மோசஞ் செய்துவிட்டான்.

**இராமன் செட்டியார்.**—ஷேக்தாவுது மோசஞ் செய்துவிட்டானா? என்ன? என்ன? சொல்லும் சொல்லும் (என்று ஆத்திரத்துடன் கேட்டார்).

**பழனியப்ப செட்டியார்.**—ஐயோ! அண்ணேன்! சாமிநாதன் கடையில் இருபதினாயிரம், சோலையப்பன் கடையில் பதினாயிரம், சுப்பிரமணியனிடம் இருபதினாயிரம், காசியிடம் முப்பதினாயிரம், முருகப்பனிடம் ஐம்பதினாயிரம், இன்னும் அனேகம் கடைகளில் பெருந்தொகைகள் கடன் வாங்கி, பணத்தையெல்லாம் வைத்துக்கொண்டு மல்லாந்து படுத்துக்கொண்டான். வீடுகளை ஆதாரமாகக் கொண்டவர்களெல்லாம் அவைகள் அரை விலைக்கும் போகாவென்று சொல்லுகிறார்கள் (என்றார்).

இராமன் செட்டியார், இடி விழுந்ததுபோல் பயந்து, "நான் இனி என்ன செய்யப்போகிறேன்! தம்புசாமி கொடுக்காமலிருந்தவனைக் கொடுக்கும்படி கட்டாயப்படுத்திக் கொடுக்கச் சொன்னேன். அவன் மிக்க நாணயமுள்ளவனென மதித்து என் கையில் மடியில் இருந்ததை யெல்லாம் அவனுக்குக் கொட்டிவிட்டேனே!" என்று பெருந்திகிற்பட்டு, மெய்ம் மறந்து, தன் கண்களில் நீரை தாரை தாரையாக வடியவிட்டு உட்கார்ந்தார்.

இராமன் செட்டியார் திகிற்பட்டு துக்கப்படுவதை அவ்விடம் போயிருந்த செட்டிப்பிள்ளைகள் பார்த்து, அவருக்கு தைரியம் சொல்லி வண்டியிலேற்றி வீட்டுக்கு அழைத்துவந்தார்கள். இராமன் செட்டியார் இருகண்களிலும் நீர் தாரை தாரையாக வடிய மேல்வீட்டில் போய் உட்கார்ந்து பேசாமலிருந்தார். இராமன் செட்டியாரோடு வந்த பழனியப்ப செட்டியார், "தம்புசாமி பிள்ளையைக் காணோம், அவர் எங்கே?" என்று கேட்டார்.

அங்கிருந்தவர்கள் "அவர் வெளியில் போயிருக்கிறார்" என்று சொன்னதை யறிந்து, மேல்வீட்டுக்குப் போய்த் தனித்திருப்பவரோ டிருந்து "அண்ணேன்! தாங்கள் கவலைகொள்ள வேண்டாம். நாம் செய்யும் வியாபாரம் இலாப நஷ்டத்தைப் பொறுத்தல்லவோ? இலாபத்துக்கு பதிலாக நஷ்டம் வந்தால் நாம் என்ன செய்யலாம்? பணத்தை நாம் தேடியதேயன்றி நம்

மைப் பணம் தேடவில்லையே. தங்களுடைய காலத்தில் எவ்வளவு பணம் சம்பாதித்திருப்பீர்கள்? எவ்வளவோ நஷ்டமும் அடைந்திருப்பீர்களே. அதை கவனியாமல் தாங்கள் துக்கப் பட்டுக் கண்களில் நீர் விடுவதைப் பார்ப்பவர்கள் கேவலமாக நினைப்பார்களே" என்றார்.

**இராமன் செட்டியார்.**—பழனியப்பா! எனக்குச் சொந்த முதல் பத்துவராகன் (முப்பத்தையாயிரம்). என்னிடத்தில் ஏராளமான தனதுமாறல் பணங்கள் * அதிகமாக இருந்ததையெல்லாம் பலருக்குத் தவணைக்குக் கொடுத்துவந்ததால், என்னை நம்பி மூன்று இலக்ஷத்திற்கு அதிகம் தவணைப்பணம் கொடுத்திருக்கிறார்கள். நான் இந்தத் தொகைகளை யெல்லாம் வாங்கி நல்ல ஈட்டின்பேரில் கொடுத்திருக்கிறேன். அதில் எண்பதினாயிரம் ரூபாவை அந்தச் சண்டாளன் வீடு வாங்கப்போகிறதாகச் சொன்னதை நம்பிக் கொடுத்துவிட்டேனே! இதை அறிந்தவுடன் யாவரும் தவணைப்பணம் வந்து கேட்டால், நான் எவ்விதம் சமாளித்து அவர்களுக்குப் பணத்தைக் கொடுப்பேன்? இனத்திலிருப்பதை நான் வேண்டும்பொழுது வாங்க முடியுமா? நான் என்ன செய்யப்போகிறேன் என்று (முகத்தைத் துணியால் மூடிக்கொண்டு சிறு குழந்தையைப்போல் அழுதார்).

**பழனியப்ப செட்டியார்.**—தாங்கள் இவ்விதம் துக்கப்படக் கூடாது. தங்களைப்போல் அனேகர் அவனுக்குக் கடன் கொடுத்திருக்கிறார்கள். அவனிடத்தில் கொடுத்து நஷ்டமடைந்தவர்க ளெல்லாம் தங்களைப்போல் துக்கப்படவில்லையே. தாங்கள் துக்கப்படுவதைப் பிறர் அறிந்தால், அது

* அன்னியரனுப்பிய பணத்தைத் தரகுக்காகச் செட்டிப் பிள்ளைகளிடத்தில் கடன் கொடுத்து வாங்கும் தொகைக்குத் தனதுமாறல் பணம் என்று நகரத்தார் சொல்லுவார்கள்.

தங்களுடைய கடைக்குக் கெடுதலாக முடியும். தாங்கள் தைரியமாக இருந்தாலன்றோ, தங்களிடத்தில் செட்டிகள் கொடுத்திருக்கும் கடனைக் கேட்காமலிருப்பார்கள். தாங்கள் தைரியத்தை விட்டால் யாவரும் வந்து மன்னையைப் பிடிப் பார்களே.

இவ்விதம் பேசிக்கொண் டிருக்கும்பொழுது, மற்றக் கடையி லுள்ள கணக்கப்பிள்ளை யொருவன் அவ்விடம் வந்து, " ஐயோ என்ன அநியாயம் ! எஜமான் கோபித்துக்கொள்ளுகிறார். வேஷக் தாவுதுக்குக் கடன் கொடுக்காமற்போனால் தன்னைக் கடையி லிருந்து நீக்கிவிடுவார் என்றே பணத்தைக் கொண்டுபோய்க் கொட்டிவிட்டார் " என்றான்.

இராமன் செட்டியார் ' தம்புசாமி ! பணம் கொடுக்கவில் லையே ! நல்ல வட்டி கொடுக்கும் இனம் போய்விடுமே ! வேறு யாராகிலும் பணம் கொடுத்துவிட்டால் நம்மிடத்தில் வாங்கமாட் டானே ' என்றல்லவோ அவனைக் கோபித்துக்கொண்டேன். அந்த இனம் போனால் வேறினத்தில் கொடுக்கலாம் என்று நான் எண்ணியிருக்கக்கூடாதா ! நான் என்ன வேலை செய்துவிட் டேன் ! என்று சொல்லிக்கொண் டிருக்கும்பொழுது, செட்டி யார் ஒருவர் இராமன்செட்டியார் அருகில் வந்து நின்று, " அண் ணேன் ! தங்களுடைய அடுத்தாள் எங்கே ? அவரைப் பார்ப்பது கடினமாயிருக்கிறது. நான் காலையிலிருந்து இதுபரியந்தம் எத் தனையோ தடவை வந்து பார்த்தும் ஆள் அகப்படவில்லை. எங் களுக்கு நாளைத் தவணைப்பணம் வேண்டுமென்று எங்கள் மேலாள் சொல்லிவரச் சொன்னார் " என்று சொல்லி நீங்கினான். அவ னுக்குப்பின் மற்றிருவர் வந்து அவர்களும் தவணைப்பணம் வேண்டுமென்று சொல்லிப்போனார்கள்.

**இராமன் செட்டியார்.**—பழனியப்பா ! நம்முடைய ஜாதியா வழக்கத்தைப் பார்த்துக்கொண்டாயா ? ஒருவனுக்கு நஷ் டம் வந்ததென்று கேள்விப்பட்டால், நீ சொல்லியது

போல், உடனே வந்து மன்னையைப் பிடித்து அவனுடைய நாணயத்தைக் கெடுத்துவிடுகிறார்கள். எல்லாரும் ஏக காலத்தில் வந்து தவணைப்பணம் கேட்டால், நாம் என்ன செய்கிறது? நானும் தவணை சொன்னால், என்னுடைய நாணயம் போய்விட்டதென்று கைதட்டிவிடுவார்கள்.

**பழனியப்ப செட்டியார்.**—அண்ணேன்! தாங்கள் என்னைக் கோபித்துக்கொள்ளவேண்டாம். தாங்கள் தங்களுடைய முதலை கவனித்து எந்த வேலையும் செய்திருக்கவேண்டும். தாங்கள் ஈடில்லாமல் எண்பதினாயிரத்தை ஒரு இனத்தில் கொடுக்கச்சொன்னது பெருந் தப்பிதம்.

பழனியப்ப செட்டியார் சொல்லியதைக் கேட்டு, "ஆம் தம்பி, நான் முட்டாள்வேலை செய்துவிட்டேன்" என்று மீண்டும் கண்களில் நீரை வடியவிட்டுக்கொண் டிருக்கும்பொழுது, தம்புசாமிபிள்ளை அவ்விடம் வந்து நின்று, தன் எஜமான் துக்கப்படுவதைக் கண்டு, "என்ன விசேடம்? ஊரிலிருந்து ஏதாகிலும் தந்தி வந்ததோ?" என்று பழனியப்ப செட்டியாரை ஜாடைசெய்து கேட்டார்.

**பழனியப்ப செட்டியார்.**—தந்தியொன்றும் வரவில்லை. எல்லாம் அந்தப் படுபாவி க்ஷேத்ராவுதைக் குறித்தே துக்கப்படுகிறார்.

**தம்புசாமி பிள்ளை.**—(இராமன் செட்டியாரைப் பார்த்து) ஐயாவே! தாங்கள் அவனுக்குப் பணம் கொடுக்கச் சொன்னபின் தாங்கள் ஏன் துக்கப்படவேண்டும்?

**இராமன் செட்டியார்.**-என்னடா பைத்தியக்காரனா யிருக்கிறாய்? எண்பதினாயிரத்தை அவனிழவுக்கு அழுதுவிட்டு என்னை துக்கப்படவேண்டாம் என்கிறாய்? நான் வந்த சற்று நேரத்திற்குள் யாவரும் வந்து தவணைப்பணங் கேட்கிறார்களே.

**தம்புசாமி பிள்ளை.**—துக்கப்படுகிறதற்கு பதிலாக ஸந்தோஷமாக இருங்கள். தவணைப் பணங் கொடுத்தவர்கள் கேட்டால் கொடுக்கவேண்டியதுதானே.

**இராமன் செட்டியார்.**—ஸந்தோஷமாக இருக்கவா வேண்டுகி

ருய் ? 'சொக்கனுக்குச் சட்டியளவு' என்பதுபோல் உனக்கொன்றும் நஷ்டமில்லாததால் இவ்விதம் சொல்லுகிருய்.

தம்புசாமி பிள்ளை.—ஐயா! தாங்கள் கொடுக்கச்சொன்ன ஐம்பதினுயிரத்தை நான் கொடுக்கவில்லை. அது விஷயத்தில் தாங்கள் கவலை கொள்ளவேண்டாம்.

இராமன் செட்டியார்.—என்ன சொன்ணுய்? ஐம்பதினுயிரம் கொடுக்கவில்லையா? என் வயிற்றில் பாலை வார்த்தாய். நான் முன்னதாகக் கொடுத்திருக்கிற முப்பதினுயிரம் போனாலும் போகட்டும். ஐம்பதினுயிரம் மீந்ததே நம்முடைய நற்காலம்.

"ஐயா! ஐம்பதினுயிரம் கொடுக்காமல் நமக்குக் கொடுக்க வேண்டியதை ஒரு காசாகிலும் வட்டியில் தள்ளாமல் முப்பதினுயிரத்தையும் வாங்கி வந்து விட்டேன்" என்று தம்புசாமி பிள்ளை சொல்லியதைக் கேட்ட இராமன் செட்டியார், "என்ன சொன்ணுய்? என்னசொன்ணுய்?" என்று எழுந்து போய் அவரைக் கட்டிப்பிடித்துக்கொண்டு, "அப்பா தம்புசாமி! இது முதல் உன்னை என் சொந்த மகனைப்போல் எண்ணுவேன். என்னைக் காப்பாற்றியவன் நீயே! என் சாமி! என் துரையே!" என்று அடிக்கடி முத்தமிட்டு, "அவனிடத்தில் முன் கொடுத்த முப்பதினுயிரத்தை எவ்விதம் பெற்றுக்கொண்டாய்?" என்று கேட்டார்.

தம்புசாமி பிள்ளை.—ஐயாவே! நான் தங்களுடைய உத்தரவு பிரகாரம் ஐம்பதினுயிரச் செக்கோடு அவன் வீட்டுக்குப் போன பொழுது, அவனும் அவன் பெண்டாட்டியும் உள்ளே சண்டை போட்டுக்கொண்டிருந்தார்கள். காரணம் யாதென்று அவர்கள் சொல்வதை நின்று கேட்டிருந்தேன். அவள் தனக்கு வயிர நக்கான், வயிர பத்தி, வயிரக் காப்புகள் வேண்டுமென்ருள். அவன் "செட்டிகளுக்கு என்னிடத்தில் அதிக நம்பிக்கை உண்டாக இதுகாலம் நடந்து வந்தேன். செட்டிகளுக்கெல்லாம் என்மேல் பூரண நம்

பிக்கை உண்டாய்விட்டதால், இனிமேல் நம் எண்ணத்தைப் பூர்த்திசெய்ய யோசித்து, தனித்தனியாக எல்லாரையும் பெருந்தொகை கடன் கேட்டிருக்கிறேன். அத்தொகைகள் எல்லாம் கைக்குக் கிட்டியவுடன் மல்லாந்து படுக்கவேண்டியதே! கடன்காரர் வந்து பணம் கேட்டால் அவர்களுக்கு ஒன்றுக்குக் காலாகத் தீர்த்துக் கொடுத்துவிட்டுப் பின் உனக்கு வேண்டியவைகளை யெல்லாம் வாங்கிக் கொடுக்கிறேன்" என்றான். நான் அவனுடைய எண்ணத்தை யறிந்து, அவனைப் பசப்பி வங்கித்தவணை சாக்குச் சொல்லி, முன் கொடுத்திருந்த முப்பதினாயிரத்தையும் வாங்கி வந்துவிட்டேன் (என்று நடந்தது யாவும் சொல்லி முடித்தார்).

பழனியப்ப செட்டியார்.—நீர் கொடுக்கிறேன் என்ற செக்கை வந்து கேட்கவில்லையா?

தம்புசாமி பிள்ளை.—ஐயோ! அவன் என்னை விடாமல், அனேக தடவை ஆள் அனுப்பியதோடு, தானே நேரிலும் வந்து கேட்டான். நான் கையெழுத்தில்லாத வங்கி செக் புஸ்தகத்தைக் காட்டி "முதலாளி செக்புத்தகத்தை இவ்விதம் வைத்துப்போயிருக்கிறார். எப்பொழுதும் புத்தக முற்றிலும் கையெழுத்துச் செய்துபோகிறவர் மறந்து போய்விட்டார். அவர் வந்தவுடன் உமக்குக் கிடைக்கும்" என்று ஸமாதானம் சொல்லி அனுப்பிவிட்டேன். பின் வராமலிருந்து இப்பொழுது படுத்துக்கொண்டான். அவன் படுத்துக்கொண்டபின் அவன் செய்திருக்கும் சூதெல்லாம் அறிந்தேன். முதல் அவன் இந்த ஊருக்கு வந்தபொழுது ஒரு பலசரக்குக் கடைவைத்து, செட்டிகளிடத்தில் கிஸ்திக்குக் கடன் வாங்கி அதிக நாணயமாகக் காட்டிவந்தான். ஒரு வீட்டை இரண்டாயிரத்துக்கு விலை பேசி ஐயாயிரத்துக்கு விற்றதாகப் பத்திரமெழுதி அதை நாலாயிரத்துக்கு அடைமானம் வைத்து, பின் மற்றோர் வீட்டை ஐயாயிரத்துக்கு விலைபேசி அதைப் பதினாயிரத்துக்குப் பத்திரம்

ஏற்பாடு செய்துகொண்டு அதை எண்ணுயிரத்துக்கு அடைமானம் வைத்தான். இதுபோலவே ஒற்றைக் கிரட்டையாகப் பத்திரம் எழுதி அனேக வீடுகளை வாங்கி, செட்டிகள் தலையில் கையை வைத்துவிட்டான்.

**பழனியப்ப செட்டியார்.**—ஐயா ! தம்புசாமி பிள்ளை ! ஷேக்தாவுதின் கருத்தை யறிந்தபின் அதை ஏன் இரகசியத்தில் வைத்திருந்தீர் ? நீர் வெளியிட்டிருந்தால் அனேகர் நஷ்டமடையார்களே ?

**தம்புசாமி பிள்ளை.**—நான் அவனுடைய கருத்தை யாவருக்கும் சொல்லவேண்டுமென்ற எண்ணம் தூண்டியதேயாயினும், ஷேக்தாவுது தன் மனைவியோடு வார்த்தையாடியதைக் கேட்டது நான் ஒருவனேயானதால், அதை மெய்ப்பிக்க முடியாதென்றும், ஷேக்தாவுது நான் சொல்லியதைக் கேள்விப்படுவானுனல் என்மேல் மான நஷ்டத்துக்கு வியாச்சியம் தொடுப்பானென்று பயந்தும் மௌனமாயிருந்தேன்.

**பழனியப்ப செட்டியார்.**—ஆம் ! ஆம் ! நீர் சொன்னாலும் உம்முடைய வார்த்தையைச் செட்டிப் பிள்ளைகள் நம்பார்கள்.

**இராமன் செட்டியார்.**—தம்புசாமி வெளியிட்டிருந்தால் அது கெடுதியாக முடிந்திருக்கும். பேசாமலிருந்ததே மேன்மை.

**பழனியப்ப செட்டியார்.**—ஆம் ! அண்ணேன் ! நாம் இனங்களை கவனித்துப்பார்த்து உண்மையை யறியாமல் வட்டிக்கு ஆசைப்பட்டுப் பணத்தைக் கொட்டிவிடுகிறோம்.

**இராமன் செட்டியார்.**—ஆம் ! தம்பி ! யோக்கியமான கூட்டாளிகள் பெரும்பாலும் நஷ்டமடைகிறார்கள். அயோக்கியமான கூட்டாளிகளே நல்ல இலாபத்தோடு போகிறார்கள். எவ்விதமெனில், யோக்கியன் தன்னிடம் பற்றுவரவு செய்கிறவர்களை யெல்லாம் தன்னைப்போல் யோக்கியரென்றெண்ணி அவர்களுடைய வார்த்தையை நம்பி, ஏராளமான தொகையைக் கடன்கொடுத்து முதலை இழந்து

போகிருன். அயோக்கியமான கூட்டாளிகள் தம்மைப் போல் யாவரையும் அயோக்கியரென் றெண்ணி, அவர்கள் என்ன சொன்னபோதிலும் அவர்களுடைய வார்த்தையை நம்பாமல், தகுதியான நகைகளீட்டின்மேல் பணங்கொடுத்து இலாபம் அடைகிருர்கள். என்னசெய்யலாம்? நமக்கு மனதி லொன்றும் வாயிலொன்றுமாகச் சொல்ல முடியவில்லை.

பழனியப்ப செட்டியார்.—ஆம்! ஆம்! அது உண்மையே! தங் களுடைய நல்ல எண்ணத்திற்கேற்க முருகன் துணை செய்து தங்களைத் தப்புவித்தான்.

இங்ஙனம் வார்த்தையாடிக்கொண்டிருந்து பழனியப்ப செட்டியார் நீங்கிய சில நேரத்துக்குப் பின், ஒருவன் வந்து இராமன் செட்டியாரைப் பார்த்து, "தங்களைத் தவணைப்பணம் வேண்டுமா வென்று எங்கள் மேலாள் கேட்டுவரச் சொன்ஞர்" என்ருன்.

தம்புசாமி பிள்ளை.—எங்களுக்குத் தவணைப்பணம் வேண்டிய தில்லை. நாளை உங்களுடைய பணத்தை வந்து வாங்கிக் கொண்டுபோங்கள் (என்று சொல்லியனுப்பினுர்).

இராமன் செட்டியார்.—அப்பா! தம்புசாமி! இனி செட்டிக ளிடத்தில் ஒரு காசுகூடக் கடன் வாங்கவேண்டாம். அவர் கள் கழுத்தை அறுத்துவிடுவார்கள். சற்று நேரத்திற்கு முன் நமக்கும் க்ஷேத்ராவுது இடத்தில் பெருந்தொகை போய்விட்டதென எண்ணித் தவணைப்பணம் கேட்டுவிட் டார்கள். நாம் நஷ்டமடையவில்லையென்று பின் கேள்விப் பட்டதால் இப்பொழுது தவணைக்குக் கடன் கொடுப்ப தாகச் சொல்லியனுப்பினுர்கள், பார்த்தாயா?

தம்புசாமி பிள்ளை.—நாம் அவர்களைக் கோபிப்பதில் பிரயோ சனம் இல்லை. எல்லாருக்கும் இதே வழக்கமாதலால் அவ் விதம் கேட்க இடங்கொடுத்தது. நாமும் அவ்வழக்கத்தை விட்டு நீங்கினவர்க ளல்லவே (என்று நகைத்தார்).

## 9—ம் அத்தியாயம்

சேலத்தில் அந்தா திரிப்பேட்டை மார்க்கமாக இயமை வாலிபர்கள் வார்த்தையாடிக்கொண்டு போகும்பொழுது ஒருவன் " ஆம் ! அப்பாசாமி ! இது நல்ல ஸமயம். இந்த ஸமயத்தைக் கைவிடக்கூடாது. ஆனால் அதை எவ்விதம் முடிக்கிறதென்பது தெரியவில்லை " என்றான்.

அப்பாசாமி.—திருஞானம் ! இந்த எண்ணம் இப்பொழுதுதான் எனக்கு உதித்தது. உம்முடைய தாயார் பெண் கேட்டுக் கொடுக்கத் தடை செய்தவர்களுக்கு இவ்விதமே செய்ய வேண்டும். உமக்கு விசாலாக்ஷியைக் கொடுக்க அப்பெண்ணின் தாய்தந்தையர் ஒருவாறு ஒப்புக்கொண்டும், பின் தங்கள் மகன் வடிவேலுடைய ஸம்மதம் இல்லையென்று சொல்லிவிட்டதாக உன் தாயார் சொன்னார்கள். உமக்குப் பெண் கொடுக்க ஸம்மதப்படாமற் போனால் பின் யாருக்குக் கொடுக்க யோசித்திருக்கிறார்களோ தெரியவில்லை.

திருஞானம்.—நான் அப்பெண்ணைப் பார்த்தபின் அப்பெண்ணையே மணம்புரியவேண்டுமென்று தீர்மானம் செய்து கொண்டேன். என்ன ஸௌந்தரமாக இருந்தபோதிலும், அல்லது இரம்பையையே என் தாய் தந்தையர் கொண்டு வந்தாலும், அப்பெண்ணைவிட்டு எனக்கு வேறு பெண் வேண்டாம் என்றே சொல்லிவிடுவேன்.

அப்பாசாமி.—உமக்கு அவ்வித எண்ணம் இருப்பதால் அப்பெண்ணையே உமக்கு விவாகம் செய்துவைக்கிறேன். என்னுடைய ஸாமர்த்தியத்தைப் பார்க்கப்போகிறீர்.

திருஞானம்.—தாய் தந்தையும் தமயனும் கொடுக்க ஸம்மதமில்லாதிருக்கும்பொழுது, நம்முடைய எண்ணம் எவ்விதம் கைகூடும் என்பது எனக்குப் பெரிய ஸந்தேகமாக இருக்கிறது.

அப்பாசாமி.—அதைக் குறித்து என்னை இப்பொழுது ஒன்றும்

கேட்கவேண்டாம். ஆனால் ஒன்றைக் குறித்துமட்டும் உம்மிடத்தில் சொல்லவேண்டும். அதாவது முதலில் என்னிடம் இருநூறு ரூபா கொடுக்கவேண்டும். எல்லாம் கைகூடியபின் கலியாணச் செலவுக்காகப் பணம் வேண்டும். விவாகத்துக்கு உம்முடைய தாய் தந்தை வரமுடியாது. அவர்கள் இல்லாமலே நீர் விவாகம் செய்துகொள்ள வேண்டும்.

திருஞானம்.—நீர் சொல்லுகிறது வியப்பைத் தருகிறது. நீர் சொல்லுவதற்கெல்லாம் நான் ஒட்புக்கொண்டாலும், என் தாய் தந்தையர் ஸம்மதிப்பார்களா ?

அப்பாசாமி.—அவர்கள் ஸம்மதிக்கச் செய்வது உம்முடைய கடமை.

திருஞானம்.—என் தாய் தந்தைகளை ஸம்மதிக்கச் செய்யவேண்டுமாயின், நாம் செய்யப்போவது இன்னதென்று சொன்னாலொழிய, நீர் கேட்கும் பணத்தைக் கொடுக்கமாட்டார்களே ! நம்முடைய எண்ணம் எவ்விதம் பூர்த்தியாகும் ? ஆனதால், நம்முடைய கருத்தை அவர்களுக்குச் சொல்வது அவசியமெனக் காண்கிறது.

அப்பாசாமி.—அவர்கள் என் கருத்தை யறிந்து ரகசியமாக வைத்துக்கொள்வதானால் சொல்லத் தடை ஒன்றும் இல்லை. ரகசியம் வெளியானால், நம்முடைய எண்ணம் முடிவு பெறாது.

திருஞானம்.—அவ்விதமானால், நீரே என்னோடு வந்து என் தாயாருக்குச் சொல்லும். அவர்களுடைய ஸம்மதத்தை அறிந்தபின் என் தந்தையை வசப்படுத்திக்கொள்வது எளிதாக இருக்கும். இப்பொழுது என் தந்தை வீட்டிலில்லை யாதலால் நாம் சென்று என் தாயாரிடத்தில் பேசலாம், வாரும் (என்று இருவரும் வீட்டுக்குத் திரும்பிவந்தார்கள்).

வள்ளியம்மை அவர்களைப் பார்த்து “இன்றேது அதிசயமாக இருக்கிறது ! நீங்கள் மாலையில் வெளியில் போனால்

இரவு ஏழு எட்டு மணிக்கு வருகிறது வழக்க மல்லவா? ஏன் கோவில்களுக்குப் போகவில்லையா ?" என்று கேட்டாள்.

திருஞானம்.—அம்மா! தங்களிடத்தில் ஒரு ரகசியம் பேச வந்தோம். ஆனதால் இன்று கோவில்களுக்குப் போகவில்லை.

வள்ளியம்மை.—என்ன ரகசியம் ?

திருஞானம்.—நாங்கள் சொல்வதைக் கேட்டு ரகசியத்தை வெளியிடாமல் இருக்கவேண்டும். அவ்விதம் செய்கிறதாயிருந்தால், அப்பாசாமி சொல்லுவார்.

வள்ளியம்மை.—தம்பி! அப்பாசாமி! என்ன ரகசியம்? நான் ஒருவருக்கும் அதைச் சொல்லவில்லை. நீ என்னிடம் சொல்.

அப்பாசாமி வள்ளியம்மைக் கருகில் உட்கார்ந்து தன் மனதிலுள்ள ரகசியத்தை வெளியிட்டான்.

அப்பாசாமி சொல்லியதை யெல்லாம் வள்ளியம்மை கேட்டிருந்து, "நீங்கள் அறியாதவர்க ளாதலால் கண்டவிதம் யோசிக்கிறீர்கள். நீங்கள் சொல்லியது யாவும் முடியத்தகுந்ததா? இந்த யோசனையை விட்டுவிடுங்கள். இதெல்லாம் முடியாத காரியம்" என்றாள்.

அப்பாசாமி.—அம்மணி! தாங்கள் முடியாதென்பதை நான் முடித்துக் காட்டாமற்போனால் என்னைப் பெரிய முட்டாள் என்று சொல்லுங்கள்.

வள்ளியம்மை.—தம்பி! நீ சொல்வதுபோல் செய்து காட்டினலொழிய நான் நம்பேன்.

அப்பாசாமி.—வெறுங்கையால் முழம் போடுவதுபோல், செய்து காட்டென்றால் எவ்விதம் செய்யமுடியும் ?

வள்ளியம்மை.—நீ சொல்லியவிதம் செய்ய என்னவேண்டும் ?

அப்பாசாமி.—என்னிடம் இப்பொழுது இருநூறு ரூபா இருந்தால் ஒரு நொடியில் முடித்துவிடுவேன்.

வள்ளியம்மை.—அம்மாடி ! இதைச் செய்ய இருநூறு ரூபாவா வேண்டும் ?

அப்பாசாமி.—அம்மா ! நான் சொல்லியதை முற்றிலும் முடிக்க ஐம்பது அறுபது போதும். மற்றது கலியாணச் செலவுக்கு வேண்டும்.

வள்ளியம்மை.—நூற்றைம்பைது ரூபாவிலா உன் சினேகனுக்குக் கலியாணம் செய்துவைக்கப் போகிறாய் ?

அப்பாசாமி.—நூற்றைம்பது ரூபாவில் விவாகம் முடியுமென்று நான் சொல்லவில்லையே ? துவக்கத்தில் வேண்டியதற்கே நான் கேட்டது.

வள்ளியம்மை.—நீ நாளைக்காலையில் வந்தால் நான் திருஞானத்தின் தந்தையைக் கேட்டுச் சொல்லுகிறேன்.

அப்பாசாமியும் திருஞானமும் ஸம்மதித்துத் தாங்கள் கோவிலுக்குப் போய்வருவதாக நீங்கினார்கள்.

சில தினங்களுக்குப் பின், சேலம் சூரமங்கலம் ரெயில்வே ஸ்டேஷனில், காலை மூன்றரைமணி மெயில் டிரேயினில் ஏற ஜனங்கள் நிறைந்திருந்தார்கள். வண்டி அடுத்த ஸ்டேஷனை விட்டவுடன், யாவரும் தாங்கள் போகவேண்டிய இடத்திற்கு டிக்கட்டுகள் வாங்கித் தயாராக நின்றிருந்தார்கள். வண்டி வந்தவளவில், ஜனங்கள் விரைவிலோடி யாவரும் வண்டியில் ஏறும்பொழுது, ஒரு பெண்பிள்ளை தன்மகளைப் பார்த்து "அம்மா விசாலாக்ஷி ! என் கையை விடாமல் பிடித்துக்கொண்டு வா. அண்ணி ! தாங்களும் என்னோடு வந்துவிடுங்கள். அவர்களெல்லாம் மூட்டைகளை எடுத்துக்கொண்டு வருவார்கள். வாருங்கள்" என்று தன் மகளையும் வள்ளியம்மையையும் அழைத்துக்கொண்டு வண்டியில் ஏறி உட்கார்ந்தாள். வண்டியிலிருந்தவர்களில் ஒருவன் ஸ்டேஷனில் நின்றிருந்த போர்ட்டரைப் பார்த்து, "ஐயா ! வண்டி இங்கு எவ்வளவுநேரம் நிற்கும் ? நான் வெளியில் போய் வரலாமா ?" என்று கேட்டான். அவன் "போய்வரலாம், போய்

வரலாம். வண்டி இங்கே பதினைந்து நிமிஷம் நிற்கும் என்று சொல்லிக்கொண்டே போனான்.

விசாலாக்ஷி.—"அம்மா! அப்பாவும் அண்ணனும் வரவில்லையே, அவர்கள் வேறு வண்டியில் ஏறிவிட்டார்களோ என்னமோ தெரியவில்லையே" என்றாள்.

அருகில் உட்கார்ந்திருந்த வள்ளியம்மை "அம்மா! திரிபுரஸுந்தரம், விசாலாக்ஷி சொல்வதுபோல் அவர்கள் வேறு வண்டியில் ஏறிவிட்டார்கள்போல் காண்கிறது. வண்டி நெடுநேரம் இங்கு நின்றிருக்கும் என்று சொல்லுகிறதால், நான் இறங்கி என் மகனைப் பார்த்து அழைத்துவரச் செய்கிறேன்" என்று கதவைத் திறந்து வண்டியைவிட் டிறங்கிக் கொஞ்சதூரம் போய் நின்று, "அம்மா திரிபுரஸுந்தரம் உன் புருடனோடும் மகனோடும் மூட்டையைப் பிடித்துக்கொண்டு யாரோ ஒருவன் மூட்டை தன்னுடையதென்று சண்டைபோடுகிறான்" என்றாள்.

திரிபுரஸுந்தரம்மாள் எட்டிப்பார்த்து, "என்ன என்ன?" என்று கேட்டாள். ஒருவன் திரிபுரஸுந்தரம்மாளிடம் ஓடிவந்து "அந்த மூட்டை உங்களுடையதா? வந்துபாருங்கள்" என்றான். திரிபுரஸுந்தரம்மாளும் வண்டியைவிட் டிறங்கிப் போய் மூட்டையைப் பார்த்து, "இது எங்களுடையதே!" என்றாள். மூட்டையைப் பிடித்திருந்த அன்னியன் "இது உங்களுடைய மூட்டை அல்ல. அதை அவிழ்த்துப்பார்த்துச் சொல்லுங்கள். மூட்டைக்கு மேலிருக்கும் துண்டு உங்களுடையதுபோல் இருக்கக்கூடும். பிரித்துப்பாருங்கள். இந்த மூட்டையில் புதிய பட்டுக் கரை வேஷ்டிகள் நான்கு ஜதை இருக்கிறது" என்றான்.

திரிபுரஸுந்தரம்.—இதில் பட்டுக்கரை வேஷ்டியும் இல்லை, வெறுங்கரை வேஷ்டியும் இல்லை. இம்மூட்டையை அவிழ்த்துக் காட்டிக்கொண்டிருக்க நேரம் இல்லை. மூட்டையை விடு.

அன்னியன்.—என்னுடைய மூட்டையை எடுத்துக்கொண்டதை நான் கண்டு என்னுடையதென்று சொல்லிக்கொண்

டிருக்க, என்னை மூட்டையை விட்டுவிடச் சொல்லுகிறீர்களே ! இது மிகு ஸாமர்த்தியம்.

திரிபுரஸுந்தரம்.—ஐயோ ! வண்டி போய்விடும்போல் இருக்கிறதே. அப்பா நான் சொல்வதை நம்பு. உன் மூட்டையை நாங்களா எடுக்கப்போகிறோம் ?

அங்கு நின்றிருந்த போலீஸ் சேவகன் அவர்களிடம் வந்து என்னவென்று விசாரித்து "மூட்டையை அவிழ்த்துக் காட்டி விடுங்கள்" என்றான்.

"மூட்டையை அவிழ்த்துக் காட்டிக்கொண்டிருந்தால் வண்டி போய்விடு மென்றே காட்டவில்லை. இவன் சனியன் போல் எங்கிருந்துவந்தான்" என்று முத்துவேலு பிள்ளை மூட்டையை அவிழ்த்தார்.

அன்னியன், "நீர் சற்று மரியாதையாகவே பேசும். அவன் இவன் என்று வாய்கூசாமல் பேசவேண்டாம்" என்று அவர் கையிலிருந்த மூட்டையைப் பிடுங்கி, அதை அவிழ்த்து அதிலிருப்பதை யெல்லாம் எடுத்தெறிந்து, அதில் அவன் சொல்லியவைகள் இல்லாததைக் கண்டு, "ஐயோ ! என் மூட்டையை யாரோ கொண்டுபோய்விட்டார்கள்" என்று அங்குமிங்கும் ஓடி வண்டியிலிருந்து இறங்கிய ஜனங்கள் வைத்திருக்கும் மூட்டைகளின் ஸமீபமாகப் போய்ப் பார்த்து, "மூட்டை அகப்படவில்லையே ! நான் என்ன செய்வேன்" என்று வண்டிகளைப் பார்க்கப் போனவன், வண்டி விட்டுவிட்டதைக் கண்டு, "ஐயோ ! நான் என்ன செய்யப்போகிறேன்" என்று தலையில் கையை வைத்துக்கொண்டு ஒரு மூலையில் உட்கார்ந்தான். பெரியசாமி பிள்ளை, அவர் மனைவி, வடிவேலு, முத்துவேலு பிள்ளை, திரிபுரஸுந்தரம்மாள் முதலானவர்கள், மூட்டை கட்டிக்கொண்டு ஓடி வண்டியில் ஏறப்போனவர்கள், வண்டி போய்விட்டதைக் கண்டு மெய்ம்மறந்திருந்தார்கள்.

திரிபுரஸுந்தரம்மாள் 'விசாலாக்ஷி' என்றழைத்து, அங்குமிங்கும் பார்த்து அவள் இல்லாமையைக் கண்டு, "ஐயோ

மகள் தனியாக வண்டியில் போகிறுளே" என்று துக்கப்பட்டு அழுதாள்.

வள்ளியம்மை.—அம்மா ! திரிபுரஸுந்தரம் ! வண்டியில் என் மகன் திருஞானம் போகிறதால், அவன் விசாலாக்ஷியைப் பார்த்து ஈரோட்டில் நிறுத்திவைத்திருப்பான். நீ என் துக்கப்படுகிருய் ? அடுத்த வண்டி எப்பொழுதுப் போகு மென்று விசாரியுங்கள்" என்றுள்.

வடிவேலு போய் விசாரித்து வந்து, "காலை ஒன்பது மணிக்குமேல் ஒரு வண்டி போகிறதாம்" என்று சொன்ஞன். யாவரும் அடுத்த வண்டியில் போகலாம் என்ற தீர்மானத்தோடு பிரயாணிகள் தங்குமிடத்தில் போய் உட்கார்ந்தார்கள்.

வண்டியில் தனித்துச் சென்ற விசாலாக்ஷி, தன் தாயா ரும் மற்றவர்களும் வந்துவிடுவார்கள் என்று எண்ணியிருந்தவள், அவர்கள் வந்து வண்டியிலேறுமுன் வண்டி போகிறதே என்று பயந்திருந்தாள். வண்டி சங்கரிதுருக்கம் ஸ்டேஷனில் போய் நின்றவுடன், திருஞானம் தான் றேறியிருந்த வண்டியிலிருந்து இறங்கிப்போய், விசாலாக்ஷி யிருக்கும் வண்டியின் கதவைத் திறந்து, விசாலாக்ஷியை இறங்கச் சொல்லி, "நாம் இவ்விடத் தில் அவர்கள் வரும்பரியந்தம் தங்கியிருக்கலாம்" என்றுன். அவள் திருஞானத்தைப் பார்த்துத் தனக்குத் துணையிருக்கிற தென்ற ஸந்தோஷத்தோடு "ஆ ! அத்தான் ! தாங்கள் வண்டியில் வருவதை அறியேன். அவர்கள் ஏன் வரவில்லை ? யார் மூட் டையை எடுத்துக்கொண்டார்கள் ?" என்று கேட்டுக்கொண்டே வண்டியிலிருந்து இறங்கிஞள்.

திருஞானம்.—"அவர்கள் பதிஞெருமணி வண்டியில் வருவார் கள். யாரோ ஒருவன் உன் தந்தை கொண்டுவந்த மூட்டை தன்னுடையதென்று வாதாடிக்கொண் டிருந்ததால், இவ் வண்டியில் வந்தேறத் தப்பிப்போஞர்கள். அவர்கள் வரும் பரியந்தம் நாம் இங்கு ஏன் இருக்கவேண்டும் ? ஊர்க்குள் போய் ஏதாகிலும் வாங்கி சாப்பிடலாம், வா" என்று

வெளியில் அழைத்துப்போய் ஒரு வண்டியில் ஏற்றித் தானும் உட்கார்ந்தான்.

விசாலாக்ஷி.—"அத்தான்! ஊர் தொலையில் இருக்கிறதா?" என்று கேட்டாள்.

திருஞானம்.—"இல்லை ஸமீபமே! இரண்டு அல்லது இரண்டரைமைல் தூரத்தில் இருக்கிறதென்று கேள்வி. நாம் பத்துப் பத்தரைமணிக்கெல்லாம் திரும்பி வந்துவிடலாம்" என்று பல ஸமாசாரங்களைப் பேசிக்கொண்டு போனான். காலை ஆறுமணிக்குமுன் திருச்செங்கோட்டில் ஒரு மச்சு வீட்டுக்கு முன் வண்டி போய் நின்றது. விசாலாக்ஷியை வண்டியை விட்டிறக்கி வீட்டுக்குள் அழைத்துப்போய், அங்கிருந்த பெண்பிள்ளையைப் பார்த்து, "அம்மா எங்களுக்குக் காப்பியும் பலகாரமும் தயார் செய்து விரைவில் கொடுக்கவேண்டும். நாங்கள் பதினொருமணி ரெயிலில் போகவேண்டியவர்கள். என் அத்தை மகளுக்கு வேண்டியதைச் செய்யுங்கள். நான் வெளியில் போய் வருகிறேன்" என்று விசாலாக்ஷியை வீட்டிலிருந்த பெண்பிள்ளைவசத்தில் ஒப்புவித்து வெளியில் சென்றான்.

வெளியில் நின்றிருந்த ஒருவன் ஓடிவந்து, திருஞானத்தைக் கட்டிப் பிடித்துக்கொண்டு, "திருஞானம், என்னுடைய சூழ்ச்சி சித்தியானதைப் பார்த்தீரோ?" என்றான்.

திருஞானம்.—அப்பாசாமி! நீர் ஏற்பாடு செய்திருந்தவன், மூட்டையைப் பறிகொடுத்தேன் என்று யாவரும் நம்பும்படி செய்து, விசாலாக்ஷியின் தாயார் வண்டியிலேறியவர்களை இறங்கும்படி செய்துவிட்டான். அவர்கள் வண்டியிலிருந்து இறங்காமலிருந்தால் நம்முடைய எண்ணப் பிரகாரம் முடியாதென்றே எண்ணியிருந்தேன்.

அப்பாசாமி.—யாவும் நம்முடைய எண்ணம்போல் முடிவு பெற்றதே ஸந்தோஷம். இனி, காலதாமஸஞ் செய்யாமல், விவாகத்துக்கு வேண்டியதையெல்லாம் விரைவில் சித்தப்படுத்தவேண்டும். நானும் இவ்விடம் வந்து சும்மாவிரா

மல் இந்த ஊரில் இருக்கும் என் சினேகர் போலீஸ் உத்தி யோகஸ்தர் வீட்டில் சிறிய பந்தல் போட ஏற்பாடு செய் திருக்கிறேன். நாளை முகூர்த்த நாளாதலால் விரைவில் விவாகத்தை முடித்துவிட்டால், பின் யார்தான் என்ன செய்யக்கூடும் ? உம்மை அழைத்துப்போய்ப் பெண்ணின் தாய் தந்தை உமக்கு வேண்டிய மரியாதை செய்யவேண் டியதே !

திருஞானம்.—அதன்பின் கர்வம் அடங்கி, வடிவேலு என்னை மைத்துனனென்று சொல்லி என் காலில் விழவேண்டி யதே ! முத்துவேலுபிள்ளை என்மேல் வியாச்சியம் தொடுக்க எண்ணங்கொண்டாலும் தன் மகளைப் பின்னொருவர் விவா கம் முடிக்கார்க ளாதலால் நாம் செய்வதை யெல்லாம் கேட்டு உறவு கொண்டாடவேண்டும். நான் விவாகச் செலவுக்காக ரூபா இன்னம் முந்நூறு கொண்டுவந்திருக்கிறேன். நாம் விவாகம் முடியும் பரியந்தம் வேறொருவரையும் வரவிடக் கூடாது.

அப்பாசாமி.—அது விஷயத்தைக் குறித்து நீர் கவலை கொள்ள வேண்டாம். இவ்வூரில் போலீஸ் உத்தியோகஸ்தர் என் றால் யாவருக்கும் பயம். ஆனதால் அவர் வீட்டில் யாவும் தயாராகின்றன. அவரையே பெண்ணுக்கு வேண்டிய நகை களும் இரவல் வாங்கிவரும்படி சொல்லியிருக்கிறேன்.

திருஞானம்.—உம்முடைய சினேகர் போலீஸ் உத்தியோகஸ்த ரிடம் உண்மையைச் சொல்லிவிட்டீரோ ?

அப்பாசாமி.—நீர் என்ன இவ்விதம் கேட்கிறீர் ? நம்முடைய இரகசியத்தை வெளியிடலாமா ? அவரிடம் நீர் உம்முடைய சொந்த அத்தைமகளை விவாகம் செய்துகொள்ள இஷ்ட முள்ளவரென்றும், பெண்ணைப் பெற்றவள் உமக்கே பெண்ணைக் கொடுக்கவேண்டுமென்கிற விருப்பமிருந்தும் அவளுடைய நாயகனுக்கு இஷ்டமில்லாததால் அவர் ஊரி வில்லாத காலத்தில் பெண்ணை யனுப்பி விரைவில் விவா

கத்தை முடிக்க ஏற்பாடு செய்திருக்கிருளென்றும், பெண்ணும் பிள்ளையும் வருமுன்னம் யாவும் சித்தப்படுத்த வேண்டுமென்றும் சொல்லி, நீர் என்னிடம் கொடுத்த ரூபாவில் நூற்றைம்பது அவரிடம் கொடுத்து, "தாங்களே எல்லா வேலையையும் முடிக்கவேண்டும்" என்றும் சொன்னேன். அவர் "யாவும் முடிக்க நூற்றைம்பது ரூபா போதுமா?" என்று கேட்டார். "பணத்துக்காக நீர் கவலை கொள்ள வேண்டாம். மாப்பிள்ளை வந்தவுடன் இன்னம் இருநூறு ரூபா வாங்கிக் கொடுக்கிறேன்" என்றபின் அவர் மிக்க ஸந்தோஷத்தோடு எல்லாம் சித்தப்படுத்தியிருக்கிருர். வேண்டிய பெண்துணையும் வரவழைப்பதாக வாக்குக் கொடுத்திருக்கிருர்.

**திருஞானம்.**—நாளை எத்தனை மணிக்கு முகூர்த்தம் வைத்திருக்கிறீர்கள்?

**அப்பாசாமி.**—பகல் முகூர்த்தம் வைப்பது உத்தமமென்ருர். நான் கூடாதென்று விடியற்காலம் மூன்று மணிக்கு வைத்துக்கொள்ள ஏற்பாடு செய்திருக்கிறேன்.

**திருஞானம்.**—ஆம்! ஆம்!! இருட்டாயிருந்தாலே எதற்கும் அனுகூலம். ஊர்கோலத்துக்குத் தேவடியாள் இவ்விடத்தில் அகப்படுவாளா?

**அப்பாசாமி.**—தேவடியாளுக்கு என்ன குறைவு? தலைசாமான் வேண்டுமென்று ஒரு தேவடியாளைப் போய்க் கேட்டபொழுது, அவள் கொடுக்கிறேன் என்று ஒப்புக்கொண்டதோடு, பெண்ணைச் சிங்காரிக்க யாருக்குந் தெரியாமற் போனல் தானே வந்து சிங்காரிப்பதாகவும் சொல்லியிருக்கிருள். அவளே ஊர்கோலத்துக்குப் பல்லக்கோடு வரப் போகிருள். அவளுக்குப் பத்து வராகன் கொடுப்பதாகப் பேசியிருக்கிறதென்று என் சிநேகர் சொன்ஞர்.

**திருஞானம்.**—உம்முடைய சிநேகர் மனைவிக்குப் பெண்ணைச் சிங்காரிக்கத் தெரியாதோ?

அப்பாசாமி.—அவர் மனைவியை விசாலாக்ஷியிடம் அனுப்ப எனக்கு மனமில்லை.

திருஞானம்.—ஏதாகிலும் சொல்லிவிடுவாளென்று பயப்படுகிறீரோ ?

அப்பாசாமி.—ஆம் ! எதற்கும் நாம் முன் ஜாக்கிரதையாக இருப்பதே நலம். நீர் விசாலாக்ஷியைக் கொண்டுபோய் வைத்திருக்கும் வீட்டுப் பெண் பிள்ளையை வசப்படுத்தியிருக்கிறேன்.

திருஞானம்.—எவ்விதம் அவளை வசப்படுத்தினீர் ?

அப்பாசாமி.—பணத்தால் வசப்படாதவர்கள் யார் இருக்கிறார்கள் ? நாம் காலைக்கடனை முடித்துக்கொண்டு பெண்ணைச் சிங்காரிக்கவும் அவள் நமக்கு அனுகூலமாக நடக்கவும் ஏற்பாடு செய்யவேண்டும்.

திருஞானம்.—விசாலாக்ஷி ஏதாகிலும் தொந்தரவு கொடுப்பாளோ என்கிற பயமே எனக்கு அதிகமாக இருக்கிறது.

அப்பாசாமி.—விலையுயர்ந்த நகைகளையும் உயர்ந்த ஆடையையும் கண்டால், அறியாப் பெண்கள் விரும்பாமல் தொந்தரவு கொடுப்பார்களா ? (என்று வார்த்தையாடிக்கொண்டே நீங்கினார்கள்).

அடுத்த நாள் இரவு எட்டுமணிக்கு ஒரு வாலிபன் திருச்செங்கோட்டில் திறைமுக்காட்டுடன் போகும்பொழுது, பதினாறு பதினேழு வயது என்று மதிக்கத்தகுந்த ஒரு பெண், முக்காட்டுடன் போகிறவனை வீட்டின் வெளியிலிருந்த விளக்கு வெளிச்சத்தால் பார்த்து, "அண்ணா ! தாங்களா ?" என்றாள். அவனும் அவளைப் பார்த்து "அம்மா ! நீயா ? நான் உன்னை நினைத்துக்கொண்டிருந்தேன். நீ எங்கிருக்கிறாய் ?" என்றான். அவள் "இது நான் இருக்கிற வீடு" என்று வீட்டுக்குள் அழைத்துப்போனாள். வீட்டின் உள் திண்ணையில் ஒரு சாமியாரும் அவர் சீடனும் இருக்கக்கண்டு, வாலிபன் சாமியாருக்கு நமஸ்காரம் செய்து, "தாங்கள் என்னை அறிவீர்களா ?" என்று கேட்டான்.

சாமியார்.—“ எங்கேயோ பார்த்ததுபோல் இருக்கிறது ” (என்ருர்).

வாலிபன் சாமியார் அருகில் உட்கார்ந்திருப்பவரைக் காட்டி, “ இவர் தங்களுடைய சீடனே ? ” என்று கேட்டான்.

சாமியார்.—“ ஆம் ! தம்பி ! உன்னைப் பார்த்தவிடம் எங்கென்று எனக்கு ஞாபகம் வரவில்லை. நீ எந்தவிடத்தில் என்னைப் பார்த்தாயென்று சொல்லுவாயாகில் நான் ஞாபகப்படுத்தும் தொந்தரவு எனக்கு நீங்கிவிடும் ” (என்ருர்).

வாலிபன்.—“ சாமி ! நான் மிகு அவசரமான வேலையில் இருக்கிறேன். ஆனதால் தங்களோடு இருந்து வார்த்தையாட நேரம் இல்லை. எனக்கு உத்தரவு கொடுங்கள் ” (என்று வாலிபன் பெண்ணேடு வீட்டுக்குள் சென்ருன்).

சாமியார்.—அப்பா ! அண்ணுமலை ! நாம் இவ்வீட்டில் வந்திருப்பது நன்மையாகக் காணப்படவில்லை. இந்நேரத்தில் அப்பெண் வாலிபனை வீட்டுக்குள் அழைத்துப்போகிறதால் அவர்களுடைய நடத்தை அருவருப்பைக் கொடுக்கத்தகுந்ததென்று நினைக்கிறேன்.

அண்ணுமலை.—நாம் அவசரப்பட்டு ஒன்றையுஞ் சொல்லிவிடக் கூடாது. மனதில் யாதொரு களங்கமில்லாமல் ஒரு பெண்பிள்ளையும் ஆண்பிள்ளையும் சிநேகிதர்போல் வார்த்தையாடிக்கொண்டிருப்பதை வெளியார் பதிவிருந்து கேட்டுத் தப்பபிப்பிராயம் கொள்ளக்கூடு மல்லவா ?

சாமியார்.—ஆம் ! ஆம் !! நான் அவசரப்பட்டே சொன்னேன்.

அண்ணுமலை.—எதற்கும் தங்களுடைய ஸந்தேகம் தீர்க்க அவர்கள் என்ன பேசுகிருர்களென்று அறிந்து வருகிறேன் (என்று மறைந்து நின்று அவர்கள் பேசுவதைக் கேட்டிருந்தான்).

வாலிபனை அப்பெண் வீட்டுக்குள் அழைத்துப்போய் ஒரு பாய்விரித்து உட்காரவைத்தாள். வாலிபன் அப்பெண்ணைப் பார்த்து “ நீ அதிஷ்ட முள்ளவளென்றே சொல்லவேண்

டும்" என்று நெடுநேரம் வார்த்தையாடியிருந்து, எழுந்து போகும் பொழுது, "நான் செய்வதெல்லாம் உனக்கு ஸம்மதந்தானே!" என்று கேட்டான். அவள் "ஸம்மதந்தான்" என்று சொல்லி கண்களில் நீர்வடிய நின்றாள். அவள் அழுவதைக் கண்ட அன்னி யன் "அம்மா! 'பேரிழவின்பமோடு பிணிமூப்புச் சாக்காடென் னும் ஆறுமுன் கருவிற் பட்டது' என்றிருப்பதால் நாம் கவலை கொள்வதில் பிரயோசனம் இல்லை. நான் வேறுவிதம் நடத்த யோசித்திருந்தவன் உன்னைக் கண்டபின், முன் கொண்ட கருத்தை மாற்றுவது அவசியமாயிற்று. நான் பின் வந்து பார்க்கிறேன். நான் வருமுன்னம் ஒரு விஷயத்தைமட்டும் கவனித்துத் தக்க ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும்" என்று இரகசியமாய் ஒன்றைச் சொல்லி, அப்பெண்ணிடத்தில் விடை பெற்று நீங்கினான். வாலிபன் எழுந்திருக்குமுன் அண்ணா மலை வந்து தான் உட்கார்ந்திருந்த இடத்தில் உட்கார்ந்துகொண் டான். வாலிபன் சாமியாரிடத்தும் விடைபெற்று நீங்கினான்.

வாலிபன் நீங்கியபின் அண்ணாமலை சாமியாரைப் பார்த்து, "சாமி! தாங்கள் கொண்ட கருத்து முற்றிலும் தப் பிதமே! அவர்களிருவரும் சற்புத்திரர்கள். வாலிபன் துக்க ஸமாசாரத்தைச் சொல்லியதால் அவள் அழுதுகொண்டிருக்கி றாள், பாருங்கள்" என்று அப்பெண்ணை யழைத்து, 'ஜலம் வேண்டும் என்றான். அப்பெண் அழுதுகொண்டிருந்த முகத் தைத் துடைத்துக்கொண்டு ஜலம் கொண்டுவந்து கொடுத்து நீங்கினாள்.

**சாமியார்.**—"அப்பெண் விஷயத்தில் கொண்டது தப்பெண் ணமே! நான் அவசரப்பட்டுச் சொல்லியதைக் குறித்து துக்கப்படுகிறேன்" என்றார்.

அண்ணாமலை தாகத்துக்குச் சாப்பிட்டுச் செம்பைக் கொண்டுபோய் அப்பெண்ணிடத்தில் கொடுத்து, "அம்மணி! நான் செய்த குற்றத்தை மன்னிக்கவேண்டும். நீயும் இவ்விடம் வந்துபோனவரும் பேசிக்கொண்டிருந்ததை முற்றிலும் அறிந்

திருக்கிறேன். வாலிபன் உன்னைச் சேகரிக்கச் சொன்னதற்காக நீ கவலைப்படவேண்டாம்'' என்று இரகசியமாகச் சில வார்த்தை சொன்னான். அவ்வார்த்தைகளைக் கேட்டு அவள் அண்ணாமலையை வெறிக்கப்பார்த்து ஆச்சரியப்பட்டாள்.

அப்பெண்ணிடத்தில் விடைபெற்று நீங்கின வாலிபன் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தர் வீட்டுக்குள் போயிருந்து வெளி வந்து வேறொரு பெண்பிள்ளையின் வீட்டுக்குள் போனான். அவ் வீட்டுக்குள்ளிருந்த பெண்பிள்ளை "நீயா அவர்களோடு முன் னேரத்தில் வந்தது ?'' என்றாள்.

வாலிபன்.—ஆம் ! அம்மா ! (என்றான்).

பெண்பிள்ளை.—அவர்கள் சொல்லிப்போனது ஒன்றும் விளங்கவில்லை. நான் எத்தனை மணிக்கு அவ்விடம் போகவேண்டும் என்பதைச் சொல்லாமல் போய்விட்டார்கள்.

வாலிபன்.—அதைச் சொல்லிப் போகவே வந்தேன் நாளை விடியற்காலம் முகூர்த்தம் வைக்காமல், நாள் தள்ளி வைத்துக்கொண்டார்கள். ஆனதால் தாங்கள் இன்றிரவு வர வேண்டாம் என்று சொல்லிவரச்சொன்னார்கள். உங்களுக்குக் கொடுத்த தொந்தரவை மன்னிக்கும்படி கேட்டுக் கொண்டதோடு, இதைக் கொடுத்துவரச் சொன்னார்கள் (என்று பத்து ரூபாவைக் கொடுத்தான்).

பெண்பிள்ளை.—(மிகு ஆவலோடு ரூபாவை யெடுத்து வைத்துக் கொண்டு) நான் உங்களுடைய விருப்பத்தின் பிரகாரம் நடக்கச் சித்தமாயிருக்கிறேன். என்னை எப்பொழுது அழைத்தாலும் வரத் தயாராக இருக்கிறேன் (என்று சொன்னாள்).

வாலிபன்.—வேண்டும்பொழுது வந்து சொல்லுகிறேன்'' (என்று நீங்கினான்).

அப்பாசாமி செய்த சூழ்ச்சியின் பிரகாரம் வைத்த முகூர்த்தம் தப்பாமல் விவாகச்சடங்கு யாவும் குறைவற முடிந்தது. அடுத்த நாள் ஊர்கோலத்துக்கு வேண்டிய ஏற்பாடு

செய்து அப்பாசாமி அவ்வூரைவிட்டு நீங்கினான். மூன்றும் நாள் மஞ்சள் நீராடும்பொழுது, மணமகன் மஞ்சள் நீரை மணமகள் முகத்தில் ஊற்றி, திகில்பட்டுக் கீழ்விழுந்து காக்காய்வலிபோல் கைகால்க ளிழுக்க மூர்ச்சையானான். யாவரும் பயந்து அவனைத் தூக்கிக்கொண்டு போய்ச் சிகிச்சை செய்துகொண்டிருந்தார்கள்.

---

## 10—ம் அத்தியாயம்

சேலத்தில், செவ்வாய்ப்பேட்டையில், ஒரு மச்சுவீட்டில், பெரியசாமிபிள்ளை காலையில் படுக்கையிலிருந் தெழுந்து, 'வள்ளியம்மை!' என்றழைத்தார். அவர் மனைவி 'ஏன்' என்று வந்து அருகில் நின்றாள்.

**பெரியசாமி பிள்ளை.**—வள்ளியம்மை! நாம் அப்பாசாமியின் வார்த்தையைக் கேட்டுப் பெருந்தொகையைக் கொடுத் தனுப்பினோமே! அவர்கள் எண்ணப்பிரகாரம் முடிந்திருக் குமோ என்ற ஸந்தேகம் அடிக்கடி உதித்துக்கொண்டிருக் கிறது. இராத்திரி பலவிதமெல்லாம் கனவு கண்டேன். சிலவேளை அதனால் பெருஞ்சங்கடம் ஏதாகிலும் வருமோ என்ற பயமே எனக்கு அதிகம் இருக்கிறது.

**வள்ளியம்மை.**—அப்பாசாமி சொல்லியவிதம் முடிந்திருக்கிறது. அதனால் என்ன சங்கடம் வரும் என்று பயப்படுகிறீர்கள்? கழுத்தில் தாலி ஏறியபின் யார் என்ன செய்யக்கூடும்? 'நாய் குடித்த சட்டியை நாயிடத்தில் போட்டுவிடவேண்டியது' போல், விசாலாக்ஷியை நம்முடைய வீட்டுக்கு அனுப்பிவிடவேண்டியதல்லவா?

**பெரியசாமி பிள்ளை.**—சிலவேளை தாலியை அறுத்தெறிந்து விட்டுப் பெண்ணை அழைத்துக்கொண்டுபோய், நம்முடைய பயல்மேல் வியாச்சியந் தொடுத்தால் என்ன செய்கிறது?

**வள்ளியம்மை.**—தாங்கள் ஒன்றும் யோசிக்காமல் பேசுகிறீர்கள்.

தாலியை அறுத்தெறிந்து பெண்ணை அழைத்துப் போய் என்ன செய்கிறது ? அவளை யார் மணம்புரிவார்கள் ?

என்று சொல்லும்பொழுது அப்பாசாமி நகைத்துக் கொண்டு வீட்டுக்குள் வந்தான். இருவரும் "வருக அப்பாசாமி! என்ன ஸமாசாரம் ?" என்று கேட்டார்கள்.

**அப்பாசாமி.**—(தேகம் குலுங்க நகைத்து) எல்லாம் நல்ல ஸமாசாரமே! நாம் எடுத்த காரியம் நம் எண்ணம்போல் முடிந்தது. இராத்திரி நேரமாய்விட்டதால் எப்பொழுது விடியும் என்று எழுந்தவுடன் தங்களிடத்தில் ஓடிவந்தேன்.

**வள்ளியம்மை.**—என் மகன் கலியாணத்தை நான் அருகிலிருந்து பார்க்கக் கொடுத்துவைக்காத பாவியானேன் (என்று கண்களில் நீரை தாரை தாரையாக வடியவிட்டாள்).

**பெரியசாமி பிள்ளை.**—ஏ! புழுக்கை! உனக்கு புத்தி யிருக்கிறதா இல்லையா? மகனைக் கலியாணம் செய்துகொள்ள அனுப்பிவிட்டு அவனுக்குக் கலியாணம் முடிந்ததென்று கேள்விப்பட்டபின் அழுகிறாய்!

**வள்ளியம்மை.**—(கண்களைத் துடைத்துக்கொண்டு) ஏனப்பா! அப்பாசாமி! விசாலாக்ஷி அழுதுகொண்டே யிருக்கிறாளா?

**அப்பாசாமி.**—மருமகள்மேல் என்ன உருக்கம் பார்த்தீர்களா? விசாலாக்ஷியம்மாள் அழுதுகொண்டிருக்கிறதற்கு பதிலாக ஸந்தோஷமாக இருக்கிறாள்.

**பெரியசாமி பிள்ளை.**—என்ன சொன்னாய்! விசாலாக்ஷி ஸந்தோஷமாய் இருக்கிறாளா? இது அதிசயமாக இருக்கிறது.

**அப்பாசாமி.**—ஐயாவே! இக்காலம் கலிகாலம் என்று தாங்கள் எண்ணவேண்டும். நானும் விசாலாக்ஷி அதிகம் தொந்தரவு கொடுப்பாளென்று நினைத்திருந்தேன். ஆனால் தங்களுடைய குமாரனை விவாகம் செய்துகொள்ள வேண்டுமென்கிற விருப்பமிருந்தோ, அல்லது தான் என்ன தொந்தரவு கொடுத்தாலும் பிரயோசனப்படாது என்கிற எண்ணத்தாலோ, அவள் மணப்பெண் இருக்கவேண்டிய கோலத்

தோடு தலை குனிந்திருந்தாள். அவள் ஸந்தோஷமான முகத்தோடாவது துக்கமுகத்தோடாவது இருந்தாள் என்று கண்டுகொள்ள முடியவில்லை. அவள் ஒரு தொந்தரவும் கொடுக்காமல் பிராமணன் சொல்லியவிதம் செய்துகொண்டிருந்தமையால், ஸந்தோஷத்தோடிருக்கிறாள் என்றே எண்ண இடந்தந்தது.

வள்ளியம்மை.—பெண் ஸம்மதப்பட்டிருப்பதால் அவள் தாய் தந்தையர் என்ன செய்ய முடியும்?

பெரியசாமி பிள்ளை.—தம்பி! முத்துவேலுபிள்ளை கோர்ட்டில் வியாச்சியம் போட்டால் என்ன செய்கிறது?

அப்பாசாமி.—தங்களுக்குப் பைத்தியமா? முத்துவேலுபிள்ளை கோர்ட்டுக்குப் போனால் அவர்களுக்கும் தங்கள் குமாரனுக்கும் ஒன்றுமில்லை என்று முதலில் தீர்ந்துபோகவேண்டும். கோர்ட்டார் திருஞானத்தை தண்டித்து நெடுநாள் காவலில் வைத்தால், அவர் மகளை என்ன செய்கிறது? வேறொருவருக்கு விவாகஞ் செய்ய முடியுமோ? தங்கள் மகனைச் சிறையில் வைக்க இஷ்டங்கொண்டால் முத்துவேலு பிள்ளை தன் மகளையும் சிறையில் வைக்கவேண்டியதில்லையா?

பெரியசாமி பிள்ளை.—ஆம்! நீ சொல்வது உண்மையே! சில வேளை கோபத்தோடு அவ்விதம் செய்யத் துணிந்தால் என்ன செய்கிறதென்றே எனக்கு பயமாக இருக்கிறது.

அப்பாசாமி.—அவ்விதம் அவர் கோபத்தோடு ஒன்றைச் செய்யத் துணிந்தால் பார்க்கிறவர்கள் அவருக்கு புத்தி சொல்லாமல் இருப்பார்களா? அல்லது அவர் மனைவி அவர் இஷ்டத்துக்கு உடன்பட்டு அதைச் செய்ய விடுவாளா? முடியாத காரியத்தை நினைத்துக் கவலைகொள்வதில் பிரயோசனமில்லை.

பெரியசாமி பிள்ளை.—விளையாட்டுப் பிள்ளைகள் பேச்சைக் கேட்டு நாங்களும் உடன்பட்டோம். 'உரலில் தலையை மாட்

டிக்கொண்டு உலக்கைக்கு பயந்தால் முடியுமா?' இனி வரு கிறதை யெல்லாம் பார்க்கவேண்டியதே!

**அப்பாசாமி.**—யாவும் நாம் நினைத்தவண்ணம் முடிந்தபின் ஸந் தோஷமாக இருக்கவேண்டியதை விட்டுக் கவலை கொண் டிருக்க வேண்டாம். விசாலாக்ஷி ஏறிப்போன வண்டி சூரமங்கலத்து ஸ்டேஷனை விட்டபின், முத்துவேலுபிள்ளை யும், அவர் மனைவியும், மகனும் என்ன செய்தார்கள்? அவர் கள் சேலத்துக்கு வந்துவிட்டார்களா?

**வள்ளியம்மை.**—தம்பி! வண்டி ஸ்டேஷனை விட்டவுடன் திரி புரஸுந்தரம் அதிகம் துக்கப்பட்டாள். நான் என் மகன் விசாலாக்ஷியுடன் போகிறான் என்றபின் ஒருவாறு மனந் தேறி, காலை 9-மணி ரெயிலில் நாங்கள் யாவரும் ஈரோடு போய்ச் சேர்ந்தோம். அங்கு திருஞானமும் விசாலாக்ஷி யும் இல்லாதது கண்டு அவர்கள் திருச்சிராப்பள்ளிக்குப் போயிருக்கக் கூடுமென்று அங்கு போகப் பிரயாணப்பட் டார்கள். எனக்குத் தலைநோய் அதிகமா யிருக்கிறதென்று பாசாங்கு செய்து, அவர்கள் போனபின் நாங்கள் திருச் செங்கோட்டுக்கு வந்துவிடலா மென்ற எண்ணமிருந் தும், பின் நாங்களும் உடந்தையாயிருந்தோம் என்று எண்ண இடந்தரும் என்றே நேராகச் சேலத்துக்கு வந்து விட்டோம்.

**அப்பாசாமி.**—இப்பொழுது நீங்களே போய் மகனை அழைத்து வரப்போகிறதால், நீங்களும் உடந்தையா யிருந்தீர்கள் என்று எண்ண இடம் தராதோ? (என்று நகைத்தான்).

**பெரியசாமி பிள்ளை.**—'எங்களுடைய ஸம்மதமில்லாமல் மணம் புரிந்தான். நாங்கள் பின்னறிந்து அழைத்து வந்தோம்' என்று யாவரும் அறியச் செய்துவிடலாம். ஆனதால் அவ்விடயத்தில் எங்கள்மேல் குற்றஞ்சொல்ல நியாயமில்லை. மணமகனையும் மணப்பெண்ணையும் அழைத்து வந்து

பெண்வீட்டார் அனுமதியோடு நாம் ஊர்விருந்து முதலான தும் செய்து யாவரையும் ஸந்தோஷப்படுத்த வேண்டும்.

**வள்ளியம்மை.**—நமக்கு இருப்பது ஒரு பிள்ளை. அவனுடைய விவாகத்தை நாம் இருந்து செய்யாமற் போனதே எனக்கு அதிக கவலையாக இருக்கிறது.

**பெரியசாமி பிள்ளை.**—மீண்டும் அதை நினைத்தே கவலை கொள்கிறாய். விசாலாக்ஷி பருவமடைந்தபின் உன் கண் குளிர வேண்டியதைச் செய்து பார்க்கலாம். விவாகம் முடிந்தாலும் பின்செய்ய வேண்டியது அநேகம் இருப்பதை கவனியாமல் பேசுகிறாய்.

**அப்பாசாமி.**—பெண்ணையும் பிள்ளையையும் சேலத்துக்கு அழைத்துவரும்பொழுது ஏன் ஊர்கோலத்தோடு அழைத்து வரக்கூடாது ?

**வள்ளியம்மை.**—ஆம் ! தம்பி ! அதையாகிலும் செய்யவேண்டியது அவசியம். நாம் முதலில் பெண்வீட்டார் மனதை யறிந்து பின் அவ்விதம் செய்வது உத்தமமென்று நினைக்கிறேன்.

**அப்பாசாமி.**—பெண்வீட்டார் இப்பொழுது எங்கிருக்கிறார்களோ தெரியவில்லை. அவர்களைக் கண்டுபிடித்து அவர்களுடைய கோபத்தைப் போக்கியே அதைச் செய்ய வேண்டும்.

**வள்ளியம்மை.**—பெண் வீட்டார் ஸம்மதம் பெறுந்தனிலும் பெண்ணையும் பிள்ளையையும் திருச்செங்கோட்டில் வைத்திருக்க வேண்டியதா ?

**பெரியசாமி பிள்ளை.**—நாம் திருச்செங்கோட்டுக்குச் சென்று விசாலாக்ஷி யம்மாளுடைய மனம் எவ்வித மிருக்கிறதென்று அறிந்தபின், அவளுடைய தாய் தந்தையைக் கண்டு அவர்களை வசப்படுத்தவேண்டும்.

**அப்பாசாமி.**—பெண் விஷயத்தில் நான் சொல்லியது யாவும் உண்மையென்றே தாங்கள் காண்பீர்கள். தங்களையும் அம்

மாளையும் அழைத்துப்போய்த் திருச்செங்கோட்டில் விட்டு நானே நேரில் திருச்சிராப்பள்ளி முதலான விடங்களைப் பார்த்து, முத்துவேலுபிள்ளையையும் அவர் மனைவியையும் கண்டுபிடித்து, தக்க சீதனமுங் கொடுக்கும்படி செய்கிறேன். என்னுடைய ஸாமர்த்தியத்தைப் பார்த்து நீங்களே ஆச்சரியப்படப் போகிறீர்கள் (என்று நகைத்தான்).

**வள்ளியம்மை.**—தம்பி! நீ திருஞானத்துக்காக அதிக தொந்தரவு எடுத்துக்கொண்டிருக்கிறாய். இதற்கு பதில் நாங்கள் உனக்கு என்ன செய்யப்போகிறோம்?

**பெரியசாமி பிள்ளை.**—அப்பாசாமி! நீ இவ்வளவு தொந்தரவு எடுத்துக்கொள்ளாமற் போனால் எளிதாகத் திருஞானத்தினுடைய எண்ணம் கைகூடியிராது.

**அப்பாசாமி.**—ஐயாவே! எல்லாம் உங்களுடைய ஆசீர்வாதத்தால் முடிந்தது. அம்மாளும் தாங்களும் என்னைப் பெருமைப்படுத்திப் பேசுவது நியாயமல்ல. பெண்வீட்டார் கோபத்தை மாற்றி, அவர்கள் யாவரும் மாப்பிள்ளையையும் பெண்ணையும் அங்கீகரித்து ஸந்தோஷமாக இருப்பதைப் பார்க்க வேண்டுமென்கிற ஆவலே எனக்கு அதிகம் இருக்கிறது. ஆனதால் அவ்விஷயத்தை முடிக்கும் பரியந்தம் எனக்கு நித்திரை வராது.

**வள்ளியம்மை.**—(நகைத்து) தம்பி! குடலறுந்த நரி எவ்வளவு தூரம் ஓடப்போகிறது? முதலில் பெண் வீட்டார் கடுகடுத்தாலும் பின் நம்முடைய காலில் வந்து விழவேண்டியதே!

**பெரியசாமி பிள்ளை.**—நானும் நன்றாக யோசித்துப்பார்த்தேன். முத்துவேலு பிள்ளை நம்முடைய இஷ்டத்துக்கு உடன்படாமற் போனால் அவருக்கு அவமானம் உண்டாகும் என்றே காண்கிறது.

**அப்பாசாமி.**—ஐயா அவர்களுக்கு இப்பொழுதுதான் உண்மை தெரிகிறது. நாம் திருச்செங்கோட்டுக்குப் போகுமுன்னம் முத்துவேலு பிள்ளை வீட்டுக்குப்போய் அவ்விடத்தில்

ஏதாகிலும் ஸமாசாரங் கிடைக்குமா என்று பார்த்துவருகிறேன். நாம் எப்பொழுது பிரயாணப்படலாம்?

**பெரியசாமி பிள்ளை.**—எங்களை எப்பொழுதழைத்தாலும் வருகிறதற்குச் சித்தமாயிருக்கிறோம். நீ முத்துவேலு பிள்ளை வீட்டிற்குச் சென்று, அவர்கள் தற்காலம் எங்கிருக்கிறார்கள்; மற்ற ஸமாசாரம் எப்படி யிருக்கிறது என்று அறிந்து வந்தால், நமக்கு அது அனுகூலமாக இருக்குமென்று நினைக்கிறேன்.

**வள்ளியம்மை.**—அப்பாசாமி! நீ காலையிலெழுந்து ஒன்றும் சாப்பிடாமல் வந்திருக்கிறதுபோல் காண்கிறது. இங்கு பலகாரம் உண்டு, பின் போய் வருவாயானால் நாம் இன்று மாலையே பிரயாணப்பட்டுப் போகலாம்.

இவ்விதம் சொல்லி வள்ளியம்மை காப்பியும் பலகாரமும் தயார் செய்து கொண்டுவந்து கொடுத்தாள். அப்பாசாமி பலகாரமுண்டு பெரிய சேலத்திற்குச் சென்று திரும்பிவந்து, "முத்துவேலு பிள்ளை அவர்மனைவி மக்களோடு திருச்சிராப்பள்ளியி லிருப்பதாக அறிந்து வந்தேன்" என்று பெரியசாமி பிள்ளையிடம் சொல்லிவிட்டு, அன்று மாலை திருச்செங்கோட்டுக்குப் போக வேண்டியதே என்ற தீர்மானத்தோடு தன் வீட்டுக்குச் சென்றான்.

---

## 11—ம் அத்தியாயம்

திருச்செங்கோட்டில் நடந்தேறிய விவாகத்தின் மூன்றாம் நாள், மஞ்சள் நீர் விளையாடும்பொழுது, மணப்பெண்ணைப் பார்த்து மூர்ச்சையான திருஞானத்தை அங்கிருந்தவர்கள் தூக்கிக்கொண்டுபோய், அவன் ஆடையை மாற்றி உபசரித்தார்கள். அவன் கண்ணை விழித்துப்பார்த்துத் தனக்கு சௌக்கியமாயிருக்கிறதென்றபின் யாவரும் ஸந்தோஷமடைந்தார்கள். அன்றிரவில் மணப்பெண் ஓரறையில் தனித்திருக்கிறாள் என வறிந்து, விளக்கொளி அதிகமில்லாத அவ்வறைக்குள் திரு

*ஞானம் சென்று, மணப்பெண்ணை வெறிக்கப் பார்த்து நின்றான். மணப்பெண் எழுந்து தலைகுனிந்து நின்றாள்.*

**திருஞானம்.**—*இது என்ன அதிசயம்?*

**மணப்பெண்.**—*(தலைகுனிந்த விதமாக நின்று) அதிசயம் ஒன்றும் காணவில்லையே.*

**திருஞானம்.**—*இது அதிசயமல்லவா?*

**மணப்பெண்.**—*என்ன அதிசயம்?*

**திருஞானம்.**—*நீ இங்கு முளைத்தது அதிசயமல்லவென்று சொல்லுகிறாய்?*

**மணப்பெண்.**—*அதிசயம் இல்லையென்றே சொல்லுகிறேன்.*

**திருஞானம்.**—*அதுபோகட்டும்! நீ எப்படி இங்கு வந்தாய்?*

**மணப்பெண்.**—*தாங்கள் எப்படி இங்குவந்தீரோ அதுபோலவே நானும் இங்கு வந்தேன்.*

**திருஞானம்.**—*என்னை அவமானப்படுத்தவே இதைச் செய்யத் துணிந்தாய்?*

**மணப்பெண்.**—*தங்களை அவமானத்திலிருந்து நீக்கவே இதற்கு ஒப்பினேன்.*

**திருஞானம்.**—*என்னைப் பார்க்கிறவர்கள் என்ன சொல்லுவார்கள்?*

**மணப்பெண்.**—*என்னை யறிந்தவர்கள் என்னை என்ன சொல்லுவார்களென்று நினைத்திருந்தீர்?*

**திருஞானம்.**—*தனவந்தன் மகளை மணம்புரிந்தேன் என்று என்னைச் சொல்லுவார்கள் அல்லவா?*

**மணப்பெண்.**—*ஏழைகளிடத்தில் பெண்ணைக் கொள்ளவேண்டும். தனவந்தர் வீட்டில் பெண்ணைக் கொடுக்கவேண்டும் என்பதல்லவோ விதி? அவ்விதம் முடிந்தால் நாயகனுக்கேற்ற பணிவிடையை நாயகி கவனித்துச் செய்வாள்.*

**திருஞானம்.**—*நீ எப்பொழுதும் என்னோடு இருக்கவேண்டுமென்பதோ உன்னுடைய கருத்து?*

**மணப்பெண்.**—நான் தங்களோடிராமல் வேறெங்கே போவேன் என்று தாங்கள் நினைக்கிறீர்கள் ?

**திருஞானம்.**—'அற்பனுக்கு வாழ்வு வந்தால் அர்த்தஜாமத்தில் குடைபிடிப்பான்' என்றவிதம் உனக்குக் கிடைத்த பெருமையை ஊரெங்கும் பறைசாற்றுவாய் அல்லவா ?

**மணப்பெண்.**—பறைக்கு பதிலாக மேளவாத்தியத்தோடு விவாகம் முடிகிறதேயன்றி இரகசியமாக விவாகம் செய்கிற வழக்கம் இல்லை. ஆனதால் நான் எங்கும் சென்று பறை சாற்றவேண்டிய அவசியம் இல்லையே !

**திருஞானம்.**—நீ ஏதாகிலும் என்னிடத்தில் பெற்றுக்கொண்டு போய்விடுதல் உத்தமம் என்று நினைக்கிறேன்.

**மணப்பெண்.**—தாங்கள் என்ன சொன்னீர்கள் ? தாங்கள் இவ்விதம் சொல்வது தெய்வத்துக்கு ஏற்காது. நன்றாய் யோசித்துப் பாரும். என்னைக் கண்ணேயென்றும், பெண்ணேயென்றும் புகழ்ந்து துதித்தவர், இப்பொழுது புருடனும் பெண்டாட்டியு மானபின் ஏதாகிலும் வாங்கிக்கொண்டு போய்விடச் சொல்லுகிறீர்கள். இது உமக்குத் தருமமா ?

**திருஞானம்.**—நான் எத்தனையோ பெண்களோடு வார்த்தையாடியிருந்தேன். அவர்களை யெல்லாம் பெண்டாட்டியாக நான் கொள்ளமுடியாது. ஆனதால் உன்னை பகிரங்கமாக அவமானப் படுத்துமுன் நீ போய்விட்டால் அது உனக்கு நன்மை.

**மணப்பெண்.**—தாங்கள் பேசுவதின் பொருள் இன்னதென்று அறியாமல் பேசுகிறீர்கள். நீர் என்னை மணம் புரிந்தபின் உம்மை நான் தெய்வமாகப் பார்க்க வேண்டியது கடமையாதலால், நீர் என் விஷயத்தில் செய்ததை மறந்து உமக்குப் பணிவிடை செய்வதே என்னுடைய விரதம் என்றிருக்கிறேன். நீர் என்னை வெறுக்காமல் அங்கீகரிக்கவேண்டும் (என்று கீழ்விழுந்து நமஸ்கரித்தாள்).

**திருஞானம்.**—உன்னை நான் பலர்முன் தாலி கட்டிவிட்டதால்

என் பெண்டாட்டி யாகிவிடப் பார்க்கிறாய். அது முடியாத காரியம். பணிவிடை செய்யத் தற்காலம் எனக்கு ஆள் வேண்டியதில்லை. நீ போய்விடுவதே உத்தமம்.

மணப்பெண்.—நான் சொல்வதைக் கேட்டு மனமிரங்காமற் போனால், உம்முடைய முன்னிலையில் என்னுயிரை விட்டு விடுவேன் என்பதை நம்பும். வீணாகப் பெண்பழி ஏற்றுக் கொள்ளவேண்டாம்.

திருஞானம்.—முன்னம் உயிரை விட்டுவிடுவேன் என்று சொன்னதை மறக்கவில்லை. அப்பொழுது நீ சொன்னதுபோல் உயிரை விட்டு மீண்டும் பிறந்து இங்கு மாயமாக வந்து முளைத்தாய். போ ! போ ! பைத்தியக்காரி. நீ யாரென்று என்னை மதித்து இவ்விதம் பயங்காட்டுகிறாய் ?

மணப்பெண்.—நான் உமக்கு பயங்காட்டிச்சொல்வது ஒன்றுமில்லை. நான் சொல்வதுபோல் செய்துவிடுவேன். வேண்டாம் ! வேண்டாம் !

அந்த ஸமயத்தில் அறையின் கதவைத் திறந்து ஓர் பெண்பிள்ளை ஓடிவந்து, " ஆ ! என் கண்மணி ! உனக்குத் திருஞானத்தை விவாகம் செய்துகொள்ள மனம் இருந்ததல்லவா ? " என்று கட்டிப்பிடித்து முத்தமிட்டாள். பெரியவர் ஒருவர் அறைக்குள் வந்து திருஞானத்தைப் பார்த்து " ! அப்பா ! உன்மனம் ஸந்தோஷம் அடைந்ததா ? " என்று அவனை பிடித்தணைத்துக்கொண்டார். அறை இருட்டாக இருந்தாலும், குரலால் வந்தவர்கள் தன் தாய் தந்தையரென அறிந்து, அவர்களுக்குத் திருஞானம் நமஸ்காரம் செய்தான். அதைக் கண்டு, மணப்பெண்ணும் நமஸ்கரித்து எழுந்து நின்றாள்.

திருஞானம்.—" நான் என்ன செய்வேன் ? என்னுடைய துரதிஷ்டத்தால் தங்களை விட்டுத் தனியில் மணம்புரிந்ததால் என் கதி இப்படியாயிற்று " (என்று அலறினான்).

பெரியசாமி பிள்ளை.—அப்பா ! திருஞானம் ! நீ ஒன்றுக்கும் கவலை கொள்ளவேண்டாம். நாங்கள் உன் கலியாணத்தில்



ஐயா ! மணப்பெண் சொல்வதை முற்றிலும் அடுத்த அறையிலிருக்
கேட்டிருந்தேன். (103-ம் பக்கம் பார்க்க).

முதலில் இல்லாமற்போனாலும் முடிவில் வந்துவிட்டதால் யாவும் நீ ஸந்தோஷ மடையும் விதம் செய்வோம்.

**வள்ளியம்மை.**—ஊருக்குப் போனபின் அவ்விடத்திலும் ஊர் விருந்து முதலானதும் சிறப்பாகச் செய்யலாம். உன்னுடைய இஷ்டர்களுக்குத் தக்க மரியாதை செய்யலாம்.

**பெரியசாமி பிள்ளை.**—தேவடியாள் கச்சேரி வைத்து யாவரையும் வரவழைக்கலாம்.

**வள்ளியம்மை.**—நம்முடைய குலதெய்வத்திற்குச் சிறப்பாகப் பூசை போடலாம்.

**பெரியசாமி பிள்ளை.**—உன் விவாகத்துக்குச் செலவானது போக இன்னம் ஆயிரம் இரண்டாயிரம் பிடித்தாலும் ஸந்தோஷத்தோடு செலவுசெய்வேன்.

**வள்ளியம்மை.**—நான் போட்டிருந்த நகைகளையெல்லாம் உன் பெண்டாட்டிக்குக் கொடுத்துவிடுகிறேன்.

**என்று** மாறி மாறி இருவரும் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுது, அப்பாசாமி அறைக்குள் வந்து, மங்கலாய் எரிந்திருந்த விளக்கைத் தூண்டி, சுவர்ப்புறமாகத் திரும்பியிருந்த மணப் பெண்ணைப் பார்த்து "ஐயோ! இதென்ன அநியாயம்! சேலத்தில் கத்தரிக்காய் விற்றிருந்தவள் மணப்பெண்ணாக இருக்கிறாளே!" என்றான்.

**வ**ள்ளியம்மையும் பெரியசாமிபிள்ளையும், "என்ன சொன்னாய்? என்ன சொன்னாய்? கத்தரிக்காய் விற்றுக்கொண்டிருந்தவளா? விசாலாக்ஷி எங்கே! இதென்ன அநியாயம்! இவள் யார்?" என்று திகைத்து நின்றார்கள்.

**பெரியசாமி பிள்ளை.**—அடே திருஞானம்! நீங்கள் இரண்டு பேரும் பேசிக்கொண்டு எங்களை ஏமாற்றிப் பணத்தை வாங்கி உங்கள் இஷ்டம்போல் செலவு செய்துவிட்டீர்கள். நீங்கள் இஷ்டப்பட்ட பெண்ணைச் சேலத்தில் விவாகம் செய்தால் நாங்கள் ஒப்போமென்று இந்தச் சூது செய்தீர்கள். உங்கள் எண்ணம் பூர்த்தியானதால், இனி ஒன்

றும் செய்ய முடியாதென்று எங்களை வரவழைத்தீர்கள். இனிமேல் நீயும் உன் பெண்டாட்டியுமாக இருங்கள். நாங்கள் இனி நொடிப்பொழுதும் இங்கு இருக்கமாட்டோம். வருக வள்ளியம்மை (என்றெழுந்தார்).

திருஞானம்.—அப்பா! தாங்கள் என் நிர்ப்பாக்கிய ஸ்திதியைக் கண்டு பரிதாபப்படாமல் கோபித்துக்கொள்வது நீதியல்ல. நான் உங்களுடைய முன்னிலையில் விசாலாக்ஷியோடு ரெயிலில் வந்தது தங்களுக்குத் தெரிந்ததே! நான் இவ்வூருக்கு விசாலாக்ஷியை அழைத்துவந்து வேறொரு வீட்டில் வைத்துப் பின் கலியாண ஸமயத்தில் அழைத்துவந்தது பரியந்தம் நான் அறிவேன். பின் அவளிவளாக மாறியதே பெரிய மாயமாக இருக்கிறது. அவள் எங்கு போனாளோ? இவள் எப்படி வந்தாளோ? அதை அறியவேண்டி நான் இவளைக் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது நீங்கள் யாவரும் வந்தீர்கள்.

வள்ளியம்மை.—நீ இவளுக்குத் தாலி கட்டும்பொழுது இவள் விசாலாக்ஷியல்லவென்று கண்டுகொள்ளாமலா போனாய்?

திருஞானம்.—அம்மணி! இரவில் முகூர்த்தம் வைத்திருந்ததனாலும், இவள் அதிகம் தலை குனிந்திருந்ததனாலும், இவளைக் கண்டுகொள்ளாமல், இன்று காலை மஞ்சள் நீராடும் பொழுது இவள் முகத்தைப்பார்த்தேன். பார்த்தவுடன் பிரக்ஞையற்று எனக்கு வழக்கமாக வரும் வலியும் வந்தது. சற்று முன்தான் என்னுடைய புத்தி சுவாதீனத்துக்கு வந்தது.

பெரியசாமி பிள்ளை.—திருஞானம்! நீ சொல்வது ஆச்சரியத்தை உண்டுபண்ணுகிறது. நீ இவளைக் கண்டுகொள்ளாமற் போனாலும், இவ்விடத்தி லிருந்தவர்கள் நீ அழைத்துவந்த பெண் இவளல்லவென்று ஒருவரும் சொல்லாமலா இருந்தார்கள்?

திருஞானம்.—விசாலாக்ஷியை இந்த ஊரில் ஒருவரும் அறியார்

கள். நான் இவ்வீட்டுக்கு அவளை அழைத்துவரும்பொழுது இங்கே பெண்பிள்ளைகள் ஒருவரும் இல்லை. வேறொரு பெண்பிள்ளையை அழைத்துவந்து விசாலாக்ஷியைச் சிங்காரிக்கச் சொன்னோம். பின் நடந்தது எங்களுக்குத் தெரியாமற்போனது.

**வள்ளியம்மை.**—அப்பாசாமி! நீயும் இவள் விசாலாக்ஷி யல்லவென்று அறியாமலா போனாய்?

**அப்பாசாமி.**—அம்மணி! நானும் மணப்பெண்ணை கவனிக்காமல் நம்முடைய எண்ணம் கைகூடியதே என்ற ஸந்தோஷத்தால் ஊர்கோலத்துக்கு வேண்டிய ஏற்பாடு செய்துவிட்டுத் தங்களிடம் ஓடிவந்தேன்.

**பெரியசாமி பிள்ளை.**—திருஞானம்! ஊர்கோலத்தில் அனேகர் வீட்டில் பால்பழம் சாப்பிடும்பொழுதும் மணப்பெண் முகத்தைப் பார்க்காமலா இருந்தாய்?

**திருஞானம்.**—இவள் செய்தது இப்பொழுது எனக்கு நன்றாய் விளங்குகிறது. இவள் பால்பழம் சாப்பிடும்பொழுதெல்லாம் எனக்கு முகத்தைக் காட்டாமல் தன் முகத்தைத் திருப்பிக்கொண்டு சாப்பிட்டாள்.

**வள்ளியம்மை.**—நாம் ஒன்று நினைத்துச் செய்ய வேறுவிதம் முடிந்தது (என்று துக்கப்பட்டு) அடியம்மா! நீ யார் (என்று கேட்டாள்).

**மணப்பெண்.**—தாங்கள் என்னைக் கேட்கிறதற்கு பதிலாகத் தங்களுடைய குமாரனைக் கேட்டு அறிந்துகொள்வது உத்தமம்.

**பெரியசாமி பிள்ளை.**—ஸபாஷ்! நன்றாயிருக்கிறது! இவளைத் திருஞானம் முன்னதாக அறிந்தவனாகக் காண்கிறது. ஏனப்பா! இவளைத் தெரியுமா?

திருஞானம் பதில் சொல்லாமல் மௌனமாய்த் தலையிறங்கி நின்றான்.

**பெரியசாமி பிள்ளை.**—வள்ளியம்மை! பார்த்துக்கொண்டாயா?

இதெல்லாம் முன்னதாகவே ஏற்பாடு செய்திருக்கிறார்கள். நான் கேட்பதற்கு பதில் சொல்லாம லிருப்பதால், நான் முதலில் கொண்ட கருத்து உண்மையென்று தெளிவாய்க் காண்கிறது.

வள்ளியம்மை.—அடியம்மா! அவன் சொல்லாமலிருக்கிறான். ஆனதால் நீயே சொல்லவேண்டும்.

மணப்பெண்.—மாமி!......(என்று மற்றதைச் சொல்லுமுன்),

பெரியசாமி பிள்ளை—மாமியா! ஸபாஷ்! ஸபாஷ்!! வள்ளியம்மை! உனக்குத் தக்க மருமகளே கிடைத்திருக்கிறாள். உனக்கென்ன குறைவு? (என்று கடுங்கோபத்தோடு நகைத்தார்).

மணப்பெண்.—நான் தங்களையும் தங்கள் மனைவியையும் மாமன் மாமியென்று அழைக்கும்படி செய்தவர் தங்கள் மகனேயன்றி நான் என்னுடைய இஷ்டமாக அழைக்கப் பாத்திரவாளியல்ல. தங்கள் குமாரன் சொல்லாம லிருப்பதால், அவருடைய சினேகரைக் கேட்டால் அவர் சொல்லுவார்.

பெரியசாமி பிள்ளை.—வள்ளியம்மை! பார்த்துக்கொள்! எனக்கு உலகானுபவம் இல்லாமற் போகவில்லை. நம்மை ஏமாற்றவே இப்பாவிகள் கங்கணங் கட்டியிருந்தார்கள்.

வள்ளியம்மை.—சற்று நிதானியுங்கள். அப்பாசாமியைக் கேட்கலாம். அவன் சொல்வதையும் பார்க்கலாம். என்னடா அப்பா! அப்பாசாமி! உனக்கு எல்லாம் தெரியும் என்கிறாளே. நீ என்ன சொல்லப்போகிறாய்?

அப்பசாமி.—அம்மணி! நீங்கள் இருவரும் தப்பபிப்பிராயங் கொண்டு பேசுகிறீர்கள். உண்மையறிந்தால் யாவும் விளங்கும். நீங்கள் உங்கள் குமாரனையே கேளுங்கள்.

திருஞானம்.—அப்பாசாமி! நாம் இன்னம் மறைத்துவைப்பதில் பிரயோசனமில்லை. நீயே சொல்லிவிடு (என்று அவ்வறையைவிட்டு நீங்கினான்).

அப்பசாமி.—என் வாயால் அதைச் சொல்லப் பிரியமில்லை.

அப்பெண்ணையே கேளுங்கள் (என்று அவனும் வெளியில் சென்றான்).

வள்ளியம்மை.—அம்மா மருமகளே! உன்னையே சொல்ல விட்டு அவர்களிருவரும் நீங்கினார்கள். இனி உன்னையன்றி உண்மையறிய நியாயமில்லை ; நீயே சொல்லவேண்டும்.

மணப்பெண்.—என்னையே சொல்லும்படி கட்டாயப்படுத்துவ தால் நான் சொல்லவேண்டியதே. நான் ஓர் நாதி யற்றவள். என்னுடைய வயிற்றை வளர்க்க அற்ப வியாபாரஞ் செய்து காலம் கழித்துவரும் நாளில், நான் ஒரு நாள் தனித்து வருவதைக் கண்ட தங்களுடைய குமார னும் அவர் சிநேகரும் என்னோடு வார்த்தையாடிச் சில தூரம் வந்தனர். பின்பு அவர் சிநேகிதர் முன்னே போய் விட்டார். தங்கள் குமாரன் என்னைப் பின்தொடர்ந்து, நான் எவ்வளவு கெஞ்சியும் மனமிரங்காமல்......ஐயோ! என்ன வென்று சொல்வேன். நானடைந்த அவமானத்தோடு சேலத்திலிருப்பது எனக்கு ஸகிக்கவில்லை. அவரையே கணவனாக மதித்து, இனி ஒருவருக்கும் வாழ்க் கைப்படக் கூடாதென்ற தீர்மானத்தோடு என் பாட்டி யாரை அழைத்துக்கொண்டு இங்கே வந்து சேர்ந்தேன். ஸம யம் வாய்த்ததால் அவரையே (என் மனதுக்கு விரோதமா கக்) கணவனாகக்கொண்டேன்.

பெரியசாமி பிள்ளை.—நீ இழிவான குலத்தில் பிறந்தவளா யிருந்தாலும், உன்னை அவன் மணம்புரிய வேண்டுமென்று நீ கட்டாயப்படுத்தி பயமுறுத்தவே, அவன் உன் எண்ணப் பிரகாரம் உன்னை மணம்புரிந்துகொண்டான்போல் காண் கிறது.

மணப்பெண்.—தாங்கள் முற்றிலும் அறியாமுன்னம் கோபிக்க வேண்டாம். என்னை உங்கள் மகன் கெடுத்தது போதா தென்று, நீங்கள் யாவரும் யோசனைசெய்து, ஓரறியாப் பெண்ணை அவள் தாய்தந்தையின் ஸம்மதமில்லாமல் பல

வந்தமாகக் கொண்டுவந்து இரகசியமாகக் கலியாணம் செய்ய முயன்றதை நான் அறியவில்லையென்று நினைக்க வேண்டாம். ஒருத்தி எக்குலத்தில் பிறந்தாலும் அநியாய மாக அவள் கற்பைக் கெடுத்தால் துரைத்தனத்தார் சும்மா விடுவார்கள் என்று எண்ணவேண்டாம். நான் நாதியற்ற வளென்று உங்களுடைய இஷ்டம்போல் பேசுவது அழகா காது. என் கற்பை மீட்டுக்கொள்ளவே நான் அவரை மணம்புரிய இஷ்டங்கொண்டேன். நீங்கள் மீண்டும் என் னைக் கேவலப்படுத்திப் பேசத் துணிந்தால், நடந்தது யாவற்றையும் வீட்டிலிருக்கும் போலீஸ் உத்தியோ கஸ்தரிடம் நான் சொல்லிவிடுவேன் என்பதை அறியுங் கள். உங்களுடைய நல்ல அதிர்ஷ்டத்தால் நீங்கள் நினைத்ததுபோல் நான் இழிகுலத்தில் பிறக்காமல் வேளா ளர் குலத்தில் பிறந்திருக்கிறேன். இழிகுலத்தில் நான் பிறந்திருந்தாலும், நான் இதைச் செய்யப் பின்வாங்கி யிருப்பேன் என்று நினைக்கவேண்டாம். நீங்கள் யாவ ரும் என்னை அங்கீகரித்துக்கொள்ளாவிட்டால், உங்களு டைய இரகசியம் வெளியாகி, யாவரும் உங்களைக் கேவல மாகப் பேசும்படியாக முடியும். வீணில் என் அவமானம் அடையவேண்டும்?

**பெரியசாமி பிள்ளை.**—அம்மா! மருமகளே! நீ எங்களுக்கு பயங்காட்டிவிட்டதால் நாங்கள் பயந்து நடுங்கிவிடுவோம் என்று நினைக்கவேண்டாம். நீ சேலத்திலிருந்தவள் இங்கு எப்படி வந்தாய்? என் மகன் விவாகம் செய்துகொள்ளக் கொண்டுவந்த பெண் எங்கே?

**மணப்பெண்.**—நான் விசாலாக்ஷியம்மாளுக்கு பதிலாக எப்படி இவ்வீட்டுக்குள் வந்தேன் என்று எவருக்கும் சொல்லத் தக்க அவசியமில்லை. அது என்னுடைய ரகசியம்.

அந்த ஸமயத்தில் அவ்வீட்டுக்கு எஜமான் போலீஸ் உடுப்போடு வீட்டிற்குள் தோன்றி, "ஐயா! மணப்பெண் சொல்

வதை முற்றிலும் அடுத்த அறையிலிருந்து கேட்டிருந்தேன். உங்களுடைய தீத்தொழிலை நிறைவேற்ற என்னையே துணையாகக் கொண்டீர்கள். இவ்விரகசியம் வெளியானால் என்னுடைய உத்தியோகம் போய்விடுமே! என் உத்தியோகம் போனால் என் குடும்பத்தை ஆதரிப்பவர் ஆர்? ஆ! ஆ! துன்மார்க்கர்களே! உங்களை எளிதில் தப்பித்துக்கொள்ள விட்டுவிடக்கூடாது. நீங்கள் யாவரும் எங்கள் இன்ஸ்பெக்டர் முன் வரவேண்டும். அந்த துன்மார்க்கர் இருவரும் எங்கே?" என்று வெளியிற் சென்றான்.

**மணப்பெண்.**—என்னைக் கேவலமாகப் பேசியதால் வந்த தீங்கைப் பார்த்துக்கொண்டீர்களா? நீங்கள் என்னை அங்கீகரிப்பதாக வாக்குக்கொடுத்தால் உங்களுக்கு யாதொரு தீங்கும் வராமல் தப்புவித்துவிடுவேன். மறுத்தால் வருவதை அனுபவிக்கவேண்டும்.

பெரியசாமிபிள்ளையும் அவர் மனைவியும் அதிகம் பயந்து "அம்மா! உன்னுடைய இஷ்டப்பிரகாரம் யாவையும் செய்கிறோம். எங்களை இந்தத் தொல்லையிலிருந்து நீக்கிவிடு" என்று கெஞ்சி கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்கள்.

**மணப்பெண்.**—என் பிரிய மாமா! மாமி! நீங்களிருவரும் என்னை அங்கீகரித்துக்கொண்டதாக எழுதிக்கொடுத்தால் அப்படியே செய்கிறேன்.

**வள்ளியம்மை.**—நீங்கள் யோசித்துக்கொண் டிருக்கவேண்டாம். நீங்கள் விரைவில் திருஞானத்தை அழைத்துவாருங்கள்.

**பெரியசாமி பிள்ளை.**—போலீஸ் உத்தியோகஸ்தர் அவர்களை அழைத்து வருவதாகப் போயிருக்கிறாரே! நான் வெளியில் போனால் ஸந்தேகங் கொள்ளாரோ? அவர் எங்கே?

என்று சொல்லும்பொழுது திருஞானமும் அப்பாசாமியும் அறைக்குள் வந்தார்கள்.

**பெரியசாமி பிள்ளை.**—போலீஸ் உத்தியோகஸ்தர் எங்கே?

**திருஞானம்.**—நாங்கள் அவரைப் பார்க்கவில்லை. ஒரு போலீஸ்

சேவகன் அவரைத் தேடிவந்து வெளியில் நின்றுகொண் டிருக்கிறான்.

**பெரியசாமி பிள்ளை.**—இவ்வீட்டிலிருக்கும் போலீஸ் உத்தி யோகஸ்தர் யாவும் அறிந்து நம்மைக் கோபித்துப் போயிருக் கிறார். அவர் வருமுன்னம் இப்பெண் சொல்வதுபோல் நடக்கவேண்டியது கட்டாயமாக இருக்கிறது. ஒன்றும் யோசிக்காமல் ஓர் கடுதாசியும் இங்கிபுட்டி பேனாவும் கொண்டுவா.

திருஞானம் திகைத்து ஒன்றும் தோன்றாமல் நிற்கிற தைக் கண்ட அவன் தந்தை கோபித்து, "உடனே கொண்டுவா" என்று கட்டளையிட்டார். திருஞானம் அப்பாசாமியைப் பார்த் தான். அவன் உடனே சென்று பெரியசாமி பிள்ளை விரும்பிய தைக் கொண்டுவந்து கொடுத்தான். பெரியசாமி பிள்ளை கடுதா சியை வாங்கி அதில் சில வரிகளை எழுதித் தன் கையொப்ப மிட்டு, தன் மனைவியின் கையொப்பமும் பெற்று, திருஞானத் தையும் கையொப்பம் இடச்செய்து, அதை மணப்பெண்ணிடத் தில் கொடுத்து, "இப்பொழுது மனம் குளிர்ந்ததா?" என்று கேட்டார். அவள் அதை வாங்கி, தன்னை அங்கீகரித்ததாக எழு தியிருப்பதை வாசித்துப்பார்த்து, "அந்த அண்ணனை ஒரு ஸாக்ஷி கையொப்பம் வைக்கச் சொல்லுங்கள்" என்றாள். அப் பாசாமியும் கையொப்பம் வைத்தபின், கடுதாசியை வாங்கிக் கொண்டாள். அத்தருணத்தில் போலீஸ் உத்தியோகஸ்தரும் அவரோடு சில போலீஸ் சேவகர்களும் அறைக்குள் வந்ததைக் கண்டு, மணப்பெண் நீங்கலாக மற்றவர்களெல்லாம் பயந்தார்கள்.

**போலீஸ் ஹெட்.**—அடே! அப்பாசாமி! உன்னை நான் சிநேக மென்று எண்ணியதால் என்னுடைய உத்தியோகத்துக் குக் கெடுதலுண்டாக்க யோசித்தாயல்லவா? உன்னுடைய துர்நடத்தைக் கேற்ற தண்டனை செய்வேன். நீங்கள் யாவ ரும் எங்களோடு வரவேண்டும். வெளியில் வாருங்கள்.

**மணப்பெண்.**—ஐயா! நாங்கள் யாவரும் உங்களோடு வரத்

தடையில்லை. முதல் இந்தக் கடிதத்தைப் பாருங்கள் (என்று தன்னிடத்தில் பதனமாக வைத்திருந்த ஒரு கடி தத்தை எடுத்துக் கொடுத்தாள்).

போலீஸ் ஹெட் அதை வாங்கி வாசித்துப் பார்த்து நகைத்து, "காரியம் இப்படியா! எஜமான் கருத்து அதுவானால் எங்களுக்கு ஸந்தோஷமே!" என்று தன்னோடு அழைத்துவந்த சேவகர்களை அழைத்துப்போய் அவர்களிடத்தில் இரகசிய மாகச் சில வார்த்தைகளைச் சொல்லியனுப்பிவிட்டு, மீண்டும் அறைக்குள் வந்து மணப்பெண்ணைப் பார்த்து "அம்மா! என் னால் ஆகவேண்டிய வேலைகளைச் செய்யத் தயாராக இருக் கிறேன்" என்றான்.

மணப்பெண் தன்னிடத்திலிருந்த கடிதத்தைக் கொடுத்து "தாங்கள் இதில் ஓர் சாக்ஷி கையொப்பம் வைக்கவேண்டும்" என்றாள்.

போலீஸ் ஹெட் அக்கடிதத்தை வாங்கி வாசித்து தேகங்குலுங்க நகைத்து, "இக்கடிதத்தில் எழுதியது உங்க ளுக்கு இஷ்டந்தானே. இதிலிருக்கும் கையெழுத்துகள் உங்க ளுடையதா?" என்று யாவரையும் கேட்டார். அவர்கள் ஆமென்றபின் தன்னுடைய கையொப்பம் வைத்துக்கொடுத்து, "வேறென்ன செய்யவேண்டும்?" என்று கேட்டான்.

மணப்பெண்.—இங்கு நடந்ததை ரகசியத்தில் வைத்திருக் கத் தங்களைக் கேட்டுக்கொள்கிறேன். வேறோர் உபகாரத் தையும் தற்காலம் தங்களிடம் எதிர்பார்க்கவில்லை.

போலீஸ் ஹெட்.—அம்மா நீ சொல்லுமுன் யாவும் ரகசிய மாக இருக்கவேண்டுமென்று என் சேவகர்களுக்கு உத்த ரவு செய்து அனுப்பியதோடு, நான் வெளியில் போகும் பொழுது இவ்வீட்டைப் பார்த்துக்கொள்ளும்படி வைத் திருந்த ஒரு சேவகனையும் அனுப்பிவிட்டேன். நான் போய் எஜமானனுக்கு நடந்ததைச் சொல்லவேண்டும் விரைவில் வருகிறேன் (என்று நீங்கினான்).

பெரியசாமி பிள்ளை முதலானவர்கள் "மணப்பெண்ணுக்குக் கடிதம் யார் கொடுத்தார்கள்? அந்தக் கடிதத்தைப் பார்த்தவுடன் போலீஸ் உத்தியோகஸ்தர் பெட்டிப்பாம்புபோல அடங்கிவிட்டாரே" என்று ஒன்றுந் தோன்றாமல் மலைத்து நின்றார்கள்.

---

## 12—ம் அத்தியாயம்

திருச்சிராப்பள்ளி கீழைச் சிந்தாமணியில், காலையில் எழு மணிக்கு, முப்பத்தைந்து வயதுள்ள ஒரு பெண்பிள்ளை, காவேரி யாற்றில் குளித்து, ஈரப்புடவை ஒரு சுற்றுக் கட்டிக்கொண்டு, மற்றத் துணிகளைத் தோளில் போட்டு, ஜலம் நிறைந்த செப்புக் குடத்தை இடுக்கிக்கொண்டு, படிக்கட்டேறி வந்தாள். வந்த பொழுது, தோளில் தொங்கியிருந்த சேலை நழுவிக் காலைத் தடுத்ததால், செப்புக்குடத்தைப் போட்டுக்கொண்டு கீழே விழுந்தாள்.

பின்னால் வந்த ஒரு வாலிபன் ஓடிப் பெண்பிள்ளையைத் தூக்கிவிட்டு, "அம்மா! எங்காகிலும் அடிபட்டதோ?" என்று கேட்டான்.

பெண் பிள்ளை.—படிக்கட்டில் விழுந்திருந்தால் அடிபட்டிருக்கும்; தெய்வாதீனத்தால் படிக்கட்டைத் தாண்டி விழுந்தேன். ஆனதால் எங்கும் அடிபடவில்லை; கால்மட்டும் வலிக்கிறது.

வாலிபன்.—"தாங்கள் இங்கிருங்கள்" என்று செப்புக்குடத்தை எடுத்துக்கொண்டு ஆற்றில் இறங்கி ஜலம் மொண்டு தோளில் தூக்கிக்கொண்டு வந்ததைக் கண்ட பெண்பிள்ளை, "ஐயோ! அப்பா! என்ன வேலை செய்தாய்? குடத்தை என்னிடத்தில் கொடுத்துவிடு" என்றாள்.

வாலிபன்.—"அம்மணி! தாங்கள் விழுந்து காலில் அடிபட்டுக் காலைத் தாங்கித் தாங்கி வைக்கிறீர்கள். நான் உங்கள்

வீடு வரையில் வந்து குடத்தைக் கொடுத்துப் போகிறேன்."

என்று சொல்லி அப்பெண்பிள்ளையைக் கீழைச்சித்திரா மணியிலிருக்கும் அவள் வீட்டுக்குள் கொண்டுபோய் விட்டு குடத்தை ஜலத்தோடு வைத்தான்.

வீட்டுக்குள்ளிருந்தவன் ஓடிவந்து "அம்மா! அம்மா! காலைப் பிடித்துக்கொண்டு வந்தீர்களே! இதென்ன அநியாயம்?" என்றான்.

**பெண்பிள்ளை.**—அப்பா! துரைசாமி! நான் குளித்துச் செப்புக் குடத்தோடு வரும்பொழுது சேலை தடுக்கி விழுந்தேன். இப்பிள்ளையாண்டான் என்னைத் தூக்கிவிட்டு, குடத்தில் மீண்டும் ஜலம் மொண்டுகொண்டு என்னை அழைத்துவந்து விட்டான்.

**துரைசாமி.**—தம்பி! உன் பெயர் என்ன? நீ இன்று என் தாயார் விஷயத்தில் பெரிய உபகாரம் செய்தாய். இது மறக்கத் தக்கதல்ல.

**வாலிபன்.**—ஐயா! என் பெயர் வடிவேலு. இந்த அற்ப காரியத்தைத் தாங்கள் அதிகமாக மதிப்பது நியாயமல்ல.

பெண்பிள்ளை வீட்டுக்குள் சென்று வேறு சேலையை உடுத்தி வந்து, வடிவேலைப் பார்த்து, "அப்பா! நீ இந்த ஊர் தானா? நீ என்ன குலம்?" என்று கேட்டாள்.

**வடிவேலு.**—அம்மணி! நான் வேளாளர் குலத்தில் பிறந்தவன். நான் வசிப்பது சேலம். நாங்கள் ஸ்தல தரிசனைக்கு வந்து ஆண்டாத்தெருவில் தங்கியிருக்கிறோம்.

**பெண்பிள்ளை.**—உன்னோடு உன் தாய் தந்தையும் வந்திருக்கிறார்களா?

**வடிவேலு.**—ஆம்! அம்மணி! நான் தாய்தந்தை தங்கையோடு வந்திருக்கிறேன்.

**பெண்பிள்ளை.**—தம்பி வடிவேலு! நீங்கள் இங்கு வந்து நெடு நாள் ஆயிற்றோ?

**வடிவேலு.**—அம்மணி! நாங்கள் இவ்வூருக்கு வந்து இரண்டு

வாரம் ஆகிறது. இன்னும் சிலநா ளிருந்தே வெளியூருக்குப் போகவேண்டுமென்ற அபிப்பிராயத்தோ டிருக்கிறோம்.

**பெண்பிள்ளை.**—நீ இங்கிருக்கும் பரியந்தம் அடிக்கடி உன் முகத்தைக் காட்டிப் போகவேண்டும்.

அந்த ஸமயத்தில் வீட்டிலிருந்து ஓர் பெண் இரண்டு தட்டில் பலகாரமும் இரண்டு செம்பில் காப்பியும் கொண்டுவந்து வைத்து, "அத்தை! காலையிலிருந்து இது பரியந்தம் ஒன்றும் சாப்பிடாம லிருக்கிறீர்கள். முதலில் பலகாரத்தைச் சாப்பிட்டுப் பின் வார்த்தையாடுங்கள்" என்றாள்.

**பெண்பிள்ளை.**—அம்மா! பார்வதி! உன் புருடனுக்கு தாகத் துக்குக் கொடுக்கவில்லையா?

**பார்வதி.**—அவர் தாங்கள் சாப்பிடாமுன்னம் சாப்பிடுகிற வழக்கம் இல்லையே! தாங்கள் முதலில் சாப்பிடுங்கள்.

**பெண்பிள்ளை.**—உன் புருடனுக்கும் பலகாரம் கொண்டுவா! நாங்கள் மூவரும் சாப்பிடுகிறோம்.

அவள் உடனே வேறொரு தட்டில் பலகாரமும் ஒரு செம்பில் காப்பியும் கொண்டுவந்து வைத்தாள். பெண்பிள்ளை ஒரு தட்டை யெடுத்து வடிவேலுக்கு ஸமீபத்தில் வைத்து, மற்றொரு தட்டை துரைசாமியிடம் வைத்து, இருவரையும் சாப்பிட வேண்டினாள்.

**வடிவேலு.**—அம்மா! தாங்கள் என் விஷயத்தில் தொந்தரை எடுத்துக்கொள்ளவேண்டாம். எனக்கு உத்தரவு கொடுத்தால் நான் போய்வருகிறேன்.

**பெண்பிள்ளை.**—அப்பா! தம்பி! நான் உன் தாயாரைப்போ லிருப்பதால், தாய் கொடுப்பதை மகன் சாப்பிடவேண்டியது கடமையல்லவா (என்று நகைத்தாள்).

**துரைசாமி.**—ஆம்! தம்பி! அம்மாள் கொடுப்பதைத் தடங்கல் சொல்லாது சாப்பிடவேண்டும் (என்று கையைப் பிடித்து

இழுத்து) நாங்களும் வேளாளர் குலமே ; சாப்பிடலாம் (என்று உட்காரவைத்தான்).

பெண்பிள்ளை ஒரு செம்பு காப்பியைக் கொண்டுவந்து துரைசாமியிடத்தில் வைத்து அவனிடத்திலிருக்கும் செம்பை யெடுத்துத் தன் மாமியார் அருகில் வைத்தாள்.

**பெண்பிள்ளை.**—பார்வதி ! அதை ஏன் மாற்றினாய் ? உன் புருடனுக்கு வைத்திருக்கும் காப்பி அதிகம் கறுப்பாயிருக்கிறது. பால் அதிகம் விடவில்லைபோல் காண்கிறதே (என்று தன்னிடத்திலிருக்கும் செம்பை துரைசாமியிடத்தில் வைத்து அவனிடத்திலிருப்பதை எடுத்துக்கொண்டாள்).

**பார்வதி.**—அவருக்குப் பால் அதிகம் என்னத்திற்கு ? தங்களுக்கும் தம்பிக்குமே பால் அதிகம் விட்டுக் கொண்டு வந்தேன். அவருக்கு அந்தச் செம்பைக் கொடுத்துவிடுங்கள்.

**துரைசாமி.**—ஆம் ! அம்மா ! அந்தச் செம்பைக் கொடுத்துவிடுங்கள். நான் சற்று நேரத்திற்குப்பின் பழையது சாப்பிடப் போகிறேன். தாங்கள் சாப்பிடுவது கொஞ்சம் அதுவும் நன்றாயிராமற்போனால் என்ன பிரயோசனத்தை கொடுக்கும் (என்று செம்பை எடுக்கப்போனான்).

**பெண்பிள்ளை.**—அப்பா ! துரைசாமி ! எனக்கென்ன கேடு ! எனக்குப் பாலில்லாமற்போனால் குற்றம் ஒன்றுமில்லை. உன் மகன் சிவகுரு எங்கே? மகளெங்கே? (என்று பார்வதியைப் பார்த்துக் கேட்டாள்).

**பார்வதி.**—அத்தை ! சிவகுரு பழையது சாப்பிட்டுப் பள்ளிக்கூடத்திற்குப் போய்விட்டான். அவனிருந்தால் அவனுக்கு எல்லாவற்றையும் ஊட்டிவிட்டுத் தாங்கள் ஒன்றும் சாப்பிடப்போகிறதில்லை. தங்கள் பேத்தி இன்னம் தூங்குகிறாள்.

காமாக்ஷியம்மாள் தன்னருகில் இருந்த பலகாரத்தை உண்டு காப்பியைக் குடித்தாள்.

துரைசாமி தன் தாயாரை அதிக கவனமாகப் பார்க்கிற

தோடு அவருடைய பெண்டாட்டியும் மிக்க கவனமாகப் பார்க்கிறாள் என்றெண்ணி, பலகாரமுண்டு அவர்களிடத்தில் விடை பெற்று வடிவேலு நீங்கினான்.

சில நாள்களுக்குப் பின் வடிவேலு மாலையில் அவர்கள் வீட்டுக்குப் போனபொழுது, சிலர் வீட்டுக்குள் வார்த்தையாடிக்கொண்டிருப்பதைக் கேட்டு, "நாம் திடீரென்று வீட்டுக்குள் போவது நன்றல்ல. நாம் மற்றொரு ஸமயத்தில் வரலாம்" என்று யோசித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது, "நான் யாவற்றையும் இழந்தேனாயினும், என் நாயகன் என்பேரில் வாங்கிவைத்திருக்கும் நிலத்தை விற்கிறது கூடாத காரியம். துரைசாமி! நீ இதைவிட்டு வேறென்ன சொன்னாலும் கேட்கத் தடையில்லை" என்று பெண்பிள்ளை சொல்லவும், அதற்கு துரைசாமி "அம்மா! நாம் நிலத்தை வைத்திருப்பதால் என்ன பிரயோசனம்? அதில் வரும் மாசூலை விற்றுக் கணக்குப் பார்த்தால், எட்டணா பத்தணாவுக்குமேல் வட்டி கிட்டவில்லை. நாம் நிலத்தை விற்றுவிட்டு அந்தப்பணத்தை வட்டிக்குக் கொடுத்தால், நூற்றுக்கு ஒரு ரூபாவுக்குக் குறையாமல் கிடைக்கும். எனக்குக் கடன் சல்லியம் கொஞ்சம் இருக்கிறது. தங்கள் பேரிலுள்ள நிலங்களை ஈடுகாட்டிப் பத்திரம் எழுதி, தங்களுடைய கையெழுத்தை வாங்கிக்கொடுக்கிறேன் என்று சொன்னதின்மேல், கடன்கொடுத்த ஆஸாமி என் சொல்லை நம்பியிருக்கிறார். தாங்கள் என் கருத்துக்கு உடன்படாமற்போனால், அவர் என்னைத் துன்பத்தில் அழுத்துவார். தாங்கள் இந்த ஸமயத்தில் என்னைக் காப்பாற்றவேண்டும். வேண்டுமானால் வரும் மாசூலைப் பணமாக்கி அந்தக் கடனுக்குக் கொடுத்துக் கடனைத் தீர்த்துவிடலாம். என்னை இந்த ஸமயத்தில் கைவிட்டால் என் கதி என்னவாகுமோ" என்றான். பார்வதியும் "அத்தை! தங்களுடைய குமாரன் நெடுநாளாக இராக்காலத்தில் தூக்கமில்லாமல் இருக்கிறார். நித்திரையில் பயந்து 'அதோ கடன்காரன் வந்துவிட்டான். நான் என்னசெய்வேன்?' என்று பயந்து அலறு

கிறார். நான் எழுப்பி "என்ன உளறுகிறீரே' என்றால், தேக மெல்லாம் வியர்த்து நடுக்கத்தோடு எழுந்து உட்கார்ந்து அழுது கொண்டிருப்பார். நான் என்ன கேட்டபோதிலும் சொல்லுகிற தில்லை. சில வாரமாகத் தனக்குக் கடன் அதிகமிருக்கிறதென் றும் தங்கள் பேரிலிருக்கும் நிலத்தைத்தவிர ஒன்றுமில்லாத தால் அம்மாளிடத்தில் எதையும் சொல்ல பயமாக இருக்கிற தென்றும் சொல்லிக்கொண்டிருக்கிறார்" என்றாள். இங்ஙனம் இவர்கள் வீட்டுக்குள் வார்த்தையாடிக்கொண் டிருப்பதைக் கேட்ட வடிவேலு, "நாம் சென்று இரண்டொரு வார்த்தை சொல்லிவிட்டு வந்துவிடலாம்" என்று வீட்டுக்குள் சென்றான். அவனைக் கண்டவுடன் துரைசாமியும் அவன் மனைவியும் பேசு வதை நிறுத்தி, "தம்பி வருக" என்றார்கள்.

**பெண்பிள்ளை.**—தம்பி! வடிவேலு! நீ வந்துபோய் நெடுநாளா யும் வராமலிருந்த காரணம் என்ன? என் கால் வலிக்கும் பொழுதெல்லாம் உன் நினைவே எனக்கு அதிகம் இருந்தது.

**வடிவேலு.**—அம்மா! நான் வந்துபோய் நெடுநாளாகவில்லையே! தங்களுக்குக் கால்வலி இன்ன மிருக்கிறதா?

**பெண்பிள்ளை.**—ஆம்! தம்பி! இடைவிடாமல் வலித்துக் கொண்டே யிருக்கிறது.

**வடிவேலு.**—தங்களுக்குக் கால்வலி இடைவிடாம லிருப்பதால், என்னை இடைவிடாமல் நினைத்துக்கொண்டே இருக் கிறீர்கள் (என்று நகைத்தான்).

**பெண்பிள்ளை.**—(நகைத்து) ஆம்! தம்பி! இடைவிடாமலே நினைத்துக்கொண்டிருக்கிறேன்.

அந்த ஸமயத்தில் ஒருவர் வீட்டுக்குள் வந்து, "அப்பா துரைசாமி பிள்ளை! நீர் சொல்லும் கெடுவுகளில் ஒன்றிலாகிலும் சொன்னவிதம் செய்யவில்லை. நீர் என்னை அலைக்கழிப்பதில் உமக்கு என்ன பலன் உண்டாகும்? உம்முடைய முடிவான கருத்தைச் சொல்லிவிடும். இக்காலம் நன்மையைச் செய்தவ களுக்குத் தீமையே பதிலாகக் கிடைக்கிறதால், உம்மை நோ

தில் பலன் ஒன்றுமில்லை. நீர் இரண்டாயிரம் கடன் வாங்கி ஐயாயிரத்துக்கு எழுதிக்கொடுத்த பத்திரத்தைக் கோர்ட்டில் போடுவதாக எண்ணியிருந்தவனை வசப்படுத்தி, கொடுத்த முதலுக்கு அற்ப வட்டியைச் சேர்த்து அவன் கடனைத் தீர்த்த தோஷம் என்னை உம்முடைய இஷ்டம்போல் அலையும்படி செய்கிறீர். போதும் உம்முடைய நாணயம். உமக்குக் கொடுக்க இஷ்டமிருந்தால் கொடும். அல்லது நான் எழுதித் தயாராக வைத்திருக்கும் பத்திரத்தில் கையெழுத்து வாங்கிக்கொடும். அப்படி முடியாதாயின் எனக்குத் தெரிந்ததை நான் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று கோபமாகச் சொல்லி, கட்டியிருக்கும் காகிதக்கட்டைக் கீழே வைத்தார்.

**துரைசாமி.**—ஐயா! தாமோதரம் பிள்ளை! தாங்கள் கோபித்துக் கொள்ள வேண்டாம். நான் இரண்டு மூன்று நாளைக்குள் தங்களுடைய எண்ணத்தைப் பூர்த்தியாக்கிவிடுகிறேன். தாங்கள் இந்த ஒருதடவை மட்டும் பாரும்.

**தாமோதரம் பிள்ளை.**—ஐயா! நீர் இட்ட கெடுவெல்லாம் நிறைவேறுமலா போயிற்று? நீர் 'இந்த ஒரு தவணை பாரும்!' என்று எத்தனை ஒருதவணையானது? போதும்! போதும்! இனி ஒரு விநாடியும் காத்திரேன். இதைப் பாரும் (என்று காகிதக்கட்டை அவிழ்த்து ஒரு பெரிய ஃடுதாசியைக் காட்டி இதோ உமதுபேரில் வியாச்சியம் எழுதித் தயாராக இருக்கிறது, இதை இன்று கோர்ட்டில் போடப்போகிறேன். முடிவாக உம்மிடத்தில் சொல்லாமல் செய்வது நன்றல்லவென்று என் எண்ணத்தைச் சொல்ல வந்தேன். இனி என்மேல் குற்றம் சொல்லவேண்டாம் (என்று காகித மூட்டையைக் கட்டிக்கொண்டு போக எழுந்தார்).

தாமோதரம் பிள்ளைக்கும் துரைசாமிக்கும் நடந்த ஸம்பாஷணையைக் கேட்டிருந்த பெண்பிள்ளை, தாமோதரம் பிள்ளையைப் பார்த்து, "ஐயா! என் மகன் கொடுக்கவேண்டிய தொகை எவ்வளவு?" என்று கேட்டாள்.

**தாமோதரம் பிள்ளை.**—"அந்த வயிற்றெரிச்சலை என் கேட்கிறீர்கள்? தங்கள் மகன் இரண்டாயிரம் கடன் வாங்கி ஐயாயிரத்துக்கு எழுதிக்கொடுத்ததைத் தீர்க்க வட்டியும் முதலும் மூவாயிரத்தைந்நூறு. அதற்குமுன் எனக்குக் கொடுக்கவேண்டியது இரண்டாயிரம். வட்டியில் பாக்கி ஐந்நூறு. ஆக ஆறுயிரம் கொடுத்துவிட்டு, இப்பொழுது விழித்துக்கொண்டிருக்கிறேன். என்ன செய்கிறது? இன்னம் கோர்ட்டில் போட ஏறக்குறைய ஐந்நூறு வேண்டும்" என்றான்.

**பெண்பிள்ளை.**—காமாக்ஷி தன் மகனைக் கடனில் முழுகவிட்டு அவனைக் கைவிட்டுவிட்டாள் என்று என்னைப் பலர் நிந்திக்க நான் உயிர்தாங்கி இருப்பேன் என்று நினைக்கவேண்டாம். நீர் துரைசாமியைத் தற்காலம் என்ன செய்தபோதிலும் அவனிடத்திலிருந்து உமக்கு ஒன்றும் கிடைக்காது. நீர் மாசூல் காலத்தில் வந்தால் கொஞ்சங்கொஞ்சமாகக் கொடுத்துத் தீர்த்துவிடுகிறேன்.

**தாமோதரம் பிள்ளை.**—அம்மா! தங்கள் மகன் சொல்லிய கெடுவுகளெல்லாம் பார்த்துப்பார்த்து மோசம்போனேன். இனிமேலும் காலத்தைக் கழித்துக்கொண்டிருக்க முடியாது. தாங்கள் சொல்லுவதுபோல் செய்வது உண்மையாயின், எனக்கு ஆதாரங்காட்டினல், தங்களுடைய இஷ்டப்பிரகாரம் மாசூல் காலத்தில் கொடுப்பதை வாங்கிக்கொள்ளுகிறேன்.

**காமாக்ஷியம்மாள்.**—என்ன ஆதாரம் கொடுக்கவேண்டும் என்கிறீர்?

**தாமோதரம் பிள்ளை.**—தங்கள் மகன் சொல்லியதுபோல் தங்கள் பேரிலுள்ள நிலத்தை யெல்லாம் ஈடுகாட்டி எழுதியிருக்கும் பத்திரத்தில் கையொப்பம் வைத்தாலே போதுமானது.

**காமாக்ஷியம்மாள்.**—என்பேரிலுள்ள நிலத்தை யெல்லாம் என்

ஈடுகாட்ட வேண்டும்? உமக்குக் கொடுக்கவேண்டிய தொகைக்குப் பெறுமதியானதை மட்டும் ஈடுகாட்டி ஏன் பெற்றுக்கொள்ளக்கூடாது?

**தாமோதரம் பிள்ளை.**—அம்மா, நான் நிலத்தை விலைக்கு வாங்க வரவில்லை. எனக்குக் கொடுக்கவேண்டியதற்குப் பெறுமதியானதை நீங்கள் ஈடுகொடுத்து அதை மீட்காமல் விட்டால், நான் நிலத்தோடு போகவேண்டியவன்தானே. நீங்கள் ஈடு அதிகமாகக் கொடுத்திருந்தால் நீங்கள் மீட்டுக் கொள்ளத் துரிதப்படுவீர்கள்.

**வடிவேலு.**—ஈடுகாட்டிய நிலம் குறைந்த விலைக்குப் போனாலும், குறைந்த தொகையை அம்மாளிடத்திலிருந்து வசூலிக்க முடியுமே?

**தாமோதரம் பிள்ளை.**—ஆம்! தம்பி! அதை யோசிக்காமலில்லை. நீ சிறுவனாயிருப்பதால் அனுபவம் போதாது. நிலத்தை மீட்காமல் விட்டால், அப்போதும் சம்மன் செய்யவேண்டும்? சிலவேளை துரைசாமி பிள்ளைக்கு வேறு கடன் ஏற்பட்டுப் போயின் அந்தக் கடனைத் தீர்ப்பது அம்மாள் கடமையாய் விடும். அதனால் மீந்திருக்கும் நிலத்தை வேறொருவன் கைப்பற்றக்கூடும். அப்பொழுது என் கதி என்ன? எல்லா நிலத்தையும் ஈடுகாட்டிவிட்டால், வேறொருவர் என்னிடத்தில் வர நியாயமில்லை. வந்தாலும் எனக்குச் சேரவேண்டிய தொகை போக மீந்ததை எடுத்துக் கொள்ளலாம்.

**காமாக்ஷியம்மாள்.**—நீர் சொல்லுவதும் நியாயமே! நீர் எழுதி வைத்திருக்கிறதாகச் சொன்ன பத்திரத்தை எடும்.

தாமோதரம் பிள்ளை பத்திரத்தை எடுத்துக்கொடுத்தார். காமாக்ஷியம்மாள் பத்திரத்தை வாங்கி வடிவேலிடத்தில் கொடுத்து வாசி யென்றாள். அவன் பத்திரத்தை வாசித்துக் காட்டினான்.

**காமாக்ஷியம்மாள்.**—என்ன ஐயா! என்பேரிலுள்ள இருபது

காணி நிலத்தையும் எழுதிக்கொண்டதோடு, மாசூலையும் நீர் வசூல் செய்கிறதென்று எழுதியிருக்கிறதே!

**தாமோதரம் பிள்ளை.**—அது எழுதவேண்டிய முறையே யல்லாமல் நீங்கள் என்னை வேண்டினாலும் என்னால் மாசூலைப் பாதுகாத்து வசூல் செய்ய முடியாது. எல்லாக் கடினமும் பத்திரத்தில் கண்டாலொழிய என் பணம் விரைவில் என்னிடம் வராது.

**வடிவேலு.**—எழுத்து மூலமாக உமதுபேருக் காக்கிக்கொண்டு பின் நீர் மாறினால், யார் என்ன செய்ய முடியும்? அது நியாயமாகக் காணவில்லை.

**துரைசாமி.**—தம்பி! தாமோதரம் பிள்ளை சொன்ன சொல் தவறார். அவரை நம்பி எதைச் செய்தாலும் செய்யலாம்.

**காமாக்ஷியம்மாள்.**—எல்லாம் வினையின் பிரகாரம் முடியும்.

**என்று** பத்திரத்தை வாங்கிக் கையொப்பம் வைத்துக் கொடுத்தாள். தாமோதரம் பிள்ளை, பத்திரத்தை வாங்கி, துரைசாமியை ஸாக்ஷியாகக் கையொப்பம் வைக்கச் சொன்னார். துரைசாமி கையொப்பம் வைத்து, வடிவேலைப் பார்த்து, "நீயும் ஓர் ஸாக்ஷி கையொப்பம் செய்" என்றான்.

**வடிவேலு.**—அண்ணா! என்னை மன்னியுங்கள். எனக்கு அதில் கையொப்பம் வைக்க இஷ்டமில்லை.

**காமாக்ஷியம்மாள்.**—தம்பி வடிவேலு! நீயும் ஓர் கையொப்பம் வைத்தால், அவர் வேலை பூர்த்தியாகிவிடும்.

**வடிவேலு.**—அம்மா! தங்களுடைய வார்த்தையைத் தட்டியதற்காக என்னைக் கோபிக்கவேண்டாம். நாங்கள் இன்று மாலை இவ்வூரைவிட்டுப் போகிறதால், தங்களிடத்தில் சொல்லிப்போக வந்தேன். எனக்கு விடை கொடுத்தால் நான் போய்வருகிறேன்.

**வடி**வேலு தடைசெய்ததைக் கண்டு, "நான் வேறு யாரிடத்திலாவது கையொப்பம் வாங்கிக் கொடுக்கிறேன்"

என்று துரைசாமி தாமோதரம் பிள்ளையை வெளியிலழைத்துச் சென்றான். அவன் மனைவி தன் மாமியாரின் கட்டளைப்பிரகாரம் வடிவேலுக்குக் காப்பிவைத்துக் கொண்டுவரச் சமையலறைக் குள் சென்றாள். அங்கு ஒருவரும் இல்லாததைக் கண்டு, வடி வேலு, காமாக்ஷியம்மாளைப் பார்த்து, "அம்மணி! எனக்கு இந்தப் பத்திரத்தின் விஷயத்தில் அதிக ஸந்தேகம் உண்டாகிறது. தாங்கள் தங்களுடைய மகனை நம்பி பத்திரத்தில் முன் பின் யோசியாமல் கையொப்பம் செய்துவிட்டீர்கள். பெற்ற பிள்ளை யைத் தள்ளிவிட ஒருவரும் சொல்லார்கள். மாசுஸேத் தங்க ளிடத்தில் விடுவானென்று நான் நினைக்க இடந்தரவில்லை. தாங்களும் தங்களுடைய குமாரனும் தாமோதரம் பிள்ளையிடத் தில் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்" என்றான்.

**காமாக்ஷியம்மாள்.**—ஐயோ தம்பி! நான் என் சக்காளத்திப் பிள்ளையை நம்பியே கையெழுத்து வைத்தேன். அவன் மோசஞ்செய்யவா இந்த எண்ணம் கொண்டிருப்பான்?

**வடிவேலு.**—என்ன சொன்னீர்கள்? தங்களுடைய சக்காளத் திப்பிள்ளையா? தங்களுடைய சொந்த மகனல்லவா?

**காமாக்ஷியம்மாள்.**—ஐயோ! என்னுடைய சொந்த மகன் அல்ல! என் நாயகனும் இறந்தார். என் பிள்ளைகளும் இறந்தார்கள். என் நாயகன் என்னை யறியாமல் என்பேருக்கு வாங்கி வைத்திருந்ததை என்னிடம் சொல்லாமல், என் தாய்வீட் டிலிருந்த என்னை அழைத்துவந்து என்னுடைய கையொப் பத்தை வாங்கிக்கொண்டான். நான் மோசம் போனேன் (என்று துக்கப்பட்டாள்).

**வடிவேலு.**—அம்மணி! அவர் தங்களுடைய மகனென்றே எண்ணியிருந்தேன். தாமோதரம் பிள்ளைக்குக் கொடுக்க வேண்டிய கடனைத் தீர்த்து, தங்களுடைய நிலத்தைத் தாங்கள் வசமாக்கிக்கொள்வதே உத்தமம். விலைக்கிரய மாக எழுதி வாங்கிக்கொள்ளாமல் ஈடுகோட்டி எழுதிக் கொண்டது ஒரு உபகாரந்தான். அந்த நிலத்து விஷயமாக

வும் மற்றும் வேறு விஷயத்திலும் என்னுலியன்றதைச் செய்யத் தடையில்லை. நான் வெளியூரிலிருந்து வந்தவுடன் தங்களை வந்து பார்ப்பேன். நடந்துபோன விஷயத்தைக் குறித்து துக்கப்படவேண்டாம். தாங்கள் முன் சொல்லியதுபோல் முன்செய்த வினையின் பிரகாரம் யாவும் நடைபெறும் (என்று சொல்லியிருந்த தருணத்தில் பார்வதி காப்பி கொண்டுவந்து வடிவேலுக்குக் கொடுத்தாள். அதை வாங்கிச் சாப்பிட்டு, அவன் போய்வருகிறேன் என்று நீங்கினுன்).

வடிவேலு காமாக்ஷியம்மாளிடம் விடைபெற்று வெளியில் வந்து காவேரியாற்று மார்க்கமாகத் திரும்பியபொழுது, ஒருவன் வடிவேலைப் பின்தொடர்ந்து சென்றுன். முதலில் வடிவேலு அவனை கவனிக்காமல், பின் அவன் தன்னிடத்தில் ஏதோ பேச எண்ணங்கொண்டிருக்கிறுன் என்று நினைத்து, "என்னிடத்தில் பேசவேண்டுமோ? என்னை ஏன் பின்தொடர்ந்து வருகிறுய்? நான் நின்றுல் நீயும் நிற்கிறுய். நான் நடந்தால் நீயும் பின்தொடருகிறுயே" என்றுன்.

வந்தவன்.—ஆ-ஆ-ஆ-ஆம். நான் ஒ-ஒ-ஒ உம்மிடத்தில் பே-பே-பேசவே-வே-வேண்டும் (என்று திக்கிச் சொன்னுன்).

வடிவேலு.—என்ன பேசவேண்டும்?

திக்குவாயன்.—ஆ-ஆ-ஆ அந்த ஆ-ஆ-ஆ அம்மா கு-கு-கு கூப்பிட்டு வா-வா-வா வரச்சொன்னுள்.

வடிவேலு.—எந்த அம்மாள் அழைத்துவரச் சொன்னுள்? அந்த அம்மாள் பேர் என்ன?

திக்குவான், பா-பா-பா-பா என்று பேரைச் சொல்லு முன், வடிவேலு "பாலாம்பாளா?" என்று கேட்டான். திக்குவாயன் தலையை அசைத்து "ஆ-ஆ-ஆ-ஆம்" என்றுன்.

வடிவேலு.—பாலம்பாள் எங்கிருக்கிறுள்? இந்த ஊருக்கு எப்பொழுது வந்தாள்?

திக்குவாயன்.—(திக்கித்திக்கி) மனச்சநெல்லூரில் இருக்கிறார்கள் (என்றான்).

வடிவேலு.—நான் மனச்ச நெல்லூருக்கு எப்பொழுதும் போன தில்லை. அதிக தூரமோ?

திக்குவாயன்.—(திக்கித்திக்கி) இல்லை. ஸமீபமே.

"பாலம்பாளைப் பார்க்காமல் போவது நியாயமல்ல. அவளை என்ன செய்து துரத்திவிட்டார்களோ? ஒன்றுந் தெரியவில்லை" என்று பல யோசனை செய்துகொண்டு, திக்குவாயனோடு சென்று, மாலை ஆறுமணிக்கு மனச்ச நெல்லூருக்கருகில் ஓர் தனிவீட்டுக் குள் போனான். திக்குவாயன் ஓடி ஓரறையின் கதவைத் திறந்து "அங்கு போய் உட்காருங்கள். நான் அந்த அம்மாளைக் கூப்பிடு கிறேன்" என்று திக்கித்திக்கிச்சொல்லி, வடிவேலை அறைக் குள் அழைத்துப்போய் உட்காரச்செய்து, அவன் உட்கார்ந்தவுடன் திக்குவாயன் வெளியில் வந்து அவ்வறையின் கதவைத் தடா ரென்று மூடி வெளித்தாழ்ப்பாள் போட்டான்.

வடிவேலு பயந்து எழுந்தோடிக் கதவைத் திறந்து பார்த் தும் கதவை உதைத்தும் ஒன்றும் பிரயோசனப்படாமல், "இது என்ன மோசம்? நம்மை ஏன் இங்கு அழைத்துவந்து மூடினான்? யார் இந்த வேலை செய்யச்சொல்லி யிருப்பார்கள்? அந்தப் படு பாவி திருஞானமும், அப்பாசாமியுமே இதைச் செய்திருப்பார் கள். இந்த வீட்டில் நம்மைக் கொண்டுவந்து அடைத்துவைத்து வேறென்ன செய்ய யோசனையோ? விசாலாக்ஷியை மீண்டும் கொண்டுபோக வேண்டுமென்ற விருப்பமோ? நாம் இவ்வீட்டி லிருந்து நீங்க ஏதாகிலும் மார்க்கம் இருக்கிறதா?" என்று அவ் வறையைப் பார்த்து, இரண்டு சாளரங்கள் இரண்டடி உயரத்தில் இருக்கக்கண்டு அவைகளைத் திறந்துபார்த்தான். ஒன்று மற்றொரு அறைப்பக்கமும் மற்றொன்று வீட்டுக்குப் பின்புறமான தோட் டத்தின் பக்கமும் இருந்தன. இரண்டு சாளரங்களும் ஓரங்குலம் பருமனுள்ள இருப்புக் கம்பி அதிக பலமாகப் பதிக்கப்பட்டிருந் ததைக் கண்டு அதைரியப்பட்டு, என்ன செய்கிறதென்று ஏக்க

முற்று, "ஆ! விசாலாக்ஷி! உன்னை என் உயிரைப்போல் எண்ணியிருந்தேனே! உன்னைக் கொண்டுபோய்த் திருட்டுத்தாலி கட்ட யோசித்திருந்தது தவறியதால், உன்னைக் கைப்பற்றவே இந்த யோசனை செய்திருக்கிறார்கள்! நான் இங்கு அடைபட்டிருந்தால் எவ்விதம் உன்னை அப்பாவிகள் கையிலிருந்து மீட்க முடியும்?" என்று பலவாறு யோசித்து, தன்னைக் கொண்டுவந்தவன் இருக்கிறானென்று கதவின் சந்தில் பார்த்தான். அங்கு இருவர் நின்றுகொண்டு வார்த்தையாடுவதைப் பார்த்து அவர்கள் என்ன பேசுகிறார்களென்று கேட்டுக்கொண்டிருந்தான்.

**முதல் மனிதன்.**—இவனை இதற்குமுன் பார்த்திருக்கிறாயா?

**இரண்டாவது மனிதன்.**—இவனை எப்பொழுதும் பார்த்ததில்லை.

**முதல் மனிதன்.**—பார்க்காமலிருந்தும் எப்படி கண்டுபிடித்து இங்கே கொண்டுவந்தாய்?

**இரண்டாவது மனிதன்.**—ஆயுசு முடிந்ததால் எளிதாக அகப்பட்டான். நான் திக்கித்திக்கி 'அம்மாள் அழைத்துவரச் சொன்னார்கள்' என்றேன். அவன் 'அவள் பேரென்ன?' என்று கேட்டான். நான் எந்த பேரைச் சொல்லுகிறதென்று பா-பா-பா என்றேன். அவன் அதற்குள் 'பாலம்பாளா?' என்று கேட்டான். நான் 'ஆம்' என்றேன். அவன் மிகு ஆத்திரத்தோடு என்பின் வந்து அடைபட்டிருக்கிறான்.

**முதல் மனிதன்.**—இவனை என்ன செய்ய யோசனை?

**இரண்டாவது மனிதன்.**—இவனை என்ன செய்கிறது; வேலை தீர்க்கவேண்டியதே! இன்றிரவு நடுச்சாமத்தில் இத்தோட்டத்திலுள்ள கிணற்றில் கால்களையுங் கைகளையும் கட்டிப் போட வேண்டியதே!

**முதல் மனிதன்.**—இவ்வேலையை முடித்தால் என்ன கொடுப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள்?

**இரண்டாவது மனிதன்.**—பத்து பத்து ரூபாய் கொடுப்பதாகச் சொல்லி யிருக்கிறார்கள்.

**முதல் மனிதன்.**—எல்லா வேலையும் நீயே செய்ய யோசித்திருப்ப தால், என்னை ஏன் அழைத்துவந்தாய் ?

**இரண்டாவது மனிதன்.**—உன்னுடைய உதவியில்லாமல் நான் ஒண்டியாகச் செய்யமுடியுமா ? உன்னை நம்பியே இந்த வேலையை ஒப்புக்கொண்டேன்.

**முதல் மனிதன்.**—நாம் எதற்கும் இன்னும் ஒரு ஆள் சேர்த்துக் கொண்டால் நலமல்லவா ?

**இரண்டாவது மனிதன்.**—இவனைக் கொல்ல விரும்பியவன் நமக் குத் துணையாக இன்னும் இருவரை அனுப்புவதாகச் சொல்லியிருக்கிறான். நாம் இங்கிருப்பதில் பிரயோசன மில்லை ; 'வா' என்று முதல் மனிதனை அழைத்துச் சென்றான்.

அவர்கள் பேசியதையெல்லாம் கேட்டிருந்த வடிவேலு அதைரியம் அதிகரித்து, " ஆ ! ஆ ! நம்முடைய காலம் இவ்வித மாகவா முடியப்போகிறது ? நமக்கு அற்பாயுளாக இருப்பதை அறியாமல் என்னென்னமோ எண்ணி யிருந்தோம். விசாலாக்ஷி தனக்கு விவாகம் வேண்டியதில்லை யென்று சொன்னாளே. அவ ளைத் தகுதியான நாயகனுக்குக் கட்டிக்கொடுத்துக் கண்குளிரப் பார்க்கவேண்டுமென்று எண்ணியிருந்தோம். நம்முடைய எண் ணம் எவ்விதம் போனது ? இவ்வூரைவிட்டு இவ்விரவே போக வேண்டும் என்று எண்ணியிருக்கும் நம்முடைய தாய் தந்தை, நாமில்லாமையைக் குறித்து என்ன நினைப்பார்களோ ? நாம் மரணமடைந்தோமென்று அவர்களுக்கு ஸமாசாரம் கிட்டாதே ! நாம் வெளியில் போயிருந்து வந்தால், 'இன்றெல்லாம் எங்கு போயிருந்தாய் ?' என்று அடிக்கடி விசாலாக்ஷி கேட்பாளே ! நாம் இரண்டு நாள் அவளைப் பார்க்காமலிருந்தால், அவள் அழுது அழுது கண்கள் வீங்கிப்போகுமே. ஆ ! விசாலாக்ஷி ! உன்னைவிட்டுப் பிரியுங்காலம் நேரிட்டது. நான் இறந்தால் நீயும் இறப்பதாகச் சொல்லிக்கொண்டிருந்தாயே ! இப்பொழுது என்ன செய்வாய் ? சில்வேளை நீயும் இறந்தால் நம்முடைய

தாய் தந்தைகள் உயிரோடிருப்பார்களா ? அவர்களும் இறந்து போவார்கள். ஐயையோ ! நான் என்ன செய்வேன் ? என்னால் என்ன செய்ய இருக்கிறது ? என்னால் மூவர் இறப்பார்களே" என்று கண்களில் நீரை தாரைதாரையாக வடியவிட்டு நெடு நேரம் அழுதுகொண்டிருந்தான்.

அப்புறம் எழுந்து "நாம் அனேகருக்கு வினையின் பிரகாரம் யாவும் முடியுமென்று போதித்துவிட்டு நாமே துக்கப் படுவதில் பிரயோசனம் இல்லை. ஆறிலுஞ்சாவு நூறிலுஞ்சாவு. எப்பொழுது பிறந்தோமோ இப்பொழுதல்லது எப்பொழுதாவது இறக்கவேண்டியது கட்டாயமல்லவா ? இன்னம் இரண்டொரு மணிநேரம் உயிரோடிருக்க முடியும். நம்முடைய இறப்பு முன் வருடக்கணக்கைப் பார்த்துக்கொண்டிருந்தது. இப்பொழுது விஞடிக் கணக்கைப் பார்த்துக்கொண்டிருக்கிறது" என்று நகைத்தான். "ஆ! ஆ! மனிதருடைய வாழ்நாள் எவ்வளவு விரைவில் முடிவாகிறது" என்று எண்ணமிட்டுக் கொண்டு அவ்வறையைச் சுற்றி உலாவிக் கொண்டிருந்தவன், "இக்கதவுக்கு உள்தாழ்ப்பாளிருக்கும் நாம் அதை கவனிக்காம லிருந்தோம். அதை மூடிவிட்டால் அப்பாவிகள் உள் நுழைய மார்க்கமில்லை" என்று போய்க் கதவைத் தடவிப்பார்த்து, அதில் பெரிய இருப்புத் தாழ்ப்பாளிருக்க, அதை இழுத்துப் பார்த்தவுடன் அது கையோடு வந்துவிட்டது. அதை முன்னிருந் ததுபோல் கதவில் மாட்டி, தாழ்ப்பாள் சொருகும் இடத்தைப் பார்த்தான். அது மரத்தால் செய்து ஆணி யறைந்திருந்தும் பழுதாய், பலங்கொண்டிழுத்தால் பிடுங்கிக்கொண்டு வந்து விடும்போல் காணப்பட்டதால், தாழ்ப்பாளால் உயிர் தப்பலாம் என்ற எண்ணமும் கெட்டு, இனி என்ன செய்கிறதென்று இருப்புத் தாழ்ப்பாளைக் கையிலெடுத்துக்கொண்டு தோட்டத்துப் பக்கமிருக்கும் சாளரத்தின் நிலையைத் தோண்டிப் பார்த்தான்.

முதலில் பெருங்கஷ்டத்தோடு ஒரு செங்கல்லைப் பேர்த் தான். ஒரு கல்லைப் பேர்த்ததும் தைரிய முண்டாகி மற்றொன்

றும், அதன்பின் ஒன்றும் பேர்த்தான். பேர்த்ததும் சாளரத்தின் நிலை வராமல் பிடிப்பிருக்கும் இடத்தைத் தடவிப்பார்த்துப் பேர்க்கையில் நெடுநேரத்திற்குப் பின் நிலை அசைவு கொடுத் தது. பின் இருப்புக் கம்பிகளைப் பிடித்து ஆட்டி ஆட்டிப் பார்த் துத் தோண்டிக்கொண்டும் நிலையைப் பிடித்து அசைத்துக் கொண்டும் இருக்கும்பொழுது, பலர் வருவதுபோல் அரவங் கேட்டு, மோசம் வந்ததென்று தன் பலமெல்லாங்கொண்டு சாள ரத்தைப் பிடித்து இழுத்துக்கொண்டிருந்தான். அந்த ஸமயத் தில் கதவின் பூட்டைத் திறக்கிற சத்தங் கேட்டது. வடிவேலு அதிகம் பயந்து தன் பலங்கொண்டு சாளரத்தைப் பிடித்திழுத் ததில் சாளரத்தின் நிலைச் சட்டங்கள் ஒடிந்து கம்பிகள் கழன்று வந்தன.

அத்தருணத்தில் இருவர் விளக்கோடு அறைக்குள் செ ன்று "அவன் சாளரத்துக்குள் நுழைகிறான்" என்று கத்திக் கொண்டு சாளரத்துக்கருகில் ஓடினார்கள். ஒருவன் சாளரத்தி லேறிய வடிவேலின் காலைப் பிடித்தான். வடிவேலு தன்னைப் பிடித்தவன் மார்பில் உதைத்து வெளியில் குதித்தான். உதை பட்டவன் பொறிகலங்கி நின்றான். மற்றவன் தன் கையிலிருந்த தடியோடு சாளரத்தில் ஏறிக்குதிக்கும் தருணத்தில் வடிவேலு சாளரத்தின் சட்டத்தில் மாட்டியிருந்த கம்பி யொன்றைப் பிடுங் கித் தன்னைப் பிடிக்கவந்தவன் தலையில் அடித்தான். அவன் அப்பாடா! என்று நிலத்தில் விழுந்தான். வடிவேலு விழுந் தவன் கரத்திலிருந்த இருப்புப்பூண் கட்டிய தடியை எடுத்துக் கொண்டு நின்றான்.

அறைக்குள் போனவர்கள் போட்ட சத்தத்தையும் பின் விழுந்தவன்போட்ட சத்தத்தையும் கேட்ட இருவர் பின்புற மாக ஓடிவந்து ஒருவன் தடியை ஓங்கினான். அதைக்கண்ட வடிவேலு, அவன் கையிலிருந்த தடி விடுபடும்படி அவனை யடி த்து நிலத்தில் சாய்த்து, மற்றொருவன் தன்னை நெருங்கிவருமுன் அவனையும் துரத்தி யடித்து அவனையும் நிலத்தில் படுக்கவை

த்து, "பாவிகளா? இவ்விதத் தொழிலையா கைக்கொண்டிருக்கிறீர்கள்?" என்று நிதானித்துப் பார்த்து, ஒருவருடைய சந்தடியும் இல்லாமையைக் கண்டு தான் இனி அவ்விடத்திலிருப்பது பிரயோசனமில்லையென்று அதிக வேகமாக நடந்து, யாதொரு இடஞ்சலுமில்லாமல் காலை மூன்றுமணிக்கு வீடு வந்து சேர்ந்து கதவைத் தட்டினன்.

சற்று நேரத்திற்கெல்லாம் கதவைத் திறந்து திரிபுரஸுந்தரம்மாள் அவனைப் பார்த்து "தம்பி! இரவெல்லாம் எங்கே போயிருந்தாய்?" என்று கேட்டாள்.

வடிவேலு.—அம்மணி! நான் ஸ்ரீரங்கத்துக்குப் போயிருந்தேன். அங்கு நேரமாய்விட்டது. விசாலாக்ஷியம்மாள் எங்கே?

திரிபுரஸுந்தரம்.—"நீ விசாலாக்ஷியை மறக்கிறதில்லை; அவள் உன்னை மறக்கிறதில்லை. நீ வரவில்லையென்று இரவெல்லாம் அழுதுகொண்டிருந்து இப்பொழுதுதான் தூங்கினுள்" என்றுள்.

"நான் தூங்கவில்லை. அண்ணன் எப்பொழுது வருவார்கள்; வந்தால் கோபித்துக்கொள்ள வேண்டும் என்றல்லவோ விழித்திருக்கிறேன்" என்று சொன்ன விசாலாக்ஷியை அணைத்துக்கொண்டு முகமெல்லாம் முத்தங்கொடுத்து, "இனி விசாலாக்ஷியைப் பார்க்காமல் இறந்துவிடுவோம் என்று எண்ணியிருந்தோம். நாம் உலகி லிருக்கவேண்டிய காலம் இன்னம் முடிவாகாததால் அப்பாவிகளிடம் தப்பி வந்தோம்" என்று தனக்குள் எண்ணி, அவர்களோடு வீட்டுக்குள் சென்றுன்.

திரிபுரஸுந்தரம்.—தம்பி! சாப்பிடவில்லையா?

வடிவேலு.—நான் கோவில் பிரசாதம் வாங்கிச் சாப்பிட்டு வந்தேன். எனக்குப் பசியில்லை. அப்பா தூங்கிவிட்டார்களோ?

திரிபுரஸுந்தரம்.—நீ வரவில்லை என்று நெடுநேரம் விழித்திருந்து, நாளைக் காலையில் சிதம்பரத்துக்குப் போக எண்ணியிருப்பது தடங்கலாகுமே யென்று சொல்லிக்கொண்டே

ஒருமணிக்குப் போய்ப் படுத்துக்கொண்டார். நான் போய் அவரை யெழுப்பி நீ வந்ததைச் சொல்லுகிறேன்.

வடிவேலு.—அப்பாவை எழுப்பவேண்டாம். நான் காலை ஐந்து மணிக்கு அப்பாவை எழுப்புகிறேன். தாங்களும் படுத்துக் கொள்ளுங்கள்.

என்று தான் வழக்கமாகப் படுக்குமிடத்தில் போய் உட்கார்ந்து, "என்னை அடைத்துவைத்துக் கொலைசெய்ய எண்ணியதின் காரணம் தெரியவில்லை. என்ன காரணத்தால் கொலை செய்ய எண்ணினார்களோ ?" என்று நெடுநேரம் யோசித்திருந்து பின் நித்திரை போனான்.

---

## 13—ம் அத்தியாயம்

திருச்சிராப்பள்ளியில் கீழைச் சிந்தாமணியில், காமாக்ஷியம்மாள், தன்பேரிலிருந்த நிலத்தை ஈடுவைத்த சிலவாரங்களுக்குப்பின், சமையலறையில் உட்கார்ந்து, தன்பேரன் சிவகுரு இடத்தில் வார்த்தையாடிக்கொண்டு, மிளகாய் அரைத்து எடுத்து வைத்துவிட்டு, காய்களை நறுக்கிவைத்து, அடுப்பில் வேகும் சாதத்தைப் பதம்பார்த்து நிமிர்ந்தாள்.

அத்தருணத்தில் பார்வதி அறைக்குள் வந்து, "ஐயையோ ! சாதம் வெந்து கூழாய்ப் போனதே" என்று எடுத்து வடிக்கப்போனாள்.

காமாக்ஷியம்மாள்.—என்னடியம்மா ! சாதம் இன்னம் வேகவில்லையே ! அதற்குள் எடுத்து வடிக்கப்போகிறாயே !

பார்வதி.—ஆம் ! ஆம் ! உங்களுக்குச் சாதம் வெந்ததும் வேகாமற்போனதும் தெரியுமா ? உங்களுக்குக் கண்ணிருந்தாலல்லவோ தெரியும் ? ஒருநாள்போல் சாதம் குழைந்து போகிறதென்று என்னையல்லவா அவர் கோபிக்கிறார். உங்களுக்கென்ன போகிறதென்று என்னை அவரிடத்தில் வசை கேட்கவிட இவ்விதம் செய்கிறீர்கள் ! இந்த வெண்

டிக்காயை இவ்வளவு பெரிதாய் நறுக்கினுல் காரம் அதில் நன்ருய் ஏறுமல்லவா ? கத்தரிக்காயை பில்லை பில்லையாக நறுக்கி வைத்துவிட்டீர்கள். இவ்விதம் நறுக்கியோ பருப்போடு குழம்பு செய்வார்கள் ?

**காமாக்ஷியம்மாள்.**—அம்மா ! கத்தரிக்காய் புளிக்குழம்பு செய்ய வேண்டுமென்று நீ சொல்லியதால் பில்லையாக நறுக்கினேன்.

**பார்வதி.**—அவர் புளிக்குழம்பு வேண்டாமென்று சொன்னது உங்கள் காதில் விழாமலா போய்விட்டது ?

**காமாக்ஷியம்மாள்.**—அடியம்மா ! என் காதில் விழுந்தால் நான் என் அவ்விதம் நறுக்கப்போகிறேன் ?

அதைக் கேட்டு, பார்வதி முறுமுறுத்துக்கொண்டு, காமாக்ஷியம்மாள் அரைத்துவைத்திருந்த மிளகாயை மீண்டும் அம்மியி லெடுத்துப்போட்டு "இந்த இழவு வீட்டில் எல்லாம் நானே செய்து முடிக்கவேண்டியதா யிருக்கிறது. மிளகாய் ஒன்றிரண்டுமாகக் கடனிழவுக்கு நகர்த்திக் குழம்பில் போட்டால் அது பொங்கிக் குட்டிச்சுவராய்ப் போகிறது" என்று அம்மிக் குழவியை இரண்டு மூன்றுதரம் ஓட்டி வழித்து வைக்கும்பொழுது, அவள் நாயகன் கூடத்திலிருந்து 'பார்வதி!' என்று கூப்பிட்டான். அவள் 'ஏன்' என்று ஓடினுள்.

**துரைசாமி.**—நான் கூப்பிட்டு எத்தனைநேரம் ஆனது ? ஏனென்று கேட்காமல் சமையலறையில் என்ன செய்துகொண்டிருந் தாய் ?

**பார்வதி.**—எனக்குச் சமையலறையில் வேலை செய்ய விடாமல் என்னைச் சிங்காரித்துக் கட்டிலில் வைத்துக்கொண் டிருக்கிறீர்களோ ? போதும் ! போதும் ! இவ்வளவு உருக்கம் உங்களுக்கிருப்பதே போதும் ! எல்லாம் கடனிழவுக்குச் செய்வதால் எல்லாம் நானே செய்துகொள்ளவேண்டியதா யிருக்கிறது. மிளகாய் ஒன்றிரண்டுமாக நகர்த்தியும் காய்கள் தடிதடியாக நறுக்கியும் கிடந்தது. அதை நான் பார்த்துச்

செய்யாமற்போனால், பின்பு என் அக்காளா! ஆத்தாளா! உங்களுக்கு வந்து ஆக்கிப்போடுவாள். ஏன் அழைத்தீர்கள்? சொல்லுங்கள்.

**துரைசாமி.**—நீ சொல்வது வேடிக்கையாக இருக்கிறது. நான் அனேக முறை உன்னை அடுப்பங்கரைக்குப் போகவேண்டாம் என்று சொல்லியும், என் வார்த்தையைக் கேளாமல் உன் தேகத்தைக் கெடுத்துக்கொள்ளுகிறாய். எல்லாம் அந்தம்மாள் செய்வார்கள். இதைக் கொண்டுபோய் வை (என்று ஒருசீப்பு வாழைப்பழத்தைக் கையில் கொடுத்தான்).

**பார்வதி.**—(பழத்தை வாங்கிக்கொண்டு) ஆம்! ஆம்! நீங்கள் சொல்வதுபோல் அடுப்பங்கரைக்குப் போகாமலிருந்தால், தாங்கள் சாப்பிடும்பொழுது, அது நன்றாயில்லை இது நன்றாயில்லை யென்று என்னையல்லவோ கோபிக்கிறீர்கள். அந்தம்மாள் அதையறிந்து ஒன்றையும் கவனிக்காமல் கட்டிழவுக்குச் செய்துபோடுகிறாள். நான் அந்தம்மாளிடத்தில் என்ன சொன்னபோதிலும் கவனிக்கிறதில்லையே. நீங்களே அந்தம்மாள் செய்து வைத்திருக்கிற வேலையை வந்துபாருங்கள் (என்று தன் நாயகன் கையைப் பிடித்துவந்து சமையலறையில் விட்டு) பார்த்துக் கொள்ளுங்கள். இந்த மிளகாயைப் பாருங்கள். இது ஒன்றிரண்டுமாக இருந்ததை நான் மீண்டும் அரைக்க நேரிட்டது. தாங்கள் கத்தரிக்காய் புளிக்குழம்பு வைக்கச் சொன்னதைக் கேட்டிருந்தும் சிறு துண்டாக நறுக்கிவிட்டார்கள். இந்த வெண்டிக்காயை இவ்வளவு சிறியதாய் நறுக்கினால் வெந்தபின் கைக்கு அகப்படுமா? இவைகளைப் பார்த்து நான் உங்களுக்குச் சொன்னால் சுறுக்கென்று கோபம் வந்துவிடுகிறது.

**காமாக்ஷியம்மாள்.**—நான் புளிக்குழம்புக் கென்றே கத்தரிக்காயை நறுக்கிவைத்திருந்ததைப் பார்த்து, 'கத்தரிக்காய் புளிக்குழம்பு வேண்டாமென்றார்கள். பருப்போடு குழம்பு

செய்யவேண்டும்' என்ருய். வெண்டிக்காய் பெரிதாய் நறுக்கிவிட்டேன் என்று சொன்னதால், சிறிதாய் நறுக்கினேன். இப்பொழுது வேறுவிதம் சொன்னுல் நான் என்ன செய்வேன்.

**பார்வதி.**—பார்த்துக் கொண்டீர்களா ! நான் என்ன சொன்ன போதிலும், ஒன்றுக்கிரண்டாகச் சொல்லி என்மேல் குற்றம் ஏற்படுத்திவிடுகிருர்கள்.

**சிவகுரு.**—அப்பா ! அம்மா கத்திரிக்காயும் பருப்பும் போட்டுக் குழம்பு செய்ய வேண்டுமென்ருர்கள் (என்று தன் தகப்பனைக் கட்டிப் பிடித்துக்கொண்டு) அப்பா ! ஆயாள் அழுது கொண்டிருக்கிருர்கள். நீங்கள் ஆயாளை அழவேண்டாம் என்று சொல்லுங்கள்.

**பார்வதி.**—(சிறுவனை ஒருபக்கம் இழுத்து விட்டு) நேற்றுக் கடலையடை சுட்டபொழுது நெய்யை அதிகம் ஊற்றிச் சுட்டுக்கொண்டிருந்தார்கள். நான் ' அவருக்குமட்டும் ஒன்றிரண்டு நெய்யில் சுட்டு மற்றதை எண்ணெயில் சுடக்கூடாதா ?' என்றதற்கு எவ்வளவு கோபம் வந்தது ? எனக்குப் பார்க்க பயமாக இருந்தது.

**துரைசாமி.**—அம்மா ! நீ பார்வதி சொல்வதுபோல் ஏன் செய்யக்கூடாது ?

**காமாக்ஷியம்மாள்.**—அம்மா ! சில நாள்களுக்குமுன் இரண்டு நெய்யில் சுட்டு மற்றதை எண்ணெயில் சுட்டபொழுது, " அவர்தானு மனிதர் ? நாமெல்லாம் மாடா ? " என்று சொன்னதால், நேற்று முற்றிலும் நெய்யில் சுட்டேன்.

**பார்வதி.**—ஏதேது ! இந்த வீட்டிலிருந்து குடித்தனம் பண்ண என்னுல் முடியாது. என்னை என் தாய்வீட்டிற்கு அனுப்பி விட்டு மறுவேலை பாருங்கள் (என்றழுதாள்).

**துரைசாமி.**—அம்மா ! நீ பார்வதி சொல்வதுபோல் ஏன் செய்யக் கூடாது. நான் புளிக்குழம்பு செய்யவேண்டுமென்றது உன் காதில் விழாமலா போனது ? பார்வதி ஒன்றைச்

சொல்ல நீ வேறொன்றைச் செய்வதை யோசித்தால், ஏதோ வேறெண்ணத்தைக்கொண்டு இவ்விதம் செய்கிறதுபோல் காண்கிறது. எல்லாவற்றையும் நெய்யில் செய்கிறதால் மாதம் காற்படி நெய் போதாமல் போகிறது. அதிக வரும்படியுள்ளவர்கள் வீட்டில்கூட அடை எண்ணெயில் சுடுகிறார்களே! அதைப் பார்த்தாவது நமக்கு புத்தி வரவேண்டாமா? உங்களுடைய மனதில் ஏதாகிலும் நினைத்திருந்தால், சொல்லிவிடுகிறது உத்தமம். எட்டிக்குப் போட்டியாகச் செய்துகொண்டிருப்பதில் பலன் ஒன்றுமில்லை (என்று கோபமாகச் சொன்னான்).

**காமாக்ஷியம்மாள்.**—அப்பா! என் மனதில் என்ன இருக்கிறது? என் வயிற்றை வளர்க்க உங்கள் மனம் ஸந்தோஷமடைய என்ன செய்தபோதிலும், அது உன் மனைவிக்குக் குற்றமாகவே காண்கிறது. எல்லாம் என் வினைப்பயனேயன்றி ஒருவரை நோவதில் பலன் ஒன்றுமில்லை.

**பார்வதி.**—இதைப் பாருங்கள். காலையில் மீந்துபோன சாதம் இவ்வளவிருக்கும் பொழுதும், அரிசி அதிகம் போட்டு வடித்திருக்கிறாளே. இதைக் கேட்டால் பெருஞ்சண்டை உண்டாகுமென்று பேசாமலிருக்கவேண்டியதாயிருக்கிறது.

**காமாக்ஷியம்மாள்.**—அம்மா! பார்வதி! காலையில் வடித்த சாதம் இருக்கிறது. இப்பொழுது எவ்வளவு அரிசி போட்டு வடிக்கிறதென்று கேட்டபொழுது, நீதானே அரைப்படி போட்டு வடிக்கச் சொன்னாய். இப்பொழுது நான் என்னுடைய இஷ்டம்போல் செய்ததாகச் சொல்லுகிறாயே: இது தருமமா?

**பார்வதி.**—ஆம்! அம்மா! நான் சொல்வதெல்லாம் அதருமமே! நீதான் தருமமே உருவாகக் கொண்டவள். அவரும் பார்த்துக்கொண்டு நிற்கிறாரே. நான் யாரிடத்தில் சென்று என் குறையைச் சொல்லிக்கொள்வேன்? (என்றழுதாள்).



தம்பி! உன் தங்கை சொல்வதைக் கேட்டாயா?

(139-ம் பக்கம் பார்க்க).

**துரைசாமி.**—எனக்கெதிரிலேயே இவ்விதம் பேசினால், நான் இல்லாதபொழுது என்னென்ன பேசுவாய்? வீணாய்த் துன்பத்தை உண்டுபண்ணிக்கொண்டு இங்கிருக்கவேண்டாம். நீ கொண்டிருக்கும் எண்ணம்போல் போய்விடலாம்.

**காமாக்ஷியம்மாள்.**—அப்பா! துரைசாமி! நீ இவ்விதம் சொல்லுவாயென்று நான் கனவிலும் நினைக்கவில்லை.

**துரைசாமி.**—நீயும் இவ்விதம் என் மனைவியை நடத்துவாயென்று நானும் கனவிலும் நினைக்கவில்லை.

**காமாக்ஷியம்மாள்.**—என் தாய்வீட்டிலிருந்தவளை இவ்விதம் நடத்தவா எண்ணங்கொண்டு அழைத்துவந்தாய்?

**துரைசாமி.**—நீ உன் தாய்வீட்டிலிருந்து வந்தபொழுது இவ்விதமாகவா என் மனைவியை நடத்தினாய்?

**காமாக்ஷியம்மாள்.**—உன் மனைவி நோய் என்று படுத்துக்கொண்டபொழுது, நானிருந்தும் உன்னையும் உன் பிள்ளைகளையும் சாப்பாட்டுக்குக் கஷ்டப்பட விடக்கூடாதென்று வீட்டு வேலையை நான் பார்த்ததால், அவ்வேலையை முற்றிலும் புழுக்கையைப்போல் என்னைச் செய்யவிட்டீர்கள். அப்படியிருந்தும் நான் அதை கவனிக்காமல் நம்முடைய பிள்ளைக்குத்தானே நாம் வேலை செய்கிறோம் என்று எண்ணியிருக்கும் என்னை மனம் நோகச் செய்வது நன்றல்ல.

**பார்வதி.**—நீ உன் தாய்வீட்டிலிருக்கும்பொழுது புழுக்கை வேலை செய்யாமல் என்ன செய்துகொண்டிருந்தாய்? இங்கு வந்தபின் எல்லாப் பெருமையும் வந்துவிட்டதோ? இங்கிருந்து உனக்குப் புழுக்கைவேலை செய்யத்தள்ளாது. போ! போ! உன் தாய்வீடு போனால் சங்கோசமின்றிப் புழுக்கை வேலை செய்யலாம்.

**துரைசாமி.**—ஆம்! இங்கிருந்தால் உன்னைப் புழுக்கையென்றே மதிப்பார்கள். என் வீணில் அவமானத்தோடு இங்கிருக்க வேண்டும்? உன் தாய் வீடு போனால், பெருமையோடிருக்கலாம். நீ போய்விடுவதே உத்தமம்.

காமாக்ஷியம்மாள்.—உன்னுடைய இஷ்டம் அதுவானால் அது போலவே செய்வேன். என்னை எப்பொழுது அனுப்பு கிறாய்?

துரைசாமி.—எப்பொழுது என்ப தென்ன? அதற்காக நல்ல நாள் பார்க்கவேண்டு மென்ற அவசிய மில்லை. இப் பொழுதே போகலாம்.

காமாக்ஷியம்மாள்.—என்பேரி லிருக்கும் நிலத்தை அடைமா னம் வைத்திருப்பதைத் திருப்பிவிட்டாயா? அதைத் திருப் பிக்கொடுத்தால் இப்பொழுதே போய்விடுகிறேன்.

துரைசாமி.—என்ன சொன்னாய்? உன் பேரிலிருக்கும் நிலம் இன்னும் உன் கைக்கு வருமென்றோ நினைத்திருக்கிறாய்? அந்தக் கனவு காணவேண்டாம். அந்த முழுமுண்டம் ஒன் றையும் கவனியாமல் உன் பேருக்கு எழுதிவைத்திருந் ததை அப்படியே வைத்திருப்பேன் என்றோ எண்ணினாய்? போ! போ! பைத்தியக்காரி. பெற்ற மகனுக்கில்லாத சொந் தம், நாலு நாள் பெண்டாட்டியா யிருந்தவளுக்கு நிலம் சொந்தமாய்விடுமோ? எனக்கு உன் இரகசியம் தெரியா தென்றோ நினைத்திருக்கிறாய்? அடி! படுபாவி! உன்னா லல்லவோ என் தந்தை இறந்தார்? உன்னை ஒரு விநாடி யும் இவ்வீட்டில் வைத்திருப்பது அடுக்காது. உலக வழக் கம்போல் அறுப்புக்கூலி உனக்குக் கிடைக்க வேண்டுமே யொழிய வேறென்ன உனக்குக் கிடைக்கும்? நீ உன் தாய்வீட்டுக்குப் போகும்பொழுது கொண்டுபோன நகை கள் அறுப்புக்கூலிக்கு அதிகம் கிடைத்துவிட்டது. இன் னும் அதைவிட வேறு கிடைக்கும் என்று எண்ணவேண் டாம். உன் மகன் உயிரோடிருந்தால் சிலவேளை பங்குக்கு வரலாம். அந்த எண்ணங் கொள்ளாமலிருக்க தெய்வம் உன் வாயில் மண்ணை அள்ளிப் போட்டுவிட்டது. போ! போ! இப்பொழுதே போய்விடு (என்று கடுகடுத்துச் சொன்னான்).

பார்வதி.—அந்த நிலம் உன்னை எப்படிச் சேருமோ அதைப் பார்க்கலாமென்றே எண்ணியிருக்கிறேன் (என்று நகைத்தாள்).

துரைசாமியும் அவன் மனைவியும் மாறிமாறிச் சொல்லும் வசைச்சொல்லைக் காமாக்ஷியம்மாள் கேட்டுக் கண்களில் தாரைதாரையாக நீரை வடியவிட்டு, தன்னிரண்டு காதுகளையும் கைகளால் மூடிக்கொண்டு, "ஆ! கடவுளே! என் வினையால் இவர்களிடம் அனுபவிக்கவேண்டியது இவ்வளவுதானா, இன்னம் இருக்கிறதா?" என்று தனக்குள் நொந்து, "அப்பா! துரைசாமி, இதைவிட என்ன சொல்லப்போகிறாய்? நான் என் தாய் வீட்டிலிருந்த வளை அழைத்துவந்து இவ்விதம் நீயும் உன் மனைவியும் பேசித் துரத்தவா எண்ணங்கொண்டிருந்தீர்கள்? என்பேரி லிருந்த நிலத்தை அபகரிக்கத் தந்திரம் செய்து பெற்றுக்கொண்டதோடு, நான் அற்பமாக வைத்திருந்த நகைகளையும் பிடுங்கிக்கொண்டு, என்னைப் போய்விடச் சொல்லுகிறாயே. உனக்கு தருமமா? என் கையிலிருந்த நகைகளையும் கொடுத்துவிட்டு, என் தந்தை தாய் முகத்தில் எவ்விதம் போய் விழிப்பேன்? நீ தெய்வத்திற்கு பயப்படாமற் போனாலும் உலகத்துக்காகிலும் பயப்படக்கூடாதா? என் கையில் மடியில் ஒரு காசு மில்லாமல் நான் எப்படிப் போகமுடியும்? அப்பா வேண்டாம்! வேண்டாம்! யாவரும் இறந்துபோக வேண்டியவர்களே! இறந்துபோனால், ஒருவரை அபகரித்துச் சேர்த்துக்கொண்ட சொத்துக்களை அவர்களோடு போட்டுக் கொளுத்தார்கள். அதை யோசித்தாவது என் வழிச்செலவுக்கு ஏதாகிலும் கொடு. நான் இப்பொழுதே போய்விடுகிறேன். நீயும் உன் மனைவியும் இந்த வீட்டில் க்ஷேமமாக இருங்கள். என்னுடைய துர்நடத்தையை என்னோடு கொண்டுபோய்விடுகிறேன். இந்த உபகாரத்தைச் செய்து என்னை அனுப்பிவிடு" (என்றழுதாள்).

தன் தாய் தந்தை காமாக்ஷியம்மாளைப் பேசியது இன்னதென்றறியாத சிவகுரு, காமாக்ஷியம்மாளைப் பிடித்துக்கொண்டு

“ஆயா! அழவேண்டாம்! அழவேண்டாம். நாம் கூடத்துக்குப் போகலாம் வா” என்று காமாக்ஷியம்மாள் கையைப் பற்றி இழுத்தான். துரைசாமி அவன் கன்னத்தில் அறைந்து அவனை யிழுத்து தூரத்தில் விட்டு, “இங்கு வந்தால் கொன்றுவிடுவேன் போ” என்று சொல்லிக் காமாக்ஷியம்மாளைப் பார்த்து, “நாங்கள் இந்த வீட்டில் க்ஷேமமாக இராமற்போனால் போகிறது. நீ வாழைப்பழத்தில் ஊசியைச் சொருகுதல்போல் கடினமான வசைச்சொல்லை உள்ளடக்கிப் பேசுவதை அறிந்தேன். நான் ஒரு காசும் கொடேன். நீ போகிறாயா இல்லையா!” என்று கன்னத்தி லறைந்து, வெளியில் தள்ளி உதைக்கக் காலைத் தூக்கினான்.

அந்த ஸமயத்தில் ஒருவன் ஓடிவந்து துரைசாமியைப் பிடித்துத் தள்ளினான். துரைசாமி தட்டுக்கெட்டுத் தடுமாறிக் கீழ் விழுந்தான்.

வந்தவன்.—அம்மணி! இந்தப் படுபாவி உங்களை மோசஞ் செய்துவிடுவானென்று நான் எண்ணியதுபோல் முதலில் உங்களை அடிக்க ஆரம்பித்தான். பின் ஒன்றின்பின் ஒன்றாக எல்லாம் வரும். முடிவாக உங்களை இவ்வீட்டை விட்டுப் போகச் சொல்லுவான் என்பது உண்மை.

கீழ்விழுந்த துரைசாமி எழுந்து, “என்னைப் பிடித்துத் தள்ள நீ யாரடா?” என்று முகத்தில் குத்தினான். வந்தவன் அக்குத்தைத் தட்டிவிட்டு, “அடே துன்மார்க்கா! தாயை அடிக்கத் தலைப்பட்ட தறுதலையே! ஜாக்கிரதையாயிரு. உன் கையை என்னிடத்தில் காட்டவேண்டாம். வீணாக என்னிடத்தில் உதைபடுவாய், போய்விடு” என்று மீண்டும் பிடித்துத் தள்ளினான்.

துரைசாமிக்குக் கோபம் அதிகரித்து ஸமீபத்தில் கிடந்த கட்டையொன்றை எடுத்துவந்து அவனை அடிக்க ஓங்கினான். அவன், குழந்தை கையிலிருப்பதைப் பிடுங்கி எறிவதுபோல், துரைசாமி கையிலிருந்த கட்டையைப் பிடுங்கி எறிந்துவிட்டு, “போய் உட்காரு என்று தூக்கிக் கீழேபோட்டு, காமாக்ஷியம்மா

ளின் கையைப் பற்றி, "அம்மணி! தாங்கள் இனி இவ்வீட்டி லிருப்பது நன்மையைத் தருமென்று நான் நினைக்கவில்லை. என் னேடு வாருங்கள்" என்று வெளியில் அழைத்துச்சென்முன்.

**காமாக்ஷியம்மாள்.**—தம்பி! வடிவேலு! நீ இந்த ஸமயத்தில் வராமற்போனால் என்னை அடித்துக் கொன்றிருப்பான். நான் இனிமேல் இவ்வீட்டி லிருப்பது முடியாத காரியம் (என்று வடிவேலோடு வெளியில் சென்முள்).

**வடிவேலு.**—அம்மணி! நாங்கள் அநேக விடங்களுக்குச் சென்று இன்று காலை இவ்விடம் வந்தோம். தங்களைப் பார்த்து நெடுநாளாயிற்றே என்று தங்களைப் பார்க்க வந்தேன். ஆனால் தங்களை இந்த நிலையில் பார்ப்பேன் என்று நினைக்க வில்லை (என்று கண்கலங்கினுன்).

**காமாக்ஷியம்மாள்.**—என்ன செய்வேன் தம்பி! என்பேரி லிருக் கும் நிலத்தை அபகரிக்கும் பரியந்தம் அவனும் அவன் மனைவியும் என்னை தெய்வம்போ லெண்ணி நடத்திவந் தார்கள். நான் அவர்கள் அந்தரங்கக் கருத்தை அறியாமல் என்னிடத்திலிருந்ததை யெல்லாம் கொடுத்துவிட்டேன். பின் அவன் மனைவி தனக்கு தேக அஸௌக்கியமென்று படுத்துக்கொண்டாள். வீட்டில் பெண்பிள்ளை நோயா யிருந்து நாம் சும்மா இருப்பது சரியல்லவென்று அவர்க ளிருவருக்கும் சமையல் செய்து போட்டுக்கொண்டிருந் தேன். நெடுநாள் அவள் வேலையொன்றும் செய்யாம லிருந்து, பின் நான் செய்யும் வேலைகளில் குற்றங்கண்டு பிடிப்பதும் முறுமுறுப்பதுமாகி, பின் நாளடைவில் வெளிப் படையாகக் கோபிக்கவும் ஆரம்பித்தாள். துரைசாமியும் அவள் சொல்வதைக் கேட்டு அவளுக்குச் சார்பாகவே பேசிவந்தான். முடிவாக இன்று என்னை அவமான மாகப் பேசியும் அடித்தும் போகச்சொல்லித் துரத்தி யும் விட்டான். நான் எவ்விதம் என் தாய் தந்தையைப் போய்ப் பார்ப்பேன் (என்றழுதாள்).

வடிவேலு.—*அம்மணி! தாங்கள் ஒன்றுக்கும் கவலைகொள்ள வேண்டாம். நான் தங்களை என் தாயைப்போல் எண்ணி யிருக்கிறேன். தாங்கள் எங்கும் போகாமல் என்னோடிருக்க லாம். தங்களுடைய பெயரிலிருக்கும் நிலத்தை ஈடுவைத் திருப்பதை இன்றே தீர்த்துவிடக்கூடும். ஆனால் பார்க் கிறவர்கள் நான் அந்த நிலத்தைக் கைப்பற்றப் பார்க் கிறேன் என்று நினைக்க இடந்தரும். ஆதலால் அது விஷயத்தைக் குறித்துப் பின் பார்க்கலாம். தாங்கள் எங்கும் போகாமல் எங்களுடைய வீட்டுக்கு வரவேண்டும்.*

காமாக்ஷியம்மாள்.—*தம்பி! என்னைக் கட்டாயப்படுத்தவேண் டாம். நான் என் தாய்வீடு போய்ச் சேருகிறேன். எனக்கு அற்பப் பொருளுதவி செய்துவிட்டால் அதுவே போது மானது.*

வடிவேலு.—*தங்களுடைய தாய்வீடு எங்கிருக்கிறது?*

காமாக்ஷியம்மாள்.—*என் தாய்வீடு திண்டுக்கல்லில் இருக் கிறது.*

வடிவேலு.—*என்ன சொன்னீர்கள்! திண்டுக்கல்லா! நானும் என் தாய் தந்தையோடு சில தினத்தில் மதுரைக்குப் போக யோசித்திருப்பதால், தங்களை திண்டுக்கல்லில் விட்டுப்போவது எங்களுக்குக் கஷ்டமல்ல (என்று தன்னி ருப்பிடத்திற்கு அழைத்துச்சென்றான்).*

---

## 14—ம் அத்தியாயம்

*வடிவேலு காமாக்ஷியம்மாளை திண்டுக்கல்லில் கொண்டு போய்விடுகிறேனென்றதைக் கேட்டுத் தனக்கு நல்ல துணை கிடைத்தது என்றெண்ணினும், தான் தன் தாய்தந்தை வீட்டி லிருந்து கொண்டுவந்ததையெல்லாம் கொடுத்துவிட்டு வெறுங் கையோடு போனால் என்ன சொல்லுவார்களென்று வடிவேலிடம் சொல்லி துக்கப்பட்டாள்.*

**வடிவேலு.**—*அம்மணி! தங்கள்பேரில் நிலமிருப்பதாகத் தங்களுடைய தாய்தந்தைகள் அறிவார்களா?*

**காமாக்ஷியம்மாள்.**—*அதை ஒருவரும் அறியார்கள். என்னைத் திருச்சிராப்பள்ளிக்கு அழைத்துவரும் பரியந்தம் சொல்லாமல் துரைசாமி அந்த ஸங்கதியை இரகசியமாக வைத்திருந்தான். நான் அவனை "என்பேரில் நிலமிருக்கிறதென்று ஏன் இதுகாலம் சொல்லவில்லை?" என்று கேட்டபொழுது, அவன் "அது எனக்குத் தெரியாமலிருந்தது. என் தந்தையின் பெட்டியிலிருந்த கடுதாசிகளையெல்லாம் எடுத்துப் பார்க்க நேரிட்டபொழுது பத்திரம் ஒன்று அகப்பட்டதால், உங்களிடம் ஓடிவந்தேன். அதை திண்டுக்கல்லில் இருப்போருக்குச் சொல்ல இஷ்டப்படாமல் தங்களுடைய பேரிலிருக்கும் நிலத்தைத் தங்களுக்கு ஒப்படைக்கத் தங்களை அழைத்து வந்தேன்" என்று சொன்னான். அவன் சொல்வதைக் கேட்டு அவனிடத்தில் யாதொரு கள்ள எண்ணமும் இல்லை யென்று அவனை என் சொந்த மகனைப்போல எண்ணி, என் கையில் மடியிலுள்ளவைகளை யெல்லாம் அவனுக்கும் அவனுடைய மனைவிக்கும் கொடுத்துவிட்டேன் (என்று துக்கப்பட்டாள்).*

**வடிவேலு.**—*அம்மணி! தங்களுக்குக் குழந்தை ஒன்றும் பிறக்கவில்லையா?*

**காமாக்ஷியம்மாள்.**—*தம்பி! மகனும் மகளும் பிறந்திருந்தார்கள். அவர்களுக்கு ஞானசம்பந்தம் என்றும் ஆனந்தவல்லி என்றும் பெயரிட்டு வளர்த்துவந்தோம். அவர்களிருவரும் என் பாட்டியாரை விநாடியும் பிரிந்திருக்கார்கள். அவளோடு என் பிள்ளைகளும் வாந்திபேதியில் இறந்தார்கள். என் மகன் உயிரோடிருந்தால் உன் வயதே அவனுக்கும் இருக்கும். அவன் இறக்காமல் உயிரோடிருந்து எங்காகிலும் போயிருந்து, நீ என் கண்முன் எதிர்ப்பட்டால், நீ அவனென்றே மதிப்பேன். ஆனதால் நான் உன்னை*

முதலில் கண்டபொழுதே இறந்த என் மகன் உயிர் பெற்று வந்திருக்கிறான் என்றெண்ணினேன். நான் பெற்ற பிள்ளை உயிரோடிருக்குமாயின், நான் இவ்வளவு கஷ்டத்தை அனுபவிக்க வேண்டிய அவசியமில்லையே. நான் பாவி! எதையும் கொடுத்துவைக்கவில்லை (என்று அழுதாள்).

வடிவேலு.—அம்மணி! தாங்கள் மறந்திருந்ததை ஞாபகப் படுத்தி உங்களுக்கு துக்கத்தை உண்டாக்கிவிட்டேன். தங்களுக்கு என் சாயலாகக் குழந்தை யிருந்ததாகச் சொல்லுவதால், தாங்கள் என்னைத் தங்களுடைய குமாரனைப்போல் எண்ணுங்கள். தங்கள் வயிற்றில் பிறந்தால்தானா தங்களுக்கு மகன்? நாட்டுக்கோட்டைச் செட்டிப்பிள்ளைகள் தங்களுக்குப் பிள்ளை இல்லாமற்போனால் சுவிகாரம் எடுத்து அப்பிள்ளைக்கு எல்லா ஆஸ்தியையும் கொடுப்பதோடு எல்லாவிதமான சுதந்தரத்தையும் கொடுத்துவிடுகிறார்களே! அவ்வழக்கத்தைத் தாங்கள் கேட்டிருக்கக்கூடுமே (என்று நகைத்தான்).

காமாக்ஷியம்மாள்.—தம்பி! வடிவேலு! எனக்கும் ஆஸ்தியிருந்தால் சுவிகாரம் எடுக்கலாம். சுவிகாரமும் கிடைக்கும். என் கையில் ஒருகாசும் இல்லாமல் என் வயிற்றுச் சோற்றுக்கே திண்டாட்டப்படுபவளுக்கு சுவிகாரமாக ஒரு பிள்ளை வந்து எனக்குத் தேடிப்போடப்போகிறானா?

வடிவேலு.—ஆஸ்திக்காகக் கவலைகொள்ள வேண்டாம். 'பாலுக்குச் சர்க்கரை இல்லை யென்றும், கூழுக்கு உப்பில்லை யென்றும்' கொள்ளும் துக்கம் ஒன்றேயன்றி வேறுவிதமாய் இருக்காது. எத்தனையோ சக்ரவர்த்திகள் நாடிழந்தும் மனைவிமக்களை யிழந்தும் அதிக துன்பமடைந்ததை வாசித்திருக்கிறோம். 'பேரிழவின்பமோடு பிணிமூப்புச் சாக்காடென்னு ஆறுமுன் கருவிற்பட்டது' என்றிருப்பதால், முன்போந்த ஜன்மத்தில் செய்த வினையின் பலனை அனுப

விக்க நாம் பிறந்திருப்பதால், நாம் எதையும் ஒரேபடித்தாய் அனுபவிக்கவேண்டும். தங்களுடைய பேரிலுள்ள நிலம் தங்கள் கைக்கு மீண்டும் வரவேண்டுமென்ற வினை யிருக்குமாயின், அது கட்டாயம் வந்தே தீரும். தாங்கள் தாய் தந்தையின் உதவியால் அக்கடனைத் தீர்த்துத் தங்கள் நிலத்தை மீட்டுக்கொள்ளக்கூடாதா ?

காமாக்ஷியம்மாள்.—தம்பி ! என்னுடைய தாய்தந்தை தன வந்தரல்ல. அவர்களும் தங்களுக்குள்ள நிலத்தை ஈடு வைத்துவிட்டு ஈனஸ்திதியி லிருக்கிறார்கள். அவர்கள் எவ் விதம் எனக்கு உதவி செய்வார்கள் ?

வடிவேலு.—அவர்களால் முடியாமற் போனாலும் தோஷ மில்லை. நான் அதற்கு வேண்டிய முயற்சி செய்கிறேன்.

இவ்வாறு வார்த்தையாடிக்கொண்டே தானிருக்கும் வீட்டுக் குள் அழைத்துப்போய்க் கூடத்தில் விட்டு, சமையலறைக்குள் ஓடி, " அக்காள் ! நான் என் தாயாரை அழைத்துவந்திருக்கிறேன், வந்து பாருங்கள் " என்றான். சமையலறையிலிருந்த ஓர் பெண் பிள்ளை கூடத்திற்கு வந்து " அம்மா ! வருக உட்காருங்கள் ! " என்று சொல்லி ஒரு பாயைப் போட்டு, காமாக்ஷியம்மாளை கவனித்துப் பார்த்து " தம்பி இந்த அம்மாள் ஆர் ? " என்று வடி வேலை ஜாடையாகக் கேட்டாள்.

வடிவேலு.—இந்த அம்மாள்தான் என் தாய். தாங்கள் எனக்கு அக்காளல்லவோ (என்று நகைத்தான்).

பெண்பிள்ளை.—ஆமடா ! தம்பி ! உனக்குத் தாயானல், நீ எனக் குத் தம்பியான முறைபோல், எனக்கும் தாயாக வேண்டும் (என்று நகைத்து), அம்மா அவர்கள் முகவாட்டத்தோடு இருக்கிறார்கள். தாகத்துக்குக் கொஞ்சம் காப்பி கொண்டு வரலாமா (என்று கேட்டாள்).

வடிவேலு.—" அக்காள் ! தாங்கள் சாப்பாடு விரைவில் சித்தப் படுத்துங்கள். சாப்பிடப்போகும் ஸமயத்தில் காப்பி என் னத்திற்கு ? "

வடிவேலு சொல்லியதைக் கேட்ட பெண் பிள்ளை, "உன் அண்ணுவும் வந்துவிடுவார்கள். நீ அம்மாளோடிருந்து வார்த்தை யாடிக்கொண்டிரு. நான் விரைவில் வந்து விடுகிறேன்" என்று சமையலறைக்குள் சென்றாள்.

**காமாக்ஷியம்மாள்.**—தம்பி! இந்தம்மாள் உன்னுடைய தாயல்லவா? உன்னோடு பிறந்தவர்கள் வேறொருவரும் இல்லையா?

**வடிவேலு.**—இவர்களே என் தாய். எனக்கு ஒரு தங்கையுண்டு. அது சமையலறையில் வேலை செய்துகொண்டிருக்கிறது. நான் அழைத்துவருகிறேன் (என்றோடித் தன் தங்கையை அழைத்துவந்தான்).

காமாக்ஷியம்மாள், ஸௌந்தரமான அப்பெண்ணின் முகத்தைப்பார்த்து அதிசயப்பட்டு, இவ்வளவு ஸௌந்தரமும் உலகிலிருக்கிறதல்லவா என்று தனக்குள் எண்ணித் தன்னருகில் உட்காரவைத்து, அப்பெண்ணின் தலைமயிரை ஒதுக்கிக் கொண்டு, "உன் பெயர் என்ன?" என்று கேட்டாள்.

அப்பெண் "என் பெயர் விசாலாக்ஷி" என்றாள்.

**காமாக்ஷியம்மாள்.**—அம்மா! விசாலாக்ஷி! உனக்கு வாசிக்கத் தெரியுமா!

**விசாலாக்ஷி.**—தெரியும்.

**காமாக்ஷியம்மாள்.**—என்னென்ன புத்தகம் வாசித்திருக்கிறாய்?

**விசாலாக்ஷி.**—பஞ்சதந்திரம், நைடதம், திருக்குறள் முதலிய புத்தகங்களை வாசித்துக்கொண்டிருக்கிறேன்.

**காமாக்ஷியம்மாள்.**—நீங்கள் ஸ்தலயாத்திரைக்கு வந்திருப்பதால் உபாத்தியாயர் ஸமீபத்தி லில்லையென்று புத்தகங்களைத் தொடாமலிருக்கிறாயோ? வாசிக்காமலிருந்தால் படித்ததை மறந்துபோகக் கூடுமே!

**விசாலாக்ஷி.**—எனக்கு உபாத்தியாயர் எப்பொழுதும் என்னோடிருப்பதால் வாசிக்காமலிருக்க முடியாது.

**காமாக்ஷியம்மாள்.**—உன் உபாத்தியாயரை உங்களோடு

*அழைத்துவந்திருக்கிறீர்களோ? அவருக்கு என்ன சம்பளம் கொடுக்கிறீர்கள்?*

**விசாலாக்ஷி.**—*வயிற்றுக்குச் சோறு போடுகிறோமே யன்றி, சம்பளம் ஒன்றும் கொடுக்கிறதில்லை.*

**காமாக்ஷியம்மாள்.**—*சம்பளமில்லாமல் கற்றுக்கொடுக்கிறாரா? அவர் எங்கே! நீ இந்நேரத்தில் வாசிக்காமல் சமையலறையில் என்ன செய்துகொண்டிருந்தாய்?*

**விசாலாக்ஷி.**—*உங்களருகில் நிற்கிறவரே உபாத்தியாயர். இவரே வயிற்றுச் சோற்றுக்காகக் கல்வியை எனக்குக் கற்றுக் கொடுக்கிறார் (என்று நகைத்தாள்).*

**காமாக்ஷியம்மாள்.**—*(நகைத்து), தம்பி! உன் தங்கை சொல்வதைக் கேட்டாயா?*

**வடிவேலு.**—*ஆம்! அம்மணி! நான் வயிற்றுச் சோற்றுக்குக் கற்றுக்கொடுக்கிறேனென்று விசாலாக்ஷியம்மாள் எண்ணியிருக்கிறாள். நான் உபாத்தியாயராக இருந்ததற்கு சம்பளம் என் மைத்துனரிடத்தில் வாங்கிக்கொள்ளுவேன் என்பதை அறியாமலிருக்கிறாள்.*

**காமாக்ஷியம்மாள்.**—*மைத்துனர் யார்?*

**வடிவேலு.**—*விசாலாக்ஷியம்மாளை மணம் புரிபவரெவரோ அவரே என் மைத்துனர்.*

**விசாலாக்ஷி.**—*அக்காள்! அண்ணன் என்னைப் பரிகாசம் செய்கிறதைப் பாருங்கள். அண்ணேன்! நீங்கள் என்னைப் பரிகாசம் செய்தால் நான் அழுவேன்.*

**வடிவேலு.**—*அம்மா விசாலாக்ஷி! நீ விவாகம் செய்துகொள்ளாமலா இருக்கப்போகிறாய்?*

**விசாலாக்ஷி.**—*எனக்கு விவாகம் வேண்டாம். நான் எப்பொழுதும் கன்னிகையாகவே இருப்பேன்.*

*வடிவேலும் விசாலாக்ஷியும் பேசிக்கொள்வதைக் கேட்டு நகைத்து, காமாக்ஷியம்மாள், “நீங்கள் சண்டை போட்டுக்கொள்ள*

வேண்டாம். நீங்கள் ஏன் உங்கள் தாயாரை அக்காளென்று அழைக்கிறீர்கள் ?" என்று கேட்டாள்.

வடிவேலு.—அம்மணி ! என் சிறிய தாயார் நான் சிறுவனுயிருக்கும்பொழுது வந்திருந்து என் தாயாரை அக்காளென்று அழைத்துக்கொண்டிருப்பதைக் கேட்டு நானும் அக்காளென்று அழைத்திருந்தேன். என்னைப் பார்த்து என் தங்கையும் அக்காளென் றழைக்கிருள்.

காமாக்ஷியம்மாள்.—உன் தாய்தந்தைகளின் பெயர் என்ன ?

வடிவேலு.—என் தந்தையின் பெயர் முத்துவேலு பிள்ளை. என் தாயின் பெயர் திரிபுரஸுந்தரம்மாள்.

அந்த ஸமயத்தில் ஒருவர் வீட்டுக்குள் வருவதைக் கண்டு காமாக்ஷியம்மாள் எழுந்து நின்ருள்.

வடிவேலு.—அம்மணி ! இவர் என் தந்தை.

முத்துவேலு பிள்ளை.—அம்மா ! எழுந்து நிற்கவேண்டாம். உட்காருங்கள் (என்று சமையலறைக்குள் சென்ருர்).

சில நிமிஷத்தில் இருவரும் ஒரு மோராமாலையைக் கொண்டு வெளியில் வந்தனர். அதைத் திரிபுரஸுந்தரம்மாள் தன் மகள் கழுத்தில் போட்டு, "சரியாக இருக்கிறது" என்ருள்.

முத்துவேலு பிள்ளை.—இது பழைய நகையாயினும் இதைச் செய்து நெடுநா ளாகவில்லைபோல் காண்கிறது. அரைக் கூலி கட்டிக்கொடுக்கச் சொன்னதற்கு நான் ஒப்பாமல் பொன்னின் கிரயமே கொடுப்பதாக வாங்கிவந்தேன்.

திரிபுரசுந்தரம்.—இந்த நகையை விற்றவர் தங்களுக்குத் தெரியுமா ?

முத்துவேலு பிள்ளை.—எனக்குத் தெரியாதாயினும், நம்மூரார் ஒருவர் என்னை இன்னுனென்று அவ்வியாபாரிக்குச் சொன்னதால், என்னை நம்பி நகையைக் கொடுத்தார். அவர் பெரிய பணக்காரர் என்றும் அனேகருக்குக் கடன் கொடுத்திருக்கிருர் என்றும் நம்மூராரால் கேள்விப்பட்டேன்.

**திரிபுரஸுந்தரம்.**—இந்த மோராமாலையில் ஏதாகிலும் சூதிருக்குமோ ?

**முத்துவேலு பிள்ளை.**—மோராமாலையில் என்ன சூது செய்கிறது ? மோராமாலைக்குச் சொந்தக்கார ஞெருவன் அவரோடு வார்த்தையாடிக்கொண்டிருப்பதைக் கேட்ட பின் துணிந்து இதை வாங்கிவந்தேன். மோராமாலைக்குச் சொந்தக்காரன் அவ்விடத்தி லில்லாமற்போனால், நான் ஏதாகிலும் நினைக்கக்கூடும்.

**வடிவேலு.**—சென்னையில் ஜவளிக்கடையில் ஒருவன் சென்று ஒன்றை விலை கேட்டால், கடைக்காரன் பத்து ரூபா பெறக்கூடியதை இருபது ரூபா என்று சொல்லவும், வேறொருவன் வெளியிலிருந்து ஜவளி வாங்குவதுபோல் வந்து, விலைபேசிக்கொண்டிருப்பதைப் பதினைந்து ரூபாவுக்காகிலும் கொடுக்கிறாயா என்று முன் கேட்டுப்போனது போல் கேட்டும் கடைக்காரன் கொடுக்கமுடியாதென்று சொல்லியனுப்பி விட்டதைக் கண்டு, ஜவளி வாங்கப் போனவன் ஒன்றிரண்டு அதிகங்கொடுத்து வாங்கிப் போனபின், விலையை வீணுக்குத் தூக்கிவிட்டுப் போனவன் வந்து கால் அரை வாங்கிக்கொண்டு போவது வழக்கம். அதுபோல் இங்கும் செய்கிறார்களோ என்னமோ !

**முத்துவேலு பிள்ளை.**—அவ்விதமான சூது இவ்வூரிலும் இருக்குமென்று நான் நினைக்கவில்லை. எதற்கும் நாளைக்கு இதைக் கொண்டுபோய்த் தட்டார்களிடம் காட்டி உரைத்து நிறுத்து, நமக்கிஷ்டமிருந்தால் வாங்கிக்கொள்ளலாம். இதில் பழுதில்லாம லிருந்தால் நகை வியாபாரியிடம் நகையை வாங்கிக்கொள்ளுகிறே மென்று சொல்லிவா (என்று வியாபாரி இருக்கு மிடத்தைச் சொன்னார்).

பின் காமாக்ஷியம்மாள் யாரென்று வடிவேலா லறிந்து, அவர்களுக்குத் தேறுதல் சொன்னார். இராப்போஜன முண்டு விசாலாக்ஷி காமாக்ஷியம்மாளுக் கருகில் தன் படுக்கையையும்

போட்டுக்கொண்டு நெடுநேரம் வார்த்தையாடிக்கொண்டிருந்தாள். அப்புறம் இருவரும் நித்திரைபோனார்கள்.

மறுநாள் காலையில் போஜன முண்டபின் வடிவேலு மோராமாலையை எடுத்துக்கொண்டு போய்த் தட்டார்களிடத்தில் காட்டி, நகையில் பழுது ஒன்று மில்லையென்று கண்டபின், மோராமாலையை விற்பவரைப் பார்த்துப் போவதாக அவர் இருப்பிடம் வந்தான். அங்கு ஒருவன், "அவர் உட்கூடத்தில் வேறொருவரோடு வார்த்தையாடிக்கொண்டிருக்கிறார். விரைவில் வருவார். இவ்விடம் உட்காருங்கள்" என்று உள் திண்ணையில் உட்காரச்சொல்லிப் போனான். வடிவேலு உட்கார்ந்த இடத்திலிருந்து உட்கூடத்தில் வார்த்தையாடிக்கொண்டிருப்பதைக் கேட்டுக்கொண்டிருந்தான்.

உட்கூடத்திலிருந்தவர்களில் ஒருவன்.—ஐயோ தாமோதரம் பிள்ளை! நீர் இவ்விதமான தொந்தரை எனக்குக் கொடுப்பீரென்று எண்ணின், உம்மை நம்பி நான் இதை யெல்லாம் செய்திருக்கமாட்டேன்.

தாமோதரம் பிள்ளை.—துரைசாமி பிள்ளை! நான் உம்முடைய சொத்தை அபகரிக்க எண்ணங்கொண்டிருக்கிறேன் என்று நினைக்கவேண்டாம். நான் கொடுத்திருக்கும் தொகையை நீராகிலும் உம்முடைய சிறிய தாயாராகிலும் கொடுத்துவிட்டால், நான் பத்திரங்களையெல்லாம் கொடுப்பதோடு நகையையும் கொடுத்துவிடுகிறேன். வீண்வார்த்தை வேண்டுவதில்லை.

துரைசாமி.—நான் கொடுக்கவேண்டியதைக் கொடுத்துவிட்டால் என் சிறிய தாயாரிடத்தில் எழுதி வாங்கியிருக்கும் பத்திரத்தை நீர் என்னிடத்தில் பணம் பெற்றுக்கொண்டு எனக்கே அந்தத் தொகையைக் கொடுக்கும்படி பத்திரத்தில் எழுதிக் கொடுத்துவிடவேண்டியதுதானே. உமக்குக் கொடுக்க வேண்டியதை நாளது பரியந்தம் வட்டிபோட்டு ஒரு காசும் விடாமல் எடுத்துக்கொண்டு என்னுடைய

சொத்துக்களைக் கொடுத்துவிடும். வீண் தொந்தரவைக் கொடுக்கவேண்டாம்.

**தாமோதரம் பிள்ளை.**—ஐயா! யாரும் வீணுக்கு உழைக்கமாட்டார்கள். நான் என்ன! வேலையற்று இருக்கிறேன், நீர் ஓடு என்றால் ஓடவும். இரு என்றால் இருக்கவும்? நான் எடுத்துக்கொண்ட தொந்தரவுக்காக ஐயாயிரம் கொடுத்து, நீர் உம்முடைய சிறிய தாயார் நிலத்தை ஒப்புக்கொள்ளும். நீர் கொடுக்கவேண்டிய தொகை அதிகம் இல்லை. மோரா மாலையை நேற்று வாங்கிப்போன சேலத்தார் வாங்கிக் கொள்ளுவார்போ லிருக்கிறது. அதை விற்றால் ஏறக் குறைய உம்முடைய கடனெல்லாம் தீர்ந்துபோகும். நீர் உம்முடைய சிறிய தாயார் நிலத்தோடு பெரிய தனவந்தனைப் போலிருக்கலாம். உம்முடைய சிறிய தாயாருக்கும் பிள்ளையா குட்டியா? உம்முடைய இஷ்டம்போல் நடக்கத் தடை செய்யார்கள்.

**துரைசாமி.**—என் சிறிய தாயார் என்னோடு சண்டைபோட்டுக் கொண்டு போய்விட்டார்கள். நீர் ஐயாயிரம் எதற்காகக் கேட்கிறீர்? ஒரு பத்திரம் எழுதி அதில் என் சிறிய தாயார் கையெழுத்து வாங்கிக்கொண்டதற்காகவா? இது நியாயந்தானா?

**தாமோதரம் பிள்ளை.**—ஓய்! நீர் நியாயம் அநியாயம் என்று வார்த்தையாடிக்கொண் டிருக்கவேண்டாம். உமக்குத் தெரிந்ததைப் பாரும். நீர் மெத்த நியாயமாக உம்முடைய சிறிய தாயாருக்குச் சொந்தமாகிய நிலத்தைக் கைக்கொள்ளப் பார்க்கிறீர். உமக்கு இலவசமாகப் பெருந்தொகை பெறுமதியான நிலம் என்னால் கிடைக்கும்பொழுது அதில் நாலிலொருபங்கு எனக்குக் கொடுத்தால் உமக்கென்ன நஷ்டம்? நீர் அக்காலத்தில் அற்பத்தொகையைக் கடன் வாங்கி, பெருந்தொகைக்கு எழுதிக் கொடுக்கவில்லையா? இப்பொழுது உமக்குக் கைமேல் இலா

பத்தைக் காட்டியபின் எனக்குக் கொடுப்பதை மிக்க கருத்தோடு கணக்குப் பார்க்கிறீர். போம்! போம்! நான் கேட்கும் ஐயாயிரத்தைக் கொடுக்க இஷ்டமில்லாதிருந் தால், ஒன்றும் முடிவுபெறாது. நான் வேண்டுமானால் நிலத்துக்குச் சேரவேண்டிய முழுத்தொகையையும் எடுத் துக்கொள்ளக்கூடும் என்பது நீர் அறிந்ததே.

**துரைசாமி.**—என் சிறிய தாயார் நிலத்தை நீர் நடுக்கொள்ளை யாடுதல் தெய்வத்துக் கடுக்காது.

**தாமோதரம் பிள்ளை.**—ஒருவருக்குச் சொந்தமானதை நீர் கைப்பற்றப் பார்ப்பது தெய்வத்துக் கடுக்குமோ?

**துரைசாமி.**—என் சிறிய தாயார் காலஞ்சென்றால் அந்தச் சொத்து என்னைச் சேராதோ?

**தாமோதரம் பிள்ளை.**—உம்முடைய சிறிய தாயார் சொத்தெல் லாம் உம்மைச் சேரவே அந்தம்மாள் பிள்ளைகளைக் கொன் றீர். உம்முடைய இரகசியமெல்லாம் எனக்குத் தெரியு மென்று நீரறிந்திருந்தும், ஏன் வீண்வார்த்தை ஆடுகிறீர்?

**துரைசாமி.**—நான் என் சிறிய தாயார் பிள்ளைகளைக் கொன்றதை நீர் நேரிற் பார்த்திருந்ததுபோல் பேசுகிறீர். நான் நிலத்து விஷயத்தைக் குறித்துப் பின்வந்து பேசுகிறேன். உமக்கு நான் கொடுக்கவேண்டிய தொகைக்கு மோரா மாலையை விற்று வரவு வைத்துக்கொள்ளும். மற்ற நகை களையாவது இப்பொழுது கொடும்.

**தாமோதரம் பிள்ளை.**—இவ்வளவு தூரம் பேசியபின் என் கணக்கை முற்றிலும் தீர்த்துவிட்டே யாவையும் பெற்றுக் கொள்ளவேண்டும். கணக்குத் தீருமுன் நான் ஒன்றையுங் கொடுக்கமாட்டேன்.

**துரைசாமி.**—இதேது பெரிய மோசமாக இருக்கிறது? உமக்குச் சேரவேண்டிய கடனுக்கு ஈடாக இருக்கும் நகைகளில் ஒன்றிரண்டை விற்று எடுத்துக்கொண்டு மற்றதை என் னிடம் கொடும் என்று நான் பலமுறை கேட்டிருந்தும்,

'நீர் நகைகளை என் விற்கவேண்டும்? உம் சிறிய தாயார் பேரிலிருக்கும் நிலத்தை என்பேருக்கு எழுதிவிட்டால், எல்லா நகைகளையும் கொடுத்துவிடுகிறேன்' என்றீர். நீர் விரும்பிய வண்ணம் முடித்துக்கொடுத்து நெடுநாளாயும் நகைகளைக் கொடுக்காமல், 'இப்பொழுது மோராமாலையை யாவது விற்றுப் பணத்தை யெடுத்துக்கொள்ளும்' என்று சொன்னாலும் கேட்கமாட்டேன் என்கிறீர். இது முற்றி லும் கபடமாகவே இருக்கிறது.

**தாமோதரம் பிள்ளை.**—என்னிடத்தில் கபடமே குடிகொண்டிருப்பதாக அறிந்தீர். மீண்டும் என்னிடத்திலிருந்து பேச வேண்டாம். எனக்கு வெளியிற் போகவேண்டிய வேலை இருக்கிறது. நீர் போய்வாரும் (என்றெழுந்தான்).

உள்கூடத்தில் பேசிக்கொண்டிருப்பது முடிவுக்கு வருகிறதென்றறிந்து, வடிவேலு தன் வீட்டுக்குச் சென்று, தன் தந்தையையும் காமாக்ஷியம்மாளையும் அழைத்துத் தான் கேட்டு வந்ததையெல்லாம் சொல்லி, "இந்த மோராமாலை வேண்டாம் என்று சொல்லிவிடுங்கள்" என்று தன் தந்தையிடம் கொடுத்தான். என்னை தாமோதரம் பிள்ளையும் துரைசாமி பிள்ளையும் அறிவார்களானதால், நான் அவர்களைப் பார்க்காமல் வந்துவிட்டேன் என்றான். காமாக்ஷியம்மாள் அந்த மோராமாலையை வாங்கிப்பார்த்து "ஆம்; இது என்னுடைய மோராமாலையே! என் நாயகன் இறந்தபின் துரைசாமி இதைக் கைப்பற்றினான். மோராமாலை போயினும் தோஷமில்லை. பிள்ளைகளைக் கொன்றான் என்று சொன்னான் என்றாயே! அது உண்மையாகவே இருக்கவேண்டும். ஐயோ! மக்களே! நீங்கள் வாந்திபேதியி லிறந்தீர்களென்று சொல்லியதை முற்றிலும் நம்பியிருந்தேனே! இப்பொழுது வேறுவிதமாக முடிந்ததே! பெற்ற வயிறெரியப் பாவி கொன்றானே! உங்கள் உயிர் நீங்கும்பொழுது என்ன அவஸ்தை பட்டீர்களோ! உங்கள் உடல் என்னமாய்த் துடித்ததோ? துடிக்கும் கைகால்களை எவ்விதம் பிடித்துக்கொண்

டானே! உங்கள் உடலை எங்கு கொண்டுபோய்ப் போட்டுவிட்டானே! அடா மகனே! உன்னால் என்குலம் விளங்குமென்றிருந்தேனே! உன்னுடைய ஜாதகத்தைப் பார்த்தவர்களெல்லாம் நீ பெருந்தனவந்தன் மகளை மணம்புரிந்து மேன்மையாக இருப்பாய் என்னக் கேட்டு உள்ளம் பூரித்திருந்தேனே! அடா! என் செல்வமே! நீ அற்பாயுளாய் அப்படுபாவி கையால் மாள்வாயென்று அறியாமற்போனேனே! ஆ! மகளே! உன் தமயனைக் கொன்றால் தன் தந்தையின் ஆஸ்தியெல்லாம் தன்னைச் சேருமென்று கொன்றான். உன்னை ஏன் கொன்றானோ? நீ போட்டிருந்த நகைகளுக் காசைப்பட்டோ கொன்றான்?" என்று கண்களில் நீர் தாரை தாரையாக வடியவிட்டு அழுதாள். ஸமீபத்திலிருந்த முத்துவேலு பிள்ளை "அம்மணி! நெடுநாளைக்குமுன் இறந்துபோன குழந்தைகளைக் குறித்துத் தாங்கள் துக்கப்படுவது என்ன பிரயோசனம்?" என்று காமாக்ஷியம்மாளின் அழுகையை மாற்றி "இனி என்ன செய்யலாம்?" என்றார்.

வடிவேலு.—அண்ணா! தாமோதரம் பிள்ளை தக்க ஏற்பாட்டோடு நிலத்தைக் கைப்பற்றியிருக்கிறான். பத்திரத்திற்கண்ட தொகையைக் கொடாமல் நிலத்தைக் கைப்பற்ற முடியாது. ஆனதால் நாம் திண்டுக்கல்லுக்குச் சென்றபின் யோசிக்கவேண்டும்.

முத்துவேலு பிள்ளை.—ஆம்! ஆம்! நான் இந்த மோராமாலையை வேண்டாமென்று கொடுத்துவிட்டு வருகிறேன் (என்று வெளியில் சென்றார்).

---

## 15—ம் அத்தியாயம

இரங்கூனில், மொகல் தெருவில், நாட்டுக்கோட்டைச் செட்டிகளிருக்கும் ஓர் அறையின் வெளியில் ஒருவன் நின்று, "இராமன் செட்டியார் எந்த அறையில் இருக்கிறார்" என்று கேட்க, அறைக்குள் இருந்த ஒருவன் "ஏனையா இராமன் செட்டி

யாரைத் தேடுகிறீர்? நானே அவருடைய கணக்கப்பிள்ளை. அவரை எதற்காகப் பார்க்கவேண்டும்?" என்று கேட்டான்.

**வந்தவன்.**—நான் தாகிரியென்று அநேகருக்குத் தெரியும். இராமன் செட்டியார் கடையிலிருக்கும் கணக்கப்பிள்ளை நீராஞல், உம்முடைய பேர் தம்புசாமி பிள்ளையா? (என்று கேட்டான்).

**தம்புசாமி பிள்ளை.**—என் பெயர் தம்புசாமி பிள்ளையே!

**தாகிரி.**—தல்லா கரையோரத்தில் இருக்கும் நிலம் உம்முடையதா?

**தம்புசாமி பிள்ளை.**—ஆம், என்னுடையதே.

**தாகிரி.**—அது எத்தனை ஏக்கர் நிலம்?

**தம்புசாமி பிள்ளை.**—நூறு ஏக்கராவுக்குக் கொஞ்சம் குறையும்.

**தாகிரி.**—அந்த நிலத்தை விற்றுவிட உமக்கு ஸம்மதமா?

**தம்புசாமி பிள்ளை.**—விற்றுவிட இஷ்டம் இல்லை. ஆயினும் நல்ல விலை கிடைத்தால் விற்றுவிட இஷ்டமே!

**தாகிரி.**—என்ன விலை கொடுத்தால் விற்பீர்?

**தம்புசாமி பிள்ளை.**—என்ன விலை உமக்குக் கொடுக்க இஷ்டம்?

**தாகிரி.**—பிள்ளையைப் பெற்றவரே பேர் வைக்கவேண்டுமே யொழிய மற்றவர்கள் பேர் வைக்கலாமா?

**தம்புசாமி பிள்ளை.**—குற்றமில்லை. நீரே சொல்லலாம்.

**தாகிரி.**—நீர் அந்த நிலத்தை என்ன விலைக்கு வாங்கினீர்?

**தம்புசாமி பிள்ளை.**—நான் அதைத் தேடிப்போய் விலைக்கு வாங்கவில்லை. எனக்கொருவன் பெருந்தொகை கொடுக்க வேண்டியதாயிருந்தும், அத்தொகையில் அற்பமும் கொடுக்க முடியாமல் அந்த நிலத்தை விலைக்கிரயம் செய்து கொடுத்தான். அது நெடுநாளானது. வட்டியும் முதலும் கணக்குப் பார்த்தால் பெருந்தொகை யாகும்.

**தாகிரி.**—உம்முடைய இஷ்டம்போல் வட்டி போட்டுக் கணக்குப் பார்த்தால் என்ன தொகை ஆகும்?

**தம்புசாமி பிள்ளை.**—ஏறக்குறையப் பதினாயிரம் ஆகுமென்று நினைக்கிறேன்.

**தாகிரி.**—பதினாயிரத்துக்கு இருபதினாயிரம் கொடுத்தால் நிலத்தைக் கொடுத்துவிடுகிறீரா ?

**தம்புசாமி பிள்ளை.**—நான் அது விஷயத்தைக் குறித்து ஒன்றும் சொல்ல முடியாது. என் முதலாளியை அழைத்துவருகிறேன். அவரைக் கண்டு பேசுங்கள் (என்று மேல் வீட்டிலிருந்த இராமன் செட்டியாரை அழைத்துவந்து தாகிரிக்கு முன் விட்டார்).

**இராமன் செட்டியார்.**—(தாகிரியைப் பார்த்து) என்ன ஸமாசாரம் ? என்னமோ நிலத்தை விலைக்குக் கேட்டீர்களாம். யாருக்கு நிலம் வேண்டும் ?

**தாகிரி.**—ஐயா ! நான் மற்றவர்களைப்போ லல்ல. நான் நிலத்தை அதிக விலைக்கு விற்றுக்கொடுத்தால் எனக்கு என்ன தரகு கொடுப்பீர்கள் ?

**இராமன் செட்டியார்.**—ஐயா ! ஊரில் நூற்றுக்கு ஒன்று ஒன்றரை கொடுப்பது வழக்கம். தாங்கள் அதுபோல் வாங்கிக் கொள்ளுங்கள்.

**தாகிரி.**—நீர் சொல்வது உண்மையேயாயினும், எனக்கு அவ்விதம் கொடுக்கக்கூடாது. நான் அந்த நிலத்தை இலக்ஷத்தைம்பதினாயிரத்துக்கு விற்றுக்கொடுக்கிறேன். அத்தொகைக்கு நூற்றுக் கிரண்டுவீதம் கொடுங்கள். இலக்ஷத்தைம்பதினாயிரத்துக் கதிகமாகுந் தொகையில் பாதியை எனக்குக் கொடுக்கவேண்டும்.

**இராமன் செட்டியார்.**—உம்முடைய இஷ்டம்போல் தருகிறோம். நீர் வேலையை முடியும். எதற்காக அந்த நிலம் வாங்க யோசிக்கிறார்கள் ?

**தாகிரி.**—அந்த நிலத்தை ஒரு பெரிய கம்பெனிக்காரர் வாங்கி அரிசியரைக்க யந்திரசாலை கட்டப்போகிறார்கள். அதனால்

அவர்கள் விலை அதிகம் கொடுத்து வாங்குவார்கள். நீர் இந்தக் கடுதாசியில் ஒரு கையெழுத்துப் போடுங்கள்.

**தம்புசாமி பிள்ளை.**—(அக்கடுதாசியை வாங்கி வாசித்து) நாம் பேசும் நிலத்தை இரண்டு இலக்ஷத்துக்கு விற்றுவிடுகிறேன் என்று எழுதியிருக்கிறது.

**இராமன் செட்டியார்.**—ஏன் கையெழுத்துப் போடச் சொல்லுகிறீர்?

**தாகிர்.**—அதில் கையெழுத்துப் போட்டால், அதை நான் கம்பெனியாருக்குக் காட்டுவேன். அவர்கள் வெறும் வார்த்தையை நம்பார்கள். அவர்கள் ஸம்மதப்பட்டால் அச்சாரம் வாங்கித் தருகிறேன்.

"இக்கடுதாசியில் கையெழுத்து செய்வதில் ஒன்றும் தோஷமில்லை. அப்பா! தம்புசாமி! இதில் ஓர் கையெழுத்துப் போடு" என்று இராமன் செட்டியார் சொன்னவுடன் தம்புசாமி கையொப்பம் வைத்துத் தாகிரியிடத்தில் கொடுத்தார்.

தாகிரி வாங்கி வண்டியிலேறிச் சென்று ஒருமணி நேரத்துக்கெல்லாம் ஐம்பதினாயிரத்துக்கு வங்கி செக்கொன்று கொண்டு வந்து தம்புசாமி பிள்ளையிடம் கொடுத்து, "சில தினத்தில் விலைக் கிரயபத்திரம் தயாரான உடன் உமக்குச் சேரவேண்டியதைக் கொடுத்துக் கோர்ட்டில் ரிஜிஸ்டர் செய்துகொள்ளலாம்." என்றான்.

பின்பு ஒரு வாரத்தில் தம்புசாமி பிள்ளை நிலத்தை விற்றுத் தான் இலக்ஷத்தெழுபதினாயிரம் ஆஸ்தியுடையவரானார். அவரையும் அவர் முதலாளியையும் அறிந்தவர்கள் எல்லாம் வந்து ஸந்தோஷங் கொண்டாடினார்கள். ஒரு செட்டியார் இராமன் செட்டியாரைப் பார்த்து "அண்ணேன்! நம்முடைய தம்புசாமி பிள்ளைக்குப் பெருந்தொகை கிடைத்ததைக் குறித்து நான் அதிக ஸந்தோஷ மடைந்தேன்" என்றார்.

**இராமன் செட்டியார்.**—தம்பி! பழனியப்பா! நல்ல எண்ணம்

உள்ளவர்வர்களுக்கு எப்பொழுதும் திருவருள் நன்மையே கூட்டுவிக்கும். தம்புசாமி பிள்ளையை நானும் சும்மாவிடாமல், நான் சொந்தத்தில் நெல் வாங்கிக் கட்டியதோடு, அவன் பேருக்கு இருபதினாயிரம் கூடை நெல் வாங்கிக் கட்டிவைத்தேன். அதில் அவனுக்கு ஐயாயிரத்துக் கதிகம் இலாபம் கிடைத்தது. அதை அவன் கணக்கில் வரவு வைத்திருக்கிறேன். நாம் அவனுக்கு ஐயாயிரம் பதினாயிரம் இனாமாகக் கொடுக்கக்கூடும். ஆனால் அவனுடைய அதிஷ்டம் அவனைப் பெரும் பணக்காரனாக்கிவிட்டது. எனக்கு அது விஷயத்தில் அதிக ஸந்தோஷம். அவனுக்குக் கிடைத்த பணம் எங்கள் கடையி லிருக்கவேண்டு மென்று கேட்டுக் கொண்டான். நான் கூடாதென்று எல்லாப் பணத்தையும் பெரிய கடைகளில் தவணைக்குக் கொடுத்துவைத்திருக்கிறேன். அவனுக்குப் பணம் அதிகமாய்விட்டதால் "இனி அடுத்தாளா யிருக்கவேண்டாம். நீ தனிக்கடை வைத்துக்கொள்" என்று சொல்லியதைக் கேட்டு, "நான் இரங்கூனிலிருக்கும் பரியந்தம் உங்கள் கடையில் முன் பார்த்துவந்த வேலையையே பார்த்து வருவேனேயல்லது வேறெண்ணம் கொள்ளமாட்டேன்" என்று சொல்லிவிட்டான். அவன் வேறு ஜாதியானாகை இருந்தாலும் அவனுடைய நற்குணம் செட்டிமகன் செட்டிக்கு வராது (என்று சில நேரம் வார்த்தையாடிக்கொண்டிருந்து நீங்கினார்).

**பழனியப்ப செட்டியார்.**—(தம்புசாமி யிருக்குமிடத்தில் சென்று) ஐயா தம்புசாமிபிள்ளை! உம்முடைய நற்குணத்திற் கேற்க யாவும் நன்மையாக முடிந்தது. உமக்கு நிலமிருந்ததாக எங்களுக்கு இதுபரியந்தம் தெரியாமலிருந்தது. நீர் எப்பொழுது நிலம் வாங்கிவைத்தீர்?

**தம்புசாமி பிள்ளை.**—அண்ணேன்! நான் இந்த ஊரில் நெடுநாளாக இருந்தது தங்களுக்குத் தெரிந்ததே. நான் அற்ப வியாபாரம் செய்யும் யூதனிடத்தில் என்னுடைய சம்பளத்

தில் கிடைத்த தொகையைக் கடனாகக் கொடுத்திருந்தேன். அவன் முதலில் வெகு நாணயமாக நடந்தானாயினும், பின் அவனுக்கு நேரிட்ட நஷ்டத்தால் தன்னிடத்திலிருந்த பொருளை யெல்லாம் இழந்து ஓட்டாண்டியானான். நான் அவனுடைய நிர்ப்பாக்கிய ஸ்திதியைப் பார்த்து பரிதாபப்பட்டு, அவனுக்கு மீண்டும் ஓர் அற்பத்தொகையைக் கொடுத்து அவனை வியாபாரஞ் செய்ய விடுத்தேன். அவன் நான் கொடுத்த தொகைக்கு ஈடாக ஏக்கரா பத்து ரூபா வீதம் வாங்கிய நூறு ஏக்கரா நிலத்தை எனக்கு விலைக்கிரயம் செய்துகொடுத்தான். அவன் தன் வியாபாரத்தால் அதிக இலாபத்தைத் தேடினான். ஆயினும் அவன் மைத்துனனுக்காகச் செட்டிப் பிள்ளைகளுக்குக் கையொப்பம் கொடுத்துப் பின் பெரிய நஷ்டம் அடைந்து நெடுநாள் துக்கத்தோடிராமல் காலம் சென்றான். அவன் மைத்துனன் இப்பொழுது பெரும் பணக்காரனா யிருக்கிறான்.

**பழனியப்ப செட்டியார்.**—அவன் மைத்துனன் எவ்விதம் பெரும் பணக்கார னானான்?

**தம்புசாமி பிள்ளை.**—எல்லாம் செட்டிப்பிள்ளைகளை வஞ்சித்துச் சேர்த்துக்கொண்டதே!

**பழனியப்ப செட்டியார்.**—செட்டிப்பிள்ளைகளை எவ்விதம் வஞ்சித்துச் சேர்த்துக்கொண்டான்?

**தம்புசாமி பிள்ளை.**—அந்த யூதன், ஷேக்தாவுதைப்போல் வீடுகள் வாங்காமல், சீமை சரக்குகளை விற்கும் பெரிய கடைகள் அநேகம் வைத்து வியாபாரத்தைப் பெருக்கச் செய்து, பெருந்தொகைக்கு உண்டியல் கழித்து, குறித்த தினத்தில் வங்கியில் பணங்கட்டிவந்தும், பின் பணங்கட்டாமல் தவணை சொல்லிவந்தும், மூன்று வருடத்துக்குப் பின் இலக்ஷத்தைம்பதினாயிரத்தை யெடுத்துக்கொண்டு படுத்துக்கொண்டான். பின் கடன்கொடுத்த செட்டிப்பிள்ளைகள் யாவரும் சேர்ந்து ஒன்றுக்குக் காலாகத் தீர்த்து வாங்கிக்கொண்டார்

கள். மூன்று மாதத்துக்கெல்லாம் மீண்டும் அநேக கடைகளை வைத்துப் பின்னும் வியாபாரம் செய்து மூன்று இலக்ஷத்தைச் செட்டிபிள்ளைகளிடத்தில் கடன் வாங்கி, முதலோடு வட்டியையும் சாப்பிட்டுவிட்டான்.

**பழனியப்ப செட்டியார்.**—முன் மோசஞ்செய்தவனை நம்பி செட்டிப்பிள்ளைகள் அவனுக்கு மறுபடியும் எவ்விதம் கடன் கொடுத்தார்கள்?

**தம்புசாமி பிள்ளை.**—தாங்கள் இந்த ஊருக்கு முதல் தடவை வந்திருப்பதால் அது தங்களுக்குத் தெரியாது. ஆனதால் அவ்வழக்கத்தை உங்களுக்குச் சொல்லவேண்டியதே! முன் பற்றுவரவு செய்து மோசஞ்செய்து முதலை யெடுத்துக்கொண்டவன் பின்னும் செட்டிப்பிள்ளைகளிடத்தில் கொள்ளையடிக்க எண்ணங்கொண்டு ஆயிரம் இரண்டாயிரம் ரூபாய் பெறுமதியான நகைகளைச் செட்டிப்பிள்ளைகளிடத்தில் அதிக வட்டி கொடுப்பதாக அடைவுவைப்பதும் கடனைக் கொடுத்து நகைகளை மீட்டுக்கொள்ளுவதும் மீண்டும் அடைவு வைப்பதும் சில ஸமயத்தில் நூறு இருநூறு வெண்ணிலை கடனை வாங்குவதுமாக நாணயத்தைப் படிப்படியாக உண்டுபண்ணிக்கொள்ளுகிறான்.

**பழனியப்ப செட்டியார்.**—முன் நஷ்டமடைந்து தீர்த்துக் கொடுத்தவன் பின் வியாபாரஞ்செய்யத் தொடங்கினால், செட்டிப்பிள்ளைகள் எவ்விதம் கடன்கொடுக்கத் துணிவார்கள்?

**தம்புசாமி பிள்ளை.**—தான் முன் நஷ்டமடைந்தது உண்மையே! தன்னுடைய சுற்றத்தார் திரவிய ஸகாயஞ்செய்து வியாபாரம் செய்ய விடுத்தார் என்று அவன் சொல்வதை நம்பாமற் போனாலும், முன் பெருந்தொகையைக் கொள்ளையாடி வைத்திருக்கிறான். இவனிடத்தில் நஷ்டமடைந்ததை ஸம்பாதிக்க வேண்டுமென்றும் விரைவில் கெடமாட்டான் என்றும் ஒவ்வொருவரும் எண்ணி

அவனிடத்தில் வலிந்துபோய் 'நீர் முன் எங்கள் கடைக்கு அதிக நஷ்டத்தை உண்டுபண்ணி இப்பொழுது ஈட்டின் மேல் வேறிடத்தில் பற்று வரவு செய்கிறது நியாயமல்ல. நாங்கள் இந்த இலாபத்தை அடையக்கூடாதா' என்று கட்டாயப்படுத்திக் கடன் கொடுக்கிறார்கள். இவ்வித எண்ணம் ஒவ்வொருவருங் கொண்டு முன்போலவே பெருந் தொகையைக் கடன்கொடுப்பதால், அவன் மீண்டும் பெருந் தொகையைக் கடன் வாங்கி மோசஞ்செய்துவிடுகிறான்.

**பழனியப்ப செட்டியார்.**—செட்டிப் பிள்ளைகள் மோசம் போவதை யோசித்தால் முற்றிலும் அறியாமையே என்று காண்கிறது. ஒருதடவை தீர்த்துக் கொடுத்தவனிடம் பற்று வரவு செய்வதே கூடாது.

**தம்புசாமி பிள்ளை.**—இவ்விஷயம் மட்டுமல்ல. செட்டிப்பிள்ளைகள் அனேகர் ஏமாறிப்போன தொன்றைச் சொல்லுகிறேன். கவனமாகக் கேளுங்கள். ஐந்தாறு ஸகோதரர்களும், அவர்கள் மனைவிகளும், நாலைந்து ஸகோதரிகளும், அவர்களுடைய நாயகர்களும் சேர்ந்து, பெரிய பஜார் இவ்வூரில் கட்டுவதாக நூறு ரூபா பங்குகள் ஏற்படுத்தி, அப்பங்குகளை வெளியாருக்கு ஒன்றும் விற்காமல் எல்லாப் பங்குகளையும் தாங்களே விலைக்கு வாங்கியதாக அச்சடித்த பங்கு சீட்டுகளைத் தலைக்கு இருநூறு முந்நூறு வைத்துக்கொண்டு, அறுபது எழுபதினாயிரம் செலவு செய்து பஜார் கட்டி முடித்து, அந்த பஜார் கம்பெனிக்காகக் கடன் வாங்கவும் பஜாருக்கு வேண்டியவைகளைச் செய்யவும் விசாரணைத் தலைவர்களாகத் தங்களைத் தாங்களே நியமித்துக்கொண்டு கோர்ட்டில் ரிஜிஸ்டர் செய்துவிட்டார்கள். பார்க்கிறவர்களெல்லாம் இது அனேகர் கூடிச் சேர்ந்த ஒரு பெரிய பஜார் கம்பெனியென்று மதிக்கத்தக்கதாக இருந்தது. பின் செட்டிப்பிள்ளைகளிடத்தில் அந்த பஜாரை ஈடுவைத்து மூன்று இலக்ஷம் விசாரணைத்தலைவர்கள் பேரால் கடன்

வாங்கினார்கள். அவர்களே பங்குக்காரர்க ளாதலால், தங்கள் தங்களிடத்திலிருந்த பங்கு சீட்டுகளின்பேரிலும் வேறு வேறு செட்டிகளிடத்தில் நூற்றுக்கு எழுபது எழுபத்தைந்து வீதம் வேறு இரண்டு இலக்ஷம் ரூபா வாங்கிக் கொண்டு, இரண்டு வருடத்திற்குப் பின், பஜாரில் எண்ணியவிதம் குடிக்கூலி வரவில்லை யென்று செட்டிகளுக்கு ஒன்றும் கொடுக்காமலிருந்தார்கள். செட்டிகள் பஜாரை ஒப்புக்கொண்டார்கள். செட்டிப்பிள்ளைகள் விசாரணைத் தலைவர்களுக்குக் கொடுத்த தொகைக்கே பஜார் பெறாமற் போனதால், பங்குகளை வைத்துக்கொண்டு பணம் கொடுத்தவர்களெல்லாம் நஷ்டமடைந்தார்கள். விசாரணைத் தலைவர்களுக்குக் கடன் கொடுத்திருந்த செட்டிப்பிள்ளைகள் அனேகர் பங்குகளை வைத்துக்கொண்டும் கடன் கொடுத்து நஷ்ட மடைந்தார்கள். வியாபார விஷயத்தில் அதிகம் அனுபவப்பட்டவர்களே இவ்விதம் ஏமாறிப்போனார்கள். முடிவாக அந்த பஜாரைச் செட்டிப்பிள்ளைகள் வைத்துப் பார்க்க முடியாமல் குறைந்த விலைக்கே விற்றுவிட்டார்கள்.

**பழனியப்ப செட்டியார்.**—இதை யெல்லாம் விசாரிக்காமலா பெருந்தொகையைக் கொண்டுபோய்க் கொடுத்தார்கள்?

**தம்புசாமி பிள்ளை.**—விசாரித்துச் செய்கிற வழக்கம் அவர்களிடம் இல்லை. பர்மா தேசத்தில் தேக்குமரம் வியாபாரம் செய்யும் ஒருவனுக்குக் கடன் கொடுப்பதாக அவனை இரங்கூனுக்குக் கப்பல் மார்க்கமாக அழைத்துவந்தார்கள். கடன் வாங்கப் போகிறவன் முதல் வகுப்பில் யாத்திரை செய்தான். கடன் கொடுப்பவர்கள் மூன்றும் வகுப்பில் யாத்திரை செய்து இரங்கூனுக்கு வந்து அவனுக்குப் பன்னிரண்டு இலக்ஷ ரூபா கடன் கொடுத்து, இரண்டு மூன்று வருடத்தில் செட்டிப்பிள்ளைகள் அதிக நஷ்டமடைந்தது, செட்டிப்பிள்ளைகள் யாவரும் அறிந்ததே. இவர்கள் செய்யும் வியாபார விஷயத்தைப்பற்றி நான் பலமுறை சொல்லி

யும் பயன்படுவதாகக் காணவில்லை. செட்டிகளுக்குள்ள பெரும் நிதியில் அற்பத் தொகையை ஒவ்வொருவரும் போட்டு பெரிய தொழிற்சாலை ஒன்று ஏற்படுத்தினால் தங்கள் பணத்துக்கும் அழிவில்லை. ஏழைகளைக் காப்பாற்ற வும் இடந்தரும். இனிமேலாகிலும் பெரிய முதலாளிகள் யோசித்து வேண்டியதைச் செய்யவேண்டும்.

**பழனியப்ப செட்டியார்.**—ஆம்! ஆம்! அது விஷயத்தை கவ னிக்காமலிருப்பது பரிதாபமே! நீர் இனி ஒருவரிடத்தில் சம்பளத்துக் கிருக்க அவசியமில்லை. ஊருக்கு எப்பொ ழுது போக உத்தேசம்?

**தம்புசாமி பிள்ளை.**—எங்கள் முதலாளி ஸமீபத்தில் ஊருக்குப் போக எண்ணங்கொண்டிருக்கிறார். அவர் போகும்பொழுது நானும் அவரோடு போகலாம் என்று யோசித்திருக் கிறேன். திருவருள் கூட்டி வைக்கவேண்டும்.

---

## 16—ம் அத்தியாயம்

**ம**துரைக்குப் பன்னிரண்டு மைல் தூரத்திலிருக்கும் கள் ளழகரை தரிசித்து வரும் ஒரு சன்னியாசியும் அவர் சீடனும் வழி நடந்துவந்த ஆயாஸம்தீர ஒரு மண்டபத்தில் உட்கார்ந்திருந் தனர். சில நிமிஷத்துக்குப் பின் சந்நியாசி தன் சீடனைப்பார்த்து, "அப்பா! அண்ணாமலை! இன்றிரவை இவ்விடத்தில் கழிக்க லாம் என்று யோசிக்கிறேன்" என்றார்.

**அண்ணாமலை.**—ஸ்வாமி! தங்களுடைய இஷ்டம் போலவே செய்யலாம். எதிரில் காணும் வீடுகளுக்குப் போனால் தங் களுக்கு ஏதாகிலும் உணவு கொண்டுவர முடியும் என்று நினைக்கிறேன்.

**சன்னியாசி.**—அப்பா! எனக்கு ஒன்றும் வேண்டியதில்லை. உனக்கு ஏதாகிலும் வேண்டியதாயிருந்தால் நீ தனித்துப் போய்வரலாம்.

அண்ணுமலை.—எனக்குப் பசி அதிகமாக இருப்பதால் நான் போய்வருகிறேன்.

என்று போய், தன்னுடைய பையிலிருந்து அரைக்கால் ரூபா எடுத்துக்கொடுத்து, தன்னிடமிருந்த ஒரு பெரிய செம்பில் பால் வாங்கி, தன் பையிலிருந்த சர்க்கரையைப் போட்டுக் கொண்டு, தான் ஒன்றும் சாப்பிடாமல் சன்னியாசி யிருக்கும் இடத்தில் வந்து, பெரிய செம்பிலிருக்கும் பாலைத் தன்னிட மிருந்த ஒரு சிறிய செம்பில் கொஞ்சம் விட்டு, மற்றதைப் பெரிய செம்போடு வைத்து, தன் சோல்நாவிலிருந்து நான்கு வாழைப் பழங்களை யெடுத்து, பழங்களையும் பாலையும் சன்னி யாசி கையில் கொடுத்து, "ஸ்வாமி! தாங்கள் ஒன்றும் சாப்பிடா மல் படுத்துக்கொண்டால் நித்திரை வராது. ஆனதால் தாங்கள் சாப்பிடவேண்டும்" என்று வேண்டினன்.

சன்னியாசி.—அப்பா! அண்ணுமலை! எனக்கொன்றும் வேண் டாமென்று முன்னமே சொன்னேன். உனக்குப் பசி அதிகமென்று சொன்னதால் நீயே சாப்பிடு.

அண்ணுமலை.—ஸ்வாமி! தங்களைப் பட்டினியாக இருக்கவிட்டு நான் சாப்பிடுவேனே! தாங்கள் சாப்பிடாமற்போனுல் எனக்கும் ஒன்றும் வேண்டுவதில்லை.

சன்னியாசி.—அப்பா! அண்ணுமலை! எனக்கு அதிக தொந்தரவு கொடுத்துக்கொண்டும், என்னுடைய இஷ்டம்போல் ஒன் றையும் செய்யாவிடாமல் தடுத்துக்கொண்டும், என்னை ஊட்டி ஊட்டி வளர்க்கிருய். நான் எதாகிலும் சொன் ஞல் அழுகிருய். உன் அழுகைக்கு பயந்து நீ விரும்பிய வண்ணம் செய்யவேண்டியது கட்டாயமாக இருக்கிறது. நீ என்னேடு சேர்ந்தபொழுது என்தேகம் எப்படி யிருந்தது? இப்பொழுது எப்படி யிருக்கிறது பார்த்தாயா?

அண்ணுமலை.—நான் வந்தபொழுது தங்களுடைய தேகம் புஷ்டி யாக இருந்தது. இப்பொழுது அதிகம் மெலிந்துபோயி ருக்கிறது. தாங்கள் தனிமையாக இருந்தபொழுது கிடைக்

கும் உணவைத் தாங்கள் ஒருவரே சாப்பிட்டுவந்தீர். நான் தங்களோடு சேர்ந்தபின் கிடைக்கும் உணவை இரண்டு பேர் சாப்பிட்டால் தங்களுடைய தேகம் மெலிய வேண்டியதுதானே !

சன்னியாசி.—நீ சொல்லுவதுபோல் என் தேகம் மெலிந்து போகிறதற்கு பதிலாக புஷ்டியாகிறது. நீ சொல்லாமற் போனாலும் நான் போட்டிருக்கும் அங்கி சொல்லுகிறதே ! நீ என்னோடு சேர்ந்து என்னைப் பெருந்தடிய னாக்கிவிட்டாய். உன்னைப் பார்த்தால் நீ வரும்பொழுது இருந்ததை விட இப்பொழுது அதிகம் மெலிந்துபோயிருக்கிறாய். எது அகப்பட்டாலும் அதை யெல்லாம் என்னையே சாப்பிடச் சொல்லுகிறாய். நான் சாப்பிட்டால் ஸந்தோஷப்படுகிறாய். நான் சாப்பிடாமற் போனால் துக்கப்படுகிறாய். நான் உன்னை ஸந்தோஷப்படுத்தவே சாப்பிட்டுச் சாப்பிட்டுக் கொழுத்துப்போனேன். என்ன செய்கிறது (என்று செம்பிலிருக்கும் பாலை எடுத்தார்).

அண்ணாமலை.—ஸ்வாமி ! முதலில் பழங்களைச் சாப்பிட்டுப் பின் பாலைச் சாப்பிடுங்கள் (என்று செம்பை எடுத்துக்கொண்டான்).

சன்னியாசி.—(நகைத்து) என்னை விடமாட்டாய். நான் கோவிலில் உனக்குக் கொடுத்த பழங்களைச் சாப்பிடாமல் வைத்திருந்தாய் (என்று இரண்டு சாப்பிட்டுச் செம்பைக் கேட்டார்).

அண்ணாமலை.—தாங்கள் மற்ற இரண்டு பழங்களையும் சாப்பிட வேண்டும்.—

சன்னியாசி.—எனக்கொன்றும் வேண்டியதில்லை யென்று சொன்னதையுங் கவனிக்காமல் என்னைச்சாப்பிடச் செய்துவிட்டாய். எனக்குப் பழம் வேண்டுவதில்லை. நீ அவைகளைச் சாப்பிடு.

அண்ணாமலை.—இன்னும் ஒரு பழமாவது சாப்பிடாமற்போனால்,

அந்தப் பழங்களை நான் சாப்பிடாமல் வைத்திருந்து தங்களுக்கே கொடுப்பேன்.

சன்னியாசி.—இதேது பெரிய வம்பாய் முடிந்தது (என்று ஒரு பழத்தைச் சாப்பிட்டுப் பாலைக் கேட்டார்).

அண்ணாமலை.—தாங்கள் வாயைத் திறந்துகொள்ளுங்கள். நான் கொஞ்சம் கொஞ்சமாக வாயில் விடுகிறேன்.

என்று சன்னியாசியின் வாயைத் திறக்கச்செய்து கொஞ்சம் கொஞ்சமாகப் பெரிய செம்பிலிருக்கும் பாலையெல்லாம் குடிக்கச் செய்தான். சாமியார் பாலைக் குடித்த பின் சிறிய செம்பை யெடுத்துப்பார்த்து, அதில் அதிக மில்லாததைக் கண்டு, "அண்ணாமலை, என்ன வேலை செய்தாய்? உனக்கு வைத்துக்கொள்ளாமல் எல்லாம் என்னைச் சாப்பிடும்படி செய்து விட்டாயே" என்றார்.

அண்ணாமலை.—"எனக்கு வேண்டியதை நான் வைத்துகொண்டிருக்கிறேன்."

மீதியாக இருந்த ஒரு பழத்தையும் சிறு செம்பிலிருந்த பாலையும் உண்டு, அண்ணாமலை ஸமீபத்திலிருந்த கிணற்றில் வயிறு நிரம்ப ஜலம் குடித்துச் செம்புகளை சுத்திசெய்து சோல்நாவில் போட்டுக்கொண்டு, சாமியார் படுத்திருக்கும் இடத்திற்கு வந்து அவர் கால்களைப் பிடித்துக்கொண்டிருந்து, அவர் "வேண்டாம்; எனக்கு நித்திரை வருகிறது. நீ போய் படுத்துக்கொள்" என்று கோபமாகச் சொன்னபின், அவர் ஸமீபத்தில் படுத்து நித்திரை போனான். நள்ளிரவில் அண்ணாமலை அழுவதைக் கேட்டுச், சன்னியாசி எழுந்து, 'அண்ணாமலை! அண்ணாமலை!' என்றெழுப்பி, 'ஏனழுகிறாய்?' என்று கேட்டார்.

அண்ணாமலை.—ஸ்வாமி! ஒரு சொப்பனங்கண்டு அழுதுகொண்டிருந்தேன்போல் காண்கிறது. ஏதாகிலும் வேண்டுமோ?

சன்னியாசி.—எனக் கொன்றும் வேண்டியதில்லை. நீ என்ன சொப்பனங் கண்டாய்?

அண்ணாமலை.—ஸ்வாமி! நான் முன் அடுத்திருந்த சாமியார் என்

கனவிலடைந்து "நீ இப்பொழுது அடுத்திருக்கும் பெரிய வரை விடவேண்டாம். அவரை உன் தெய்வமாக நினைத்து அவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்துகொண் டிருப்பதை விரதமாகக் கைக்கொள். 'கற்புடைய பெண் கள் நாயகனை எவ்விதம் தெய்வமாக நினைக்கிறார்களோ,' அதுபோல நீயும் நீ அடுத்திருப்பவரை உன்னுயிருக் குத் துணைவராக எண்ணி நடப்பாய். அவரை விட்டால் உனக்கு வேறு கதியில்லை" என்று சொல்லி மறைந்தார். நான் தாங்களிருக்கும் இடத்தைப் பார்த்தபொழுது, தாங்கள் அவ்விடத்தில் இல்லாமையைக் கண்டு, அதிக துக்கத்துடன் எங்கும் தேடியும் அகப்படாமல் அழுதேன். பின் தாங்கள் என்னைக் கூப்பிட்டவுடன் விழித்துக் கொண்டேன்.

**சன்னியாசி.**—அப்பா! நீ என்னை மேலாக மதித்து எண்ணி யிருப்பதால், அவ்விதம் சொப்பனங் கண்டாய். வெறுங் கையை மூடியிருக்கும் பரியந்தம் கைக்குள் ஏதோ இருக் கிறதென்றும், கையை விரித்தபின் ஒன்றுமில்லை யென் றும் காண்பதுபோல் முடியப்போகிறது. ஆயினும் குற்ற மில்லை. தக்க ஆசான் கிடைத்தால் நான் அப்பொழுது உன்னை அவரிடம் ஒப்பித்துவிடுவதே என் கடமையென் றிருக்கிறேன். அதுபரியந்தம் நீ என்னோடிருப்பதை ஒப் புக்கொண்டிருக்கிறேன்.

**அண்ணாமலை.**—ஸ்வாமி! ஒரு சீடன் ஒரு ஆசானை யடுத்து அவரிடம் உபதேசம் பெறலாம் என்றெண்ணி நெடுநாள் அவருக்குத் தொண்டு செய்து காலங்கழித்தான். ஒருநாள் ஆசான் மறைவான இடத்தில் காலைக்கடன் கழித்திருந்த பொழுது, சீடன் ஒரு செம்பில் ஜலம் கொண்டுபோனான். அப்பொழுது அவ்விடத்தில் பன்றிகளிருந்ததால் பன்றியே தன்னிருப்பிடத்திற்கு வருகிறதென்று, ஆசான் எண்ணி "சீ சீ" என்று துரத்தினார். சீடன் ஆசான் கருத்து

இன்னதென்றறியாது, சீ, சீ, என்றதையே உபதேசமாகக் கொண்டு அதையே ஜபித்து முத்தி யடைந்தானும். ஆதலால் தாங்கள் என்னை எங்கு தள்ளினும் போகேன். தங்களுடைய பாதமே கதியென்று முன் நான் எண்ணி யிருந்ததற் கனுகூலமாக இன்று நான் கண்ட சொப்பனமே என் எண்ணத்தை உறுதிப்படுத்திவிட்டது.

சன்னியாசி.—அப்பா ! அண்ணுமலை ! முற்றிலும் துறந்தவ னென்று உன்னைச் சொல்லவேண்டுமேயொழிய என்னைச் சொல்லுதல் தகாது. ஆனதால் இதுமுதல் என்னை ஓர் சினேகனுக மதித்து நீ உரையாடல் வேண்டும்.

அண்ணுமலை.—ஸ்வாமி ! தாங்கள் எனக்கு அதிக ஸுதந்தரம் கொடுத்தபோதிலும், நான் முன் கொண்டிருக்கும் எண் ணத்தை மாற்றேன். ஆயினும், தங்களிடம் இனிமேல் என் மனதிலுள்ள ஸந்தேகங்களை நிவர்த்தியாக்கிக்கொள்ள வழிகாட்டிவிட்டீர்கள். அடிமையின் மனதில் நெடுநாளாக ஓர் ஸந்தேகம் இருக்கிறது. அதைக் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டு மென்று ஆசை தூண்டுகிறது. உத்தர வானுல் தெரிவித்துகொள்ளுவேன்.

சன்னியாசி.—அப்பா ! உனக்குள்ள ஸந்தேகத்தை நான் நீக்கி விடுவேன் என்ற நம்பிக்கை எனக்கில்லையாயினும், நீ என்ன ஸந்தேகம் கொண்டிருக்கிருய் என்றறிய எனக்கு இஷ்டமாக இருக்கிறது.

அண்ணுமலை.—இல்லறம் பெரிதோ துறவறம் பெரிதோ என்ற ஸந்தேகமே என்னிடத்தில் குடிகொண்டிருக்கிறது.

சன்னியாசி.—முன் காலத்தில் ஒருவர் இக்கேள்வியைத் திரு வள்ளுவரிடம் கேட்கச் சென்றுர். அவர் தன் மனைவியை அழைத்து "எனக்குப் பசியாயிருக்கிறது. சாதம் போடு" என்று சொன்னபோது அடுப்பில் சாதம் வெந்துகொண் டிருந்தும், அவர் மனைவி அதைத் தன் கணவனிடம் சொல் லாமல், கலத்தை வைத்துப் பழைய சாதத்தை வட்டித்து

அவருக்கு வேண்டியதை யெல்லாம் வைத்து, வாசலி லிருந்த கிணற்றில் ஜலமெடுக்கப் போனுள். கயிற்றைச் செம்பில் கட்டிக் கிணற்றில் போட்டுக் கயிற்றைச் சேந் திக்கொண்டு செம்பு பாதி தூரம் வந்தபொழுது, சாப்பிட் டுக்கொண்டிருந்தவர் "பெண்ணே! ஓடிவந்து விசிறு, சாதம் சுடுகிறது" என்ருர். அவள் பாதி தூரத்திலிருக் கும் செம்பை அவ்விதமே விட்டு ஓடித் தன் நாயகனுக்கு விசிறினளாம். கிணற்றிலிருந்த செம்பும் கயிறும் அந்தப் பதிவிரதா சிரோமணி விட்டுப்போன இடத்திலேயே இருந்ததாம். இல்லறம் துறவறத்தின் உயர்வு தாழ்வை அறிய வந்தவர் இவ்விதமான குணமுள்ள மனைவி யிருந்தால் இல்லறமே உயர்வு என்று எண்ணிச் சென்ருர் என்று ஒரு சரித்திரம் வழங்கிவருகிறது.

**அண்ணுமலை.**—தங்களுடைய கருத்தும் அதுதானு! அல்லது வேறு அபிப்பிராயம் உண்டோ?

**சன்னியாசி.**—அப்பா! என் கருத்தை ஒரு உவமானத்தால் காட்டுகிறேன். ஒருவனுக்கு தேகம் அசௌக்கியமா யிருந்தபொழுது வைத்தியன் கடும்பத்தியம் வைத்து ஔஷ தங்கொடுத்து குணப்படுத்தினன். மற்ருெரு வைத்தியன் அதேவிதமான நோயைப் பத்தியத்தில் வைக்காமல் ஔஷ தம் கொடுத்து குணப்படுத்தினன். இவ்விரண்டுவித ஔஷ தத்தில் எது மேலானது!

**அண்ணுமலை.**—பத்தியத்தில் வைக்காமல் குணப்படுத்தியது மேலானது.

**சன்னியாசி.**—ஆம்! நீ சொல்வது நியாயமே! பத்தியத்தி லிருக்க வைத்த ஔஷதம் பத்தியத்தினல் தன் வல்லமை கெடாமல் நோயைக் கண்டித்தது. மற்ற ஔஷதம் எது வந்து தன்னைத் தாக்கினும் அதற்கு இடங்கொடுக் காமல் நோயைக் கண்டித்தது. அதுபோல ஸம் ஸாரபந்தம் தங்களைத் தாக்காமலிருக்கப் பத்தியத்திலிருப்

பதுபோல் துறவியாயிருந்து தன் பிறவி நோயைக் களைவது ஸுலபம். ஸம்ஸாரபந்தத்துக்குள்ளிருந்தும் அதில் மனதை வைத்துவிடாமல், புளியம்பழத்துக்குள் இருக்கும் கொட்டை பழத்துள்ளிருந்தும் அதனோடு பற்றற்றிருப்பது போல், பற்றற்று நிற்பது கடினம் ஆனதால், சிறந்த தெதுவென்று நீயே அறிந்துகொள்ளலாம். ஒளவையாரும்,

பத்தாவுக் கேற்ற பதிவிரதை உண்டானால்
எத்தாலுங் கூடி வாழலாம்—சற்றேனும்
ஏறுமா றாக இருப்பாளே யாமாகில்
கூறாமல் சன்னியாசங் கொள். என்றார்.

அண்ணாமலை.—ஆம், ஸ்வாமி! இல்லறத்துக்கேற்ற நாயகி கிடைத்தாலன்றி இல்லறம் கடினமே. அதனால்தான் என்மனம் இல்லறத்தை வெறுத்தது. தங்களுடைய கருத்தும் அதுவாகவே யிருக்குமென்று நினைக்கிறேன்.

சன்னியாசி.—என்னுடைய கருத்தைக் கேட்கவேண்டாம். என் கருத்து இன்னதென்று அறிவதால் உனக்கு ஒரு நன்மையும் உண்டாகாது.

அண்ணாமலை.—(நகைத்து) ஸ்வாமி! நான் தங்களை அடுத்திருப்பதால் என் மனம் ஸ்திரப்படும் விதம் தங்களுடைய கருத்தையறிய என்னைத் தூண்டுகிறது. தயவு செய்யவேண்டும்.

சன்னியாசி.—என்னுடைய கருத்தைக் கேட்டு அடையத்தக்கது ஒன்றுமில்லை. நீ கொண்டிருக்கும் கருத்தே மேலானது. அதுவே கடைப்பிடியாக நடப்பது மேன்மை.

அண்ணாமலை.—தாங்கள் துறவடைய நேரிட்டதற்குக் காரணம் இல்லாமற் போகாதே! அந்தக் காரணத்தை அறிந்தால் அது எனக்கு அஸ்திவாரம்போ லாகுமென்றே தங்களுக்குத் தொந்தரவு கொடுக்கிறேன்.

சன்னியாசி.—அது விஷயத்தைக் குறித்துக் கேட்கவேண்டாம். அது என்னுடைய இரகசியம். அதைச் சொல்ல எனக்கு மனமில்லை.

அண்ணுமலை.—ஸ்வாமி! நான் தங்களையே என் ஆசான் என்றும் நான் வழிபடுதற்குரிய தெய்வமென்றும் நம்பியிருக்கிறேன். என்னுடைய மனம் திடங்கொள்ள இந்த ஒன்றை மட்டும் சொல்லப் பிரார்த்திக்கிறேன்.

சன்னியாசி.—என் மனதிலிருப்பதைச் சொன்னுல் உன் மனம் திடங்கொள்ளாது என்று அஞ்சுகிறேன். ஆனதால், அது விஷயத்தை நீ கேட்காமலிருப்பது உத்தமம். ஒருவன் ஒரு நன்மையான விஷயத்தில் மனதைச் செலுத்தியிருப்பானுகில், அந்த நன்மையான விஷயம் கெடும்படி அவனுக்கு போதிப்பது கூடாது.

அண்ணுமலை.—ஐயோ! ஸ்வாமி! என்னைவிட சாஸ்திர வுணர்ச்சியும் அதற்கேற்ற அனுபவ முதிர்ச்சியும் தங்களுக்கிருக்க வேண்டியதே! தாங்கள் உண்மை யறியாமலா இவ்விதம் சொல்லுவீர்கள்? நான் சொண்ட கோலத்தில் நன்மை இல்லையென்றே காண்கிறது.

சன்னியாசி.—அப்பா! அதற்குள் அந்த முடிவுக்கு வந்துவிட வேண்டாம். நீ தக்க ஆசானை யடுத்து நன்மையை அடையலாம்.

அண்ணுமலை.—தாங்கள் சொல்வதின் இரகசியத்தை அறிந்தேன். என்னை எவ்விதமும் தங்களிடத்திலிருந்து நீக்கிவிடவேண்டுமென்கிற எண்ணத்தால் தங்களுடைய உண்மையான கருத்தைச் சொல்லாமல் வேறுவிதம் சொல்லுகிறீர்கள். என்னுடைய தீவினையால் ஒரு பெண்ணை விவாகம் செய்துகொண்டேன். அவள் இரண்டு வருடத்திற்குப் பின் தன்னை யறிந்தாள். நானும் என்னையறிந்து இல்லறத்தை வெறுத்து வெளியானேன். விவாகமான பின்பேயோ தாங்களும் துறவறம் பூண்டது?

சன்னியாசி.—அப்பா! அதை யெல்லாம் ஏன் கேட்கிருய்? நெடுங்காலத்திற்குமுன் நடந்து மறந்துபோயிருப்பதை ஏன் நினைப்பூட்டுகிருய்? ("ஆ! கடவுளே! என்னை யேன்

உயிரோடு வைத்திருக்கிறாய்" என்று துக்கத்தோடு சொல்லி, கண்களில் நீரை வடியவிட்டுக் கொண்டிருந்தார்).

அண்ணாமலை.—ஸ்வாமி ! நாம் செய்த வினைக்கீடாக வரும் இன்ப துன்பத்தை நாம் அனுபவிக்க வேண்டியதே ! தாங்கள் துக்கப்படுவதைப் பார்க்க என் மனம் தாளவில்லை (என்று அவனும் கண்களில் நீரை வடியவிட்டான்).

சன்னியாசி.—அப்பா ! அண்ணாமலை ! நீ சற்புத்திரன் ! நீ இந்தச் சண்டாளனோடிருப்பது தெய்வத்துக் கேற்காது. நானும் உன்னைப்போல் ஒரு பெண்ணை விவாகஞ் செய்து சண்டாளனானேன். அவள் எக்கதியானாளோ நானறியேன் (என்று மீண்டும் துக்கப்பட்டார்).

அண்ணாமலை.—ஸ்வாமி ! தாங்கள் வெளிப்பட்டபின் அவளைப் பார்க்கவில்லையோ ?

சன்னியாசி.—நான் அவளைப் பார்க்கத் தகுந்த நிலைமையில் இல்லையே. நான் எப்படி அவளைப் போய்ப் பார்ப்பேன் ?

அண்ணாமலை.—தங்களுடைய மனைவிக்கு அன்ன வஸ்திரத் துக்குக் குறைவில்லையே ! தாங்கள் அவளை நினைத்து துக்கப்படுவதுபோல் அவள் தங்களை நினைக்கிறாளோ இல்லையோ !

சன்னியாசி.—அவள் என்மேல் வைத்திருந்த அன்பால் நான் இக்கதியானேன். அவளுடைய தாய் தந்தை பெருந்தனவந்தர். எனக்கும் பொருள் பூமி அதிகம் உண்டு. ஆனதால் அவளுடைய ஸம்ரக்ஷணைக்குக் குறைவில்லை.

அண்ணாமலை.—தங்களுடைய மனைவிக்கு யாதொரு குறைவுமில்லை என்பதால் தாங்கள் அவளைக் குறித்துக் கவலையடைய அவசியம் இல்லையே. தங்களுக்குக் குழந்தைகள் உண்டோ ?

சன்னியாசி.—ஒருவருக்கும் சொல்லாமல் நான் இரகசியமாக வைத்திருந்ததை என் வாயிலிருந்து பிடுங்கிவிட்டாய். இனியொன்றும் என்னைக் கேட்கவேண்டாம். எனக்கு நித்திரை வருகிறது (என்று படுத்துக்கொண்டார்).

# 17—ம் அத்தியாயம்

திருச்சிராப்பள்ளி மேட்டுச் சிந்தாமணியில் துரைசாமி அதிக துக்கத்தோடு கூடத்தில் உட்கார்ந்திருப்பதைக் கண்ட அவன் மனைவி பார்வதி, அவனருகில் நின்று, "தாங்கள் துக்கப் படுவதில் என்ன பிரயோசனம்? தாங்கள் யாரிடத்திலாவது அவன் கேட்கும் தொகையை வாங்கிக்கொடுத்து, நிலத்தையும் நகைகளையும் கைவசமாக்கிக்கொள்ளாமல் தலையைப் பிடித்துக் கொண்டிருந்தால் ஆவதென்ன?" என்றாள்.

துரைசாமி.—நீ பெரும் பைத்தியக்காரி! யார் நமக்கு ஐயாயிரம் ஆறாயிரம் கடன் கொடுப்பார்கள்? அந்தப் படுபாவி நகை களையுங் கொடுக்காமல் வைத்துக்கொண்டு வம்பு செய்கிறான். அந்த துன்மார்க்கன் வடிவேலும் நமக்கு இடைஞ்சலாக வல் லவோ இருந்தான்.

பார்வதி.—அவன் என்ன செய்தான்?

துரைசாமி.—மோராமாலையை வாங்கிக்கொள்ள அவன் தந்தை ஸம்மதப்பட்டிருந்ததை அவன் தடுத்துவிட்டதாகச் சேலத் தாரால் கேள்விப்பட்டேன். அதை விற்றிருந்தால், மற்ற நகைகள் நமக்குக் கிடைத்திருக்கும்.

பார்வதி.—அவனை அன்றே அடித்திருக்கவேண்டும். தாங்கள் அவனை விட்டுவிட்டதால் தங்கள் சிறிய தாயாரை அழைத் துப் போனதோடு நமக்குக் கெடுதலும் செய்ய ஆரம்பித் தான்.

அப்பொழுது கதவு தட்டுகிற சத்தம் கேட்டு, ஓடிப்போய்க் கதவைத் திறந்து, நீங்கள் யாரென அங்கு நின்றிருந்த இருவரைக் கேட்டாள். இருவரில் ஒருவன் "துரைசாமி பிள்ளை வீட்டில் இருக்கிறாரா?" என்று கேட்டான். இருக்கிறாரென்று அவர்

களை வீட்டுக்குள் அழைத்துவந்து தன் நாயகனிடம் விட்டு, "இவர்கள் தங்களைத் தேடிக்கொண்டு வந்திருக்கிறார்கள்" என்றாள்.

**துரைசாமி.**—(அவர்களைப்பார்த்து), என்னையா தேடிக்கொண்டு வந்தீர்கள்? உங்களை நான் அறியேன். நீங்கள் யார்? உங்கள் பேர் என்ன?

**வந்தவர்களிலொருவன்.**—என்பெயர் அப்பாசாமி. இவர் பெயர் திருஞானம்.

**துரைசாமி.**—நான் உங்களுக்கு என்ன செய்யவேண்டும்? என் பெயரை எப்படி அறிந்தீர்களோ தெரியவில்லை.

**அப்பாசாமி.**—நாங்கள் இந்த ஊர் அல்ல. ஆனதால் எங்களை அறியீர்கள். நாங்கள் ஒருவனைத் தேடிக்கொண்டு வந்தோம். அவன் இருக்குமிடம் உமக்குத் தெரியுமென்று கேள்விப்பட்டு இங்கு உம்மைத் தேடிவந்தோம்.

**துரைசாமி.**—யாரைத் தேடிக்கொண்டு வந்தீர்கள்?

**அப்பாசாமி.**—வடிவேலு என்பவனை.

**துரைசாமி.**—அவனை ஏன் தேடுகிறீர்கள்?

**அப்பாசாமி.**—அவன் அசாத்தியமான காரியத்தைச் செய்து வந்திருக்கிறான்.

**துரைசாமி.**—என்ன காரியத்தைச் செய்து வந்திருக்கிறான்?

**அப்பாசாமி.**—அதைச் சொல்ல எங்களுக்குப் பிரியமில்லை. அவன் இவ்வீட்டிற்கு வேண்டியவனாகக் காணப்படுகிறான் என்று கேள்வி. உம்முடைய சிறிய தாயார் அவனை அன்பாக நடத்திவருகிறதாகக் கேள்விப்பட்டிருக்கிறோம்.

**துரைசாமி.**—அப்படுபாவிகளை உதைத்துத் துரத்தி விட்டேன். அவர்களிருவரும் இனிமேல் இவ்வீட்டிற்கு வரமாட்டார்கள். நீங்கள் ஒன்றையும் மறைக்காமல் சொல்லலாம். அவன் ஏதாகிலும் கெடுதலான காரியத்தைச் செய்து வந்திருந்

தால், நானும் உங்களுக்குத் துணைநின்று உங்களுக்கு வேண்டியதைச் செய்வேன்.

**அப்பாசாமி.**—நீர் சொல்லுவதைக் கேட்டு நம்பியே சொல்லுகிறேன். அவன் ஒரு நகையைத் திருடிக்கொண்டு வந்திருக்கிறான்.

**துரைசாமி.**—என்ன நகையைத் திருடிக்கொண்டு வந்திருக்கிறான்? (என்று ஆச்சரியத்தோடு கேட்டான்).

**அப்பாசாமி.**—ஒரு மோராமாலையை !

**துரைசாமி.**—மோராமாலையா ! ஸபாஷ் ! ஸபாஷ் ! இப்பொழுதல்லவா இரகசியம் வெளிப்பட்டது ?

**அப்பாசாமி.**—என்ன இரகசியம் வெளிப்பட்டதென்கிறீர் ? (என்று ஆத்திரத்தோடு கேட்டான்).

**துரைசாமி.**—என்னுடைய மோராமாலையை வாங்கிக்கொள்ள விலை பேசி எடுத்துப்போன அவன் தந்தை வேண்டாமென்று திருப்பிக் கொடுத்துவிட்டான். ஆனதால் அவர்களிடத்தில் மோராமாலை ஒன்றிருப்பதால், என்னுடையதை வேண்டாமென்று சொல்லிவிட்டார்கள்போல் காண்கிறது. வடிவேலு திருடிவந்த மோராமாலை யாருடையது ? அதை எவ்விதம் கைப்பற்றினன் ?

**அப்பாசாமி.**—இவருக்கு ஸமீபத்தில் விவாகமாயிற்று. மணப்பெண் போட்டிருந்த நகைகளைக் கழற்றி ஒரு தட்டில் வைத்து மணப்பெண்ணின் தலைமயிரை ஒரு பெண்பிள்ளை சீவிக்கொண்டிருந்தாள். பின்பு தட்டிலிருந்த நகைகளை மணப்பெண்ணுக் கணிந்து மோராமாலையைப் பார்த்தபொழுது அது காணப்படவில்லை. இவன் அங்கு நின்று மோராமாலையை எடுத்துப் பார்த்துக்கொண்டிருந்தானென்று பலர் சொல்லுகிறார்கள். அவன் எவ்விதமாகவோ அவ்விடத்தைவிட்டு நீங்கினன். நாங்கள் பார்க்காத இடம் இல்லை. பின் ஒருவன் ‘அவன் வண்டியிலேறிப் போனதைப் பார்த்தேன்’ என்று சொல்ல, உடனே

நாங்கள் வரமுடியாமல் வேறு மனிதரை அனுப்பித் தேடச் செய்தோம். அவன் அகப்படாமையால் நாங்களே தேடித் திரிந்து அவன் இவ்வூரிலிருப்பதாக அறிந்து வந்தோம். அவன் உங்கள் வீட்டிற்கு அதிகம் வந்துகொண்டிருப்ப தாக இவ்விடத்தில் எங்களூரார் ஒருவரால் கேள்விப்பட்டு வந்தோம்.

துரைசாமி.—மோராமாலே காணுமல் போனதைப் போலீஸா ரிடம் தெரிவித்திருக்கிறீர்களா ?

அப்பாசாமி.—போலீஸாருக்குத் தெரிவிக்க வேண்டாமென்று இவர் தந்தை சொல்லியதால் தெரிவிக்கவில்லை.

துரைசாமி.—போலீஸாருக்குத் தெரிவித்திருக்க வேண்டும். அவன் இவ்வூரில் இல்லையே. அதற்கென்ன செய்யப் போகிறீர்கள் ?

அப்பாசாமி.—என்ன சொன்னீர் ? அவன் இவ்வூரில் இல்லையா ? அவன் சென்ற இடமாகிலும் தெரிந்தால் சொல்லப் பிரார்த்திக்கிறோம். அவன் எங்கே போயிருந்தாலும் அவனைக் கண்டுபிடிக்கவேண்டியதே !

துரைசாமி.—அவன் தாய் தந்தை தங்கை என் சிறிய தாயார் முதலானவர்களோடு மதுரைக்குப் போயிருக்கிறான் என்று கேள்வி.

அப்பாசாமி.—திருஞானம் ! இனி நாம் இவ்விடத்தில் காலம் போக்குவதில் பிரயோசனம் இல்லை. உடனே பிரயாணப் படவேண்டும்.

திருஞானம்.—(துக்கத்தோடு) ஆம் ! ஆம் ! (என்றெழுந்தான்).

துரைசாமி.—உங்களுக்கு மதுரையில் யாராகிலும் தெரியுமா ?

அப்பாசாமி.—நாங்கள் மதுரைக்குப் போயிருக்கிறோம். ஆயினும் அங்கே ஒருவரையும் அறியோம்.

துரைசாமி.—உங்களுக்குத் துணையாக என்னை வரச்சொன்னால் வரத் தடையில்லை. அப்படுபாவியின் உண்மையான குண த்தை வெளிக்குக் கொண்டுவந்து அவனை தண்டனை யடை

யச் செய்யவேண்டுமென்பதே என்னுடைய கருத்து, அவன் மகா கொடியன்.

**திருஞானம்.**—நீர் எங்களோடு வந்தால், நாங்கள் அறியாததை எடுத்துச் சொல்லி, எங்களுடைய பொருள் எங்களைச் சேரும்படி செய்வீர். நாங்கள் இன்று மாலை பிரயாணப் பட யோசித்திருக்கிறோம்.

**துரைசாமி.**—நீங்கள் எங்கே தங்கியிருக்கிறீர்கள் ?

**திருஞானம்.**—திருவானைக்காவலில் இருக்கிறோம்.

**துரைசாமி.**—நீங்கள் போகும்பொழுது இம்மார்க்கமே போக வேண்டும் ஆதலால், வண்டியை என்னுடைய வீட்டுக்கெதிரில் நிறுத்திக்கொண்டு கூப்பிட்டால், நானும் உங்களோடு வருகிறேன்.

**என்று** சொன்ன பின் அப்பாசாமியும் திருஞானமும் விடைபெற்று நீங்கினார்கள். பார்வதி யாவும் கேட்டுக்கொண்டிருந்தவளாதலால், தன் நாயகனைப் பார்த்து, "இதென்ன அநியாயம் ? மணப்பெண்ணுக்குப் போட வைத்திருந்த நகையைக் கைப்பற்றினவன் வேறெதைச் செய்யத் துணியான். இப்பேர்ப்பட்ட யோக்கியனை நாம் வீட்டில் வரவழைத்துக்கொண்டிருந்தோமே" என்றாள்.

**துரைசாமி.**—நாம் பாக்குவெற்றிலை வைத்து அழைத்தோமோ ! அப்பெரிய கழுதையல்லவோ அவனை அழைத்துவந்தது.

**பார்வதி.**—அவனைப் பிடித்துக்கொண்டால், போலீஸார் என்ன செய்வார்கள் ?

**துரைசாமி.**—இந்த மூடர்கள் மோராமாலை போனபொழுதே போலீஸில் தெரிவித்திருக்கவேண்டும். ஆயினும் தோஷமில்லை. நகை அகப்பட்டுப்போனால் வடிவேலு சிறைச் சாலைக்குப் போகவேண்டியதே.

**பார்வதி.**—தாங்கள் அவர்களோடு போய்விட்டால், இவ்வீட்டில் நான் குழந்தைகளோடு தனித்து எப்படி இருப்பேன் ?

துரைசாமி.—அக்கம்பக்கத்தி லிருக்கும் கிழங்களில் ஒருத்தியை வந்து படுத்துக்கொள்ளச் சொல்.

பார்வதி.—தாங்கள் எத்தனை நாளைக்குள் வருவீர்கள் ?

துரைசாமி.—என்னைப் பிடித்துத் தள்ளிய கைகளை முறித்து விடும்படி செய்து உடனே வந்துவிடுகிறேன்.

அப்பால் அவன் வெளியில் சென்று, நெடுநேரத்திற் குப்பின் வந்து, இராத்திரி போஜனம் உண்டு படுத்துக்கொண் டான். இரவு பன்னிரண்டு மணிக்கு மாட்டுவண்டியொன்று வீட்டுக்கெதிரில் வந்து நின்றவுடன், வண்டியிலிருந்து அப்பா சாமி இறங்கிக் கதவைத் தட்டினான். உடனே துரைசாமி எழுந்து கதவைத் திறந்து ஒரு மூட்டையோடு வெளியில் வந்து, தன் மனைவியைக் கதவை மூடிக்கொள்ளச் சொல்லி அவளிடத் தில் பயணம் சொல்லிக்கொண்டே வண்டியில் ஏறினான். உடனே அப்பாசாமியும் ஏறிக்கொண்டு வண்டியை ஓட்டும்படி சொன்னான். வண்டிக்காரன் மாடுகளை அதட்டியும் அடித்தும் வேகமாய் நடத் திக்கொண்டுபோனான்.

திருஞானம்.—துரைசாமி பிள்ளை! நீர் நல்ல நித்திரையில் இருப்பீரென்றே நினைத்திருந்தோம். நீர் விழித்துக்கொண் டிருந்ததுபோல் காண்கிறது.

ரைசாமி.—நீங்கள் வருவீர்களென்றே விழித்திருந்தேன் நாம் முதலில் திண்டுக்கல்லில் அவனைத் தேடிப் பார்த்துப் பின் மதுரைக்குப் போகவேண்டும் ?

அபபாசாமி.—நீர் மதுரையிலிருப்பான் என்றல்லவோ சொன் னீர் ?

துரைசாமி.—இப்பொழுதும் மதுரையில் இருப்பானென்றே நினைக்கிறேன். என்னோடிருந்த என் சிறிய தாயாரின் மனதைக் கலைத்து, அவர்கள் தாய்வீடு திண்டுக்கல்லி லிருப்பதால் அவர்களை அங்கு விட்டுப் போவதாகச் சொன்னானென்று, நீங்கள் என்னை விட்டுப் போனபின்,

அறிந்தேன். ஆதலால், சிலவேளை திண்டுக்கல்லில் இருக்கக் கூடுமென்று நினைக்கிறேன்.

**அப்பாசாமி.**—நாம் காலை மணப்பாறையில் நின்று நாளையிரவு பிரயாணப்பட்டு அடுத்த நாள் காலையில் திண்டுக்கல்லைச் சேரவேண்டும். அன்றைய பகற்பொழுதை அவ்விடத்தில் கழிக்கவேண்டியதால், அவனைத் தேடிப் பார்க்கப் பகலெல்லாம் இருக்கிறது. அவன் அங்கில்லாத விஷயத்தில் அன்றிரவு பிரயாணப்படலாம்.

**திருஞானம்.**—(துரைசாமி பிள்ளையைப் பார்த்து) திண்டுக்கல்லில் உம்மைத் தெரிந்தவர்கள் இருக்கிறார்களா ?

**துரைசாமி.**—அனேகர் உண்டு. நாம் வண்டிப்பேட்டையில் போய்த் தங்கவேண்டிய அவசியம் இல்லை.

என்று பல விஷயங்களைப் பேசிக்கொண்டே காலை மணப்பாறையில் தங்கியிருந்து, அடுத்த நாள் காலையில் திண்டுக் கல்லைச் சேர்ந்தார்கள். ஊர் கடைசியில் பழனிக்குப் போகும் மார்க்கத்திலுள்ள ஒரு தனி வீட்டுக்கருகில் வண்டி போய் நின்றது. உடனே துரைசாமி இறங்கி வீட்டுக்குள் சென்று ஒருவரை அழைத்துவந்து, "இவர் என் சிறியதந்தை இலக்கைய பிள்ளை" என்று சொல்லி, பின் இலக்கைய பிள்ளையைப் பார்த்து "வண்டியி லிருப்பவர்கள் அப்பாசாமி பிள்ளையும் திருஞானம் பிள்ளையும்" என்று சொன்னான். இலக்கைய பிள்ளை வண்டியி லிருப்பவர்களை இறங்கச் சொல்லி அவர்களை வீட்டுக்குள் அழைத்துப்போய் உபசரித்தார்.

**துரைசாமி.**—(இலக்கைய பிள்ளையைப் பார்த்து) அண்ணா ! என்னுடைய சிறிய தாயார் இவ்விடம் வந்திருக்கிறார்களா ?

**இலக்கைய பிள்ளை.**—தம்பி துரைசாமி ! நீ கேட்பது ஆச்சரியத்தைத் தருகிறது. உன் சிறிய தாயார் உன்னைவிட்டு நீங்கினார்களா ?

**துரைசாமி.**—அண்ணா! நான் என்ன செய்வேன் ? என்மகன் ஒரு நாள் விளக்கேற்றியவுடன் உட்கார்ந்து வாசிக்காமல் விளை

யாடிக்கொண்டிருந்தான். அவன் தாயார் அவனை அதட்டி "போய் உட்கார்ந்து வாசி" என்றாள். என் மகன் தன் தாயாருக்கு நங்கு காட்டியோடி என் சிறிய தாயாரைக் கட்டிப்பிடித்துக்கொண்டான். என் மனைவி அவனைப் பின் றொடர்ந்தோடி அவனை முதுகில் அடித்தாள். அந்த அடி உரமாகவே பட்டது. சிறு குழந்தைகளை மாட்டை அடிப் பதுபோலவா அடிக்கிறது என்று என் சிறிய தாயார் கோபித்தார்கள். அதனால் பேச்சு வளர்ந்தது. நானும் விளையாட்டாகச் சொன்னதை வினையாகக் கொண்டு கோபித்து, எங்களை விட்டு நீங்கி, எங்களுடைய வீட்டுக்கு வந்துகொண்டிருந்த வடிவேலு என்றவன் வீட்டில்போ யிருந்தார்கள். ஆனால், அவன் தாய்தந்தை மதுரைக்குப் போக யோசித்திருந்ததால், சில வேளை இங்கே கொண்டு வந்து விட்டுப் போயிருப்பார்களென்று நினைத்தே தங்க ளைக் கேட்டேன்.

**இலக்கைய பிள்ளை.**—தம்பி! நான் நேற்றிரவு உன்னுடைய பாட்டனுரோடு நெடுநேரம் வார்த்தையாடிக்கொண்டிருந் தேன். உன்னுடைய சிறியதாயார் வந்திருந்தால் சொல்லி யிருப்பார். நான் விசாரித்துவருகிறேன். நீங்கள் காலைக் கடனை முடித்துக்கொள்ளுங்கள். நான் விரைவில் வந்து விடுகிறேன் (என்று வெளியில் சென்றார்).

துரைசாமி திருஞானத்தையும் அப்பாசாமியையும் அழைத்து வெளியில் சென்றான். காலைக்கடனை முடித்துக் கொண்டு யாவரும் வீட்டுக்குள் வந்தார்கள். இலக்கைய பிள்ளை அவர்களைப் பார்த்து, "என் மனைவி தன் மகள் வீட்டுக்குச் சிறுவர்களோடு போயிருக்கிறாள். ஆனதால் என் இஷ்டப்பிர காரம் செய்ய முடியவில்லை" என்றார்.

**துரைசாமி.**—தாங்கள் அதிகம் சிரமப்பட்டு எங்களுக்கு வேண் டிய பலகாரங்களோடு மலைவாழைப்பழமும் காப்பியும்

கொண்டுவந்திருக்கிறீர்கள். வேறென்ன வேண்டும்? (என்று யாவரும் உடகார்ந்து சாப்பிட்டார்கள்).

**இலக்கைய பிள்ளை.**—துரைசாமி பிள்ளை! நான் உன்னுடைய பாட்டனார் வீட்டிற்குப் போய் விசாரித்துவந்தேன். உன்னுடைய சிறிய தாயாரைக் குறித்து அவர்களுக்கு ஒன்றும் தெரியாதென்று சொன்னார்கள்.

**துரைசாமி.**—நான் இவ்விடம் வந்திருப்பதாகச் சொன்னீர்களோ?

**இலக்கைய பிள்ளை.**—நான் உன்னுடைய கருத்தைக் கண்டு கொண்டே உன்னைக் குறித்து ஒன்றும் சொல்லவில்லை.

**துரைசாமி.**—என்னுடைய கருத்து என்னவென்று கண்டுகொண்டீர்கள்?

**இலக்கைய பிள்ளை.**—நீ உன்னுடைய பாட்டனார் வீட்டிற்குப் போகாமல் இவ்விடம் வந்ததால், உன்னுடைய வரவு அவர்களுக்குத் தெரியாமலிருக்கவேண்டும் என்பதே.

**துரைசாமி.**—(திருஞானத்தையும் அப்பாசாமியையும் பார்த்து) என் சிறிய தந்தையின் கூர்ந்த அறிவை அறிந்தீர்களா?

இருவரும் நகைத்துப் பல விஷயங்களைக் குறித்துப் பேசிக் காலத்தைக் கழித்துக்கொண்டிருந்தார்கள். டன்னிரண்டு மணிக்கு மேல் இலக்கைய பிள்ளை மூவரையும் பார்த்து "நான் பிராமணன் வீட்டில் சாப்பாடு செய்யச் சொல்லிவந்திருக்கிறேன். நாம் அங்கு சென்று சாப்பிட்டு வரலாம். இங்கு வரவழைத்தால் நம்முடைய இஷ்டப்பிரகாரம் சாப்பிட முடியாதல்லவா?" என்றார். பிராமணன் வீட்டில் போய்ச் சாப்பிடுவதே உத்தமமென்று மூவரும் சொன்னதால், அவர்களை அழைத்துக்கொண்டு போகும் பொழுது, ஒரு ஸுந்தரமான பெண் தான் நின்றிருந்த வீட்டிற் கருகில் இவர்கள் வருவதைக் கண்டு கதவை மூடிக்கொண்டு கதவினிடுக்கில் பார்த்துக்கொண்டிருந்தாள்.

அன்றிரவு பத்துமணிக்கு வண்டிகட்டி இலக்கைய

பிள்ளை யிடத்தில் பயணம் சொல்லிக் கொள்ளும்பொழுது, "நாங்கள் ஒரு ஸமயம் இரண்டு மூன்று தினத்தில் திரும்பிவந்தாலும் வருவோம்" என்று சொல்லிப் புறப்பட்டார்கள்.

**இலக்கைய பிள்ளை.**—"என் மனைவியையும் சிறுவர்களையும் அழைத்துவர நானும் என் மருமகன் வீட்டிற்குப் போக வேண்டியவனாக இருக்கிறேன். நானில்லாத காலத்தில் வருவீர்களானால் நீங்கள் இவ்வீட்டிலேயே வந்திறங்களாம். நான் போகும்பொழுது வீட்டைப் பூட்டிச் சாவியை வைத்துப்போகிறேன். அந்த இடத்தைக் காட்டுகிறேன்" என்று ஒரு இடத்தைக்காட்டி, "இதில் சாவியிருக்கும். எடுத்துத் திறந்து நீங்கள் சௌக்கியமாக இருக்கலாம். நான் வருகிறதற்குமுன் நீங்கள் போய்விடுகிறதா யிருந்தால், இந்த இடத்திலேயே சாவியை வைத்துப்போங்கள்" என்று அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பினார்.

திண்டுக்கல்லை விட்டு மதுரைச்சாலையில் வண்டி போகும் பொழுது, அப்பாசாமி திருஞானத்தை இரகசியமாக "நான் துரைசாமி பிள்ளைக்குச் சொல்லிவிடுகிறதா!" என்று கேட்டான்.

**திருஞானம்.**—துரைசாமி பிள்ளை அறியாமல் நாம் ஒன்றும் செய்ய முடியாது. சொல்வது கட்டாயமே.

**அப்பாமி.**—நாங்கள் சொல்லப்போகிறதைக் கேட்டுக் கோபித்துக்கொள்ளக்கூடாது. நாங்கள் இதுபரியந்தம் ஓர் ரகசியத்தை உம்மிடத்தில் சொல்லாமல் மறைத்துவைத்திருந்தோம். அது விஷயத்தைக் குறித்து எங்களை மன்னித்து உதவி செய்யவேண்டும் (என்று துரைசாமி கைகளைப் பிடித்துக்கொண்டு கெஞ்சினான்).

**துரைசாமி.**—நீங்கள் இருவர்களும் எனக்கு இளையவர்களாக இருப்பதால், உங்களை என் இளைய ஸகோதரர்களைப்போல் எண்ணியுள்ளேன். எதாகிலும் ஒரு காரணத்தால் மறைத்துச் சொல்லியிருக்கக்கூடும். அதில் தோஷம் ஒன்று

மில்லை. எதை மறைத்து வைத்திருக்கிறீர்கள்? நான் என்ன உதவி செய்யவேண்டும்? சொல்வீர்களானல் என்னல் கூடுமானதைச் செய்யத் தடையில்லை.

அப்பாசாமி.—அண்ணு! அந்தப் படுபாவி வடிவேலு ஒரு அசாத்தியமான காரியத்தைச் செய்து ஓடிவிட்டான். ஆனதால் அவனை எவ்விதமும் தக்கவிதம் தண்டிக்கவேண்டுமென்ற எண்ணத்தால் நாங்கள் வெளிப்பட்டுத் தங்களைக் கண்டு மோராமாலையைக் கொண்டுபோனனென்று ஒரு பொய்யைச் சொன்னேம். அதுதான் எங்கள்மேல் பெருங்குற்றம்.

துரைசாமி.—தம்பிமார்களே! மோராமாலையைக் கொண்டுபோனனென்று நீங்கள் சொன்னதைக் கேட்டபொழுது எனக்குண்டாகிய ஸந்தோஷத்திற்கு அளவில்லை. நான் அவன்மேல் கொண்டிருக்கும் கோபத்தைக் காட்ட நல்ல ஸமயம் வாய்த்ததென்றே உங்களோடு வந்தேன். அவன் செய்த காரியம் நன்மையாக இருந்தாலும், தீமையாக இருந்தாலும், எனக்கு அவசியமில்லை. எவ்விதத்திலும் என் எண்ணத்தை நிறைவேற்றுவேன்.

அப்பாசாமி.—எங்கள் தமயனிடம் அவன் செய்ததைச் சொல்லாமலிருப்பது நியாயமல்ல. அண்ணு! என் சினேகரும் என் ஸகோதரருமாகிய இவருக்கு ஒரு பெண்ணை அவனுடைய தாய் தந்தை ஸம்மதமில்லாமல் திருச்செங்கோட்டுக்குக் கொண்டுவந்து இரவில் மணமுடிக்க ஏற்பாடு செய்திருந்தபொழுது, எங்களுடைய எண்ணங் கெடும்படியாக வேறுபெண்ணை அனுப்பி அவளை விவாக முடிக்கச்செய்து, நாங்கள் கொண்டுவந்த பெண்ணைக் கொண்டுபோய்விட்டான். அப்பாதகனைச் சும்மா விட்டுவிடலாமோ?

துரைசாமி.—ஆ! ஆ! இதென்ன மாயவித்தை போலல்லவோ காண்கிறது! பெண்ணை எவ்விதம் மாற்ற முடிந்தது!

அப்பாசாமி.—நமக்கு அது அசாத்திய காரியம்போல் காண்கிறது. அவன் எளிதாகச் செய்து முடித்துவிட்டான்

எவ்விதமெனில், நாங்கள் மணப்பெண்ணைச் சிங்காரிகக ஒரு பெண்பிள்ளையை அழைத்துவரச் சொன்னபொழுது, அவள் தன் மகளென்று தன்னோடு ஒரு பெண்ணை அழைத்துவரச்செய்து, அவளை அலங்கரித்துவிட்டு மணமகளாயிருந்தவளை அழைத்துக்கொண்டு போய்விட்டாள். விவாகத்துக்கு வந்திருந்தவர்கள் மணப்பெண்ணை அறியாதவர்களானதாலும், இரவில் முகூர்த்தம் நடந்தேறியதாலும், உடனே கண்டுகொள்ள முடியாமற்போனது. கழுத்தில் தாலி ஏறியபின் கண்டுகொண்டும் பிரயோசனமில்லாமல் போயிற்று.

துரைசாமி.—நீங்கள் சொல்லியவிதமே முடிந்ததென்று எவ்விதம் அறிந்தீர்கள்?

அப்பாசாமி.—விவாகம் நடந்த வீட்டிலிருந்த ஒரு பெண்பிள்ளையால், ஒருத்தி ஒரு பெண்ணோடு வந்து மணப்பெண்ணை அலங்கரித்து, மிக்க அவசரமாகத் தான் போகவேண்டுமென்றும், பெண்ணோடு போய்விட்டாளென்றும், வந்த பெண் முக்காட்டுடன் வந்து முக்காட்டுடன் போனாளென்றும் சொல்ல அறிந்தோம்.

துரைசாமி.—இவ்விதம் செய்தவளை விடக்கூடாது. அவளுடைய கையைக்காலை முறித்தாலும் அல்லது அவளைக் கொன்றாலும் தோஷமில்லை.

அதைக்கேட்ட அப்பாசாமியும் திருஞானமும் துரைசாமியின் உதவி யிருக்குமாயின் வடிவேலைத் தங்க ளிஷ்டம்போல் தண்டிக்கலாம் என்று ஸந்தோஷமாக வார்த்தையாடிக்கொண்டு போனார்கள்.



# 18—ம் அத்தியாயம்

மதுரையில், கள்ளழகர் கோவிலுக்குப் போகும் மார்க்கத்திலுள்ள ஓர் மச்சு வீட்டுக்குள், கூடத்தில் உட்கார்ந்திருந்த இருவரில் ஒருவன் மற்றவனைப்பார்த்து, "வடிவேலு பிள்ளை! மதுரையில் என்னென்ன பார்த்தீர்?" என்று கேட்டான்.

வடிவேலு.—நல்லதம்பி பிள்ளை! நாங்கள் மதுரையில் வந்து ஒரு வாரமாகிறது. மதுரையில் பார்க்கவேண்டிய இடங்களையெல்லாம் பார்த்தோம். இன்று மாலை இவ்வூரை விட்டுப் போக யோசித்திருக்கிறோம்.

நல்லதம்பி பிள்ளை.—அனேக ஸ்தலங்களைப் பார்த்து வந்திருக்கிறீர்கள். இப்பொழுது எங்கே போக உத்தேசம்! நேராகச் சேலத்துக்குத் தானே!

வடிவேலு.—இல்லை. திண்டுக்கல்லுக்குப் போய்ச் சிலநாள் அங்கிருந்து பின் திருச்சிராப்பள்ளிக்குப் போகவேண்டும். அங்கு சில மாதம் இருக்கவேண்டுமென்கிற எண்ணம் இருக்கிறது.

நல்லதம்பி பிள்ளை.—ஏதாகிலும் வேலை திருச்சிராப்பள்ளியில் உண்டோ?

வடிவேலு.—வேலை ஒன்றுமில்லை. அங்கு ஒரு பிரசங்கியார் சித்தாந்த சாத்திரத்தை நன்கு போதிக்கிறாரென்று கேள்வியானதால், சிலநாள் அவரிடம் பாடங் கேட்கவேண்டுமென்கிற அபிப்பிராயம் இருக்கிறது.

நல்லதம்பி பிள்ளை.—அது நல்லதுதான். உம்முடைய தாய் தந்தை அதுபரியந்தம் தங்கள் வேலையை விட்டுத் திருச்சிராப்பள்ளியில் இருப்பார்களா?

வடிவேலு.—என் தாய் தந்தை திருச்சிராப்பள்ளியிலிருக்க இஷ்டங்கொண்டிருக்கிறார்கள். நினைத்த காலம் ரெயில் மார்க்கம் சேலத்துக்குப் போய்வரக்கூடும்.

நல்லதம்பி பிள்ளை.—நீர் எழுந்து கைகால்களை சுத்திசெய்து

கொள்ளும். பலகாரமானபின் வார்த்தையாடிக்கொண்டிருக்கலாம்.

வடிவேலு.—நீர் வீண் தொந்தரவு எடுத்துக்கொண்டீர்.

உடனே இருவரும் கைகால்களை சுத்திசெய்து பலகாரங்கள் வட்டித்திருக்கும் இலைகளுக்குமுன் உட்கார்ந்து பலகாரங்களைச் சாப்பிட்டுக் காப்பியும் குடித்தார்கள்.

நல்லதம்பி பிள்ளை.—உம்முடைய வீட்டில் அதிகம் காப்பித்தூள் போட்டுச் செய்வார்கள். இவ்விடத்தில் செய்திருக்கும் காப்பி உமக்கு நன்று யிருக்குமென்று நான் நினைக்கவில்லை.

வடிவேலு.—இப்பொழுது சாப்பிட்ட காப்பியைப்போல் நான் எப்பொழுதும் சாப்பிட்டதே யில்லை. அதிகம் கசப்பாக இருந்தது. இன்னம் வாய் கசந்துகொண்டிருக்கிறது.

நல்லதம்பி பிள்ளை.—(நகைத்து) நான் அதிகம் காப்பித்தூள் போடச் சொல்லியிருந்தேன். அதனுல் கசப்பாக இருக்கக்கூடும்.

சிலநேரம் இருவரும் வார்த்தையாடிக்கொண்டிருந்தபின், வடிவேலு "எனக்கு உத்தரவு கொடுத்தால் நான் போய் வருகிறேன். நான் இராத்திரி கோவிலுக்குப் போய் விழித்திருந்ததால் சாப்பிட்டதும் நித்திரை வருகிறது" என்றெழுந்தான்.

நல்லதம்பி பிள்ளை.—நீர் என்னேடு போஜனமுண்டு போவீரென்று யாவும் சித்தம் செய்திருக்கிறேன். நீர் உடனே போவீரென்று நான் நினைக்கவில்லையே!

வடிவேலு.—எனக்கு நித்திரை மயக்கம் அதிகரிக்கிறதால் என்னை மன்னிக்க வேண்டும்.

நல்லதம்பி பிள்ளை.—உமக்கு நித்திரை மயக்கமாக இருந்தால் இங்கு படுத்துக்கொள்ளலாமே!

வடிவேலு.—இல்லை. நான் வீட்டிற்குப் போய்ப் படுத்துக்கொள்ளுகிறேன். நான் இனி எப்பொழுதாகிலும் மதுரைக்கு

வந்தால் உம்முடைய வீட்டிற்கு வந்து சாப்பிட்டுப் போகிறேன்.

நல்லதம்பி பிள்ளை.—நீர் மதுரைக்கு வந்தால் என்னுடைய வீட்டிலேயே வந்திறங்க வேண்டும். நீர் வீட்டுக்கு நடந்து போகவேண்டாம். நான் வண்டியொன்று கொண்டுவரச் செய்கிறேன் (என்று வீட்டாளை யழைத்து வண்டி யொன்று கொண்டுவரும்படி உத்தரவு செய்தான்).

சில நிமிஷத்தில் வண்டியொன்று வீட்டுக்கெதிரில் வந்து நின்றது. உடனே வடிவேலை வண்டியிலேற்றி விடைபெற்றுத் திரும்பினன். வடிவேலு வண்டியி லேறியவுடன் தன்னிருப் பிடத்தைச் சொல்லும்பொழுது, வண்டிக்காரன் எனக்குத் தெரியும் என்று மாடுகளைத் தூண்டி யோட்டினன். வடிவேலு உட்கார்ந்திருக்க முடியாமல் படுத்தவுடன் நித்திரைபோனன். வண்டிக்காரன் சிலதூரம் வண்டியை ஓட்டி, திண்டுக்கல் மார்க்க மாக வண்டியைத் திருப்பி வேகமாக நடத்திக்கொண்டு போகும் பொழுது, அம்மார்க்கத்தில் மூவர் நிற்பதைக் கண்டு வண்டியை நிறுத்தினன். மூவரில் ஒருவன் வண்டியிலிருப்பவன் என்ன செய் கிறனென்று ஜாடை செய்து கேட்டான். வண்டிக்காரன் அவர் தூங்குகிறர் என்று ஜாடை செய்தான். உடனே மூவரும் வண் டியிலேறி உட்கார்ந்து மாடுகளை வேகமாக நடத்தச்செய்து, வெளி யார் வண்டியிலிருப்பவர்கள் இன்னரென்று கண்டுகொள்ளாம லிருக்க இருபக்கத்திலும் திரை கட்டிக்கொண்டார்கள். பின் வடிவேலின் கையையும் காலையும் கட்டிவிடவேண்டுமென்று அப்பாசாமி சொல்லியதைக் கேட்ட துரைசாமி அவசியமில்லை. காப்பியில் விட்ட பாலோடு சேர்ந்த கஞ்சா கொஞ்சமல்ல. அந்த மயக்கம் தெளிய நாள் மூன்று செல்லும். ஆதலால் இவனுடைய கைகளையும் கட்டவேண்டியதில்லை; கால்களையும் கட்டவேண் டியதில்லை. நாம் பயமின்றி வார்த்தையாடிக்கொண்டு போகலாம. சிலவேளை அவனுக்கு மயக்கந்தெளிந்து எழுந்திருப்பானகில்,

அப்பொழுது பார்த்துக்கொள்ளலாம். நாம் மூன்று பேரா யிருப்ப தால் அவனுடைய வல்லமை ஒன்றும் செல்லாது.

அப்பாசாமி.—ஆம்! ஆம்! நீர் எங்களுக்கு ஒன்றும் சொல்லா மல் மிகு சுளுவில் காரியத்தை முடித்துவிட்டீர். நீர் நல்ல தம்பி பிள்ளையை எவ்விதம் அறிவீர்?

துரைசாமி.—நல்லதம்பி பிள்ளையை நெடுநாளாக அறிவேன். அவர் தன் தாய் தந்தையரோடு திருச்சிராப்பள்ளியி லிருந் தார். அவர் என்னோடு வாசித்தவர்.

அப்பாசாமி.—இவன் தாய்தந்தை தேடுவார்களாயின், ஏதாகி லும் சொல்லுவாரோ?

துரைசாமி.—அவர் ஒன்றும் சொல்லாமலிருக்க நீங்கள் கொடுத்த தில் அவருக்கு ஐம்பது ரூபாவும் வேலைக்காரனுக்கு இரு பதும் கொடுத்தேன். மற்றதை என்னிடம் வைத்திருக் கிறேன்.

அப்பாசாமி.—இவனுக்கும் அவருக்கும் எப்படி சினேக முண் டானது?

துரைசாமி.—நல்லதம்பி பிள்ளை எளிதில் இவனை சினேகப் படுத்திக்கொண்டார். எவ்விதமெனில் சாமி ஸன்னிதா னத்துக்கு முன் ஒருவர் பிடிலில் வாசித்துக்கொண்டிருக்கும் பொழுது, இவன் உட்கார்ந்து கேட்டிருந்தவன் சில இரா கங்களை வாசிக்கக் கேட்டுக்கொண்டான். நல்லதம்பி பிள்ளை யும், இவனருகில் உட்கார்ந்து பிட்டில் வாசிப்பதைக் கேட் டிருந்து எழுந்து போகும்பொழுது "உமக்கு ஸங்கீதத்தின் மேல் இச்சை இருப்பதாக அறிந்தேன். நீர் என்னோடு வந் தால், நீர் எப்பொழுதும் கேட்டிராதவிதம் பிட்டில் வாசிப் பதைக் காட்டுகிறேன்" என்று ஒரு பிராமணன் வீட்டுக்கு அழைத்துப் போய் அவனைப் பிட்டில் வாசிக்கச் செய்தார். பின்னும் இவனிடத்தில் அதிக நட்பைக் காட்டி இவனைத் தன்னுடைய வீட்டுக்கு அழைத்துப்போய் நமக்கு வேண்டி யதைச் செய்துமுடித்தார்.

திருஞானம்.—நாம் மதுரைக்கு வந்தபின்னே நல்லதம்பி பிள்ளை இவனோடு சினேகமானர் ?

துரைசாமி.—ஆம்! எல்லாம் நான் அவருக்குச் சொல்லி இவனைக் காட்டியபின் இவனோடு சினேகமானர்.

அப்பாசாமி.—நாம் இவ்விடம் வந்த சிலநாளில் நம் எண்ணம் இவ்வளவு எளிதில் கைகூடுமென்று நான் நினைக்கவில்லை. வண்டிக்காரன் நல்லதம்பி பிள்ளையை அறிந்தவனாய்ப் போனதும் நம்முடைய காரியத்துக்கு அனுகூலமானது.

இங்ஙனம் வார்த்தையாடிக்கொண்டே போகையில், வண்டி இரவு எட்டுமணிக்கு திண்டுக்கல்லில் இலக்கைய பிள்ளை வீட்டுக்கருகில் நின்றது. துரைசாமி வண்டியிலிருந் திறங்கிப்போய் வீடு பூட்டியிருப்பதைக் கண்டு, இலக்கைய பிள்ளை வைத்துப்போவதாகச் சொன்ன இடத்திலிருந்து சாவியை எடுத்துக் கதவைத் திறந்தான். பிறகு, பிரக்கினையற்றிருந்த வடிவேலை மூவரும் மெதுவாக வண்டியிலிருந்து தூக்கிக்கொண்டு போய் வீட்டுக்குள் ஓரறையில் படுக்கவைத்தார்கள். துரைசாமி வெளியில் வந்து வண்டிக்காரனிடம் பத்து ரூபா கொடுத்து, "நீ போய்விடு. இந்த ரகசியத்தை வெளியிடவேண்டாம்" என்று அனுப்பிவிட்டான்.

மீண்டும் துரைசாமி வீட்டுக்குள் வந்து தன் மூட்டையிலிருந்து மெழுக்கு வர்த்தியும் தீப்பெட்டியும் எடுத்து விளக்கேற்றினன். வடிவேலைப் பார்த்து "இவன் கையையும் காலையும் கட்டிவிடுங்கள்" என்று தன்னிடமிருந்த ஒரு சுருணை நூல் கயிற்றை எடுத்துக்கொடுத்து, தானும் அவர்களுக்கு உதவியாக வடிவேலைக் கட்டிவிட்டு, "இவனை என்ன செய்ய யோசித்திருக்கிறேன் என்று நினைத்திருக்கிறீர்கள் ?" என்று கேட்டான்.

அப்பாசாமி.—இவனுடைய இருகண்களையுங் குத்திக் குருடாக்கிவிடுவது, அல்லது இவன் காலை முறித்துவிடுவதே போதுமான தண்டனை.

**துரைசாமி.**—(திருஞானத்தைப்பார்த்து) நீர் என்ன செய்யலாம் என்று நினைக்கிறீர் ?

**திருஞானம்.**—எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. எனக்கு பயமாக இருக்கிறது.

**அப்பாசாமி.**—அவரை ஒன்றும் கேட்கவேண்டாம். அவர் பெருங் கோழை.

**துரைசாமி.**—நீர் சொல்லியவிதம் இவனைச் செய்வோமேயானுல் உதிரம் தோன்றும். அதனுல் நமக்குக் கெடுதி உண்டாகும். ஒன்றும் செய்யாமல் குழி வெட்டி இவனைப் புதைத்து விட்டால், ஸங்கதி வெளிக்குவரக் காரண மில்லை. நமக்கு அதனுல் யாதொரு கெடுதியும் அணுகாது.

**அப்பாசாமி.**—ஆம் ! அது நல்ல யோசனை. எங்கே குழிவெட்டலாம் என்று யோசிக்கிறீர் ?

**துரைசாமி.**—இவ்வீட்டிற்குப் பின்புறத்தி லிருக்கும் தோட்டத்திலேயே வெட்டிவிடலாம்.

**அப்பாசாமி.**—இலக்கையபிள்ளை வந்த பின் அதைத் தோண்டிப் பார்க்கமாட்டாரா ?

**துரைசாமி.**—குழியை ஆழமாக வெட்டி இவனை அதில் போட்டுப் புதைத்து குழியைப் புல்லுப்பற்றைகள் போட்டு மூடி விட்டால், எவ்விதம் அறியக்கூடும் ?

**அப்பாசாமி.**—ஆம் ! கண்டுகொள்ள முடியாது. இப்பயலுக்கு ஆயுள் இன்றோடு முடிந்ததால், நமக்கு ஒதுக்குப்புறமாக வீடும் சுற்றி சுவரைக் கொண்ட தோட்டமும் கிடைத்தது.

**துரைசாமி.**—இலக்கையபிள்ளை இருந்தால் இவனைத் தொலைத்து விட அவர் இடங்கொடுக்கமாட்டார். இவனை இரவில் வெளியில் கொண்டுபோய் எந்தக் கிணற்றிலாவது தள்ளி, தவறி விழுந்தான் என்று சொல்லிவிடலாம் என்றிருந்தேன். வீட்டுக்காரர் இல்லாமற் போனது நமக்கு அனுகூலமாக முடிந்தது. நான் போய்ப்பார்த்து மண்வெட்டி கொண்டுவருகிறேன்.

**எ**ன்று சொல்லி, எரியும் மெழுக்குவர்த்தியை எடுத்துக் கொண்டுபோய் வெளிக்கதவை மூடி உள் தாழ்ப்பாளிட்டு, வீட்டுக்குள் சென்று மண்வெட்டி யொன்றை எடுத்துக்கொண்டு இருவரையும் அழைத்துக்கொண்டு பின்பக்கம் சென்றான்.

**தி**ருஞானம் தனித்து உட்கார்ந்து தலையில் கையை வைத்துக்கொண்டு "என்ன வேலை செய்துவிட்டோம்" என்று துக்கத்தோடிருந்தான்.

**துரைசாமி.**—அப்படிபாவியைத் தொலைத்துவிட இவ்வளவு கஷ்டப்படவேண்டியதா யிருக்கிறது.

**அ**ந்த ஸமயத்தில் அவர்களுக்கு ஸமீபமாக சரசர வென்ற சப்தம் உண்டாயிற்று. ஆயினும் குழிவெட்டுகிற சப்தத்தால் அவர்களுக்கு அது கேட்கவில்லை.

**அப்பாசாமி.**—பாலில் காய்ச்சிக் கொடுத்த கஞ்சா இன்னும் அவனை மயக்கத்தில் வைத்திருக்கிறது. அவன் மயக்கத்தி லிருந்து தெளியப்போகிறதில்லை (என்று நகைத்தான்).

**திருஞானம்.**—அண்ணா! நான் சொல்வதை கவனிக்கவேண்டும். எனக்கே வடிவேலு தீங்கைச் செய்தவனாயினும், அவனை உயிரோடு புதைப்பது கூடாது. அவனை அடித்துத் துரத்திவிடுவதை விட்டு இக்கொடுந் தொழிலைச் செய்வது அடுக்காது. நம்மை இப்பழி விடுமென்று நினைக்கவேண்டாம். என் கைப்பொருள் வீணில் செலவழிந்தாலும் தோஷமில்லை. நம்மைப்போல் அவனும் வாலிபன். அவன் வாழ்நாளைக் குறைத்துவிடுவது பெரும் பாதகம். நாம் வேறு ஏதாகிலும் யோசனை செய்து அவனை தண்டிக்கலாம். நான் சொல்வதை கவனித்துப் பாருங்கள்.

**அப்பாசாமி.**—திருஞானம்! நீர் இவ்வித தயாளகுணம் கொண்டவர் இவ்வேலையில் பிரவேசிக்கக்கூடாது. இப்பொழுது எல்லாம் முடித்துவைத்தபின் வேறுவிதம் பேசுகிறீர்.

**திருஞானம்.**—அப்பாசாமி! நான் இவனைக் கொன்றுவிட வேண்டுமென்று உம்மிடத்தில் சொன்னதுண்டோ?

என்னை அவமானப்படுத்தியதுபோல் அவனை அவமானப் படுத்தவேண்டு மென்றுதானே சொன்னேன். நீங்கள் அவன் உயிருக்கே உலைவைக்கப் பார்க்கிறீர்களே !

துரைசாமி.—ஐயா ! திருஞானம் ! உமக்கு அவனை முடித்துவிட எண்ண மில்லாமற் போனாலும், எனக்கு அந்த எண்ணம் உண்டு. அவன் முதல் முதல் எங்களுடைய வீட்டுக்கு என் சிறிய தாயாரோடு வந்தபொழுதே அவனைக் கொண்டு போய்க் கையையுங் காலையுங் கட்டிக் கிணற்றில் போட்டு விட எண்ணி நூறு ரூபா செலவு செய்தேன். அப்படுபாவி அடைபட்டிருந்த அறையின் சாளரத்தைப் பேர்த்துக் கொண்டு எனக்கு அனுகூலம் செய்ய உதவியாக இருந்த நால்வரையும் தலையொடிய அடித்து ஓடிவிட்டான். அவர் களில் ஒருவன் இன்னும் வைத்தியசாலைக்குப் போய்க் கொண்டிருக்கிறான்.

அப்பாசாமி.—தாங்கள் இவனைக் கொல்ல யோசித்ததற்குக் கார ணம் தங்களுடைய சிறிய தாயாரை அழைத்துக்கொண்டு போனதே யல்லவோ ?

துரைசாமி.—இல்லை ! இல்லை ! என் சிறிய தாயாரை ஸமீபத்தி லல்லவா அழைத்துப்போனான். அவன் எங்கள் வீட்டுக்கு முதலில் வந்தபொழுதே அவனைக் கொன்றுவிடவேண்டு மென்று எண்ணியிருந்தேன்.

அப்பாசாமி.—அவனைக் கொல்லத் தங்களுக்குப் போதுமான காரணம் இருக்குமென்று நினைக்கிறேன்.

துரைசாமி.—அது ஒரு ரகசியம்; அதைக் கேட்கவேண்டாம். அந்த ரகசியம் என்னோடு போகு மல்லாமல் அதை நான் ஒருவருக்கும் சொல்லேன். ஆனதால் நான் கொண்ட எண்ணத்தை மாற்ற ஒருவராலும் முடியாது.

திருஞானம் சொல்லியதைக் கிஞ்சித்தும் கவனிக்காமல் குழியை வெட்டி, “இனி அப்படுபாவியைக் கொண்டுவந்து புதைத்தபின் நாம் திருஞானம் சொல்வதை கவனித்து நடக்

கலாம" என்று நகைத்து விளக்கோடு வீட்டில் வடிவேலிருக்கும் அறைக்குள் போனான்.

போனதும் "ஐயையோ! மோசம்போனேம். நம்மை ஏமாற்றிப் போய்விட்டான்போல் காண்கிறதே" என்று துரை சாமி சொன்னதைக் கேட்டு, அப்பாசாமி "நாம் இந்த அறையில் அவனை வைத்துப்போனேமா, அல்லது வேறு அறையில் வைத்துப்போனேமா?" என்று மற்ற அறைகளைப் பார்த்து, "இதோ அவனைக் கட்டிவைத்திருந்த கயிறுகளெல்லாம் துண்டு துண்டாய்க் கிடக்கின்றன. இதற்கு நாம் என்ன செய்கிறது? இனி நம்மைச் சும்மாவிடாமல் போலீஸார் உதவியால் நம்மை தண்டிக்க முயலுவானே. நாம் என்ன செய்கிறது?" என்று துரைசாமியும் அப்பாசாமியும் தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்தார்கள்.

திருஞானம் அதிக ஸந்தோஷம் அடைந்து வெளிக்குக் காட்டாமல் மௌனமாயிருந்தான். நெடுநேரத்திற்குப்பின் அப்பா சாமி துரைசாமியைப்பார்த்து "இனி என்ன யோசிக்கிறீர்?" என்றான்.

**துரைசாமி.**—நாம் மீண்டும் மதுரைக்குப் போய் எவ்விதத்திலாவது அவனைக் கொல்வது இப்பொழுது அதிக அவசியமாக முடிந்தது. நாம் போகு முன்னம் நாம் தோண்டிய குழியை மூடிவிடவேண்டும். அதை அவ்விதமே வைத்துப் போனல் அது நமக்குக் கெடுதலாக முடியும் (என்று மூவரும் சென்று தோண்டிய குழியை மூடிக்கொண்டிருந்தார்கள்).

இலக்கைய பிள்ளை வீட்டுக்கு அதிக தூரத்தில் ஒரு பெண்பிள்ளையும் ஒரு வாலிபனும் வேகமாய்ச் சென்றார்கள். அப்போது பெண்பிள்ளை சற்று நின்று தன்னேடிருக்கும் வாலிபனைப் பார்த்து, "அண்ணு! தங்களை உயிரோடு புதைக்க யோசித்துச் செய்ததையும் சொன்னதையும் அறிந்தீர்களல்லவா? அவர்கள் யாரென்றும் அவர்களுடைய எண்ணம் இன்னதென்றும் அறியவே தங்களை அழைத்துக்கொண்டு போய்க் காட்டினேன்.

தாங்கள் இனி ஒரு விநாடியும் இவ்வூரில் இருக்கக்கூடாது. பின் வருவதை கவனியாமல் அவர்கள் மூர்க்கத்தோடு கொலைத்தொழிலைச் செய்ய யோசித்திருப்பவர்கள்: எதற்கும் அஞ்சார்கள்" என்று சொன்னாள்.

வடிவேலு.—(அப்பெண்ணின் கையைப் பிடித்துக்கொண்டு) அம்மணி! நீ இன்று எனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்தாய்! இதை எக்காலத்தும் நான் மறவேன். நீ இவர்களுடைய சூதை எவ்விதம் அறிந்தாய்? அவ்வீட்டில் ஒருவரும் இல்லாதிருப்பதற்குக் காரணம் என்ன?

பெண்பிள்ளை.—அண்ணா! சிலநாள்களுக்கு முன் நாம் பார்த்த மூவரும், அவ்வீட்டுக்குச் சொந்தக்காரராகிய இலக்கைய பிள்ளையோடு, நானிருக்கும் வீட்டுவழியாகப் போவதையும் மீண்டு வருவதையும் பார்த்தேன். பார்த்து அதிசயித்து, இவர்கள் இங்கு வரவேண்டிய காரணம் யாதோவென்று ஆலோசித்து, அவர்கள் பேசுவதை அவர்க ளறியாமல் நின்று கேட்டுக்கொண்டிருந்தேன். அவர்கள் மதுரைக்குப் போய் மீண்டும் வருவதாகவும், இலக்கைய பிள்ளை தன் மருமகன் வீட்டுக்குப் போவதால் சாவியை வைத்துப் போவதாகவும் பேசிக்கொண்டார்கள். இவர்கள் மதுரைக்குப் போகிற காரணம் தங்களுக்கு ஏதோ கெடுதி செய்வதோ அல்லது வேறு யாதோ என்று நினைத்து, எதற்கும் நாம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டுமென் றெண்ணி, இலக்கைய பிள்ளை தன் மருமகனுடைய ஊருக்குப் போனபின் இரவில் தினந்தோறும் சாவியை யெடுத்துக் கதவைத் திறந்து பின்புறக் கதவின் உள் தாழ்ப்பாளைத் திறந்து பரிசோதித்து வந்தேன். மீண்டும் இவர்கள் எப்பொழுது வருவார்களென்று பார்த்துக்கொண்டிருந்து, இன்று வண்டி வந்து நின்றவுடன், பின்பக்கமாக வீட்டுக்குள் வந்து ஒரு அறையில் ஒளித்திருந்து அவர்கள் பேசுவதையெல்லாம் கேட்டிருந்தேன். வீட்டுக்குப் பின்னால்

குழி வெட்டுவதைக் கண்டு, இனி காலதாமஸம் செய்யக் கூடாதென்று தாங்களிருந்த அறைக்குள் வந்து தங்களைக் கட்டியிருந்த கயிற்றை அறுக்கும்பொழுது, தாங்களும் கண்ணை விழித்துக்கொண்டு என்னைப் பார்த்து அதிசயப் பட்டீர்கள். நான் தங்களைத் தெருவழியாக அழைத்துப் போய் வீட்டுக்குப் பின்புறத்தில் குழிவெட்டுவதைக் காட்ட வேண்டுமென்று போகும்பொழுது சரசரப்பு உண்டாயது. அதை அவர்கள் கண்டுகொள்வார்களோ என்று பயந்தேன். ஆனால் அவர்கள் குழிவெட்டுகிற பரபரப்பில் நம்மை கவனிக்கவில்லை. அவர்கள் பேசிக்கொண்டிருந்ததை முற்றிலும் அறிந்தீர்கள் அல்லவா" என்றாள்.

வடிவேலு.—அந்த துன்மார்க்கர் இருவரோடு திருஞானம் சேர்ந்திருப்பது மிக்க பரிதாபம். திருஞானத்தின் குணம் வேறு விதமிருப்பதை அறிந்து ஸந்தோஷம் அடைந்தேன். நான் முதல் முதல் துரைசாமிபிள்ளை வீட்டுக்குப் போன பொழுதே என்னை முடித்துவிடவேண்டும் என்று அவன் என்னை மணச்சநெல்லூரில் கொண்டுபோய்க் கொலை செய்யத் தூண்டியதின் காரணம் ஒன்றே தெரியவில்லை.

பெண்பிள்ளை.—அது விஷயம் தன்னோடு மறையுமென்று அவர் சொல்லினும், அதுவும் வெளிவராமற் போகாது. தாங்கள் அவர்களில் ஒருவர்மேல் ஸந்தோஷப்பட்டது எனக்கும் ஸந்தோஷமே. இங்கு சில நிமிஷம் தாங்கள் நின்றிருந்தால், தங்களுக்குப் பாலாவது வாங்கி வருகிறேன். தாங்கள் பால் சாப்பிட்டு உடனே இவ்வூரை விட்டு நீங்கவேண்டும். தாங்கள் இன்றெல்லாம் ஒன்றும் சாப்பிடாமல் கஞ்சாமயக்கத்தோடிருந்ததால் தங்களைப் பட்டினியாக அனுப்புவது நியாயமல்ல.

வடிவேலு.—அம்மணி! எனக்குப் பசியில்லை. தாகமாயிருந்தாலும் தோஷமில்லை. நீ அதுவிஷயத்தில் தொந்தரை எடுத்துக்கொள்ளவேண்டாம். நான் அப்படுபாவிகளுக்

கேற்ற தண்டனை செய்யாமல் போவதற்கு என் மனம் பொருந்தவில்லை. அவர்களைப் போலீஸாரிடம் ஒப்படைக்க வேண்டாமோ ?

பெண்பிள்ளை.—அண்ணு ! தாங்கள் போலீஸாருக்குத் தெரிவித்தால், என் கதி என்ன ?

வடிவேலு.—ஆம் ! ஆம் ! நான் அதை மறந்து பேசினேன். எனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்த உத்தமியின் மனம் வருந்த நான் ஒன்றும் செய்யேன். என் தாய் தந்தை தங்கை மதுரையில் இருப்பதால், நான் இப்பொழுதே மதுரைக்குப் போய்விடுகிறேன்.

பெண்பிள்ளை.—அண்ணு ! அப்படுபாவிகளுடைய எண்ணம் கைகூடாமற்போனதால், மீண்டும் அவர்கள் மதுரைக்கு வந்து உங்களை மார்க்கத்தில் கண்டுபிடித்தாலும் கண்டு பிடிப்பார்கள். ஆனதால் தாங்கள் மதுரைக்குப் போகாமல் திருச்சிராப்பள்ளிப் போய்த் தங்கள் தாய்தந்தைகளை வரவழைத்துக்கொள்ளுதல் உத்தமம்.

வடிவேலு.—அம்மணி ! இன்று காலை ஏதொன்றையும் கருதாது வெளியில் புறப்பட்டதால் நான் பணம் ஒன்றும் எடுத்து வரவில்லை. ஆனதால் மதுரைக்குப் போவதே உத்தமமென்று எண்ணினேன்.

பெண்பிள்ளை.—தாங்கள் அது விஷயத்தில் கவலை கொள்ள வேண்டாம். அதிகம் இல்லாமற்போனுலும், என்னுடைய மடியில் தற்காலம் இருக்கும் பணம் தங்களுடைய வழிச் செலவுக்குப் போதுமென்று நினைக்கிறேன் (என்று தன் மடியி லிருந்த பையை எடுத்துக் கொடுத்தாள்).

வடிவேலு.—(அதை இருகையாலும் வாங்கிக்கொண்டு) அம்மா நீ இவ்விடம் வந்த காரணம் யாதென்றும் நீ எப்பொழுது இவ்வூரைவிட்டுப் போவாயென்றும் கேட்காமற்போனேன்.

பெண்பிள்ளை.—அண்ணு ! நான் சில தினத்தில் திருச்சிராப்

பள்ளிக்கு வருவேன். அப்போது நான் இவ்விடம் வந்த கருத்தைச் சொல்லுவேன்.

வடிவேலு.—அம்மா! திருச்சிராப்பள்ளிக்கு வந்தால் நீ எங்கு தங்குவாய்?

பெண்பிள்ளை.—உறையூரில் வைத்தியர் கைலாஸம் பிள்ளை வீட்டுக்கருகில் இருப்பேன். அவரைக் கேட்டால் என்னிருப்பிடத்தைத் சொல்லுவார். தங்களை எவ்விடத்தில் பார்க்கலாம்?

வடிவேலு.—என்னிருப்பிடத்தைச் சொல்லி உனக்குத் தொந்தரை கொடுக்கவில்லை. நானே வந்து பார்ப்பேன்.

பெண்பிள்ளை.—அண்ணா! பாலும் வேண்டாம் என்கிறீர்கள். தாங்கள் காலம் போக்கவேண்டாம். தாங்கள் போனபின் இவ்விடம் நடப்பதையெல்லாம் தங்களைப் பின் கண்டு சொல்லுவேன். தாங்கள் இம்மார்க்கமே போனால் வண்டிப் பேட்டையில் கொண்டுபோய்விடும். தாங்கள் வண்டியிலேறிப் போகலாம். போய் வாருங்கள் (என்று பின் நின்றாள்).

பெண்பிள்ளை கொடுத்த பையை மடியில் வைத்துக் கொண்டு, பெண்பிள்ளை சொன்னவிதம் வடிவேலு வண்டிப்பேட்டைக்குச் சென்றான். திருச்சிராப்பள்ளிக்குப் போகும் வண்டிகளொன்றில் ஏறிப்படுத்துக்கொண்டான். மறுநாள் காலையில் மணப்பாறையில் இறங்கி வண்டிக்காரனுக்குக் காசுகொடுக்கப் பையை அவிழ்த்துப் பார்த்தான். அதில் மூன்று ரூபாவும் வேறொரு பையும் இருக்கக் கண்டு, வண்டிக்காரனுக்குக் கொடுக்கவேண்டியதைக் கொடுத்து; மற்றப் பையில் என்ன இருக்கிறதென்று பிரித்துப் பார்த்தான். அதிலிருப்பதைக் கண்டு திகைத்து "ஆ! இதென்ன அதிசயம்! நம்மிடத்திலிருந்த காப்புபோ லிருக்கிறதே. இது எப்படி அந்தம்மாளிடத்தில் அகப்பட்டது? யாராகிலும் திருடிக்கொண்டுபோய் விற்றார்களோ? அந்த அம்மாளைக் கேட்டாலன்றி இந்த மர்மம் விளங்காது. நம்மை ஸமீபத்தில் வந்து பார்க்கிறோம் என்றதால் அப்பொழுது கேட்டுக்

கொள்ளலாம்" என்றெண்ணி, அன்றைய தினத்தை அவ்வூரில் போக்கி மறுநாள் திருச்சிராப்பள்ளியை யடைந்தான்.

---

## 19—ம் அத்தியாயம்

**வ**டிவேலு திருச்சிராப்பள்ளி வந்து சேர்ந்து இரண்டு தினம் ஆனபின், தனக்கு திண்டுக்கல்லில் உதவிசெய்த பெண் பிள்ளை தான் சொல்லிய விதம் வந்திருப்பாளென்று அவளைப் பார்த்துவர உறையூருக்குச் சென்று, வைத்தியர் கைலாஸம் பிள்ளையால் அவளிருப்பிடத்தை அறியலாமென்று அவர் வீட்டுக்குப் போனான். அவர் பெருமாள் செட்டியார் தோட்ட வீட்டில் ஓர் பிரசங்கத்திற்குப் போயிருக்கிறாரென்றறிந்து, அவ்விடத்திற்குச் சென்றான். அத்தோட்ட வீட்டில் சிலர் உட்கார்ந்து பிரசங்கியார் சொல்லுவதைக் கேட்டுக்கொண்டிருப்பதைக் கண்டு, அவருக்கு வந்தனம் செய்து அங்கிருப்பவர்களில் கைலாஸம் பிள்ளை யாரென விசாரித்தறிந்து, அவருடன் வார்த்தையாடி அவர் அருகில் உட்கார்ந்தான்.

**பிரசங்கியார்.**—(தமக்கெதிரில் இருப்பவர்களைப் பார்த்து) நமது கண்ணுக்குக் காணப்படுகின்ற ஒருவன் ஒருத்தியென்னும் உயர்திணைப் பொருளும் ஒன்றென்னும் அஃறிணைப் பொருளுமாகிய இந்தச் சேதனு சேதனப் பிரபஞ்சம் அவயவப் பகுப்புடையதாயும், பலவேறு வகைத்தாய ஜடமாயும், சுட்டியறியப்படுவதாயும் இருத்தலால்; இது தோன்று முறையிலே தோன்றி, நிற்குமுறையிலே நின்று, ஒடுங்கு முறையிலே ஒடுங்கிவருந் தன்மையுடைய தென்பது பெறப்படுகின்றது. ஆனதால் இதை இவ்வாறு முறையே தோன்றுவித்து, தோன்றியதை நிற்பித்து, நின்றதை ஒடுக்குவித்துக் காரியப்படுத்த முழுமுதற் கடவுள் ஒருவர் வேறு இருக்கவேண்டுமென்பது துணியப்படுகிறது. இங்ஙனம்

துணியப்பட்ட மெய்ப்பொருள் பிரபஞ்சத்துக்குக் கர்த்தா. இவர் பிரபஞ்ச முழுமையும் ஒடுங்குவதற்கு நிலைக்களமாய் இருத்தலால், சிருஷ்டி, திதி, ஸம்ஹாரம் என்னும் முத் தொழிலுக்கும் உரியவர் இவரேயாவர்! இவரது இலக்க ணம் அநாதியே மலங்களினின்று நீங்கி நிற்றலும் உல கெல்லாங் கடந்து உண்மைப்பொருளாய் விளங்குதலும் ஞானமே வடிவாயிருத்தலுமாம். (என்று பதியிலக்கணத் தைச் சொல்லியிருந்தார்).

அப்போது கைலாஸம் பிள்ளைக்குப் பக்கத்திலிருந்த வடிவேலு, நாம் சித்தாந்த சாத்திரம் கேட்கவேண்டுமென்ற விருபத்திற்கேற்க இங்கு பிரசங்கம் நடக்கிறதென்றெண்ணி, கைலாஸம் பிள்ளையைப் பார்த்து, "இதில் சங்கை ஏதாகிலும் இருந்தால் கேட்கலாமோ?" என்று கேட்க, அவர் பிரசங்கியார் ஸம்மதத்தைப் பெற்றார்.

வடிவேலு.—பிரசங்கியாரைப் பார்த்து, சாமிகளே! இந்தப் பிரபஞ்சம் அநாதியென்று பிரகஸ்பதிபகவான் முதலான மஹான்கள் கூறியிருக்க, இதுதோன்றி நின்றழியுமென் பது எவ்விதம்?

பிரசங்கியார்.—இந்த அபிப்பிராயத்தைக் கொண்டு வாதிப்போர் கடவுள் இல்லையென்று கூறும் நிரீச்சுரவாதிகளே! பிரத்தி யக்ஷ காட்சிப்பிரமாணத்துக்கு அகப்படாத வெல்லாம் பிர மாணமல்ல வென்று சாதிப்பது அவர்களுடைய மதம். அவர்கள் பிரத்தியக்ஷமாய்க் காணப்படும் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, என்னும் நான்கு பூதங்களைப் பிரமாணமாக ஒப்புக்கொண்டு, அநுமானத்தால் அறியப்படுகின்ற ஐந்தா வதுப் பூதமாகிய ஆகாயத்தை ஒப்புக்கொள்ளாதவர்கள். அவர்களுக்குப் பிரத்தியட்சத்தாலன்றி அநுமாநத்தால் மெய்ப்பிக்க வேண்டிய அவசியம் இல்லை. உண்மையை எவ்விதம் அறிகிறதெனில், பூதங்களைக் காரணமாகக் கொண்டு தோன்றிய தேகாதி பொருள்களெல்லாம் பூமி

யினிடத்தில் கிரமமாகத் தோன்றி நின்று அழிவதை நாமனைவரும் பிரத்தியட்சமாய்ப் பார்க்கிறோம். ஆனதால் இக்காட்சிப்பிரமாணமே போதுமானது.

வடிவேலு.—இந்தப் பிரபஞ்சம் தானே தோன்றி தானே யழியும் இயல்புடையது. இதற்குக் கர்த்தா வேண்டுவதில்லையே.

**பிரசங்கியார்.**—இயல்பாவது, ஒரு பொருளுக்குச் சிறப்புக்குணமா யமைந்ததல்லவா? அவ்விதமிருக்க அதற்கு ஒருபோது தோன்றுவதும், ஒருபோது நிற்பதும், ஒருபோது அழிவதுமாகிய விகாரங்கள் எவ்விதம் பொருந்தும்?

வடிவேலு.—அப்படி விகாரப்படுவதே அப்பொருட்கு இயல்பு அல்லது சுபாவம்.

**பிரசங்கியார்.**—விகாரப்படுதலே அதாவது தோன்றி நின்றழிதலே இயல்பு என்று சொல்லுதல் கூடாது. ஏனெனில், இயல்பென்று கூறின், விகாரப்படுதல் இயல்பு அல்லவென்று எளிதில் விளக்கக்கூடும். எவ்விதமெனில், இயல்பின் இலக்கணமாவது, அக்கினிக்கு உஷ்ணம் போலவும், ஜலத்துக்குக் குளிர்ச்சி போலவும், எப்பொழுதும் ஓரேவிதமாயிருக்குந் தன்மையே ஒருபோதும் மாறுபடுந்தன்மை அல்ல. இலக்கணத்தில் இயல்புப்புணர்ச்சி விகாரப்புணர்ச்சி யென இருவகைப்புணர்ச்சி கூறியிருக்கின்றது. அதில் இயல்புப்புணர்ச்சியாவது நிலைமொழியீறும் வருமொழி முதலும் யாதொரு விகாரமுமின்றிப் புணர்வதாம். விகாரப்புணர்ச்சியாவது நிலைமொழியீறும் வருமொழி முதலும் யாதேனும் மாறுதல் உண்டாகும்படி புணர்வதாம். இதனால் இயல்பு அல்லது சுபாவம் என்பது விகாரப்படுந் தன்மை யல்லவென்பது தெளிவாய்க் காண்கிறது.

வடிவேலு.—இயல்பாயுள்ள பூதங்கள் தாமே விகாரங்களைச் செய்யும்.

**பிரசங்கியார்.**—பூதங்கள் ஜடமாகையால் தாமே தொழிற்படா.

அத்தொழிலைச் செய்ய பூதங்களையன்றி வினை முதலாகிய கர்த்தா ஒருவர் வேண்டும்.

வடிவேலு.—நிலம், புனல், அனல், கால், என்ற நான்கு பூதங்களே தேகாதி பிரபஞ்சங்களைத் தோற்றுவிக்கும், நிறுத்தும், அழிக்கும். அந்த நான்கு பூதங்களுள், காற்று மற்ற மூன்று பூதங்களை நிலைநிறுத்தித் தானும் அவற்றின் ஸமூகத்தில் நிலைபெறும். அனல் மற்ற மூன்று பூதங்களையும் அழித்துத் தானும் அவற்றின் ஸமூகத்தில் அழியும். புனல் மற்ற மூன்று பூதங்களையும் தோற்றுவித்துத் தான் அவற்றின் ஸமூகத்தில் தோன்றும். நிலம் மற்ற மூன்று பூதங்களிலிருந்து அனுபவிக்கப்படும் பலன்களைப் பயப்பித்துத் தானும் அவற்றின் ஸமூகத்தில் பயன்படும். இவ்விதம் நம்முடைய கண்காண நிகழ்வதால், பூதங்களே ஒன்று ஒன்றைச் செய்யமுடியும்; ஆகவே பூதங்களைக் காரியப்படுத்தக் கர்த்தா வேண்டியதில்லை.

பிரசங்கியார்.—நிலம், நீர், தீ, காற்று என்ற நான்கு பூதங்களும் முத்தொழில் படுதலால், அதாவது தோன்றி நின்றழிதலால், இவைகளை முத்தொழிற்படுத்த முத்தொழிலுடையா முதல்வன் வேண்டும். இதனாலே, ஆன்மத் தன்மையில்லாத பூதங்களும் அவற்றின் இயல்புகளும் பிரபஞ்சத்துக்கு முற்றுங் காரணமல்ல வென்பதும், காணப்பட்ட பிரபஞ்சத்தினாலே காணப்படாத கர்த்தாவுக்கு இருப்பு உண்டென்பதும் துணியப்பட்டது.

வடிவேலு.—* பஞ்ச கந்தகங்களினது கூட்ட விசேடத்தால் பூத

* கந்தம் ஐந்து. அஃவையாவன :—உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்பவைகளே.

உருவம் என்பது பூதக்கூட்டுறவு.

வேதனை என்பது குசலா வேதனை (இன்பம்) அகுசலா வேதனை (துன்பம்) குசலாகுசல வேதனை (இன்பதுன்பம்).

குறிப்பு என்பது மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம்.

விஞ்ஞானம் என்பது புலன் (புல்லுவது, சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பதாம்) சித்தம்.

முதலான பொருள்களெல்லாம் தோன்றும். ஆனதால் வேறொரு கர்த்தா வேண்டுவதில்லை.

பிரசங்கியார்.—நீர் சொல்லுகிற தோற்றம், உள்ள பொருளுக்கோ இல்லாத பொருளுக்கோ? உம்முடைய விடையை அறிந்தபின், கர்த்தா உண்டில்லை யென்பதைக் குறித்துப் பேசுவோம்.

வடிவேலு.—உள்ள பொருள் தோன்றவேண்டுவ தில்லை. இல்லாத பொருள் எப்பொழுதும் இல்லாததே. அதற்குத் தோற்ற மில்லை. ஆதலால், உள்ளதென்றும் இல்லாததென்றும் சொல்லப்படாது. அநிர்வசனமாய் நிற்பதொரு பொருள் யாதோ அது தோன்றும்.

பிரசங்கியார்.—அங்ஙனம் அநிர்வசனமாய்க் கூறப்படும் பொருளொன்று உண்டெனில், அதை உள்பொருளென்றே கூறவேண்டும். இல்பொருள் என்னில் முயற்கோடுபோல் சூனியமாய் முடிவதால், சூனியத்திலிருந்து தோன்றுமென்பது ஒவ்வாது. உள்பொருளாகிய காரணத்திலிருந்து காரியம் வெளிப்பட்டுத் தோன்றுமென்பதே உறுதி. மண்ணிலிருந்து குடம் முதலிய காரியங்கள் உண்டாகுமன்றி ஆடை முதலானவை யுண்டாகாததுபோல், காரணத்தில் நாமரூப மற்று அதிஸூக்ஷ்மமாய் அடங்கியிருக்கும் காரியமே ஒரு கர்த்தாவால் வெளிப்பட்டுத் தோன்றும்.

வடிவேலு.—ஒரு காரணத்திலிருந்து ஒரு காரியம் தானே தோன்றித் தானே ஒடுங்கும். இதற்குக் கர்த்தா வேண்டுவதில்லை.

பிரசங்கியார்.—நீர் சொல்லுகிறவிதம் இந்தக் காரியமாகிய பிரபஞ்சம் காரணத்தில் உண்டாயின், பின் எப்படி இல்லாமற்போகும்? இல்லையென்று சொல்லின், நிமித்தமின்மையால் காரணமா யிருப்பதன்றிக் காரியரூபம் உண்டாவதில்லையே.

வடிவேலு.—காரணத்தில் உண்டாகுங் காரியம் இல்பொரு ளாகும். காரணம் உள்பொருளாகும்.

பிரசங்கியார்.—அவ்விதம் சொல்லின், "உண்டு" "இல்லை" என்று மாறுபட்ட இரண்டுதன்மை ஒரு பொருளுக்கிருத் தல் கூடாது. ஆனதால், உள்ள பொருளாயின் இல்லை யென்று சொல்லுந்தன்மை அதற்கில்லையென்றே சொல்ல வேண்டும்.

வடிவேலு.—அப்படியல்ல. காரணரூபமாக உண்டு. காரியரூப மாக இல்லை என்பதே "உண்டு" "இல்லை" என்பதின் கருத்து.

பிரசங்கியார்.—காரண காரியங்கட்குத் தம்முள் வேற்றுமை யில்லாமையால், காரணத்தை உள்பொருளென்று அங்கீ கரித்தபோது, காரியமும் அதனிடத்தில் ஸூக்ஷ்மரூபமாய் அடங்கி நிற்கும். பின்னர் அது தூலமாய் வெளிப்பட்டுத் தோன்றும். ஆதலால் காரணத்திலிருந்து காரியத்தைத் தோற்றுவிக்க முதல்வன் ஒருவன் வேண்டும்.

வடிவேலு.—காயம், உலகம் என்னும் இருகூற்றுப் பிரபஞ்சத் துள், ஆண், பெண், அலியென்னும் அவயவப் பகுப் புடைய சரீர முதலிய பொருள்களில் தோற்றக் கேடுகளை நாம் பிரத்தியட்சமாய்க் காண்கிறோம். உலகத்துக்கோ அவ்வாறு காணவில்லை. அவ்விதமிருக்க, தேவரீர் இந்த உலகத்துக்குத் தோற்றக் கேடுகள் உண்டென்று சொல்லு வது எவ்விதம்?

பிரசங்கியார்.—அப்படியல்ல! உண்மையைக் கூறுவோம் கேட் பீராக! இவ்விதம் உமக்கு மயக்கத்தைச் செய்கின்ற இவ் வுலகமாகிய பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசமாகிய ஐந்து பூதங்கள் ஒன்றிலொன்று ஒடுங்கும். அதாவது ஆகா சத்தில் வாயுவும், வாயுவில் அக்கினியும், அக்கினியில் அப்புவும், அப்புவில் பிருதிவியும் தோன்றி நின்று, பின் ஒடுங்குங்கால் தோன்றின முறையே ஒடுங்குமென்றும்,

இறுதியில் அந்த ஆகாசமும் ஆன்மாவில் ஒடுங்குமென்றும் வேதம் சொல்லும். ஆதலால் அந்த வேதப் பிரமாணமே, பஞ்சபூத பரிணாமமாகிய காய முதலிய பொருள்களைப் போல இந்த உலகமும் தோன்றி நின்று ஒடுங்குமென்பதை உணர்த்தாநிற்கும்.

வடிவேலு.—இந்தப் பிரபஞ்சம் அநாதியென்று வேதாகமங்கள் சொல்லியிருப்பதால், இப்பிரபஞ்ச முழுதும் ஏககாலத்தில் அழியாது ; ஒருபக்கம் அழிய மற்றொரு பக்கம் நிற்குமென்று சொல்லுதலே பொருத்தம்.

பிரசங்கியார்.—பூமியின்கண் செழித்திருக்கின்ற புல் பூண்டு முதலியவைகளின் விதைகளெல்லாம் மழைகாலத்தில் ஒருங்கே முளைத்து வேனிற்காலத்தில் ஒருங்கே அழியும். அதைப்போல் சிறப்புடையதாகிய இந்தப் பஞ்சபூத கூட்டமாய பிரபஞ்சமும் சிருட்டிகாலத்தில் ஒருங்கே தோன்றியும் சங்காரகாலத்தில் யாவும் ஒருங்கே அழிந்தும், இப்படிக் காலங்கள் தோறும் மாறிமாறித் தோன்றியும் பின்னழிந்தும் வந்துகொண்டிருக்கும்

வடிவேலு.—அவ்விதம் சொன்னால், காலமே சிருஷ்டி, திதி, ஸம்ஹாரம் என்னும் முத்தொழிலையும் செய்யும். நித்தியமாயும் அகண்டமாயும் நிற்பது காலமே. ஆனதால், காலத்தையே ஸர்வத்துக்கும் ஆதாரமான கடவுளென்று சொல்லுதல் பொருத்தமே !

பிரசங்கியார்.—காலம் ஜடமாயிருக்கையில் பிரபஞ்ச காரியங்களைத் தோற்றுவிக்க அதற்கு ஓர் அறிவும் இல்லை.

வடிவேலு.—காலத்துக் கறிவில்லையாயினும், இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூவகைப்பட்டு, பிரபஞ்சத்தினுள்ள தாவர ஜங்கமமாகிய எல்லாப் பொருள்களையும் இயக்குகின்றது. கால எல்லையைக் கடந்த பொருள்கள் பிரபஞ்சத்தில் ஒன்றுமில்லை. மரங்கள் அந்தந்தப் பருவங்களில் இலைகளை உதிர்ப்பதும், பூப்பதும், காய்ப்பதும்,

பழுப்பதும், இலைகள் தளிர்த்து நிறைந்து நிற்பதும், காலத்தாலன்றி வேறு எதனாலென்று அறியக்கிடக்கின்றது? எலும்பு சுக்கான் கல்லாவதும், கரிகள் வைரக் கற்களாவதும், மண் கல்லாவதும், கல் மண்ணாவதும், காலத்தாலன்றோ! ஜீவராசிகளுக்கு பால்யம், யௌவனம், மூப்பு என்ற பேதங்கள் நிகழ்வது கால அளவுக்கு அடங்கியன்றோ! ஆதலால் காலமே முக்கிய காரணமாம். அக்காலமும், அகண்டமாயும், நித்தியமாயும், ஸர்வ வியாபியாயும் இருத்தலால், காலத்துக்கு வேறாகச் சேதனப்பொருள் ஒன்று உண்டென்பது பொருந்தாது. சேதனப்பொருள் காரணமாயின் அதனை எப்பிரமாணத்தால் அளப்பது? எல்லாப்பொருள்களும் சேதனனிடம் தோன்றுவதாக அனுபவம் இல்லையே! இப்பிரபஞ்சம் சேதனனிடம் தோன்றுமாயின், சேதனமாயே இருத்தல்வேண்டுமே. காண்பானன்றிக் காணப்படும் பொருள்களெல்லாம் அசேதனங்களே. பிரபஞ்சத் தொழிலைக் காலமே தருதலால், காலத்தைக் காரணமெனச் சொல்லப்பட்டது.

**பிரசங்கியார்.**—காலம் தானாக எதையும் தர அதற்கு அறிவு (ஆன்மத்தன்மை) இல்லை. ஆயினும், காலத்தையும் காரணமாகக் கொள்ளலாமே யன்றி முற்றுங் காரணமெனக் கொள்ளுதல் எவ்வகையாலும் ஒவ்வாது. கர்த்தா நியமித்த பிரபஞ்ச காரியங்களுக்கு, அவரது வெலாலே காலம் துணைக்காரணமாகுமன்றி முதற்காரண மாகாது.

**வடிவேலு.**—பிரபஞ்சம் அழிந்தபின் அழியாமல் நின்ற பரமாணுக்கள் தாமே ஆன்மாக்களுடைய கன்மங்களுக் கீடாகக் கூட்டமாய்க் கூடி, பிரபஞ்சமாய்த் தோன்றி நின்று அழிதற்குக் காரணமாகும்.

**பிரசங்கியார்.**—நீர் சொல்லும் பூரண சக்தியுள்ள பரமாணுக்களும் கன்மமும் ஜடமேயாகையால், அவை தாமே தம்முட் கூடிப் பிரபஞ்சமாகத் தொழிற்படா. காந்தக்கல்லுக்கு

இரும்பைத் தன்னிடம் இழுக்கும் சக்தி இருப்பினும், இரும்பை அதன் முன்னிலைப்படுத்த வேறு காரணம் வேண்டுமெல்லவா? அதுபோலவே பரமாணுக்களும் ஒரு சேதனனையின்றி இயங்கா. அல்லாமலும் சுட்டி யறியப் பட்ட பிரபஞ்சங்களெல்லாம் ஸம்ஹார காலத்தில் அழிந்து போகும்போது பரமாணுக்களும் கூடவே அழிந்துபோகும்.

**வடிவேலு.**—இப்பிரபஞ்சத்துக்குக் காரணமாயிருக்கிற பரமா ணுக்கள் ஸம்ஹார காலத்தில் அழிந்துபோனால், காரியமா கிய பிரபஞ்சம் மீளவும் தோன்ற நியாயமில்லையே!

**பிரசங்கியார்.**—நித்தமாயிருக்கிற மாயை காரணமா யிருப்ப தால், காரியமாகிய பிரபஞ்சம் பின் தோன்றுதற்குக் குறை வில்லை.

**வடிவேலு.**—மாயை காரணமென்று சொல்லுவதென்ன? பர மாணுக்களன்றோ காரணம்?

**பிரசங்கியார்.**—பரமாணுக்கள் காரியமான அவயவத்தோடு கூடியிருக்கையால், அவயவமில்லாத மாயையே பிரபஞ்சத் துக்குப் பரம காரண மாகவேண்டும். நீர் சொல்லும் பர மாணுக்கள் காரணமாகா.

**வடிவேலு.**—பிரபஞ்சத்துக்குக் காரணமாயுள்ள பரமாணுக்களை அவயவத்தோடு கூடின காரியமென்று சொல்லுவது எவ் விதம் பொருந்தும்?

**பிரசங்கியார்.**—நீர் காரணமென்று கூறும் பரமாணுக்கள் குடம் பானை முதலிய அவயவமுடையனவா யிருப்பதால், காரி யப்பொருளென்றே அறிந்தனம். காரியப் பொருள்க ளெல்லாம் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு காரணத் தாலே அழியத்தக்க முறைமையினை யுடையவை. ஆதலால் தனக்கொரு காரணமில்லாமலும் தான் அவயவப்படாமலு மிருக்கிற மாயையே இப்பிரபஞ்சத்துக்கு முதற்காரண மாகும். பிரபஞ்சம் தோன்றி நின்றழிகிற தொழில்களா கிய இதனையே மாயா காரியமென்று வேதங்கள் சொல்

னும், விதையினிடத்துப் பனை, கொம்பு, இலை, காய், கனி முதலியவைகள் ஸூக்ஷ்ம ரூபமாய் அடங்கியிருப்பின், அவைகள் பின்னர், ஸ்தூல ரூபமாக வெளிப்பட்டுத் தோன்றும். அவ்வாறு ஸூக்ஷ்ம ரூபமாக விதையில் அடங்கியிரா மற்போனால், ஸ்தூல ரூபமாக வெளிவரா என்னும் உலக மொழியை நீர் மறந்துவிட்டீர்போலும். இதனாலே நீர் காரணமென்று சொன்ன பரமாணுவாதத்தை முற்றும் ஒழித்துவிட்டு, மாயையே பிரபஞ்சத்துக்குக் காரணமென்பதை விசாரித்துப் பார்ப்பீராக.

வடிவேலு.—மாயையின்கண்ணுள்ள பிரபஞ்சமே தோன்றிநின்றழியும் என்பதில்லை! பிரபஞ்சம் தானே தோன்றிநின்றழியுமென்று சொல்லக்கூடாதோ?

**பிரசங்கியார்.**—காரணமான மாயையினின்றும் காரியமான பிரபஞ்சம் தோன்றி நின்றழியுமென்று சொல்லாமல், பிரபஞ்சம் தானே காரணமுமாய்க் காரியமுமா யிருக்குமென்று கூறின், அவ்விதம் சொல்லுவது முயலினிடத்துக் கொம்பு உண்டாகும் என்பதோடொக்கும். இவ்வுண்மையை மாயையென்னும் சொல்லாலேயே மெய்ப்பித்தல் கூடும். 'மா' என்பது ஒடுங்குதல், 'யா' என்பது வருதல். பிரபஞ்சமாகிய காரியங்களெல்லாம் தன்னிடம் வந்து ஒடுங்குவதற்கும் மீண்டும் தன்னிடத்திலிருந்து தோன்றுவதற்கும் காரணமாய் நிற்றலால், மாயை அப்பெயர் பெறுகின்றது. ஆகவே ஒன்றற்கொன்று நுண்ணியதாய் ஒடுங்கும் ஸூக்ஷ்மங்களுக்கு அதிஸூக்ஷ்மப் பொருள் யாதோ அதுவே மாயை என்பதாம்.

வடிவேலு.—மரத்திலிருந்து உதிர்ந்து போகும் இலைகள் மரத்திலேயே புகுந்து மீண்டு இலைகளாய் அம்மரத்திலிருந்து தோன்றுமாயின், மாயையிலிருந்து தோன்றும் பிரபஞ்சமும் மாயையில் ஒடுங்கிப் பின் தோன்றுமென்பது பொருத்தமாகும்.

**பிரசங்கியார்.**—மரத்திலிருந்து உதிரும் இலைகள், மரம் முளைப்பதற்குக் காரணமாயிருக்கிற நிலத்தில் ஒடுங்கி ஸூக்ஷ்ம ரூபமாய் நின்று காலகன்ம முதலிய வேறு காரணங்களெல்லாம் ஒருங்குகூடிய வழி, அம்மரத்திலிருந்தே வேறு வேறு இலைகளாகத் தோன்றும். அங்ஙனமே பிரபஞ்சமும் மாயையில் ஒருகாலத்தில் ஒடுங்கி ஒருகாலத்தில் தோன்றும்.

**—வேலு.**—மாயையில் தோன்றுமென்ற பிரபஞ்சத்தை ஆதியென்று சொல்லுகிறதா? அநாதியென்று சொல்லுகிறதா?

**பிரசங்கியார்.**—மாயை எக்காலத்தும் உள்பொருளாயிருக்க, அதன் காரியமாகிய பிரபஞ்சம் அதனிடத்து ஸூக்ஷ்ம ரூபமாயடங்கிப் பின் ஸ்தூல ரூபமாய் வெளிப்படலால், அம்மாயாகாரியப் பிரபஞ்சம் அநாதியேயாகும். அது ஒரு கர்த்தாவால் சிருஷ்டிகாலத்து வெளிப்பட்டுத் தோன்றுதலால் அதை ஆதியென்று சொல்லவுங் கூடும்.

**வடிவேலு.**—இவ்விடத்து மாயையே தன் காரியத்தைத் தரும், இதற்கு ஒரு கர்த்தா வேண்டுமென்பது என்ன?

**பிரசங்கியார்.**—கர்த்தா உண்டென்பதை நீர் அறியும்படி உள்ளவாறு சொல்லுகிறேன், கேட்பீராக. பூத முதலிய பிரபஞ்சமெல்லாம் ஒரு சேதனப் பொருளால் செய்யப்படும் காரியமாகும். புருடன் சேதனப்பொருளாயினும் அவன் பூத பரிணாமமாகிய தனுகரணங்களைப் பெற்றாலன்றி ஒன்றையும் அறியமாட்டான். அந்த தனுகரணாதிகளை அவனுக்கு மாயை கொடுத்தாலும் அம்மாயைக்கு அறிவு சிறிதும் இல்லை யென்றே வேதாகமங்கள் சொல்லாநின்றன. ஆதலால் பூதமுதலிய பிரபஞ்சங்களெல்லாவற்றையும் மாயையினின்று தோற்றுவிக்கப் புருடனுக்கும் மாயைக்கும் வேறாக ஒரு கர்த்தா வேண்டும்.

**வடிவேலு.**—கர்த்தா மாயாகாரியத்தைத் தோற்றுவிக்குமிடத்துத் தானே தோற்றுவிப்பானா? அல்லது ஏதேனும் காரணங்களால் தோற்றுவிப்பானா?

பிரசங்கியார்.—காரியமாகிய பிரபஞ்சம் தோற்றுகைக்கு வேண்டப்படுங் காரணங்கள் முதற்காரணமெனவும், துணைக் காரணமெனவும், நிமித்தகாரண மெனவும், மூன்று வகைப் படும். இதை உபமானத்தால் விளக்குகிறேன். உலகத்தில் குடம் சட்டி பானை முதலிய பாண்டங்களை உண்டாக்குவதற்கு மண் முதற்காரணமாகவும், திரிகை தண்டு முதலானவைகள் துணைக்காரணமாகவும், குலாலன் நிமித்த காரணமாகவும் விளங்குவதுபோல், பிரபஞ்சகாரணமாகிய மாயை மண்ணைப்போல் முதற்காரணமாகவும், தனது கிரியாசத்தி திரிகைதண்டைப்போல் துணைக்காரணமாகவும், தானே குலாலனைப்போல் நிமித்தகாரணமாகவும் நின்று பிரபஞ்ச காரியங்க ளெல்லாவற்றையும் கர்த்தா தோற்றுவிப்பான். இங்கு முக்கியமாய் அறியவேண்டிய உண்மை யாதெனில், குலாலன் சரீரமுடையவனாய் மண்ணிலிருந்து பாண்டங்களைச் செய்கிறான். கர்த்தா சரீரமில்லாதவராய் மாயையிலிருந்து பிரபஞ்ச காரியங்களைத் தோற்றுவிக்கின்றார். குலாலன் மண்ணுக்கு வேறாய் நின்று பாண்டங்களை உண்டாக்குகின்றான். கர்த்தா மாயைக்கு அனன்னியமாய் நின்று பிரபஞ்ச காரியங்களை உண்டாக்குகின்றார். குலாலன் சங்கற்பமாத்திரத்தினாலே பாண்டங்களைச் செய்யமாட்டான். கர்த்தா சங்கற்பரூப சந்நிதி மாத்திரத்தினாலே மாயையிலிருந்து பிரபஞ்ச காரியங்களைத் தோற்றுவிக்கிறார். இவ்வகையான பல காரணத்தால் கர்த்தா குலாலனைப் போல் கேவலம் நிமித்தகாரணரல்லர். மாயையை இயக்குவதற்கு அவர் நிமித்தகாரணராயினும் பிரபஞ்ச காரியத்தோற்றத்துக்கு அவர் நிமித்தோபாதான காரணரே. பிள்ளைக்குப் பிதா நிமித்தமும் உபாதான காரணமும் ஆவதுபோல, இதனை ஓர் உபமான வாயிலாக உணரலாம். அங்குரத்துக்கு ஆதாரம் வித்து, வித்துக்கு ஆதாரம் குளிர்ச்சி, குளிர்ச்சிக்கு ஆதாரம் நிலம்; இவைபோல் பிரபஞ்சத்துக்கு ஆதா

ரம் மாயை, மாயைக்கு ஆதாரம் சத்தி, சத்திக்கு ஆதாரம் சிவம். நிலம் குளிர்ந்தவிடத்து அதனிடத்திலிருந்து வித்து முளையைத் தோற்றுவிப்பதுபோல், சிவசக்தி சங்கல்பித்த போது மாயையினின்று பிரபஞ்சம் தோன்றுகின்றது. இத னல் பிரபஞ்சம் மாயையுள் அடங்கியதென்பதும் மாயை சக் திக்குள் அடங்கியதென்பதும் பெறப்பட்டது. ஆனதால் கர்த்தா கேவலம் நிமித்தகாரண மென்போர் மதம் நிராகரிக் கப்பட்டது. சிவாகமங்களில் ஏகதேசத்திலே கர்த்தா நிமித்த காரணராகக் கூறப்பட்டது அபக்குவர்களாகிய ஆன்மாக்கள் உண்மையை யறிந்து உய்யும்பொருட்டே யன்றி வேறல்ல. ஆகலின் கர்த்தாவைக் கேவலம் நிமித்த காரணரென்று கூறுவோர் அவைதிக பாசுபதராவர்.

வடிவேலு.—கர்த்தா மாயையிலிருந்து பிரபஞ்சத்தை எவ்விதம் தோற்றுவிப்பார்?

பிரசங்கியார்.—மாயையானது விந்து என்றும், மோகினியென் றும் மான் அல்லது அவ்யக்தம் என்றும் மூன்றுவகைப் படும். அவை முறையே சுத்தமாயை, அசுத்தமாயை, பிர கிருதி மாயை என்றும், பரப்பிரகிருதி, அபரப்பிரகிருதி மூலப்பிரகிருதி என்றும், சுத்தமாயை என்றும் சுத்தாசுத்த மாயை யென்றும் பலவிதமாகச் சொல்லப்படும். இந்த மூன்று மாயையுள் அவ்யக்தம் என்றும் பிரகிருதிமாயை முளைப்பதற்குப் பக்குவப்பட்டிருக்கும் உப்பின விதை யைப்போல் அசுத்த மாயையின் தூல பரிணமமாயிருத்த லின், மாயையானது சுத்தமாயை அசுத்தமாயையென இரண்டாகவே கூறப்படுகின்றது. இவ்விரண்டு மாயை யும் வெவ்வேறா அல்லது ஒன்றா வெனின், சுத்த மாயையின் காரியமே அசுத்த மாயை யென்பார் ஒரு பக்ஷத் தார். சுத்த மாயையைப்போல் அசுத்தமாயையும் அநாதியே யாம் என்பார் மற்றொரு பக்ஷத்தார். மாயை யொன்றே ஊர்த்துவ மாயை அதோமாயை யென்று இருவிதப்படும்

என்பார் வேறொரு பக்ஷத்தார். இங்ஙனம் கூறும் ஆசிரியர் பலவகையினர். இவ்வித்தியாசங்கள் அனைத்தும் ஆகம பேத மென்றே அறியவேண்டும். மாயையில் தோன்றிய பிரபஞ் சங்களெல்லாம் சுத்தம், சுத்தாசுத்தம், அசுத்தம் என மூன்று வகையாதலால் அவற்றிற்கு முதற்காரணமா யுள்ள மாயையும் மூன்றாகச் சொல்லப்படுகின்றது. அஃ தெப்படி யெனில், பட்டு நூலில் பட்டுப்புடவையே யன்றிப் பருத்திப்புடவையும் கோணியும் ஆகாததுபோல், சுத்த முதலிய பிரபஞ்ச காரியங்களுக்குக் காரணமாயை மூன்று வேண்டப்படுகிறது. சுத்தமாயையானது மலகன்மங்களோடு கலவாது சுத்தமாய் மற்ற விரண்டு மாயையையும் வியா பித்து அவற்றிற்கு மேலாய் இருப்பது. இதற்கு மஹா மாயை, குடிலை அல்லது குண்டலி, ஓங்காரம் முத லிய பல நாமங்கள் உள்ளன. இது அசுத்த மாயைபோல் மோகத்தை உண்டுபண்ணாது. அசுத்த மாயையானது சுத்த மாயைக்குக் கீழாயடங்கி மலகன்மங்களோடு கலந்து அசுத்த தத்துவங்களுக்கு முதற்காரணமாயிருப்பது. இது கன்மத்துக் கிருப்பிடமாயுள்ளது. பிரகிருதி மாயையானது அசுத்தமாயையின் தூலபரிணாமமாயிருப்பது. எவ்வாறெ னில் வித்துப்போல் அசுத்தமாயையும் அவ்வித்து முளைப்ப தற்குப் பக்குவப்பட்டு உப்பின வித்தைப்போல் பிரகிருதி மாயையும் என்று அறியத்தக்கது. இங்ஙனம் கூறப்பட்ட மூன்றுவித மாயையுள் சுத்தமாயையிலிருந்து சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி, என்ற நான்கு வாக்குகள் தோன்றும். (வாக்கு என்பது நாதம் அல்லது தொனி என்று பொருள்படும். இரண்டு பெருவிரல்களாலும் இரண்டு காதுகளை மூடிக்கொண்டபோது கேட்கும் ஓசை யே நாதம்.) இந்த நாதம் அதிக ஸ்தூலமாயிருக்கும்போது வைகரி வாக்கென்றும், சிறிது ஸ்தூலமாயிருக்கும்போது மத்திமை வாக்கென்றும், சிறிது சூக்குமமாயிருக்கும்போது

பைசந்தி வாக்கென்றும், அதிக சூக்குமமாயிருக்கும்போது சூக்குமை வாக்கென்றும் கூறப்படும். அசுத்தமாயையிலிருந்து காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், என்னும் ஐந்து தத்துவங்கள் தோன்றும். அவ்யக்தம் என்னும் பிரகிருதிமாயையிலிருந்து சாத்துவிதம், இராசதம், தாமதம், என்னுங் குணமுதல் பிருதிவி தத்துவம் ஈருக இருபத்துநான்கு தத்துவங்கள் தோன்றும். இவ்வாறு மேற்குறித்த ஜடரூபமான மூன்று மாயைகளும் தங்கள் தங்கள் காரியரூபங்களைச் சிவசத்தி சங்கல்பரூப சந்நிதியினின்று தோற்றுவிக்கும். முன் சொன்ன

வைகரிவாக்காவது.—சப்தமானது உள்ளிருந்து வெளிக்கிளம்பும்போது தன் செவிக்கும் பிறர் செவிக்கும் கேட்கும்படி உச்சரிக்கப்படுவதாய், சங்கல்பித்த பொருளைச் சொல்லும் சொல்லாய், சொல்வானுக்கும் கேட்பானுக்கும் விஷயங்களை உணர்த்தும் உணர்வாய், பிராணவாயுவோடு உதான வாயுவுங்கூடி, நாக்கு, உண்ணாக்கு, பல், உதடு, மூக்கு, இவைகளிற்பட்டு வெளியே புறப்படும் சப்தமாம். தனக்கு முன்னிருக்கும் மத்திமை வாக்கைவிட அதிக ஸ்தூலமாயிருக்கும். (இங்கு உதானவாயுவென்பது கண்டத்திலிருக்கும் வாயு. இது பேசுகின்ற முயற்சியை முன்னிட்டு தேகத்துக்குள்ளிருக்கும் ஆகாசகுணமாகிய சப்தத்தை அட்சரங்களாகச்செய்து வெளிப்படுதலையே தனக்கு வியாபாரமாக உடையது).

மத்திமைவாக்காவது.—தன் செவிக்கும் கேட்கப்படாததாய் சொல்பவனுக்குள்ளே புத்தியால் மாத்திரம் உணரப்படுந் தொனியாய், பிராணவாயுவின் சம்பந்தமின்றி உதானவாயுவின் விருத்திகளை யுடையதாய், புறம்பே புறப்பட்டுச் செல்லும் அக்ஷரங்களின் சப்தத்தை யுடையதாய், கண்டத்திலே மிருதுவாயிருக்கும் ஓசையாம். இது தனக்கு முன்னிருக்கும் பைசந்திவாக்கைவிடச் சிறிது ஸ்தூலமாயிருக்கும்.

பைசந்தி வாக்காவது.—வெண்மையான ஜலத்தில் பஞ்சவர்ணங்கள் தோன்றி உருத்தெரியாமல் நிற்கும் மயிலின் முட்டையைப்போல், தன்னிடத்தில் காரியங்களெல்லாம் விளங்காது புத்தியாற் சுட்டி ஈதென்றறியப்படாத அக்ஷரங்களை ஒன்றொன்றொவ்வாத வடிவை உடையதாய், சூக்குமை வாக்கே தனக்குக் காரணமாய்த் தன்னிடத்தில் தோற்றப் படும் அக்ஷரங்களினுடைய முறைமையைக் கிஞ்சித்தும் தெரியாதபடி தன்னிடத்தில் ஒடுக்கித் தன்னிடத்தெல்லாம் விளங்கும் பிரகாசத்தை உடையதாயிருக்கும்.

சூக்குமை வாக்காவது.—உள்ளே உள்ள உணர்வாய், பிரகாசமாய், தன் காரியரூபமான மற்ற மூன்று வாக்குகளும் தன்னிடத்து ஒடுங்கியபோது தான் ஒன்றிலும் ஒடுங்காது சுத்தமாய், நாபியடியில் நாசமின்றி நிலைபெற்று விளங்குவதாம். இதனை தரிசித்த புருடனுக்கு நீங்காத பேரறிவும், பரமமான ஆனந்தமும், ஸுதந்தரமும், நித்தியத்துவமும் உண்டாம். ஜனன மரணங்களினாலே வாராநின்ற இளைப்பும் விகாரமும் இல்லையாம். மேல்கண்ட நால்வகை வாக்குகளின் தன்மையைச் சுருக்கிச் சொல்லுமிடத்து ஒருவர் பேசும்போது உண்டாகும் சப்தம் உந்தியிலிருக்கும்பொழுது சூக்குமையென்றும், ஹிருதயத்தில் வந்தபொழுது பைசந்தியென்றும், கண்டத்தில் வந்தபொழுது மத்திமையென்றும், வாக்கில் வந்தபொழுது வைகரியென்றும் சொல்லப்படும். இந்த வாக்குகளே ஞானத்துக்கேதுவாம். இவையே வேதமுதலிய கலைகளாக விரிந்துள்ளன.

**வடிவேலு.**—தாங்கள் சொன்ன வாக்குகள் நான்கும் எவ்விதம் காரியப்படும் ?

**பிரசங்கியார்.**—வைகரி முதலிய வாக்குகள் நிவர்த்தி பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதம் என்னும் ஐந்து கலைகளையும் பற்றுக்கோடாகச் சார்ந்து ஐவகைப்பட்டு சுத்த தத்துவங்கள் ஐந்தில் நின்றும் ஜீவியாநிற்கும். அதாவது

நிவர்த்திகலையுட்பட்ட புவன வாசிகளுக்கு ஸூக்ஷ்மமாயும், சாந்தியாதீத கலையுட்பட்ட புவனவாசிகளுக்கு ஸூக்ஷ்ம தரமாயும் ஜீவியாநிற்கும். இக்கலைகளைந்தும், சுத்த மாயையினின்று தோன்றினமையால் ஆன்மாவினிடத்தி லுள்ள மலமறைப்பை அகற்றும். அன்றியும் எவ் விடத்திலும் வியாபித்தும் இருக்கும். இவை காரியப்படும் போது படம் குடிலானாற்போல் விருத்தியாய், அதாவது சூக்கும பரிணுமமாய்க் காரியப்படுவனே யன்றி, அசுத்த மாயா காரியம்போல் பரிணுமமாய்க் காரியப்படுவனவல்ல.

வடிவேலு.—தாங்கள் சொல்லிவந்த வாக்குகளைப் பிரமமென்று சொன்னால் குற்றமென்ன ? விருத்தி பரிணுமம் என்பதின் பேதம் விளங்கச் சொல்லவேண்டும்.

பிரசங்கியார்.—வாக்குகள் சுத்தமாயையின் காரியமாதலாலும், ஜடமாய் அனேகமாதலாலும், வாக்கை சுத்த சைதன்னிய சொரூபமான பிரமமென்று சொல்லுவது பொருந்தாது. அவ்வாறு கூறுவோர் சத்தப்பிரமவாதிகள். ஆயினும் அவ்வாக்கு பிரமத்தின் பரிக்கிரஹசத்தி யெனப்படும். மா மாயையென்று நல்லோர் கூறுவார்கள். இனி விருத்தி, பரிணுமம் என்பதை விளங்கச் சொல்லவேண்டுமாயின்

விருத்தியாவது.—கன்மங்களோடு கலவாத சுத்த மாயையின் காரியமாகும். எதுபோலெனில், படம் குடிலானாற் போல, அதாவது மடித்து வைத்திருக்கும் வஸ்திரத்தைக் கூடார மாக விரித்து நிழலுக்காகக் கட்டினாற்போல.

பரிணுமமாவது.—காரணப்பொருள் விகார ரூபமாய்த் திரி தலே: அதாவது முன்னிருந்த தனது ரூபத்தை விடுத்து வேறொன்றாகத் திரிதலாம். அது மலகன்மங்களோடு கலந்து அசுத்தமாயையின் காரியமாயிருக்கும். பால் முழுதும் தயி ராக மாறுவதுபோல் முழுதும் பரிணமித்தலும் நெய்யை நெடுநாள் வைத்திருந்தால் அதிலுண்டாகும் புழுப்போல் ஏகதேசத்திற் பரிணமித்தலும் எனப் பரிணுமம் இருவகைப்

படும். அவ்விரண்டினுள் நெய்யில் புழு உண்டாகிறது போல் ஏகதேச பரிணமமே அசுத்த மாயையின் காரியமாம்.

வடிவேலு.—சுத்தமாயையிலிருந்து வேறென்ன தோன்றும் ?

பிரசங்கியார்.—சுத்தமாயை உபாதானமாய் நிற்க அதினின்றும் மேற்சொன்ன நால்வகை வாக்குகளும் பஞ்சகலைகளும் தோன்றுவதன்றி, சப்தகோடி மந்திரேசுரர், அநந்தாதி அஷ்டவித்தியேசுரர், அணுசதாசிவர் ஆகிய அபரமுத்தர்களுக்கு வேண்டப்படும் தநுகரண புவன போகங்களும் வேதாகமங்களிலே சொல்லப்படும் எண்பத்தொரு பதங்கள், ஐம்பத்தோரட்சரங்கள், சப்தகோடி மந்திரங்கள் ஆகிய இவைகளும், நாதம், விந்து, சாதாக்கியம், ஈசுவரம், சுத்தவித்தை என்னும் சிவதத்துவங்கள் ஐந்தும் தோன்றும். அன்றியும் சுத்தகாலமுதல் சுத்த பிருதிவியீறாக முப்பத்தொரு தத்துவங்களும் தோன்றும். முன் குறிப்பித்த சத்தகோடி மந்திரேசுரர் சுத்தவித்யா தத்துவத்திலிருப்பவர். அஷ்டவித்தியேசுரர் ஈசுவரதத்துவத்திலிருப்பவர். அணுசதாசிவர் சிவதத்துவத்தி லிருப்பவர்.

அஷ்டவித்தியேசுவரராவார்—அனந்தர், ஸூக்ஷ்மர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி ஆக எண்மர். அணுசதாசிவராவார்:—பிரணவர், சாதாக்கியர், தீர்த்தர், காரணர், சுசீலர், ஈசர், சூக்குமர், காலர், தேகேசுவரர், அம்சு ஆகப் பதின்மர்.

வடிவேலு.—சுத்தமாயையினின்றும் உண்டான நால்வகை வாக்குகளும் ஆன்மாக்கள்தோறும் எவ்வாறு பொருந்திப் பிரகாசிக்கும் ?

பிரசங்கியார்.—வாக்குகள் நான்கும் ஆன்மாக்களிடத்து ஞானமாய் வந்து பொருந்திப் பிரகாசிக்கும். அந்த ஞானம் சவிகற்ப ஞானமெனவும் நிர்விகற்ப ஞானமெனவும் இருவகைப்படும். சவிகற்பஞானமாவது:—பெயர், ஜாதி, குணம், தொழில், பொருள் இவற்றோடு கூடிப் பகுத்

தறிவது. நிர்விகற்பஞானமாவது :—முன் சொன்னவை களுள் ஒன்ருேடுங் கூடாது பொருளுண்மைமாத்திர மாயே அறிவது. சவிகற்ப ஞானம் என்பது அபரஞானம், கலைஞானம், அபரோட்ச ஞானம் என்பதாதி பல பெயர்க ளால் அழைக்கப் பெறும். நிர்விகற்ப ஞானம் என்பது பர ஞானம், அனுபவஞானம், அபரோட்சஞானம், அருள் ஞானம், சிவஞானம் என்பதாதி பல பெயர்களால் அழைக் கப்பெறும். இவ்விரண்டினுள் சவிகற்பஞானம், மந்தி ரேஸ்வரர், அஷ்டவித்தியேசுரர், அணுசதாசிவர் ஆகிய அபரமுத்தர்களுக்கே யன்றி, விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூவகை ஆன்மாக்களுக்கும் அவசியமாய் வேண்டப்படும். இவருள் விஞ்ஞானகலருக்கு ஸ்தூலமா யும், பிரளயாகலருக்கு ஸ்தூலதரமாயும், சகலருக்கு ஸ்தூலதம மாயும் பொருந்திப் பிரகாசிக்கும். இந்த சவிகற்பஞானமா கிய விந்துஞானம் இவர்களுக்குப் பொருந்திற்றில்லையாகில் அறிவேயில்லையாம். இது எப்பொழுது தனக்குப் பரம பந்தமாயும், தன்னின் வேருயும் காணப்பட்டு நீங்குகின் றதோ அப்பொழுது சுத்தமாயைக்கு மேலுள்ள அனுபவ ஞானம் (நிர்விகற்பஞானம், சிவஞானம்) உண்டாகும். அது உண்டாகவே இடபக்கொடியையுடைய பரமசிவத்தின் திருவடியடைதலாகிய பரமுத்தி சித்திக்கும். சவிகற்ப ஞானம் சித்தியாது நிற்விகற்ப ஞானம் கைகூடுவதும் உண்டு. அது பூர்வ புண்ணியப் பயனேயன்றி வேறல்ல.

வடிவேலு.—மாயையினின்றும் மாயா காரியமாகிய பிரபஞ்சம் தோன்று முறை எவ்விதம் ?

பிரசங்கியார்.—அருவமாயிருக்கிற மாயையினின்று உருவமா கிய தனுவாதிகள் தோன்றி சரீரமும் சரீரியும்போலப் பொருந்திநிற்கும். இதனை விரிக்கின், ஒரு சிறு ஆலம் விதையிலிருந்து ஒரு பெரிய விருட்சம் உண்டாகிறது போல் ஸூக்ஷ்மமான மாயையிலிருந்து ஸ்தூலமாகிய

கலாதி தத்துவங்கள் தோன்றும். அவற்றிலிருந்து அவற்றிலும் ஸ்தூலமாகிய மூலப்பிரகிருதி தோன்றும். அதிலிருந்து அதிலும் ஸ்தூலங்களாகிய குணதத்துவ முதலாயினவும் தோன்றும். அவற்றினின்றும் தோன்றும் காரியங்களெல்லாம் அவற்றிலும் ஸ்தூலங்களாகவே யிருக்கும். அவ்வாறே காரியப் பிரபஞ்சமெல்லாம் தோன்றி, பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், ஆண், பெண், அலி முதலிய அவயவப் பகுப்புடையனவாய் விரியும். விரிந்த முறையே ஒடுங்குங் காலத்து ஸ்தூலங்கள் ஸூக்ஷ்மங்களிலும், ஸூக்ஷ்மங்கள் காரணங்களிலும் ஒடுங்கும். இத்தன்மையவாகிய காரண காரியப் பிரபஞ்சமனைத்தும் எவ்வாறு நிற்குமெனில், ஒன்றுக்கொன்று இருளும் ஒளியும்போல் பேதங்களுமாய், சொல்லும் பொருளும்போல் பேதாபேதங்களுமாய், பொன்னும் பணியும்போல் அபேதங்களுமாய்க் காரியப்பட்டு நிற்கும். இப்படிக் காரியப்படும்போது, கர்த்தா கலப்பினால் எல்லாந் தானேயாயும், பொருட்டன்மையால் வேறாயும், அந்தர்யாமியாய் நின்று செலுத்துதலால் உடனாயும் இருப்பன்.

**வடிவேலு.**—அருவத்திலே நின்று உருவம் தோன்றுதல்லவா? அப்படியிருக்க விகாரமில்லாத மாயையினின்றும் விகாரமான பிரபஞ்சம் எவ்விதம் தோன்றும்?

**பிரசங்கியார்.**—அருவமாயும் அவிகாரியாயுமுள்ள ஆகாசத்தினின்று உருவமாயும் விகாரியாயுமுள்ள வாயு முதலிய பூதங்கள் தோன்றுகின்றன. அல்லாமலும் அதில் நின்றே பல மேகங்களும், மேகங்களில் பல விகாரங்களும், பல வோசைகளும், பல மின்னல்களும், பல இடிகளும், இன்னும் இவைபோல்வன பலவும் தோன்றுகின்றன. அதுபோல் அருவமும் அவிகாரமுமாயுள்ள மாயையினின்றும் உருவமும் விகாரமுமாயுள்ள பிரபஞ்சமனைத்தும் தோன்றும்.

வடிவேலு.—விகாரமில்லாத மாயையில் நின்று விகாரப்படும் பிரபஞ்சத்தைக் கர்த்தா எவ்விதம் தோற்றுவிப்பார் ?

பிரசங்கியார்.—குயவன் குடம் முதலிய காரியங்களை அவற்றிற்குக் காரணமாகிய மண்ணில் நின்றுந் தோற்றுவிப்பது போல், கர்த்தாவும் தான் கருதிய பிரபஞ்ச மனைத்தையும், கரசரணாதிகளின்றிச் சங்கற்ப மாத்திரத்திலேயே மாயையாகிய காரணத்தில் நின்றும் தோற்றுவிப்பார்.

வடிவேலு.—குயவன் குடம் முதலிய காரியங்களை பூமியில் நின்று செய்யக் கண்டோம். கர்த்தா பிரபஞ்ச காரியங்களை எவ்விடத்தில் நின்று தோற்றுவிப்பார் ?

பிரசங்கியார்.—கர்த்தா அமூர்த்த மாதலாலும், வாக்கு மனாதீத கோசரப்பொருளாதலாலும், அவர் தன்மை இப்படிப்பட்டதென்று அளவிட்டுச் சொல்லமுடியாது. ஆயினும் அவரது நிலைமையை ஓர் உபமான வாயிலாகச் சொல்லுகிறோம். கேட்டுத் தெளிவீராக. பூலோகம், புவலோகம், சுவலோகம், மஹாலோகம், சனலோகம், தபோலோகம், சத்தியலோகம் என்று சொல்லப்பட்ட மேலுலகங்களேழையும், அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மஹாதலம், பாதாளம் என்று சொல்லப்பட்ட கீழுலகங்க ளேழையும் தோற்றுவித்து நிறுத்தி, அழிக்குங்காலம் எவ்வாறு அமூர்த்தமாயும் அப்பிரத்தியட்சமாயும் விகாரப்படாமலும் இருக்கின்றதோ அதுபோல் கர்த்தாவும் நிராதாரமாய் நின்றே பலதொழில்களையும் நடத்துவார்.

வடிவேலு.—நிர்விகாரியாகிய கர்த்தா சிருஷ்டி திதி சங்ஹாரம் என்னும் மூன்று தொழில்களையும் செய்யுமிடத்து அவருக்கு பாரமாகாதோ !

பிரசங்கியார்.—ஒருவர் கற்ற நூற்பொருளும் சொல்லும் அவருடைய ஆன்மபோதத்தில் வாசனை ரூபமா யடங்கிப் பின் நினைத்தபோது வருத்தமில்லாமல் தோன்றுவதுபோலவும், ஒருவருக்கு ஜாக்கிர முதலிய ஐந்தவஸ்தைகளும்

யாதொரு பிரயாசையில்லாமல் அவருடைய உடம்பில் ஒடுங்கித் தோன்றும் முறைமைபோலவும், நிர்விகாரியான கர்த்தாவுக்கும், தன்னுடைய சங்கற்ப சன்னிதியிலே சகல பிரபஞ்சங்களும் தோன்றி நின்று ஒடுங்கும்போது, பாரமில்லை.

வடிவேலு.—ஸம்ஹார காலத்தில் கர்த்தாவிடத்தில் ஒடுங்கின பிரபஞ்சமும் ஆன்மாக்களும் மீளவும் கர்த்தாவில் நின்று தோன்றுவதற்குக் காரணமென்ன ?

பிரசங்கியார்.—ஆன்மாவைப் பற்றியிருக்கும் குற்றம் பொருந்திய ஆணவமலம் பரிபாகம் வருதற்பொருட்டு மீளவும் தோன்றவேண்டியதேயன்றி வேறல்ல. இதனால் அறியவேண்டிய உண்மை யாதெனில், கிழங்கில் நின்று தோன்றிய தாமரையைச் சேற்றில் நின்று தோன்றிய தாமரை என்னும் பொருள்படப் பங்கஜம் என்று கூறுவதுபோல், மாயையினின்று தோன்றிய பிரபஞ்சத்தைக் கர்த்தாவினின்றுந் தோன்றியதாகச் சொல்வது உபசாரம்.

வடிவேலு.—அவ்வாறு மீளவும் பிரபஞ்சந் தோன்றுவதாயிருந்தால் முன்னொடுங்காது நிலைபெற்றிருக்கலாமே! அப்படியின்றி ஒடுங்குதல் யாதுக்கு ?

பிரசங்கியார்.—ஆன்மா ஒடுங்கினாலும் ஆன்மாவினது இச்சா ஞானக்கிரியைகளை உயிர்ப்பிக்கின்ற காரிய ரூபங்கள் அழிந்துபோகுமேயன்றி, காரியங்களை உண்டாக்குகின்ற காரணம் அழியாமல் நிலைபெற்றிருக்கும். அங்ஙனம் அழியாமல் நிலைபெற்றிருக்குங் காரணத்தைக்கொண்டு கர்த்தா முன்போல் காரியங்களைத் தோற்றுவிப்பான்.

வடிவேலு.—கர்த்தா சிருஷ்டி முதலிய மூன்று கிருத்தியங்களை இடையறாது செய்வானாயின் அவன் விகாரியாகானோ ?

பிரசங்கியார்.—அவன் விகாரியல்ல ; அவிகாரியே. எவ்விதமெனில், இந்த பூமியின்கண் யாவராலும் புகழப்பெற்ற அவிகாரியாகிய சூரியனுடைய ஸன்னிதியில் சூரிய காந்தக்

கல் அக்கினியை உமிழ்கின்றது: தாமரை அலர்கின்றது. ஜலம் மண்ணில் சுவறுகின்றது. இதுபோல் கர்த்தாவி னுடைய ஸன்னிதியில் முத்தொழிலும் நடைபெறு மாத லால், அவன் விகாரியாகான்.

வடிவேலு.—சிருஷ்டி, திதி, ஸம்ஹாரம் என்ற முத்தொழி லும் மும்மூர்த்திகளுக்குரியதென்று ஞாதாக்கள் சொல்லி யிருக்க, இம்மூன்று கிருத்தியமும் கர்த்தாவுக்கே உரிய தென்று சொல்வதின் காரணமென்ன?

பிரசங்கியார்.—திரிமூர்த்திகளும் தாம் ஈட்டிய புண்ணிய விசே டத்தினுலே திரிமூர்த்திபாராகிய முதல்வனது உயர்ந்த அதிகார சக்தியை அவரது ஏவலால் பெற்றுடையராதலால் அவர்கள் அக்கிருத்தியங்களுக்கு ஸ்வதந்தர முடையவ ரல்லர். முத்தொழிலும் செய்வதற்குரிய ஸர்வ ஸ்வதந்தர முடையவர் கர்த்தா ஒருவரே! பூபதி மந்திரி பிரதானி முதலானவர்களில் தன்னுடை ஆஞ்ஞையை வைத்து ராஜ்ய பரிபாலனம் பண்ணுவதுபோல், சிவபெருமானும், பிரமன், விஷ்ணு, உருத்திரன் முதலான தேவர்களைக் கொண்டு முத்தொழிலை நடத்துகின்றார்.

வடிவேலு.—மேற்சொன்ன சிருஷ்டி முதலிய கிருத்தியங்களைக் கர்த்தா என்ன காரணத்தைக் கருதிச் செய்கின்றார்?

பிரசங்கியார்.—சிருஷ்டி முதலிய கிருத்தியங்களைக் கர்த்தாவின் திருவிளையாட்டு (லீலாமாத்திரம்) என்று சொல்லலாம். அன்றியும் கருணையால் ஆன்மாக்களுக்கு நிலைபெற்ற இக பர போகங்களைக் கொடுக்கும் பொருட்டும் அவர்களை அநா தியே பற்றியுள்ள மலங்களை யொழித்து மோட்சத்தை அடைவிக்கும் பொருட்டும் என்றும் சொல்லலாம்.

வடிவேலு.—இந்தக் கிருத்தியங்களைக் கர்த்தாவின் திருவிளை யாட்டென்று சொன்னுல், அது பாலர்தொழிலைப்போல் பயனற்றதாய் முடியுமல்லவா?

பிரசங்கியார்.—அப்படி யன்று! திருவிளையாட் டென்றது

யாதொரு செய்கையையும் ஆயாசமில்லாமல் பாரமற எளிதிற் செய்தலே !

வடிவேலு.—ஆன்மாக்களின்மேல் வைத்த கருணையால் கிருத்தியங்களைச் செய்கிறாரென்றால், ஸம்ஹாரக் கிருத்தியமும் காருண்ணியமாகுமோ ?

பிரசங்கியார்.—ஆம்! ஸம்ஹாரக் கிருத்தியமும் காருண்ணியமே! ஸம்ஹாரமாவது அழிப்பு. அழிப்பென்றால் இளைப்பாற்றல்; அதாவது மாயையினின்றுந் தோன்றிய தனு கரண புவன போகங்களை மாயாகாரணத்தி லொடுக்கி, ஆன்மாக்கள் ஜனன மரணப்பட்டுத் திரியாமல் சிலகாலம் ஓய்ந்திருக்கும்படி செய்தல். பகற்காலமெல்லாம் வேலைசெய்து இளைத்து இராக்காலத்தில் நித்திரைசெய்து ஓய்ந்திருப்பதுபோலாம். சிருஷ்டித்தொழில் என்பது :—ஆன்மாக்களைப் பற்றியிருக்கும் மலம் கழியும்பொருட்டு மாயையில் ஒடுங்கியுள்ள தனு கரண புவன போகங்களை மீளவும் அவற்றினின்றுந் தோற்றுவித்து ஆன்மாக்களோடு கூட்டிக் கன்மங்கள் கழியும்படி மலபரிபாகம் வரச்செய்தல். திதி அல்லது இரட்சகத்தொழில் என்பது :—ஆத்மாக்கள் தங்கள் கன்மங்களை ஏறுமலும் குறையாமலும் புசிக்கும்படி செய்தல். திரோபவம் அல்லது மறைப்புத் தொழிலென்பது :—ஆத்மாக்களுக்குக் கன்மசாம்யம் அதாவது இருவினையொப்பு வந்த அவதரத்து அவர்களுடைய பரிபாகமான மலங்களினது வீரியத்தைத் தடுத்தல். அநுக்கிரகத்தொழில் என்பது :—ஆத்மாக்களுக்கு ஆணவாதி பாசபந்தங்களைப் போக்கி ஞானத்தை உதிப்பித்து மோட்சத்தை யளித்தல். இதுவே முத்திப்பேறும். இங்ஙனம் கூறிய சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அநுக்கிரஹம் என்னும் பஞ்ச கிருத்தியங்களையும் முதல்வன் செய்வதற்குக் காரணம், ஆன்மாக்களின் மேல்வைத்த காருண்ணியமே யன்றி வேறல்ல.

**வடிவேலு.**—சிருஷ்டி, திதி, ஸம்ஹாரம் என்னும் கிருத்தியங்கள் மூன்றாகச் சொல்லி, இங்கு ஐந்து கிருத்தியங்கள் என்று சொன்னது மலைவாகாதோ ?

**பிரசங்கியார்.**—ஆகாது ! முதல்வன் தொழிலை மூன்றாகச் சொல்லும்பொழுது, ஸ்திதியில் திரோபவமும், ஸம்ஹாரத்தில் அநுக்கிரகமும் அடங்கும்.

**வடிவேலு.**—இவ்வாறு சொல்லிவந்த முதல்வனுடைய வடிவம் யாது ? அருவமா ? உருவமா ? அருவுருவமா ?

**பிரசங்கியார்.**—அநாதிமுத்த சித்துருவென்று சொல்லப்பட்ட முதல்வனுக்கு வடிவம், நீர் சொன்ன மூன்றுமேயாம். அவற்றுள் அருவம் நிஷ்களமாகும். உருவம் சகளமாகும். அருவுருவம் சகள நிஷ்களமாகும். இவைகள் அவனுக்கு தடஸ்தவடிவங்கள். இம்மூன்றையும் கடந்த சொரூப வடிவம் உண்டு.

**வடிவேலு.**—முதல்வனுக்கு வடிவம் உண்டென்று சொல்லில், நமக்குள் வடிவத்தை ஒருவன் உண்டாக்கியதுபோல் அவனுடைய வடிவத்தையும் உண்டாக்க ஒருவன் வேண்டுமல்லவா ?

**பிரசங்கியார்.**—அப்படியல்ல ! அவர் சுவேச்சையால் வடிவங் கொள்ளுவார். அவர் வடிவம் ஒருவர் சிருட்டியிலும் அகப்படாது.

**வடிவேலு.**—முதல்வன் தனது இச்சையினால் வடிவங்கொள்ளுவானென்னில், ஆன்மாக்களனைவரும் தங்கள் தங்கள் இச்சையின்படி வடிவங்களை உண்டாக்கிக்கொள்ளவேண்டும். அப்படி நினைத்ததொரு வடிவத்தை எடுத்துக் கொள்ள நமக்கு சக்தியில்லையே.

**பிரசங்கியார்.**—அப்படிச் சொல்லவேண்டாம் ! பெருமையினையுடைய யோகிகளும் சித்தர்களும் தங்களுக்கு வேண்டிய வடிவங்களை ஒருவர் கொடாமல் தாங்களே எடுத்துக்கொள்ளும் தன்மைபோல், எல்லார்க்கும் மேலாகிய முதல்வனும்

தனக்கு வேண்டியதொரு திருமேனியைத் தானே சுவேச்சையினாலே எடுத்துக்கொள்ளுவான்.

வடிவேலு.—உத்தமனாகிய முதல்வனும் யோகிகள் சித்தர்களைப் போல் வேண்டிய வடிவங்களை எடுத்துக்கொள்ளுவான் என்றால், அவனும் அவர்களில் ஒருவனாவன்.

பிரசங்கியார்.—யோகிகளும் சித்தர்களும் தங்களுக்கு வேண்டிய வடிவங்களைத் தாங்களே எடுக்கிறதும் விடுக்கிறதும் முதல்வனது அருளாலன்றி வேறல்ல. அன்றியும் அவர்களுக்கு உண்டாக்கிய வடிவங்களெல்லாம் மாயாகாரியமான சரீரங்கள்.

வடிவேலு.—அங்ஙனமாயின், வடிவங்களெல்லாம் ஒரே தன்மையா யிருப்பனவாதலால், முதல்வன் கொண்ட வடிவங்களும் மாயாதேகங்களென்றே ஏற்படும்.

பிரசங்கியார்.—மாயாதேகமானது ஆன்மாக்கள் செய்த கன்மத்துக்கீடாக ஆணவமலங் காரணமாக உண்டாய் வருகின்ற வடிவமே! ஆதலின் ஆன்மாக்கள் கொள்ளும் வடிவங்களும் ஏற்றத்தாழ்வு உடையவை. யோகிகள் சித்தர்கள் முதலிய நாமெல்லோரும் மலத்தினாலே பந்திக்கப்பட்டிருக்கும் பசுக்கள். அன்றியும், ஒன்றையே யறிதலும் ஒன்றையே செய்தலும் ஒன்றிலே முதன்மையா யிருத்தலு மாகிய அற்பஞானம், அற்பத்தொழில், அற்பமுதன்மை உடையவர்களா யிருக்கின்றோம். முதல்வனோ அப்படிக்கல்ல. ஆன்மாக்களுக்கு அறிவாய் நின்றுணர்த்துவான். அன்றியும் எல்லா அறிவும் எல்லாத் தொழிலும் எல்லா முதன்மையும் இயல்பாக உடையவன். இவ்வாறு ஆன்மாக்களுக்கும் முதல்வனுக்கும் ஏற்றத்தாழ்வுகள் இருப்பதால், அதற்கேற்ப மலத்தைப்பற்றிய ஆன்மாக்களுக்கு அற்ப அறிவை உண்டாக்குகின்ற மாயையே வடிவங்களாகும். அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனுக்கு வடி

வம் அற்ப அறிவைச் செய்யும் மாயையல்ல. அவனுடைய அருட்சத்தியே அவனுக்குத் திருமேனியாகும்.

வடிவேலு.—முதல்வனுக்குத் திருமேனி அருட்சத்தியென்று சொல்லினும், அது கண்டிதப் பொருளாய்விடும். அப்பொழுது பால்யம், கௌமாரம், யௌவனம், மூப்பு முதலிய திரிவுகள் உண்டாகும். அன்றியும் நித்தியமென்பதும் அழியும். அத்தகைய இழிவு அருட்சத்திக்குக் கூடாதாகையால், மலரஹிதனை முதல்வனை அருவமென்று கூறுதலே பொருத்தமுடையது.

பிரசங்கியார்.—முதல்வனை அருவமென்று கூறின், ஆறுவழியாயுள்ள அத்துவாக்களைக் கடந்த பொருள் அவனாதலால், அவனை அவற்றோடு ஒப்பவைத்து அருவமெனக் கூறுதல் பொருந்தாது. (அத்துவா=வழி) இதனால் அவனது வடிவம் அருவமும் அல்ல : உருவமும் அல்ல. பின்னை என்னையெனில், நீர் புத்தியுடைய பிள்ளையைப்போ லிருக்கிறீர் ஆதலால் அவனுடைய அருமையைச் சொல்லுகிறேன் கேட்பீராக. உலகத்திலுள்ள பதார்த்தங்களெல்லாம் கண்ணுக்குத் தோற்றாத அருவப்பொருளாயும் கண்ணுக்குத் தோன்றும் உருவப்பொருளாயும் இருக்கின்றன. அவற்றுள் ஆகாய முதலிய அருவப்பொருள் உருவத்தின் இயல்பை யுடையதாகாது. நில முதலிய உருவப்பொருள் அருவத்தின் இயல்பை யுடையதாகாது. சந்திரன் முதலிய அருஉருவப்பொருள் அருவமாகவேயும் இருக்காது, உருவமாகவேயும் இருக்காது. இவ்வாறு உலகத்திலுள்ள பொருள்களெல்லாம் இவ்விதம் நிற்கும் தன்மையாதலால், அநாதிமலமுத்த சித்துருவாகிய முதல்வனையும் அருவப்பொருளே என்று சாதிக்கின், அவனும் அப்பொருள்களோடு ஒன்றாய் விடுவான் ; விசாரித்துப் பார்ப்பீராக. முதல்வன் பந்தம் மோக்ஷம் என்று கூறப்படும் சொற்பொருள்களினது இயல்பையுடையவனல்லன் : அந்தமும் ஆதியு மில்லாதவன் : அள

வைப் பிரமாணங்களினுலே அளந்தறியப்படாதவன். ஆகையினுலே, அந்தப் பரம்பொருளை அருவம், உருவம், அருஉருவம் என்னும் மூன்று வடிவங்களுள் இன்ன வடிவினனென்றும், இன்ன வடிவினன் ஆகானென்றும், இன்னது ஆமென்றும், இன்னது ஆகாதென்றும், இன்னதாகி வருவனென்றும், இன்னதாகி வரானென்றும், சொல்லுகைக்கு ஆசங்கையுமில்லை ; அதற்கு மறுமொழியாகிய பரிகாரமுமில்லை.

வடிவேலு.—முதல்வனுக்கு உருவம் உண்டென்று வேதாகமங்கள் சொல்லுகின்றனவே ?

பிரசங்கியார்.—ஆம் ! அது உண்மையே ! ஆண்மாக்கள் எப்பொழுதும் பாதந்தர முடையவர்களாதலால் விகாரப்படுகின்ருர்கள். சிற்றுணர்வும், சிறுதொழிலும் உடையவர்களாதலால் ஏகதேசப்படுகின்ருர்கள். விருப்பும், வெறுப்பும் உடையவர்களாதலால் பந்தப்பட்டுத் தொடக்குறுகின்ருர்கள். முதல்வனே அப்படிப்பட்ட உபாதிகளின்றி ஒன்றை நினைத்து அது கூடாதென்னுங் குறைவு சிறிதுமில்லாதவனுதலாலும், முறைப்பட ஸர்வஞ்ஞத்வமும், அளவிலாற்றலும், நித்தியத்துவமும் உடையவனுதலாலும், பிரியாப் பிரியங்கள் தன்னிடத்துப் பொருந்தாது பேரருளுடையவனுதலாலும், அத்தகைய நின்மலனுகிய முதல்வன் காருண்ணியத்தினுலே நினைத்ததொரு திருமேனியைத் தானே கொண்டருளுவன். இதனுலே துணியப்பட்டது யாதெனில் ஆன்மபோதத்தினுலே சுட்டியறியப்படாத முதல்வன் சகளீகரிக்குமிடத்துத் தனக்கேற்ற வடிவைத் தானே எடுத்துக்கொள்வதன்றி மற்ருெருவரால் சிருஷ்டித்துக் கொடுக்கப்பட்ட உருவத்தை எடுப்பவனல்லன்.

வடிவேலு.—முதல்வன் உருவமெடுத்துத் தானே ஒரு காரியத்

தைச் செய்யவேண்டும்? உருவம் எடுக்காமலே செய்யக் கூடாதோ?

பிரசங்கியார்.—உயிர்க்குத் தன் தேகத்தை இயக்க வேறொரு தேகம் வேண்டுவதில்லை. அதுபோல முதல்வனுக்குத் தன் தேகமாகிய சித்தசித்துப் பிரபஞ்சத்தைத் தொழிற் படுத்த வேறொரு தேகம் வேண்டுவதில்லை. ஆயினும் முதல்வன் தன் கருணையினாலே திருமேனி தாங்கி வேதங்களையும் ஆகமங்களையும் உபதேசியானாகில், அவைகளைச் சொல்லுந் திறமுடையவர் வேறொருவரு மில்லை. அதுவுமல்லாமல், தேவர்களுக்கும் மானுடர்களுக்கும் பாதாளத்தி லுள்ள நாகர் முதலிய அனைவருக்கும் குரு சிஷ்ய ஸந்தான பரம்பரையும் உண்டாகாமற் போய்விடும். இதனாலே அவனுக்கு அருட்டிருமேனி வேண்டுவது அவசியம்.

வடிவேலு.—முதல்வன் என்ன பயனைக் கருதி வடிவு கொள்ளுகிறார்?

பிரசங்கியார்.—முதல்வனுடைய திருமேனி முழுதும் காருண்ணியமே! உயிர்களுக்கு உணர்வளிப்பதாய் அந்தத் திருமேனியில் தோன்றுங் குணங்களும், சிருஷ்டி முதலிய பஞ்சகிருத்தியங்களும் அருளே. அவனது கைகால் முதலிய சங்கமாகிய உறுப்புகளும் அருளே. அவனது பரிவட்டம், பூணூல், மாலை முதலிய உபாங்கங்களும் அருளே. (சாங்கமென்பது-அங்கத்தோடு கூடிய உறுப்புகள். உபாங்கமென்பது-அங்கத்தைவிட்டும் நீங்கும் பொருள்கள்) இவைகளெல்லாம் தனக்கென ஒரு பிரயோசனத்தைக் கருதிக் கொண்டவனல்ல. ஆன்மாக்கள் தன்னை வழிபட்டுக் கடைத்தேறும்பொருட்டே திருமேனி கொண்டது. முதல்வனுடைய திருவுருவம் பிரபஞ்சத்தோடு கூடி நின்றாலும் பிரபஞ்சத்துக்கு அதீதமாயிருக்கும் (அதாவது விஷ்வாதிகன்) என்னும் வேதமொழியையும் விசாரித்தறியார்கள். பிரபஞ்சம் முதல்வனுடைய உருவத்தில் தோன்றி உரு

வத்தில் ஒடுங்கும் (அதாவது விஷ்வகாரணன்) என்றதை யும் விசாரித்தறியார்கள். பிரபஞ்சத்திலுள்ள சர்வான்மாக் களுக்கும் உயிருமாய் நிற்கும் (அதாவது விஷ்வாந்தர் யாமி) என்பதையும் விசாரித்தறியார்கள். பிரபஞ்சம் தனக்குத் திருமேனியாய் நிற்கும் (அதாவது விஷ்வஸ்வ ரூபி) என்பதையு மறியார்கள். இத்தன்மையான முதல்வ னது சொரூப சுபாவத்தை ஆராய்ந்து அறிகிறதற்குப் போதுமான போதமில்லாதவர்க ளெல்லாம் அவனையும் பிரபஞ்சத்திலுள்ள ஆன்மாக்களைப்போல் ஒருவனென்று சொல்லுவார்கள். ஞானமே திருமேனியாக உடைய முதல்வனை பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்னும் திரி மூர்த்திகளுக்குள் ஒருவனென்று அறிவில்லாதவர்கள் சொல்லுவார்கள். லயம், போகம், அதிகாரம் என்னும் மூன்று அவஸ்தைகளில் மூன்று ரூபமாய் இருக்கின்ற னன் என்ற உண்மையினையும் அறியமாட்டார்கள். (அல்லது பிரமன், விஷ்ணு, உருத்திரர் என்னும் திரிமூர்த்தி களும் தன்னுறுப்பில் தோன்றி நின்ற உருவங்களென்றும் அறியார்கள்). முதல்வன் போக வடிவங்கொண்டது ஆன் மாக்களுக்கெல்லாம் போகத்தை யுண்டாக்கும் பொருட் டென்று உணரமாட்டார்கள். யோகவடிவங் கொண்டது யோகிகளுக்கெல்லாம் யோக ஸாமர்த்தியத்தையும் அத னாலே உண்டாகும் மோட்சத்தையும் உதவும் பொருட் டென்று உணரமாட்டார்கள். கோபத்தை யுடையவர்களைப் போல் கோரரூபங்கொண்டது ஆன்மாக்கள் செய்த வினைக் குத் தக்கவாறு வினையின் பலன்களைப் புசிப்பித்து அவை களை யொழித்தற் பொருட்டென்று உணரமாட்டார்கள். இவ்வாறு பல திருமேனிகளைக் கொள்ளும் முதல்வனது தன்மையை ஆராய்ந்து அறியுந்தன்மை யில்லாதவர்கள், அப்பரம்பொருளை தேவர்களில் ஒருவனென்று சொல்லு வார்கள். இங்ஙனம் மாறுபட்ட பல வடிவங்களை ஒருவனே

தனது சத்தி ஸம்பந்தத்தால் எடுத்துக்கொண்டு மாயாகாரிய மாகிய பிரபஞ்சத்துக்கு வேறாய் அதனை நீங்கி நின்ற அவனது அதிசய நிலையென்றும் உணரமாட்டார்கள். அன்றியும் அவ்வாறு மாறுபட்ட பல வடிவங்களும் போகத்தையும், யோகத்தையும், மோட்சத்தையும் உதவுங் காரணமாக அநுக்கிரஹம் என்னும் தொழிலுக்கேதுவாம் என்பதையும் உணரமாட்டார்கள். கொல்லுதலாகிய தீமையைச் செய்வது வினையைக் கெடுத்தலாகிய நன்மையைச் செய்யுங் குணமென்றும் உணரமாட்டார்கள்.

வடிவேலு.—முதல்வன் அருவமாயிருந்து ஆன்மாக்களுக்கு போகத்தைக் கொடுக்கக்கூடாதா? உருவமாயிருந்துதானோ போகத்தைக் கொடுக்கவேண்டும்?

பிரசங்கியார்.—சிருஷ்டி முதலிய பஞ்சகிருத்தியங்களைச் செய்வதும், பக்தர்களுக்கு தியானத்தில் அருள் புரிவதும், வேதாகமங்களை வெளியிடுவதும், இடது பாகத்தில் சத்தியோடு வீற்றிருந்து ஆன்மாக்களுக்கு எப்பொழுதும் போகத்தைக் கொடுப்பதும், பரமுத்தி, அபரமுத்தி என்னும் இரண்டையும் அளிக்கும் யோகத்தைக் காட்டுவதும், ஆன்மாக்களை அநாதியே பந்தித்துள்ள பாசத்தை யொழித்து அநுக்கிரகஞ் செய்வதும் ஆகிய இவைகளெல்லாம், முதல்வன் உருவத்திருமேனி கொள்ளாதபோது சொல்லக்கூடாதனவா யிருக்கின்றன.

வடிவேலு.—முதல்வனுக்கு உருவத்திருமேனி யன்றி அருவம் அருஉருவம் என்னும் இரண்டு திருமேனிகளும் பிரத்தியட்சமாகக் காணப்படவில்லையே!

பிரசங்கியார்.—கரசரணாதிகளையுடைய சகளத் திருமேனியை முதல்வன் கொண்டார் என்றபொழுதே அவர் அவ்வித திருமேனியைக் கொள்ளுமுன் எவ்விதமாயிருந்தார் என்ற வினவுக்கு, உருவமில்லாமலிருந்தவர் உருவங் கொண்டார் என்ற விடையே கொடுக்கும். ஆனதால் அவருக்கு அருவ

திருமேனி உண்டென்பது அனுமானித்தறிந்தோம். அவர் திருமேனி அருவம் என்றும் உருவம் என்றும் அறிந்ததால், அவர் திருமேனி அருவுருவமல்லவா ? ஆனதால் அவர் திருமேனி அருவம், உருவம், அருவுருவம் என்னும் மூன்று வித திருமேனிகளையும் நம்முடைய பாசரீரம் ஸூக்ஷ்மசரீரம், ஸ்தூலசரீரம் ஆகிய ஸம்சாரநோயை நீக்கும்பொருட்டு வந்த அருட்சத்தியின் வடிவங்களென்றே அறிவீராக.

வடிவேலு.—வேதங்களில் முதல்வனை ஷடத்வமூர்த்தி அதாவது அத்துவாமூர்த்தி யென்று சொன்னதின் கருத்து யாது ?

பிரசங்கியார்.—ஆன்மாக்கள் செய்யும் புண்ணிய பாவங்களெல்லாம் பதாத்துவா, கலாத்துவா, வர்ணத்துவா, புவனத்துவா, தத்துவாத்வா, கலாத்துவா என்னும் ஆறு அத்துவாக்களை ஆறு பைகளாகப் பெற்றுள்ள பெரிய சஞ்சிதப் பையிலே கட்டுப்பட்டிருக்கும். அநாதிமல முத்த முதல்வன் எக்காலத்தும் அழிவின்றி எங்கும் பரிபூரணனாய் இருக்கின்றமையாலும், மேற்சொன்ன ஆறத்துவாக்களிலும் நின்று சடசித்துக்களைக் காரியப்படுத்துகையாலும், ஆறத்துவாக்களையும் அவருடைய திருமேனியென்று வேதங்கள் சொல்லுகின்றன. இந்த அத்துவாக்கள் மூன்று வகைப்படும். அவை சுத்தாத்துவா எனவும், மிசிராத்துவா எனவும், அசுத்தாத்துவா எனவுஞ் சொல்லப்படும். சுத்தாத்துவாவுக்கு சதாசிவரும், மிசிராத்துவாவுக்கு அநந்தேசுவரரும், அசுத்தாத்தாவுக்கு உருத்திரரும் கர்த்தாக்களாவர். மேலே கூறிய ஆறு அத்துவாக்களும் ஒன்றுக்கொன்று வியாபக வியாப்பியமாயிருக்கும். அதாவது மந்திராத்துவா பதாத்துவாவினலும், பதாத்துவா வர்ணத்துவாவினலும், வர்ணத்துவா புவனத்துவாவினலும், புவனத்துவா தத்துவாத்துவாவினலும், தத்துவாத்துவா கலாத்துவாவினலும் வியாபிக்கப்பட்டிருக்கும். இறுதியில்

கூறிய கலாத்துவாவானது நிவர்த்திகலை, பிரதிஷ்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியாதீதகலை, என ஐவகைப் பட்டிருக்கும். அவற்றுள் நிவர்த்திகலையினால் வியாபிக் கப்பட்டது பிருதிவி தத்துவமாகும். பிரதிஷ்டாகலையி னால் வியாபிக்கப்பட்டவை அப்புத் தத்துவமுதல் குணதத் துவம் ஈறாயுள்ள இருபத்துமூன்று தத்துவங்களாம். வித்தி யாகலையினால் வியாபிக்கப்பட்டவை பிரகிருதிமுதல் கால தத்துவம் ஈறாயுள்ள ஏழுதத்துவங்களாம். சாந்திகலையினால் வியாபிக்கப்பட்டவை சுத்த வித்தை முதல் சாதாக்கிய தத் துவம் ஈறாயுள்ள மூன்று தத்துவங்களாம். சாந்தியாதீத கலையினால் வியாபிக்கப்பட்டதை சத்திதத்துவம் சிவதத்து வம் என இரண்டாம். இங்ஙனங் கூறப்பட்ட பஞ்ச கலை களிலடங்கிய முப்பத்தாறு தத்துவங்களிலே கோப்புண்டு கிடக்கின்ற எண்ணிறந்த புவன சராசர முதலிய அனைத் துள்ளும் நீக்கமின்றி நிறைந்து நிற்றலால் முதல்வனை அத்துவா மூர்த்தியென்று ஆரணங்கள் கொண்டாடித் துதிக்கின்றன. மேலும், ஆறத்துவாக்களுள் மந்திரம், பதம், வர்ணம், ஆகிய மூன்றும் சொல் வடிவமும், தத்துவம், புவனம், கலை ஆகிய மூன்றும் பொருள் வடிவமுமாயிருத் தலால், சொல் பொருளென்னும் இருகூற்றுப் பிரபஞ்சங் களுக்கும் முதல்வனே தலைவனும். இந்த அத்துவாக்களே ஆன்மாக்கள் இருவினைப்பயன்களை நுகர்தற்கு ஹேது ஆதலால், இவற்றில் கட்டுப்பட்டிருக்கும் புண்ணிய பாவங் களின் முறைகளைப் பின்னால் அறிவீர்.

**வடிவேலு.**—ஆறத்துவாக்களுள் மந்திராத்துவாவே முதல்வ னுக்குச் சிறந்த திருமேனியென்று வேதங்கள் சொன்ன வாறென்ன ?

**பிரசங்கியார்.**—பிரபஞ்சத்துக்கு உபாதான காரணங்கள் சுத்த மாயை யென்றும், அசுத்தமாயை யென்றும், பிரகிருதி மாயையென்றும் மூன்று வகையாயிருக்கின்றன. இம்மூன்றி

னுள், சுத்தமாயையானது மற்றிரண்டுக்கு மேலாயும் சிந்தித்தற்கரிய முதல்வனது பராசத்தியால் அதிஷ்டிக்கப்பட்டதாயும் இருக்கின்றது. இப்படி யிருக்கிற சுத்தமாயையில் மந்திரங்கள் முன்னர்த் தோன்றினமையாலும் அவற்றைப் பராசத்தி பிரேரித்துப் பின் அதிஷ்டித்துக் கொண்டு அந்த மந்திரங்களை ஜபிக்கும் உபாஸகர்களுக்கு அவற்றாலேயே போகமோட்சங்களைக் கொடுக்கையாலும், முதல்வனுக்கு மந்திரமே சிறந்த திருமேனியென்று சுருதிகள் அறுதியிட்டுக் கூறின.

வடிவேலு.—மந்திரங்கள் பலவாறுயிருக்கப் பஞ்சப்பிரம மந்திரத்தையே முதல்வனுக்குத் திருமேனியென்று வேதங்கள் சிறந்தெடுத்தோதியவாறென்ன ?

பிரசங்கியார்.—உண்மையைக் கூறுவோம். கேட்பீராக. எல்லா மந்திரங்களுக்கும் முன்னே ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதம் என்னும் ஐந்து மந்திரங்களும் சுத்தமாயையில் தோன்றினமையாலும், மற்ற மந்திரங்களுக்கெல்லாம் அவை முதன்மையாயிருக்கையாலும், அழிவற்ற பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, ஆகிய பஞ்ச சத்திகளுக்கும் அவை வடிவமாயிருத்தலாலும், அந்த சத்திகளை விக்கிரஹமாகக் கொண்ட முதல்வனுக்கும் பஞ்ச மந்திரங்களே திருமேனியாயினவென்று வேதங்கள் கூறிப் புகழ்ந்தன. இங்கே கூறிய சக்திகள் ஐந்தும் முதல்வனுக்கு அபின்னசத்திகளாம். அதாவது சூறியனிற் கிரணம்போலும், அக்கினியில் உஷ்ணம்போலும் பிரிவற்றிருக்கும் சத்திகளாம். இவைகள் அருட்சத்தியின் பேதங்களாயுள்ளன. இவற்றின் தொழில்களாவன :—பராசத்தி ஆன்மாக்களுக்கு முத்திபேறு அளிக்கும்பொருட்டு நிற்பது. ஆதிசத்தி ஆன்மாக்களுக்கு மலத்தைச் செலுத்திப் பக்குவப்படுத்துவது. இச்சாசத்தி ஆன்மாக்களுக்கு இரங்கிநிற்பது.

ஞானசத்தி எல்லாவற்றையும் நோக்கி யறிவது. கிரியா சத்தி நினைத்தபடி செய்வது.

வடிவேலு.—முன் சொன்ன அத்துவாக்களையும், மந்திரங்களை யும், பஞ்சப்பிரம மந்திரங்களையும் முதல்வனுக்குத் திரு மேனி என்று சொல்லி, பின்னர் பிரமா, விஷ்ணு, உருத்தி ரன் முதலிய கிருத்திய கர்த்தாக்களையும் முதல்வனுடைய சொரூபமென்று வேதங்கள் கூறியவாறென்ன ?

பிரசங்கியார்.—சிருஷ்டி முதலிய கிருத்தியங்களைச் செய்யும் முதல்வனது கிரியை முதலிய சக்திகள் பிரமா முதலாயி னோரிடத்துப் பதிந்து செலுத்தலால் அவர்களும் முதல்வ னது சொரூபமாகவே எண்ணப்படுவர்.

வடிவேலு.—சிருஷ்டி முதலிய கிருத்தியங்களை இந்த மூர்த்தி களே செய்வாராயின், பின்னர் முதல்வன் யாதுக்கு ?

பிரசங்கியார்.—முதல்வன் பஞ்ச கிருத்தியங்களையும் தானே சங்கல்பமாத்திரமாகச் செய்வன். பின்னர் அவனே பிர மன், விஷ்ணு, உருத்திரன், மஹேஸ்வரன், சதாசிவன் ஆகிய பஞ்ச கர்த்தாக்களையும் ஒவ்வொரு தொழிலே ஸ்தூல ரூபமாகச் செய்யும்படி ஏவுவன். ஆதலால் அவர்கள் தங் கள் தங்கள் கிருத்தியங்களை முதல்வனது ஏவலால் செய்வ தற்கு உரியராவர்.

வடிவேலு.—பஞ்சகர்த்தாக்களை அதிஷ்டித்துக்கொண்டு நிற் கும் முதல்வனது சத்தி ஒன்றோ ? பலவோ ?

பிரசங்கியார்.—முதல்வனது சத்தி ஒன்றே. காரியபேதங்களி னால் அனேகமாய்ச் சொல்லப்படும். எவ்விதமெனில் அரச னுடைய ஆஞ்சாசக்தி ஒன்றேயாயினும், அது மந்திரி, சேனாதிபதி, ஊர்க்காவலர் முதலானவர்களிடத்தில் பொருந்திநின்று, இராஜாதிகாரியங்களைச் செய்யும்பொ ருட்டுப் பல வேறுவகை நாமங்களைப் பெற்றுக் காரியப்படு வதுபோல, முதல்வனது சத்தியும், அவருக்கே உள்ளதாகி, ஆன்மாக்களுக்கு போக மோட்சங்களைக் கொடுத்து அவர்

நினைத்த குறிப்பின்படி நிற்கும். இந்தச் சத்தியின் நாம பேதங்களை வேறுவிதமாக விளங்கக்கூறின், அக்கினியின் சத்தியைச் சமையற்காரன் கைக்கொண்டபொழுது அவனுக்கு அது பாகஞ்செய்கிறதற்கு உதவியாகிறது ; தட்டான் கைக்கொண்டபொழுது அவனுக்கு அது பொன் வெள்ளியைப் பதப்படுத்தித்தருகிறது ; ஒரு காட்டை யழிப்போன் கைக்கொண்டபொழுது அவனுக்கு அது அக்காட்டை பஸ்மீகரப்படுத்த உதவிசெய்கிறது. அக்கினியின் சத்தி ஒன்றாயிருந்தும், வெவ்வேறு தொழிலைச் செய்து, பாகஞ் செய்யும் சத்தி, பதஞ்செய்யும் சத்தி, தகிக்கும் சத்தி யென்று வெவ்வேறு நாமத்தைப் பெறுகிறதுபோல, முதல்வனுடைய சத்தி ஒன்றாயிருந்தும், காரியபேதத்தினாலே பலநாமங்களைப் பெறுகின்றது. ஆனதால் சத்திக்கு நாமபேதமே யன்றி வஸ்துபேத மில்லை.

**வடிவேலு.**—முதல்வனது சத்தியின் சொரூபம் என்ன ?

**பிரசங்கியார்.**—சத்தியின் சொரூபமாவது மலத்தினால் மறைக்கப்படாத சுயம்பிரகாச பரிபூரண ஞானமாயிருக்கும்.

**வடிவேலு.**—பிரபஞ்சத்தை நடத்துமென்று சொல்லப்பட்ட முதல்வனது இச்சாசத்தியும், கிரியாசத்தியும், இந்த ஞான சத்தியிலுண்டோ ?

**பிரசங்கியார்.**—எந்த இடத்தில் ஞான முண்டோ அவ்விடத்தில் இச்சையும், கிரியையும் தோன்றிக் காரியப்படும்.

**வடிவேலு.**—முதல்வனிடத்தில் அவினாபாவமாய் (பிரிக்கப்படாமல்) இருக்கிற சமவேத சத்தி, முதலில் பராசத்தியாயிருந்து, பின்னர் அதுதானே இச்சா ஞானக் கிரியையாக வியாபார பேதத்தால் மூவிதப்பட்டு நிற்குமெனில், அவைகளின் தொழில் யாது ?

**பிரசங்கியார்.**—இச்சா சத்தியாவது ஆன்மாக்களுக்கு மலத்தை நீக்கி மோட்சத்தை அளிக்கத்தக்க கருணையாயுள்ளது. ஞானசத்தியாவது அம்மோட்சத்தை அளிக்கும்பொருட்

டுச் செய்யவேண்டிய உபாயங்களையெல்லாம் நயப்பால் அறிகின்ற பகுத்தறிவாயுள்ளது. கிரியாசத்தியாவது அறிந்தபோதே அவற்றை அவ்வாறே ஸங்கல்பித்து தேகாதி பிரபஞ்ச காரியங்களையெல்லாம் தோற்றுவிக்கும் செய்கையா யுள்ளது.

**வடிவேலு.**—முதல்வனுக்குரிய இச்சா ஞானக் கிரியைகள் மூன்றும் ஆன்மாவுக்கும் உரியதாகையால், ஆன்மாவும் முதல்வனோடு ஒப்பாக வேண்டியது தானே.

**பிரசங்கியார்.**—ஆன்மாவினுடைய இச்சா ஞானக் கிரியைகள் முதல்வனுடைய இச்சா ஞானக் கிரியைகளைப் போன்றன வல்ல. ஏனெனில், ஆன்மா உள்ள அன்றே அநாதியாயுள்ள ஆணவமலம், ஆன்மாவினுடைய இச்சா ஞானக்கிரியைகளை, நெருப்பைக் கட்டை மறைப்பதுபோல், மறைத்துக் கொண்டு நிற்கும். அன்றியும் முதல்வன் ஆன்மா செய்த கன்மத்துக் கீடாக ஆன்மாவினுடைய ஆணவமலத்தை ஒதுக்கி இச்சா ஞானக்கிரியைகளை எழுப்பி, கன்மம் காரணமாக வாராநின்ற பலன்களைப் புசிக்கும்படி செய்வன். பின்னும் மோட்சபலனையும் தருவன். இந்தக் காரணங்களால் முதல்வனுடைய இச்சா ஞானக் கிரியைகளோடு ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகளை ஸமமாகக் கூறுதல் பொருந்தாது.

**வடிவேலு.**—முதல்வனுக்கு சத்தி பேதத்தால் வரும் மூர்த்தி பேதம் யாது ?

**பிரசங்கியார்.**—கேவலம் ஞானசத்தியே வியாபரிக்குங்கால் சிவன் எனவும், கேவலம் கிரியாசத்தியே வியாபரிக்குங்கால் சத்தியெனவும், ஞானசத்தியும், கிரியாசத்தியும் ஒத்து வியாபரிக்குங்கால் சதாசிவன் எனவும், ஞானசத்தி குறைந்து கிரியாசத்தி ஏறி வியாபரிக்குங்கால் மஹேஸ்வரனெனவும், கிரியாசத்தி குறைந்து ஞானசத்தி ஏறி வியாபரிக்குங்கால் உருத்திரனெனவும் முதல்வனே பெயர் பெறுவன். இங்ஙனம் கூறப்பட்ட ஐந்துமூர்த்தி பேதமும்

லயம், போகம், அதிகாரம் என்னும் மூன்று அவஸ்தைகளுக் கேற்ப மூன்று ஆதாரங்களைப் பெற்றிருக்கும். இந்த மூர்த்தி பேதங்கள் ஐந்தனுள் சிவனும், சத்தியும் முதல்வனுக்கு நிஷ் களமாயுள்ள திருமேனி; சதாசிவன் சகள நிஷ்களமாயுள்ள திருமேனி; மஹேஸ்வரனும், உருத்திரனும் மிக்க அதி காரத்தோடு கூடிய கரசரணுதிகளுள்ள சகளத்திருமேனி. இந்தத் திருமேனி மூன்றனுள், லயா அவஸ்தைக் கேதுவா யுள்ளது நிஷ்களத்திருமேனி. இந்தத் திருமேனியையுடைய பராசத்தி சமேத பரசிவன், சாந்தன் எனவும் சக்தன் எனவும் கூறப்படுவர். போகாவஸ்தைக் கேதுவாயுள்ளது சகள நிஷ்களத் திருமேனி. இந்தத் திருமேனியையுடைய பரா சத்தி சமேத பரசிவன் சதாசிவன் எனவும் உத்யுக்தன் என வும் போகன் எனவும் அருவுரு சிவன் எனவுங் கூறப்படுவர். அதிகார அவஸ்தைக்கு ஹேதுவாயுள்ளது சகளத்திருமேனி. இந்தத் திருமேனியையுடைய பராசத்தி சமேத பரசிவன் மஹேஸ்வரன் எனவும் பிரவர்த்தன் எனவும் அதிகாரன் எனவும் உருவசிவன் எனவுங் கூறப்படுவர். இதனுலே சத்திக்கு உட்படாமல் முதல்வன் எப்பொழுதும் பிரவர்த்திக் கிறதில்லையென்றும், சத்தி ஸம்பந்தத்தினுலே முதல்வன் லயபோகாதிகார அவஸ்தைகளைப் பெற்றுப் பல நாமங்களை அடைகிருனென்றும் உணர்த்தப்பட்டது.

**வடிவேலு.**—முதல்வனுக்குள்ள இச்சா ஞானக் கிரியை என்னும் மூன்று சத்திகளில் இச்சாசத்தியை நீக்கி மற்ற இரண்டு சத் திகளை மாத்திரம் சொன்னது எது காரணம்?

**பிரசங்கியார்.**—ஞானக் கிரியை உள்ளவிடத்தில் இச்சாசத்தியும் இருக்கும். எனவே மூன்றிடத்தும் இச்சாசத்தி உண்டென் றறிவீராக.

**வடிவேலு.**—மேற்சொன்ன மூர்த்தி பேதங்கள் ஐந்துக்கும் இடங் கள் எவை?

பிரசங்கியார்.—ஐந்து மூர்த்திகளுக்கும் அவைகளின் பெயரை யே பெயராக உடைய சிவம், சத்தி, சாதாக்கியம், ஈச்வரம், சுத்த வித்தை என்னும் ஐந்து தத்துவங்களே இடங்களாம். இவைகள் சுத்தமாயையினின்று தோன்றியபடியால் சுத்த தத்துவங்களென்று சொல்லப்படும். அன்றியும் சிவதத்து வங்களென்று அழைக்கப்பெறும். இவைகளே முதல்வ னுக்கு ஸ்வதந்தரமான அதிஷ்டான ஸ்தானங்கள். இவை கள் கால அளவைக் கடந்துநிற்கையால் இவைகளை நித்தி யங்களென்று பெரியோர் கூறுவர். இவைகளுக்குப் பின் காலதத்துவம் அசுத்தமாயையில் நின்று தோன்றியபடியால், அதுபற்றி இவைகளின் தோற்றத்துக்கு முன்பின் கூறுதல் கூடாதாயினும், முதல்வனுடைய சத்தியின் வியாபார பேதத் தை நோக்கி இவைகளுக்கு முற்பிற்பாடு கூறப்பட்டதென்று உணர்வீராக. இதனாற் சொல்லியது, சிவதத்துவம் சிவனுக் கும், சத்திதத்துவம் சத்திக்கும், சாதாக்கியதத்துவம் சதாசிவ னுக்கும், ஈச்வரத் தத்துவம் மஹேச்வரனுக்கும், சுத்த வித்தி யாதத்துவம் உருத்திர மூர்த்திக்கும் அதிஷ்டமான இடங்க ளாம் என்பதே. இங்கே கூறிய சிவம் சத்தி என்னும் இரண்டு தத்துவங்களுக்கும் முறையே நாதம் விந்து என்னும் பெயரும் உண்டு. இந்த தத்துவங்கள் ஜடங்களாம்.

வடிவேலு.—முதல்வன் சுத்த தத்துவங்களைந்தையும் இடமாகக் கொண்டு பல திருமேனிகளைத் தாங்கி நின்றபோது தன்னு டைய ஞானரூபமான தன்மையினின்று திரியானோ?

பிரசங்கியார்.—ஒருவன் கூத்துக்குரிய இராவணன், மந்திரி பிரதானி, ஊர்க்காவலன், தோட்டி முதலிய பல வேஷங் களைக் கட்டி நடித்தானேயானாலும், அவன் தன்னுடைய சொரூபத் தன்மையில் சிறிதும் திரியாமல் ஒரேவிதமாய் நிற் பதுபோல, முதல்வன் பஞ்சகிருத்தியங்கள் நிமித்த மாக சுத்த தத்துவங்கள்தோறும் வெவ்வேறு வடிவங் களை அடைந்தானேயாயினும், தன்னுடைய சொரூபத்தன்

மையில் சிறிதும் பேதப்படாமல் ஒரே தன்மையாய் நிற்பன். அது எப்படியெனில், முதல்வன் கொள்ளும் திருமேனி வேறுபாடெல்லாம் அவனுடைய சத்தியின் சொரூபமே ! அந்த சத்தியும் (மரமும் அதனுடைய வயிரமும் எப்படிப் பிரிக்கப்படாது அநன்னியமா யிருக்கின்றதோ அதுபோல) முதல்வனோடு பிரிக்கப்படாமல் வேறறப் பொருந்திநிற்கும். அன்றியும் ஸ்படிகமானது பொன்மை, செம்மை நலம் முதலிய பலவர்ணங்களைப் பொருந்தியபோது தன்னுடைய சுபாவமான வெண்ணிறத்தைக் காட்டாமல் அந்தந்த வர்ணமாகவே வேற்றுமையின்றி நிற்பதுபோல, நின்மலனாகிய முதல்வனும் தனது சத்தியினாலே காணப்படும் பல ரூபபேதங்களை யெல்லாம் தன்னுடைய வடிவம்போலக் காட்டித் தனது சொரூபநிலை குன்றாமலே நிற்பன். சிருஷ்டி காலத்திலே அருட்சத்தியானது தன்னிடத்தில் வெளிப்பட்டுத் தோன்றுவதன்றித் தான் ஒன்றிலும் தோன்றுவானல்லன்.

**வடிவேலு.**—அப்படியானால் சத்தியும் சிவமுமோ பிரபஞ்சத்துக்குப் பரமகாரணம்?

**பிரசங்கியார்.**—ஆம் ! இப்பிரபஞ்சமெல்லாம் சத்தியும் சிவமுமாகிய முறைமையை யுடையது. அவைகளெல்லாம் அவயவங்களால் ஒத்தும் ஒவ்வாமலும் இருக்கின்ற ஆண் பெண்ணாகவும், உணரத்தக்க குணகுணி சொரூபமாகவும், தோற்றுவித்தனன். உயிர்கள் கூடிக்களித்து வாழாநின்ற வாழ்வுகளெல்லாம் அந்தச் சத்தியினாலே வந்த வாழ்வாகும். இந்த முறைமையை அறிவில்லாதவர்கள் உணரமாட்டார்கள். முதல்வனது பீடலிங்க வடிவமே இவ்வாறு இருவகைப்படுந் தன்மையைப் பிரத்தியட்சமாக உணர்த்துகிற தென்பதையும் அறிந்து தெளியமாட்டார்கள்.

**வடிவேலு.**—தாங்கள் இதுவரையில் கூறியவைக ளனைத்தையும் செவ்வையாய் உணர்ந்தேன். இனி முதல்வனது உண்மை

யிலக்கணத்தைத் தொகுத்துக் கூறும்படி வேண்டுகிறேன்.

**பிரசங்கியார்.**—இதுவரையில் கூறிப்போந்தவைக ளனைத்தும் முதல்வனது பொதுவிலக்கணமாகும். அவனது சிறப்பு அல்லது உண்மையிலக்கணமாவது யாதெனில், முதல்வன் உருவமுமல்லன், அருவமுமல்லன், சித்துமல்லன், அசித்து மல்லன். தவமுதலிய யோகபோக வடிவங்களைத் தரிப்பவனு மல்லன். முன் சொல்லப்பட்டவை யொன்றுமல்லாத சங் காரகர்த்தா தானே சிருட்டி முதலானவையெல்லாந் தன தாகக் கூடிநின்று செய்கை செய்தேயும் இவை யொன்றுட னும் கூடாமல் தோய்வற நிற்கிற உண்மையுடையவன் என்பதாம்.

**கைலாசம் பிள்ளை.**—நாம் இன்று பிரசங்கியாரால் அநேக அரிய விஷயங்களை அறிந்தோ மாயினும், இதனால் என்ன பிரயோ சனம் என்பதே விளங்கவில்லை.

**பெருமாள் செட்டியார்.**—நாம் இன்று கேட்டுக்கொண்டிருந்தது போல் நம்முடைய காலத்தைக் கழிப்போமானால் நம்மு டைய பிறவிநோய் நீங்கும்.

**பிரசங்கியார்.**—ஆம்! ஐயா! இதுவே ஞானபூசை யென்று அதை உங்களுக்கு விளங்கச் சொல்லுகிறேன். நாம் ஓய்வில் லாமல் செய்துகொண்டிருக்கும் இருவினைகளால் நமக்குப் பிறவி வளர்ந்துகொண்டிருக்கிறது. நாம் ஞான சாஸ்தி ரத்தை வாசித்துங் கேட்டும் இருக்கிற நேரத்தில் இருவினை களைச் செய்யாம லிருப்பதால், நம்முடைய பிறவி குறைய வேண்டியதல்லவா? பிறவி குறைந்தால் முத்தி நெருங் கும். ஆனதால் இதையே செய்யவேண்டும்.

**வடிவேலு.**—அவ்விதமாயின் எங்களுக்கு இவ்விரகசியத்தை போதிக்கத் தங்களுக்குப் பதிபுண்ணியம் சேருமாயின், எங் களுடைய வந்தனமும் தங்களுடையதே.

**பிரசங்கியார்.**—எனக்குப் புண்ணியம் சேருமாயினும், என க்கு இவ்வரிய விஷயங்களை போதித்த சோ. சிவஅருணகிரி வள்ளலுக்கே எல்லாப் பெருமையும் கீர்த்தியும் நம்முடைய வந்தனமும் சேருக.

## 20—ம் அத்தியாயம்

மதுரையில் புதுமண்டபத்துக்குக் கருகில் ஒரு மெத்தைவீட்டின் கூடத்தில், விளக்குக் கெதிரில் உட்கார்ந்து விசாலாக்ஷி புத்தகம் வைத்துப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவளருகில் காமாக்ஷியம்மாள் போய் உட்கார்ந்து, "என்ன வாசிக்கிருய்" என்று கேட்டதற்கு பதில் சொல்லாமல் விசாலாக்ஷி கண்களில் தாரைதாரையாக நீர் வடிகிறதைக் கண்டு, "ஐயோ! அம்மா! ஏன் அழுகிருய்? சொல், சொல்" என்று கண்களைத் தன் முன்தானையால் துடைத்து, கண்களிலிருந்து வடிகிற ஜலத்தைக் கண்டு, "அம்மா திரிபுரஸுந்தரம்! வந்துபார்! உன்மகள் அழுதுகொண்டிருக்கிருள்" என்றுள்.

திரிபுரஸுந்தரம் அவர்க ளிருக்கு மிடம் வந்து "ஏன் அழுகிருய் விசாலாக்ஷி! அவன் எங்காகிலும் சிநேகிதர்களோடு போயிருப்பான். அவன் வாராமற்போனுல் நீ அழுவாயென்றே உன் தந்தையை அனுப்பிப் பார்த்துவரச் சொன்னேன்" என்றுள்.

**காமாக்ஷியம்மாள்.**—வடிவேலு வரவில்லை என்று விசாலாக்ஷியம்மாள் அழுகிருள்?

**திரிபுரஸுந்தரம்.**—ஆம்! அவன் எங்காகிலும் சென்று சிலநேரம் வாராமலிருந்தால், அவன் வருமளவும் அழுதுகொண்டிருப்பது வழக்கம். அவனை விட்டு ஒரு நிமிஷமும் பிரிந்திருக்கமாட்டேனென்கிருள்.

**காமாக்ஷியம்மாள்.**—அவன் வந்துவிடுவான். நீ அழவேண்டாம் (என்று அவள் கண்களைத் துடைத்து) அம்மா! உன்னை விவாகஞ் செய்து கொடுத்துவிட்டால் அப்பொழுது என்ன செய்வாய்? உன் அண்ணனையும் உன்னுேடு அழைத்துக் கொண்டு போய்விடுவாயோ? (என்று சொல்லி நகைத்தாள்).

**திரிபுரஸுந்தரம்.**—தனக்கு விவாகமானுல் தன் தமயனைவிட்டுப்

பிரியவேண்டு மாதலால், தான் விவாகம் செய்துகொள்ளப் போகிறதில்லை என்கிருள்.

**காமாக்ஷியம்மாள்.**—அம்மா! விசாலாக்ஷி! நீ விவாகம் வேண்டா மென்றிருந்தாலும், உன் தமயன் விவாகஞ் செய்துகொள் ளாம லிருப்பானு ? அவன் விவாகம் செய்துகொண்டால், உன்னை விட்டுப்போகவேண்டியது கட்டாயமல்லவா ? சில வேளை நீயும் அவனேடு போயிருக்கலாம் என்று எண்ணங் கொள்ளுவாயாயின், உன் தமயன் உன்மேல் அன்பாக இருந் தாலும், அவன் மனைவி உன்மேல் அன்பா யிருப்பாளா ? நீ நல்லதங்காள் கதையை வாசித்திருக்கக்கூடுமே !

**திரிபுரஸுந்தரம்.**—அவனும் தான் விவாகம் செய்துகொள்ளா மல் தன் தங்கையும் தானுமாக இருப்போம் என்கிருன்.

**காமாக்ஷியம்மாள்.**—இவ்விதம் இளம்பருவத்தில் சொல்லிக் கொண்டிருந்தவர்கள் அனேகர் தாங்கள் வாலிபதசை யடைந்தபின் விவாகத்தைக் குறித்துப் பேசினல் அப் பொழுது மௌனமாக இருந்து விவாகம் செய்துகொள் ளுவார்கள். கேட்டாலும் தாய் தந்தைகளுடைய தொந்தர வால் விவாகம் செய்துகொண்டோம் என்பார்கள். ஏனம்மா ! விசாலாக்ஷி ! உன் தாயார் சொல்லுவதுபோல் நீ விவாகம் செய்துகொள்ளாமல் தானே இருக்கப்போகிருய் ?

**விசாலாக்ஷி.**—ஆம் ! அக்காள் சொல்வதுபோல் விவாகம் செய்து கொள்ளாமலே இருக்கப்போகிறேன். ஆங்கிலேயருள் எத்தனையோ பெண்கள் விவாகத்தை வெறுத்திருக்க வில்லையா ?

**காமாக்ஷியம்மாள்.**—நாங்களும் உயிரோடிருந்தால் நீ சொல்வது மெய்யாகிறதோ பொய்யாகிறதோ என்றறியலாம்.

**விசாலாக்ஷி.**—நான் சொல்வது மெய்யாகவே முடியும். தாங்க ளும் உயிரோடிருந்தே பார்ப்பீர்கள். சிலவேளை என் தமயன் வாக்குத் தவறினும் தவறுவாரேயன்றி நான் தவறமாட்டேன்.

**காமாக்ஷியம்மாள்.**—நீ அவ்விதம எண்ணியிருக்கவேண்டாம். நான் சொல்வதுபோல் செய். அண்ணன் தங்கையுமாக எங்காகிலும் நம் குலத்திலிருந்தால், அவர்களை நீங்களிருவரும் விவாகம் செய்துகொண்டு ஒரு வீட்டிலேயே இருப்பின், நீங்கள் ஒருவரையொருவர் பிரியக் காரணமில்லை. அது நன்மையாக இருக்குமென்று எண்ணுகிறேன் (என்று நகைத்தாள்).

**திரிபுரஸுந்தரம்.**—முன் தங்களுக்குச் சொல்லியது ஞாபகமிருக்கக்கூடும். அந்த துன்மார்க்கன் விசாலாக்ஷியைக் கொண்டு போய்த் தாலிகட்ட யோசித்திருந்த எண்ணத்தைக் கெடுத்து வடிவேலு விசாலாக்ஷியைக் கொண்டுவந்தது முதல், தன் அண்ணனை இனி விநாடியும் பிரிந்திருக்கேன் என்று சொல்லிக்கொண்டிருப்பதால், வடிவேலுக்கு விசாலாக்ஷியைக் கொடுத்துவிடலாம் என்று யோசித்திருக்கிறேன் (என்று நகைத்தாள்).

**காமாக்ஷியம்மாள்.**—அம்மா திரிபுரஸுந்தரம்! நீ இவ்விதம் சொல்லலாமா? பாவம்! பாவம்!

**திரிபுரஸுந்தரம்.**—அக்காள் மகளைக் கட்டிக்கொள்ளுகிற வழக்கம் நம்மவர்களுக்குள் இல்லையா?

**காமாக்ஷியம்மாள்.**—அவ்வழக்க மிருந்தாலும் நீ பெற்றபிள்ளையையும் இவ்விதம் சொல்லலாமா?

**திரிபுரஸுந்தரம்.**—அம்மா! நாங்கள் இதுபரியந்தம் சொல்லாமல் வைத்திருக்கும் ரகசியத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன். என்னுடைய ஸகோதரனுக்கு ஒரு குழந்தை பிறந்த சிலமாதத்தில் அவர் மனைவியும் அவரும் காலம் சென்றார்கள். அக்குழந்தையை வளர்க்க வேறொருவரும் இல்லாமையால் நாங்களே அப்பிள்ளையை எடுத்து வளர்த்துக்கொண்டோம். நாங்கள் நெடுநாள் திருப்பெருந் துறையிலிருந்து சேலம் போனோமாதலால், யாவரும் வடிவேலை நாங்கள் பெற்ற குழந்தை என்று எண்ணியிருக்கிறார்கள்.

நாங்களும் எங்கள் குழந்தையே என்று சொல்லிக்கொண்டிருக்கிறோம். ஆனதால் வடிவேலுக்கு என் மகளைக் கொடுக்கலாம் என்று சொன்னதில் தோஷம் ஒன்றுமில்லை (என்று நகைத்தாள்).

தன் தாய் சொல்லியதைக் கேட்டிருந்த விசாலாக்ஷி ஓடித் தன் தாயைக் கட்டிப்பிடித்து முகமெல்லாம் பலவந்தமாக முத்தங் கொடுத்து, "அக்காள்! தாங்கள் இது நாள் இவ்விரகசியத்தை ஏன் ஒளித்துவைத்திருந்தீர்கள்?" என்று ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள். காமாக்ஷியம்மாள் எழுந்து விசாலாக்ஷியைக் கட்டிப்பிடித்துக்கொண்டு முகமெல்லாம் முத்தங்கொடுத்து, "அம்மா விசாலாக்ஷி! நீயே என்மகனை விவாகம் செய்துகொள்ளுவாய். இனி என்னை அம்மாவென்று அழைக்காமல் அத்தையென்று அழைக்கவேண்டும்" என்று மீண்டும் முத்தங்கொடுத்து, "இன்னமும் கலியாணம் வேண்டாமென்று சொல்லுவாயோ?" என்று கேட்டாள்.

**விசாலாக்ஷி.**—அத்தை! (என்று நகைத்து) நாங்கள் கொண்ட எண்ணம் தவறென்று தாங்கள் சொல்லியபின் அக்கருத்தை நாங்கள் ஒழித்துவிடவேண்டியது எங்களுடைய கடமையல்லவோ (என்று மீண்டும் நகைத்தாள்).

**காமாக்ஷியம்மாள்.**—அம்மா! திரிபுரஸுந்தரம்! உன்மகள் சொல்வதைக் கேட்டுக்கொண்டாயா? முன் விவாகம் வேண்டாம் என்றவள் இப்பொழுது வேண்டு மென்கிறாள். வடிவேலுக்கு இந்த ரகசியம் தெரியுமா?

**திரிபுரஸுந்தரம்.**—வடிவேலுக்கு ஒன்றும் தெரியாது. அவன் எங்களுடைய பிள்ளையென்றே நினைத்திருக்கிறான்.

அந்த ஸமயத்தில் முத்துவேலு பிள்ளை வீட்டுக்குள் வந்து தன் மனைவியைப் பார்த்து "வடிவேலை நான் தேடாத இடமில்லை. நல்லதம்பி பிள்ளையைக் கண்டு கேட்டதில், வடிவேலு அவர் வீட்டிற்சென்று பலகாரமும் காப்பியும் சாப்பிட்டுத்

தனக்குத் தூக்கமயக்கமாயிருந்ததால் வீட்டிற்குப் போவதாகச் சொல்லி ஓர் வண்டியிலேறிச் சென்றதாகத் தெரியவந்தது" என்றார்.

**திரிபுரஸுந்தரம்.**—வண்டிக்காரனைக் கண்டு கேட்கக்கூடாதா?

**முத்துவேலு பிள்ளை.**—நல்லதம்பி பிள்ளையே வண்டிக்காரனைக் கூப்பிட்டனுப்பினார். அவன் அகப்படவில்லை. அவன் வீட்டில் விசாரித்ததில் வெளியூருக்கு ஸவாரியோடு போயிருக்கிறான் என்கிறார்கள் (என்று துக்கத்தோடு உட்கார்ந்தார்).

**காமாக்ஷியம்மாள்.**—சிலவேளை தன்னை யறிந்த சிநேகர்களோடு சேர்ந்து எங்காகிலும் போயிருப்பானா?

**திரிபுரஸுந்தரம்.**—அம்மா! அவன் அவ்விதம் போகிறவனல்லவே. நான் என்ன செய்வேன்? மகனுக்கென்ன ஆனதோ? (என்று அவளும் துக்கத்தோடு உட்கார்ந்தாள்).

காமாக்ஷியம்மாளும் அதிக துக்கமடைந்து, விசாலாக்ஷியைத் திரும்பிப் பார்த்தபொழுது அவள் அதிகம் தேம்பித் தேம்பி அழுகிறதைக் கண்டு, மிக்க பரிதாபத்தோடு அவளுக்குத் தேறுதலைச் சொல்லிக்கொண்டிருந்தாள். அன்றெல்லாம் ஒருவரும் சாப்பிடாமலிருந்தார்கள். மறு நாளும் அதற்கடுத்த நாளும் முத்துவேலுபிள்ளை வெளியிற்போய் வண்டிக்காரனைத் தேடிப் பார்த்தும் அவனைக் கண்டுகொள்ள முடியாமல் மாலை வீடுவந்து சேர்ந்தார்.

தந்தியாபீசு சேவகனொருவன் ஒரு தந்தி கொண்டுவந்து கொடுக்க அதை ஆத்திரத்தோடு பார்த்து, வடிவேலு திருச்சிராப்பள்ளியில் இருக்கிறானென்று தன் மனைவிக்கும் காமாக்ஷியம்மாளுக்கும் சொல்லி, "நாம் உடனே பிரயாணப்படவேண்டும். தங்களை திண்டுக்கல்லில் விட்டுப் போகிறோம்" என்றார்.

**காமாக்ஷியம்மாள்.**—(அதிக ஸந்தோஷ மடைந்து) நானும் திருச்சிராப்பள்ளிக்கு வந்து என் மகனைப் பார்த்துவிட்டுப் பின் திண்டுக்கல்லுக்குப் போகிறேன்.

**திரிபுரஸுந்தரம்.**—அம்மா! தாங்கள் திண்டுக்கல்லுக்குப் போகா

மல் எங்களோடு எப்பொழுதும் இருந்தால் நாங்கள் அதிக ஸந்தோஷ மடைவோம்.

விசாலாக்ஷி.—ஆம் அத்தை! தாங்கள் எப்பொழுதும் தங்கள் மகளோ டிருக்கவேண்டும்.

முத்துவேலு பிள்ளை.—(நகைத்து) இது என்ன விசாலாக்ஷி புதிய முறை கொண்டாடுகிறாள்? (என்று தன் மனைவியைப் பார்த்துக் கேட்டார்.)

திரிபுரஸுந்தரம்.—(நகைத்து) தங்கள் குமாரத்தியைக் கேளுங்கள்.

முத்துவேலு பிள்ளை.—அம்மா விசாலாக்ஷி! இந்த அம்மாளை இது நாள் அம்மாவென் றழைத்திருந்தாயே! இன்று அத்தையென் றழைப்பது ஏது காரணம்?

விசாலாக்ஷி.—என் அத்தானுக்குத் தாயானவர்களை நான் அழைக்கவேண்டிய முறையைவிட்டு அம்மாவென்றழைப்பது நியாயமோ? (என்று நகைத்தாள். பெண்பிள்ளைகளும் நகைத்தார்கள்).

முத்துவேலு பிள்ளை.—(நகைத்து)எந்த அத்தானுக்குத் தாய் என்கிறாய்?

விசாலாக்ஷி.—அப்பா! என் அத்தான் பேரைச் சொல்லச் சொல்லுகிறீர்கள். இது உவமான பங்கம் ஆகுமென்று நினைக்காமல் போனீர்கள்.

முத்துவேலு பிள்ளை.—அம்மா விசாலாக்ஷி! நீ சொல்வதின் கருத்து விளங்கவில்லை. உன் அத்தான் யாரென்று சொல்லுவதால் என்ன உவமான பங்கம் வரும்?

விசாலாக்ஷி.—அப்பா! சாமியார் நம்முடைய வீட்டிலிருந்தபொழுது, அவர், தாங்கள் கேட்டதற்கு, "ஒரு நாயகிக்கு முன் அனேக ஆடவர்களை நிறுத்தி, இவன் உன் புருடனோ இவன் உன் புருடனோ என்று ஒவ்வொருவரையும் காட்டிக் கேட்டு, அவள் அல்ல அல்ல என்று சொல்லி, அவள் நாயகனைக் காட்டியபொழுது ஒன்றும் சொல்லாமல் தலை

குனிந்து நிற்பதுபோல், பிரமத்தின் தன்மை அல்ல அல்ல' வென்று சொல்லிவந்த வேதம் மௌனமாய் நின்றுவிடும் என்று பெண்களை உவமானமாகக் காண்பித்தார். அந்த உவமானத்துக்கு பங்கம்வர நான் சொல்லலாமோ என்று நகைத்தாள்.

**முத்துவேலு பிள்ளை.**—திரிபுரம்! விசாலாக்ஷியம்மாள் சொல்லுவது எனக்கொன்றும் விளங்கவில்லை. முன்னொரு ஸமயத்தில் நான் சாமியாரோடு வார்த்தையாடி யிருந்ததை அதிக கவனமாய்க் கேட்டுக்கொண்டிருந்ததாகக் காண்கிறது. பெண்களுடைய புத்தி அதிககூர்மை யென்றல்லவோ சொல்லவேண்டியதா யிருக்கிறது.

**விசாலாக்ஷி.**—ஆம், அப்பா! பெண்பாலருடைய புத்தி கூர்மையான தென்றதோடு முடித்துவிட வேண்டாம். எல்லா வல்லமையும் எல்லா தயாளகுணமும் நிறைந்திருப்பதோடு, அவர்களே கல்விக் களஞ்சியமாய் போதிக்கும் சக்தியில் மிஞ்சி ஆடவர்களைவிட மேலாக இருக்கிறார்கள் என்றே சொல்லவேண்டும்.

**முத்துவேலு பிள்ளை.**—(நகைத்து) அம்மா! விசாலாக்ஷி! நீ என்ன காரணத்தால் அவ்விதம் பெண்களை உயர்த்திப் பேசுகிறாய்? பெண்கள் புருடர்கள் சொல்லுக் கடங்கி அவர்களுக்கு ஊழியம் செய்வதை நீ அறியாமலா இருக்கிறாய்?

**விசாலாக்ஷி.**—அப்பா! புருடர்கள் பெண்களை அவ்விதம் நடத்துவது பரிதாபமே யாயினும், பெண்கள் ஊழியம் செய்வதை யோசித்தால் பெண்களுக் குண்டாகிய நல்லறிவென்றே சொல்லவேண்டும்.

**முத்துவேலு பிள்ளை.**—அம்மா! நீ சொல்வது ஒன்றும் விளங்கவில்லை. நீ என்ன காரணத்தால் பெண்களை உயர்த்திப் பேசுகிறாய் என்றதற்கு பதில் சொல்லாமல் வேறென்னமோ சொல்லுகிறாய்.

**விசாலாக்ஷி.**—அப்பா! சுத்த சிவத்திலிருந்து வெளிப்பட்ட

அருளே சத்தியென்றும், கல்விக்கு தெய்வம் சாஸ்வதி யென்றும் பெண்பாலாகக் கூறுவதால், பெண்களுக்கு அவ் வித குணம் உரிமையென்றும் காண்கிறது. சிறுவர் களுக்கு முதலில் கல்வியை போதிக்குங்கால் ஔவையா ரருளிய ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலிய நூல்களை வாசிக்கக் கொடுப்பதால், பெண்களுக்கே போதிக்கும் சக்தி அதிகம் உண்டென்றும் காண்கிறது. நாயகனை நாயகி தெய்வமாக பாவிக்கவேண்டுமென் றறிந்திருப்பதால், தங்க ளுக்கு எல்லா வல்லமையு மிருந்தாலும் அவைகளை கவனிக் காமல், நாயகனுக்கு ஊழியம் செய்கிறார்கள்.

முத்துவேலு பிள்ளை.—அம்மா விசாலாக்ஷி! சுத்த சிவத்திலிருந்து தோன்றிய சத்தியே யல்லாமல் வேறிடத்திலிருந்து வர வில்லையே? ஈசனிடத்திலிருந்து தோன்றியதைப் பெண் களுக்குச் சொல்வது எவ்விதம்.

விசாலாக்ஷி.—அப்பா ! சுத்த சிவத்தினிடத்தில் அடங்கியிருந்து ஜீவர்களின்மேல் வைத்த காருண்ணியத்தால் வெளிப்பட்ட அருளையே பெண்பாலாக சத்தியென்று சொல்லுவதால், பெண்களுக்கே காருண்ணியம் ஸுதந்தரம். ஆடவர் பெண்களிடத்திலிருந்து இரவல் வாங்கிக்கொண்டார்க ளென்று சொல்லத் தடையென்ன ? அருள் வெளிப்பட்ட பொழுது சிவம் என்று சொல்லாமல், பரசிவன், அதாவது பெண்ணேயமுடையவன் என்று ஈசனைச் சொல்லுகிறார் கள் (என்று நகைத்தாள்).

முத்துவேலு பிள்ளை.—அம்மா ! நீ சொல்லும் சத்தி ஈசனைக் கணவனாகக் கொண்டாள். அதுவும் இல்லையென்று சொல்லுவாயோ ?

விசாலாக்ஷி.—அப்பா ! "சத்திதான் பிரேரித்துப்பின் தானனுட் டித்துக்கொண்டே" என்றிருப்பதால், ஈசனே சத்தியின் உதவியைத் தேடிச் சென்றாரே யொழிய சத்தி போய்த் தேடவில்லை (என்று நகைத்தாள். யாவரும் நகைத்தார்கள்).

ஆனதால் பெண்களாகிய நாங்களே உயர்வென்று தெளிவாய்க் காண்கிறது (என்று நகைத்தாள். யாவரும் நகைத்தார்கள்).

**முத்துவேலு பிள்ளை.**—அம்மா விசாலாக்ஷி! பெண்கள் உயர்வென்றாலும் அவர்கள் ஆடவர்களுக்குக் கீழானவர்களே. உலகில் தாயைவிடத் தந்தையையே முதன்மையாகக் கொள்ளுகிறார்கள்.

**விசாலாக்ஷி.**—அப்பா! தாங்கள் அவ்விதம் சொல்லுதல் பெருங் குற்றமாகும். "சத்தியும் சிவனுமாய தன்மை இவ்வுலக மெல்லாம்" என்றும், "அம்மையப்பரே உலகுக் கம்மையப்ப" ரென்றும், "சத்தியாய்ச் சிவமாய்" என்றும் சொல்லுகிறதைத் தங்களுடைய ஞாபகத்துக்கு வரவழைத்துக்கொண்டால், தாங்கள் யாரை முதலாகச் சொல்லுவீர்கள்? (என்று நகைத்தாள். யாவரும் நகைத்தார்கள்).

**முத்துவேலு பிள்ளை.**—திரிபுரம்! விசாலாக்ஷியம்மாள் பேசுவதைப் பார்த்தாயா? இதையெல்லாம் எங்கு கற்றுக் கொண்டாள்?

**திரிபுரஸுந்தரம்.**—எல்லாம் அவளண்ணனிடத்தில் கற்றுக் கொண்டாளேயன்றி, வேறு யாரிடத்தில் கற்றுக்கொண்டாள்?

**விசாலாக்ஷி.**—அம்மா! தாங்கள் அண்ணன் என்று சொன்னால், அது பெருங்குற்றம்.

**முத்துவேலு பிள்ளை.**—வடிவேலு உனக்கு அண்ணனல்லவா? அண்ணனென்று சொல்லாமல் வேறென்ன என்று சொல்லப்போகிறாய்?

**விசாலாக்ஷி.**—நான் அவரை அத்தானென்றே அழைப்பேன்.

**முத்துவேலு பிள்ளை.**—(தன் மனைவியைப் பார்த்து) இதென்ன அதிசயம்?

**திரிபுரஸுந்தரம்.**—விசாலாக்ஷியம்மாள் வடிவேலு வாராமையைக் குறித்து அழுதுகொண்டிருந்ததால், "வடிவேலு என் சகோ

தரன் மகன்: சிறுவயதில் அவன் தாய் தந்தை இறந்ததால் நம்மிடத்தி லிருக்கிறான்" என்று நான் சொன்னதைக் கேட்டது முதல் வடிவேலை அத்தானென்று கொண்டாடுகிறாள்.

**முத்துவேலு பிள்ளை.**—வடிவேலின் ரகசியத்தைச் சொல்லி விட்டாயா ?

என்று விளையாட்டாகச் சிலநேரம் பேசியிருந்து யாவரும் ஸந்தோஷமாக இராப்போஜனமுண்டு, மறுநாள் காலை அவ்வூரை விட்டுப் பிரயாணப்பட்டார்கள்.

---

## 21—ம் அத்தியாயம்

திண்டுக்கல்லிலிருந்து வடிவேலு நீங்கியபின், துரைசாமியும் அப்பாசாமியும் திருஞானம் அங்கிருப்பதால் ஏதாகிலும் கெடுதல் நேரிடுமென்று பயந்து, அதிக மனக்கவலையோடு மூவரும் நீங்கிய மூன்றாம் நாள், இலக்கைய பிள்ளை தன் குடும்பத்தோடு தங்கள் வீட்டில் வந்திருந்தார். மறுநாள் காலையில் ஓர் பெண்பிள்ளை அவ்வீட்டுக்குப் போய் "சுரும்பாயி யம்மாள் இருக்கிறார்களா ?" என்று வெளியில் நின்றிருந்த சிறுவனைக் கேட்டாள். அவன் வீட்டுக்குள் ஓடிப்போய் "அம்மா ! தங்களை யாரோ ஒரு அம்மாள் தேடுகிறார்கள்" என்றான். அவள் வெளியில் வந்து பார்த்து, ஓர் ஸௌந்தரமான பெண்பிள்ளை நிற்கிறதைக் கண்டு, "நீயா அம்மா ! என்னைத் தேடினாய் ?" என்றாள்.

**பெண்பிள்ளை.**—ஆம் ! தங்களையே தேடிவந்தேன்.

**சுரும்பாயி யம்மாள்.**—நீ என்னைப் பார்க்க வந்த காரணத்தைச் சொல்ல வேண்டுகிறேன். உன் பெயர் என்ன ?

**பெண்பிள்ளை.**—என் பெயரைத் தெரிவிப்பதற்கு பதிலாக வேறொருவருடைய பெயரைச் சொல்லுவது அவசியமாக இருக்கிறது. அந்தப்பெயர் அங்கயற்கண்ணியம்மாள்.

**சுரும்பாயி யம்மாள்.**—என்ன சொன்னாய் ? அங்கயற்கண்ணியா? (என்று கண்களில் நீரை தாரை தாரையாக வடிய




தாங்கள் சாவியை அவர்களுக்காக வைத்திருந்ததின் பலனைப் பாருங்கள். (245-ம் பக்கம் பார்க்க).

விட்டு) அம்மா நாம் இங்கு நின்று வார்த்தையாடக்கூடாது. வீட்டுக்குள்வா. (என்று வீட்டுக்குள் அழைத்துக்கொண்டு போய், ஓர் அறையில் பாயைப்போட்டு உட்காரச் சொல்லி), "அம்மா நீ என் வயிற்றில் பாலை வார்க்க வந்தாய். அங்கயற்கண்ணி எப்படி யிருக்கிறாள்? அவள் என்னுடைய தங்கை. நானும் அவளும் ஒரு தாய் வயிற்றில் பிறந்தவர்களல்ல. அவளுடைய பாட்டியாரும் என்னுடைய பாட்டியாரும் மற்றொரு அக்காளின் பாட்டியாரும் ஸகோதரிகளாயினும், நாங்கள் மூவரும் ஒருதாய் வயிற்றிற் பிறந்தவர்களென்றே பார்க்கிறவர்களெல்லாம் சொல்லுவார்கள். எங்களைப்போல் நேசமாய் வேறொருவர் இருந்தார்களென்று யாரும் நினைக்கார்கள். அங்கயற்கண்ணுடைய ஸௌந்தரத்துக்கும் செல்வத்துக்கும் ஏற்றவிதமாக பிரமன் அவள் தலையில் எழுதாமல் வேறுவிதம் எழுதிவிட்டான். யாரால் அதை மாற்ற முடியும்? நான் கீறிய கோட்டைத் தாண்டாதவள், காலவித்தியாசத்தால் நான் எவ்வளவு சொல்லியும், என் வார்த்தையைக் கேட்காமல் தடுத்துவிட்டாள். என் தமக்கை அவளுக்கு நன்மையைச் செய்ய எண்ணி, இன்னம் துக்கப்பட்டுக்கொண்டிருக்கிறாள். நான் அவளுடைய ஸமாசாரத்தைக் கேட்காமல் ஏதேதோ சொல்லிக்கொண்டிருக்கிறேன். அவள் என்ன சொல்லியனுப்பினாள்?

பெண்பிள்ளை.—அம்மா! அங்கயற்கண்ணியம்மாள் என்னிடத்தில் அதிகம் சொல்லவில்லை. தான் கோரியது அகப்பட்டதென்றும், சில நாளில் வெளியூருக்குப் போகவேண்டும் என்றும், வெளியூருக்குப் போகவேண்டிய காரணம் தங்களுக்குத் தெரியுமென்றும் சொல்லி, தான் வெளியூருக்குப் போகப் பொருளுதவி வேண்டியதால் அதற்குத் தக்க ஏற்பாடு செய்யும்படி தங்களிடம் சொல்லச் சொன்னார்கள்.

சுரும்பாயி யம்மாள்.—என்ன சொன்னாய்? அவள் கோரியது கிடைத்ததா? அவள் எங்கிருக்கிறாள்? அவள் இருப்பிடத்தைச் சொன்னால், நான் போய்ப் பார்த்து அவளுக்கு வேண்டிய பொருளுதவி செய்து வருவேன்.

பெண்பிள்ளை.—அம்மா! அந்தம்மாள் இருப்பிடம் எதுவென்று எனக்குத் தெரியாது. நான் அங்கயற்கண்ணி யம்மாளை நெடுநாள் அறிந்தவளல்ல. அந்தம்மாள் எனக்கு ஓர் உபகாரம் செய்தார்கள். அதற்கு பதில் என்ன செய்யப்போகிறேனென்று நான் அந்த அம்மாளிடம் துக்கப்பட்டபொழுது, "திண்டுக்கல்லிலிருக்கும் இலக்கைய பிள்ளையின் மனைவி சுரும்பாயி யம்மாளுக்கு நான் சொல்வதைச் சொல்லுவாயாயின், நீ எனக்குப் பெரிய உபகாரம் செய்ததுபோ லெண்ணுவேன்" என்றார்கள். நான் அந்த அம்மாள் சொல்லியதைத் தங்களிடம் வந்து சொல்ல இவ்வூருக்கு வந்து பதினைந்து நாள் காத்திருந்தேன்.

சுரும்பாயி யம்மாள்.—அங்கயற்கண்ணி உன்னிடத்திற் சொல்லி யனுப்பிவிட்டுப் பின்பு எங்கு போனாள்?

பெண்பிள்ளை.—அம்மா! அந்த அம்மாள் போனவிடம் அறியேன். தான் வெளியூருக்குப் போவது நிலைபெறின், தங்களுக்குக் கடித மூலமாயாவது வேறெந்தவிதமாயாவது தெரிவிப்பதாகச் சொன்னார்கள். நான் தங்களிடத்தில் சொல்ல வேண்டியதைச் சொல்லியபின் எனக்கு இவ்வூரிலிருக்க வேறொரு காரணமும் இல்லை. நான் வேறொரு ரகசியம் சொல்லிப் போகவேண்டும். அதைத் தாங்கள் அறிந்தபின் தங்களுடைய நாயகனை விபரீதமாக ஒன்றையுஞ் செய்ய விடாமல் தடுத்துவிடுவதாக வாக்களித்தால், நான் அவ்விரகசியத்தைச் சொல்லுகிறேன். அவ்வாக்குத் தங்களிடத்திலிருந்து கிடைக்காமலிருந்தால், நான் வாயை மூடிக்கொண்டு பேசாமல் போகவேண்டியதே!

சுரும்பாயி யம்மாள்.—அம்மா! நீ மிக்க புத்திசாலியாக இருக்

கிறாய். உன்னுடைய இஷ்டப்பிரகாரம் என் நாயகனைச் செய்யச் சொல்லுவேன். நீ அதுவிஷயத்தில் கவலை கொள்ளாமல் உனக்குச் செய்யவேண்டியதைத் தெரிவித்தால் அதைத் தடையின்றிச் செய்வோம்.

**பெண்பிள்ளை.**—அம்மணி! தாங்கள் செய்யப்போவது எனக்குப் பேருபகாரமே! தாங்கள் எப்பொழுது இவ்வூரைவிட்டுப் போனீர்கள்?

**சுரும்பாயி யம்மாள்.**—என் மகள் தலைச்சனையும் இடைச்சனையும் பெற்றபொழுது நம்முடைய வழக்கப்பிரகாரம் நான் அவளை இவ்விடத்திற்கு அழைத்துவந்து பார்த்துத் தாயும் பிள்ளையுமாக அனுப்பினேன். இப்பொழுது மூன்றாவது பிள்ளையைப் பெற்றாள். தாய் வீட்டில் மூன்றாவது பிள்ளையைப் பெற்றால் மூடக் கதவற்றுப்போகும் என்பதற்கஞ்சி, நான் அங்கே பிள்ளைப்பேற்றைப் பார்த்துவரப் போயிருந்தேன். ஏறக்குறைய ஒருமாதம் அவ்விடத்திலிருக்கும்படி நேரிட்டது. ஆனதால் நீ இவ்வூருக்கு வந்தவுடன் என்னைப் பார்ப்பது முடியாமற்போய்விட்டது.

**பெண்பிள்ளை.**—அம்மா! தாங்களும் தங்களுடைய நாயகனும் இவ்வீட்டில் இல்லாததால், பெருங்கொலை ஒன்று நடக்க இருந்தது. அது தெய்வானுகூலத்தால் தடைப்பட்டது.

**சுரும்பாயி யம்மாள்.**—அம்மா! நீ சொல்வது அதிசயமாக இருக்கிறது. என் நாயகன் என்னை அழைத்துவர என் மகள் வீட்டுக்கு வந்தபொழுது வீட்டைப் பூட்டிவந்தார். நாங்கள் வந்தே கதவைத் திறந்தோம். கதவு பூட்டியிருக்கும் வீட்டில் ஒன்றும் நடக்க நியாயமில்லையே!

**பெண்பிள்ளை.**—அம்மா! நான் இப்பொழுது இவ்வீட்டுக்குள் வந்தவள், இவ்விடத்தைவிட்டு வேறு அறைகளை நான் பார்க்கவில்லையே. நான் அவ்வறைகளிலிருக்கின்றவைகளைச் சொல்லுகின்றேன் கேளுங்கள் (என்று ஒவ்வொரு அறையிலும் இருக்கிற வஸ்துக்களையெல்லாம் சொன்னாள்).

**சுரும்பாயி யம்மாள்.**—அம்மா! இதென்ன அதிசயமாயிருக்கிறது? கதவைப் பூட்டிய சீமைப்பூட்டு எட்டு ரூபாவுக்கோ பத்து ரூபாவுக்கோ வாங்கியது. வீட்டின் பின்புறச் சுவர், அதிக உயரமாகச் சீசாவோடுகளால் பதிக்கப்பட்டிருப்பதால், ஏறி யிறங்கவும் முடியாது. பின்புறக் கதவை மூடி உள்தாழ்ப்பாளிட்டு வெளிக்கதவையும் மூடிப் பூட்டி விட்டால், வீட்டுக்குள் ஒருவர் வர முடியாதென்றே வீட்டுக்குள்ளிருக்கும் அறைகளைப் பூட்டுகிறதில்லை. நீ அறைகளிலிருக்கும் ஸாமான்களைக் குறிப்பித்தது மிக்க அதிசயம். நாங்கள் வந்தபொழுது பின்புறக் கதவும், வெளிக்கதவும் மூடியிருந்ததே. நீ எப்படி வீட்டிலுள்ள ஸாமான்களை அறிந்தாய்?

**பெண்பிள்ளை.**—ஓர் அதிசயமும் இல்லை. தங்களுடைய நாயகன் தனித்திருந்தபொழுது, அவருடைய சிநேகர்கள் வந்து மீண்டு வருவதாகச் சொல்லிப்போனதால், வீட்டைப் பூட்டிச் சாவியை ஓரிடத்தில் வைத்துப் போனார். நான் அந்தச் சாவியால் வீட்டைத் திறந்து வீட்டுக்குள் பின்புறக்கதவின் உள்தாழ்ப்பாளை யெடுத்துவிட்டுப் போயிருந்தேன். பின் கொலை நடக்கும் ஸமயத்தில் வீட்டுக்குள்ளிருந்து அக்கொலை நடவாதபடி செய்துவிட்டேன். வந்துபாருங்கள் (என்று வீட்டுக்குப் பின்புறத்தில் குழிபறித்து மூடியிருப்பதைக் காட்டி, நடந்தது யாவும் சொன்னாள்).

**சுரும்பாயி யம்மாள்.**—அப்பாதகர்களை விடக்கூடாது. என் நாயகன் வந்தவுடன் சொல்லி அப்படுபாவிகளைக் கண்டு பிடித்துப் போலீஸாரிடம் ஒப்படைக்க வேண்டியதே (என்று கடுங்கோபங் கொண்டாள்).

**பெண்பிள்ளை.**—அம்மா! தாங்களும் தங்களுடைய நாயகனும் ஒரு காலத்தில் இந்த ஸமாசாரத்தை அறிவீர்கள். அக்காலத்தில் சும்மா இருக்காமல் எதையாகிலும் செய்துவிடுவீர்களென்றே தங்களிடத்தில் இதை ரகசியத்தில்

வைத்துக்கொள்ள வேண்டுமென்று தங்களைக் கேட்டுக் கொண்டேன்.

**சுரும்பாயி யம்மாள்.**—அம்மா! நீ பெரும் புண்ணியத்தைச் செய்துவிட்டாய். அநியாயமாக ஒருவனை உயிரோடு புதைக்கப் போனதைத் தடுத்துவிட்டாலும், என் நாயகன் இதைக் கேள்விப்பட்டால் சும்மா இருக்கமாட்டாரே.

என்று சொல்வதைக் கேட்டுக்கொண்டே இலக்கைய பிள்ளை அவ்விடம் வந்து "என்ன, சும்மாயிருக்க மாட்டேனென்கிறாய்?" என்று கேட்டார்.

**சுரும்பாயி யம்மாள்.**—(தன் நாயகனைப் பார்த்து) தாங்கள் என்னை அழைத்துவர வந்தபொழுது வீட்டைப் பூட்டிச் சாவியை எங்கு வைத்து வந்தீர்கள்?

**இலக்கைய பிள்ளை.**—துரைசாமியும் அவன் சிநேகரும் இவ்விடம் வரவேண்டு மென்றார்கள். வந்தால் அவர்கள் நம்முடைய வீட்டில் இறங்கவேண்டியதற்காகச் சாவியை இவ்விடமே வைத்து வந்தேன்.

**சுரும்பாயி யம்மாள்.**—தாங்கள் சாவியை அவர்களுக்காக வைத்திருந்ததின் பலனைப் பாருங்கள் (என்று மூடியிருக்கும் குழியைக் காட்டித் தான் பெண்பிள்ளையிடம் கேட்டதைச் சொன்னாள்).

**இலக்கைய பிள்ளை.**—இந்தப் பெண் யார்?

**சுரும்பாயி யம்மாள்.**—இந்த அம்மாள் என்னிடம் ஒரு வேலையாக வந்தவள், நான் இவ்வூரில் இல்லாமற் போனதால் எனக்காக இவ்வூரில் காத்திருந்து நம்மைக் காப்பாற்றி விட்டாள்.

**இலக்கைய பிள்ளை.**—(தன் மனைவியையும் அப்பெண் பிள்ளையையும் வீட்டுக்குள் அழைத்துவந்து, பெண்பிள்ளையைப் பார்த்து) அம்மா, உன்னுடைய பெயர் என்ன?

**பெண்பிள்ளை.**—சில காரணத்தால் என் பெயரைச் சொல்ல

இஷ்டம் இல்லை. நான் இவ்வூரில் ஒரு கிழவியோ டிருக்கிறேன்.

**இலக்கைய பிள்ளை.**—எந்தக் கிழவி ?

**பெண்பிள்ளை.**—அந்தக் கிழவியை நீங்கள் அறியீர்கள். அக்கிழவியை எனக்குத் துணையாக நானிருந்த இடத்திலிருந்து அழைத்து வந்திருக்கிறேன்.

**இலக்கைய பிள்ளை.**—உன்பெயர் இன்னதென்று அறியவேண்டியது கட்டாயமாக இருக்கிறதே. இங்கு நடந்ததை நியாய ஸ்தலத்தில் மெய்ப்பிக்க ஸாக்ஷி வேண்டுமே. பேரறியாமல் நான் என்ன செய்ய முடியும் ?

**பெண்பிள்ளை.**—ஐயா ! தங்களுடைய வீட்டில் கொலை நடந்திருந்தால், தாங்கள் சாவியை வைத்துப்போன தோஷத்தால், தாங்களும் உட்கையாக இருந்து இக்கொலை நடத்தினீர்களென்று நினைக்க இடந்தரும். அல்லாமலும் தாங்கள் பெருந்தொகை செலவுசெய்து கட்டிய வீட்டிலிருக்க மனங்கொள்ளாமல் இவ்வீட்டை யிழந்து வேறு வீட்டில் குடியேற வேண்டியதாகும். இவ்விரண்டையுந் தடுத்த எனக்கு ஒரு வெகுமதியும் கொடுக்காமலிருப்பது தங்களைப்போன்றவர்களுக்கு அழகல்லவே. ஆனதால் தாங்கள் எனக்கு ஒரு வெகுமதி அளிக்கவேண்டும்.

**இலக்கைய பிள்ளை.**—ஆம் ! அம்மா ! நீ சொல்வது நியாயமே ! நீ என் நிலைமைக்குத் தக்கவாறு கேட்டால், கொடுக்கத் தடைசெய்யேன்.

**பெண்பிள்ளை.**—தாங்கள் என் பெயர் வெளிவராம லிருக்கச் செய்து, நடந்துபோன விஷயத்தை மறந்துவிடுவதே எனக்குக் கொடுக்கும் வெகுமதி.

**இலக்கைய பிள்ளை.**—இரண்டாகச் சொன்னதில் ஒன்றில் இரண்டும் அடங்கியிருக்கிறது. உன் பெயரை வெளிக்குக் கொண்டுவர வேண்டாமென்றால் உன்னுடைய ஸாக்ஷியில்லாமல் ஒன்றும் செய்ய முடியாததலால், நான் மறக்க

வேண்டியதே. கொலையுண்டு இறக்கப்போனவன் சும்மா இருப்பானு! அவன் போலீசாருக்குத் தெரிவித்தால், அப்பொழுது யாவும் வெளிவரவேண்டிய தல்லவா? அதை மறந்து பேசுகிருயே!

பெண்பிள்ளை.—அவரைப் பேசாமலிருக்கும்படி கேட்டுக்கொண்டேன். தாங்கள் அது விஷயத்தில் கவலைகொள்ளவேண்டாம்.

இலக்கைய பிள்ளை.—இக்கொடுந்தொழிலைச் செய்யத் துணிந்தவர்களை தண்டிக்காமல் விடுவது அடுக்காதே! நீ அவர்கள் விஷயத்தில் பரிதாபங் காட்டுவதின் காரணம் தெரியவில்லை.

பெண்பிள்ளை.—ஐயா! தங்கள் வீட்டில் வந்திறங்கிய மூவரில் ஒருவர் இக்கொடுந்தொழிலுக்கு இடங்கொடுக்காமலே தடுத்துக்கொண்டிருந்தார். அவர் வார்த்தையை துரைசாமியும் அப்பாசாமியும் கேட்காமல் வடிவேலைப் புதைத்துவிடவே எண்ணியிருந்தார்கள். நாம் இதை வெளிக்குக் கொண்டு வந்தால் மூவரும் தண்டனையை அடையவேண்டுமல்லவா?

இலக்கைய பிள்ளை.—உன்னுடைய ஸாக்ஷியால் அவரை விட்டுவிடக் கூடும்.

பெண்பிள்ளை.—கொலை செய்பவர்களுக்குத் துணையாகப் பொருளுதவி செய்தாலும், அற்ப தண்டனையாவது வடிவேலுக்குச் செய்யவேண்டுமென்கிற விருப்பம் அவருக்கு இருந்ததாலும், அவரை துரைத்தனத்தார் தண்டிக்காமல் விடார். அந்த துன்மார்க்கர்கள் என்னுடைய உயிரை இரையாக்கிக்கொள்ளுவார்கள்; அல்லது என் கையையாவது காலையாவது முறித்துவிடுவார்கள் என்றே பயப்படுகிறேன்.

இலக்கைய பிள்ளை.—நான் இப்பொழுது உன் கருத்தை முற்றிலும் அறிந்தேன். நான் துரைசாமியை நற்குணமுள்ளவனென்றெண்ணி மோசம்போனேன். அவன் முன்

ஒரு காலத்தில் இவ்விடம் வந்து தன் சிறிய தாயாரை அழைத்துக்கொண்டுபோகத் துணைசெய்ய வேண்டுமென்று என்னைக் கெஞ்சி யழுதான். நான் அவன் பாட்டனாரிடம் அவனுக்காகப் பரிந்து பேசி, அவருடைய மனதுக்கு விரோதமாக அவர் குமாரத்தியை அனுப்பும்படி செய்தேன். பின் அவன் தன் சிற்றன்னையை மேலாக நடத்தி வருகிறானென்று கேள்விப்பட்டு, அவனை சிலாகித்து அவனுடைய பாட்டனாரிடமும் பேசியிருந்தேன். ஐயோ ! அவன் இப்பொழுது அவன் சிற்றன்னையை நடத்தியதைக் குறித்து யோசித்தால் அவன் காரியார்த்தமாகச் செய்துவந்தான் என்பதை இன்று நான் வெளியிற் சென்றிருந்தபொழுது கேள்விப்பட்டேன். அதைச் சொல்லவும் நா எழவில்லையே (என்று துக்கப்பட்டார்).

**சுரும்பாயி யம்மாள்.**—துரைசாமி அவன் சிறிய தாயாரை என்ன செய்தான் ?

**இலக்கைய பிள்ளை.**—என்ன செய்தான் ? அவனுடைய சிறிய தாயார்பேரி லிருந்த நிலத்தைப் பிடுங்கிக்கொண்டு துரத்தி விட்டான். காமாக்ஷியம்மாள் தன்பேரி லிருந்த நிலத்தைக் கொடுத்ததோடு, தன் தாய் வீட்டிலிருந்து கொண்டுபோன நகைகளையுங் கொடுத்துவிட்டு, தன் தாய்தந்தையோடு வந்திருக்க வெட்கப்பட்டு, திருச்சிராப்பள்ளியில் சேலத்திலிருந்து வந்திருக்கும் ஒருவர் வீட்டில் இருக்கிறார்களாம்.

**சுரும்பாயி யம்மாள்.**—துரைசாமி இங்கு வந்திருந்தபொழுது, நீங்கள் ஒன்றும் அவனைக் கேட்கவில்லையா ?

**இலக்கைய பிள்ளை.**—அவனுடைய சிற்றன்னை தன் மேல் கோபமாக வந்திருக்கிறார்களென்றும், அவர்களை அழைத்துப்போக வந்தேனென்றும் சொன்னான். நான் அவன் சொல்லிய யாவும் உண்மையென்று நம்பியிருந்தேன். இன்றல்லவோ அவ்விஷயம் தெரிந்தது. அவன் வந்திருந்தபொழுது இந்த ஸமாசாரம் தெரிந்திருந்தால், அந்த துன்

*மார்க்கனை நம்முடைய வீட்டில் நுழையவிடமாட்டேனே ! அவன் தன்னுடைய ரகசியத்தைச் சொல்லாமலே எனக்கும் அவமானத்தை விளைவிக்க இக்கொடுந் தொழிலைச் செய்துபோயிருக்கிறான்.*

**சுரும்பாயி யம்மாள்.**—*நானும் காமாக்ஷியக்காளும் இருக்கும் நேசம் தங்களுக்குத் தெரிந்ததே ! காமாக்ஷியக்காள் தன் தாய் தந்தையோடு வந்திருக்க வெட்கப்பட்டிருக்கிறாள் என்று அறிந்தபின் நாம் சும்மா இருப்பது அழகல்ல. அந்த அக்காளை அழைத்துவர அவளுடைய தாய் தந்தை ஸம்மதப்படாமற்போனால், நாமாகிலும் சென்று அழைத்து வந்து நம்முடைய வீட்டில் இருக்கச் சொல்லவேண்டும்.*

**இலக்கைய பிள்ளை.**—*நாம் வேறொரு ஊரிலிருந்தால், நாம் அழைத்தால் நம்மோடு வருவார்கள். நாம் அவர்களுடைய தாய் தந்தை இருக்கும் ஊரில் இருப்பதால், அவர்கள் சென்றழைக்காமல் நாம் அழைத்தால் வரமாட்டார்களென்றே நினைக்கிறேன்.*

**சுரும்பாயி யம்மாள்.**—*தாங்கள் அந்த அக்காளுடைய தாய் தந்தையைக் கண்டு கேட்டீர்களா ?*

**இலக்கைய பிள்ளை.**—*நான் அவர்களை இன்னம் பார்க்கவில்லை. அவர்களை எப்படிப் போய்ப் பார்க்கிறது ? அவர்கள் என்னைக் கண்டால் நிந்திப்பார்களே என்பது கவலையாக இருக்கிறது.*

**சுரும்பாயி யம்மாள்.**—*தாங்கள் போக அஞ்சினால், நானாகிலும் சென்று கேட்டுவருகிறேன். இந்த அம்மாளுக்கு என்ன சொல்லப் போகிறீர்கள் ?*

**இலக்கைய பிள்ளை.**—(*பெண்பிள்ளையைப் பார்த்து*) *அம்மா ! அந்த துன்மார்க்கர் கொலை செய்ய எண்ணங்கொண்டு செய்ததை நீ தடுத்துவிட்டாய். நீ யாரென்றறிந்தால் உனக்குக் கெடுதலாகும் என்பது உண்மையே. ஆனதால் நான்*

ஒன்றும் செய்யாமல் இருக்கிறேன். நீ எப்பொழுது இவ்வூரைவிட்டுப் போக உத்தேசம்?

**பெண்பிள்ளை.**—ஐயா! நீங்கள் இவ்வூரி வில்லாமல் போனதால், நீங்கள் வருகிற பரியந்தம் காத்திருந்தேன். நான் இனி காலதாமஸஞ் செய்யாமல் இன்றிரவே வண்டிகள் கட்டும் போது அவைகளின் துணைகொண்டு போக எண்ணியிருக்கிறேன் (என்றெழுந்தாள்).

**சுரும்பாயி யம்மாள்.**—அம்மா! நீ சாப்பிடாமற் போகலாமா? சாப்பிட்டே போகவேண்டும்.

**பெண்பிள்ளை.**— அம்மா! என் மனங் குளிரும்படி செய்ததே எனக்கு எல்லாச் சாப்பாடும் போட்டதுபோ லாயிற்று (என்று அவர்களிடம் வெற்றிலைப்பாக்கோடு விடைபெற்று நீங்கினாள்).

---

## 22—ம் அத்தியாயம்

திருச்சிராப்பள்ளியில் ஆண்டாத் தெருவில் ஒரு பெரிய மெத்தை வீடு காலியாக இருந்தது. அப்பெரிய வீட்டில் குடிக் கூலிக்கிருக்கக் குடித்தனம் அகப்படாமற் போனதால், அவ்வீட்டில் இரண்டு படிக்கட்டு வைத்து மத்தியில் தடுத்தும், மேல் மெத்தையில் கூரை பரியந்தம் சுவரெடுக்காமல் எட்டடி உயரம் சுவரெடுத்தும், வீட்டின் ஓர் பாதியில் முத்துவேலுபிள்ளை குடியிருந்தார். அவ்வீட்டின் மேல்மெத்தையில் நின்றிருந்த விசாலாக்ஷி திடுதிடென்று படிக்கட்டிலிறங்கி ஓடிவந்து, "அம்மா! சேலத்தில் நம்முடைய வீட்டுக்கு வந்திருந்த சாமியார் மற்ற சாமியாரோடு வருகிறதுபோ லிருக்கிறது" என்று தெருவில் வருகிறவர்களைக் காட்டினாள். திரிபுரஸுந்தரம் அவர்களைப் பார்த்து "சுவாமி, தயவு செய்யவேண்டும்" என்றாள். சாமியார் தன்னோ டிருப்பவனைப் பார்த்து "அப்பா! அண்ணாமலை! இவ் வுத்தமி அழைக்கிறாள், வா" என்று வீட்டுக்குள் அழைத்துச்

சென்றபொழுது, விசாலாக்ஷி "மேல்மெத்தை தங்களுக்கிருக்க ஸௌகரியமாக இருக்கும்" என்று மேல் மெத்தைக்கு அழைத்துப்போய், அங்கு ஓரறையில் விரித்திருந்த சமுக்காளத்தில் உட்கார வேண்டினள்.

திரிபுரஸுந்தரம் அவர்களோடு மேல் மெத்தையில் சென்று சாமியாருக்கெதிரில் நின்றுகொண்டிருந்தாள்.

**சாமியார்.**—அம்மணி! தாங்கள் சேலத்தைவிட்டு இவ்வூருக்கு வந்து நெடுநா ளாகிறதோ?

**திரிபுரஸுந்தரம்.**—சுவாமி! தாங்கள் சேலத்துக்கு வந்திருந்த பொழுது நாங்கள் ஸ்தல தரிசனைக்குப் போகவேண்டுமென்று சொல்லியவண்ணம் அனேக ஸ்தலங்களுக்குப் போய், இன்று காலை மீண்டும் இவ்வூருக்கு வந்தோம்.

**சாமியார்.**—தங்களுடைய நாயகனும் குமாரனும் எங்கே?

**திரிபுரஸுந்தரம்.**—அவர்கள் இருவரும் சற்றுநேரத்தில் வந்துவிடுவார்கள். தங்களோடு வந்திருப்பவர் யார்? தாங்கள் சேலத்துக்கு வந்திருந்த பொழுது இவர் இல்லையே?

**சாமியார்.**—ஆம்? இவன் அப்பொழுது என்னோடு இல்லை. நான் சேலத்தை விட்டுப் போகும்பொழுது இவன் என்னைப் பின்தொடர்ந்து வந்திருக்கிறான். என்னை விட்டுப் போகச் சொன்னாலும் போகேன் என்கிறான்.

**திரிபுரஸுந்தரம்.**—சுவாமி! தாங்கள் சிலநாள் எங்களுடைய வீட்டிலிருந்து சொன்னதையெல்லாம் விசாலாக்ஷி கற்றுக்கொண்டு தன் தந்தையோடு வாதிடுகிறாளே! ஸம்ஸார பந்தத்தை நீக்கி வெளிக்கிளம்பியவர்கள் தங்களைக் கண்டால் விடுவார்களா? (என்று நகைத்து) அம்மா விசாலாக்ஷி! சாமியார்! சாமியார்! என்று தேடிக்கொண்டிருந்தாயே! அவர் நீ கோரிய விதம் வந்துவிட்டார். அவருக்கும் அவருடைய சீடருக்கும் பால்பழம் முதலானதை சித்தம் செய்து கொண்டுவா. என் சாமி! தங்களுடைய சீடர் சாதம் சாப்பிடுவா ரல்லவா?

அண்ணாமலை.—தாயே! என் ஆசான் சாப்பிட்ட சேடத்தையே சாப்பிட்டுக்கொண்டிருக்கிறேன்.

திரிபுரஸுந்தரமும் விசாலாக்ஷியும் சாமியாருக்கு வேண்டியதைத் தாயார் செய்யும்படி கீழே போனார்கள்.

அண்ணாமலை.—சுவாமி! தாங்கள் அப்பெண்மணிக்கு என்ன போதித்தீர்கள்? தாங்கள் போதித்ததைக்கொண்டு அவள் தந்தையோடு வாதிடுகிறாள் என்கிறார்களே! அடிமை தங்களிடம் எதாகிலும் ஒன்றை அறியவேண்டுமென்று காத்துக் கொண்டிருக்கிறேன். தாங்கள் அப்பெண்ணுக்குச் சொல்லியதையாவது அடிமைக்குச் சொல்லவேண்டும்.

சாமியார்.—அப்பா! அண்ணாமலை! நான் பெண்ணுக்கு இன்னது சொன்னேன் என்பது எனக்கு ஞாபக மில்லை. சாத்திரப் பயிற்சி என்னைவிட உனக்கு அதிக மிருக்குமென்று நினைக்கிறேன். நீ வீணே என்னைத் தொந்தரை செய்கிறாய். நான் போட்டிருக்கும் வேஷத்தால் எனக்கு அதிகம் தெரியுமென்று மலைத்திருக்கிறாய். நீ என்னை நம்பி மோசம்போகிறாய்.

அண்ணாமலை.—தாங்கள் வேஷம்போட்டுக்கொண் டிருக்கிறேன் என்றால், நானும் வேஷம் போட்டுக்கொண் டிருக்கிறேனென்று பொருள்படும். அவ்விதம் சொல்வது அடுக்காது. நான் தங்களை அடுத்ததற்கு ஒரு வழி காட்டவேண்டும் (என்று சாமியார் இருபாதங்களையும் பிடித்துக்கொண்டான்).

சாமியார்.—அப்பா! அண்ணாமலை! என்காலை விட்டுவிடு. நான் என்னுடைய ரகசியத்தைச் சொல்லிவிட்டால், இப்பொழுதே என்னைவிட்டு நீங்குவாய்; அது உண்மை. நீ என்னை விட்டு நீங்குங் காலம் ஸமீபித்ததால், இன்று என்னைத் தொந்தரை செய்கிறாய். நான் என்னுடைய ரகசியத்தை உன்னிடத்திலிருந்து மறைத்துவைத்திருப்பதால், என்னை அலட்டிக்கொண்டிருக்கிறாய். நான் சொல்வதைக் கேட்டு

ரகசியத்தில் வைத்திருக்க வேண்டும். இந்த ரகசியம் வெளியானால், அது எனக்குத் தீங்காய் முடியும். நான் சொல்லுகிறதை கவனமாகக் கேள். தாய் வழியில் நெருங்கிய பந்துக்களாய் ஸகோதர முறையைக் கொண்ட மூன்று பெண்கள் ஒருவரிடம் வாசித்து நெருங்கிய சிநேகிதர்களா யிருந்தார்கள். அம்மூவரில் ஒரு பெண்ணை நான் மணம்புரிந்து, தீய நடை யுள்ளவர்களோடு சேர்ந்து வேசி கமனம் பண்ணிவந்தேன். என் மனைவியும் பருவமடைந்து ஐந்தாறு வருடம் தன் தாய்வீட்டி லிருந்தாள். நானிருந்த ஊருக்கு ஸமீபத்தில் மற்றொரு பெண் வாழ்க்கைப்பட்டிருந்தாள். நான் என் மனைவியைக் கருதாது திரிந்து வருகிற காலத்தில், ஒருநாள் மாலை புட்பமும் மிட்டாயும் வாங்கிக்கொண்டு நான் வேசியின் வீட்டுக்குப் போகும் மார்க்கத்தில் அப்பெண் என்னைக் கண்டாள். அவள் என்னைப் பார்த்துவிட்டதால், அவளைப்பார்த்து வார்த்தையாடாமல் போகிறது நியாயமல்லவென்று அவளிருக்கும் வீட்டுக்குள் சென்று, என் கையலிருந்ததை விசிப்பலகையில் வைத்து உட்கார்ந்தேன். அவள் அவைகளைப் பார்த்து "இவைகளை யாருக்குக் கொண்டுபோகிறீர் ?" என்று கேட்டாள். நான் என் எண்ணத்தைத் தெரிவித்தால் கோபித்துக்கொள்ளுவாள் என்றஞ்சி, "உனக்கே கொண்டுவந்தேன்" என்றேன். "தாங்கள் எனக்குக் கொண்டுவந்தால் என்னிடம் கொடுக்காமல் தங்களிடம் வைத்துக்கொண்டீர்களே". என்று நகைத்து அவைகளை எடுத்துக்கொண்டு, "தாங்கள் தங்கள்மேல் அதிகம் அன்புவைத்திருப்பவளை கவனிக்காமலும் இப்பக்கம் வராமலும் இருந்தீர்களே." என்றும், "தாங்கள் எப்பொழுது அகப்படுவீர்கள் என்றும் எதிர்பார்த்திருந்தது இன்று கைகூடியது" என்றும் பலவிதம் சொல்லி, என்னைத் திருப்பி என் மனைவியிடம் சேர்க்கவேண்டுமென்று வாதிட்டுக்கொண்டிருந்தாள். அவள் நாயகன்

வெளியிலிருந்து வந்தவர், நாங்களிருவரும் வார்த்தையாடு வதைக் கேட்டு, கெட்ட அபிப்பிராயத்தோடு பேசுகிறோம் என்றெண்ணி, தன் மனைவியைக் கன்னத்தில் அறைந்தார். அவள் அவ்வடியோடு மூர்ச்சையாய் விழுந்தாள். அப் பெண் என்னிடம் வெளிப்படையாய்ப் பேசாது மறைத் துப் பேசியதால், நான் என்ன சொன்னபோதிலும் என் வார்த்தையை நம்பார் என்றெண்ணி, நானிருக்கும் இடத் திற்குச் சென்றேன். நான் நெடுந்தூரம் இருட் டில் சென்றவுடன் என்மேல் அடிபட்டுத் திரும்பிப் பார்த்து, அப்பெண்ணின் புருடனே என்னைப் பின் தொடர்ந்து அடித்தாரெனக்கண்டு, அவர் கையிலிருந்த தடியைப் பிடுங்கி எறிந்தேன். அவர் என்னைக் கண்ட விதம் திட்டிக் கையால் அடித்தார். அவர் என்னை அடிக் கும்பொழு தெல்லாம் அவரைப் பிடித்துத் தள்ளிக்கொண் டிருந்தேன். நான் தள்ளும்பொழுது அவர் கீழே விழுந்து விழுந்து எழுந்து எழுந்து என்னை அடித்துக்கொண்டே யிருந்தார். நான் அடி பொறுக்கமுடியாமல் அவரைக் கடைசியாகப் பிடித்துத் தள்ளியதால், அவர் கீழே விழுந்து மூர்ச்சையானார். அவர் எழுந்துபோய்விடுவார் என்ற எண்ணத்தோடு அவரை விட்டுச் சென்று, நான் பட்ட அடி யால் எழுந்திருக்கமுடியாமல் படுக்கையிலிருந்தேன். நான் காநாள் போலீஸாரும் கிராம முனிசிப்பும் என் வீட்டிற்கு இரவில் வந்து என்னை அழைத்தார்கள். நான் வெளியில் வந்ததும் என்னைப் பிடித்துக்கொண்டு "நீ தியாகராஜபிள் ளையைக் கொன்றுவிட்டதால், உன்மேல் கொலைக்குற்றம் சுமத்தியிருக்கிறது" என்று என்னைச் சாவடிக்கு வர வேண்டுமென்று அழைத்தார்கள். "என்ன அநியாயம்? அப்பெண் மறைத்துப் பேசினதால் தியாகராஜ பிள்ளை என்னை அடிக்க நேர்ந்தது. அவரை அனேக முறை பிடித் துத் தள்ளியதால் ஈரற்குலையில் அடிபட்டு அவர் உயி

துறந்தார்போல் காணப்படுகிறது. இவ்வளவுக்கும் காரணம் நாம் தாசிவலையில் சிக்கி நம்முடைய மனைவியை கவனிக்காத குற்றமல்லவா" என்று மனதில் நினைத்து, மேல் வேஷ்டியை எடுத்துக்கொண்டு வருகிறேன் என்று வீட்டுக்குள் சென்று பெட்டியிலிருந்த ரூபாவை எடுத்துக் கொண்டு, பின்பக்கமாக ஓடி அன்றிரவெல்லாம் நடந்து, ரெயிலேறிச் சென்னைக்குப் போனேன். அங்கு ஒரு மூடுகுல்லாவும் அங்கியும் வாங்கிக்கொண்டு காசிக்குச் சென்று, அங்கு மற்ற விடங்களிலும் ஸாதுக்களுடைய துணையைப் பெற்று சன்னியாசியானேன். எனக்குத் தலையில் மயிர்வளர்ந்து ஜடைகளானபின் மூடு குல்லாவை எடுத்தெறிந்தேன். இனி என்னை ஒருவரும் கண்டு கொள்ள முடியாதென்று இப்பக்கம் வந்தேன். நீயும் என்னோடுவந்து சேர்ந்தாய்.

என்று சொல்லும் பொழுது படிக்கட்டேறி யாரோ வருகிற சத்தங்கேட்டு, பால்பழங் கொண்டுவருகிறார்களென்று மௌனமாயிருந்தார். வந்தவர்களில் ஒருவன் விரைவாய்ச் சென்று, மூடியிருந்த அறையின் கதவைத் திறந்து, "இதோ இருக்கிறான். நான் இவனைச் சேலத்திற்குப் போகும் மார்க்கத்திலுள்ள மஸ்காளிப்பட்டி சத்திரத்தில் பார்த்தேன்" என்று சாமியாரைக் காட்டினான். அவனோடு வந்த ஒருவன், "ஓய் மாமுண்டிபிள்ளை! எல்லாம் நீரே கைகொள்ளப் பார்க்கிறீரே! நான் இதுவரையில் உம்மோடு தேடித்திரிந்ததற்கு ஒன்றும் இல்லையா?" என்றான். மாமுண்டி பிள்ளை "ஓய்! ஒண்டியாபிள்ளை, நாம் இவனைக் குற்றவாளியென்று மெய்ப்பித்தபின் கிடைக்கும் ஐந்நூற்றில் உமக்கும் கொடுக்கிறேன்" என்றான்.

அவர்களோடு வந்த போலீஸ் உத்தியோகஸ்தர் "ஐயா! சாமியாரே! வெளியில் வாருங்கள். முன் உம்மைத் திருவளா சோலையில் பிடித்துக்கொண்டபொழுது ஓடிப்போனதுபோல்

இப்பொழுது ஓடிப்போக முடியுமென்று நினைக்கவேண்டாம் வாரும், வெளியில் வாரும்" என்று வெளியில் இழுத்துவந்தார்கள். சாமியாரோ டிருந்த அண்ணுமலே, சுவாமி! இப்படி பாவியால் உமக்கு எல்லா துக்கமும் வந்தது. என்னுலல்லவோ நீர் தியாகராஜ பிள்ளையைக் கொன்றதாகச் சொல்லியதைக் கேட்டுக்கொண்டிருந்து தங்களைப் பிடித்துக்கொண்டார்கள். தங்களுக்கு ஒன்று ஆனபின் நான் உயிரோடிருப்பேன் என்று நினைக்கவேண்டாம். நானும் தங்களோடு மாள்வேன்" என்ருன். போலீஸ் உத்தியோகஸ்தன், "இவன் என்னமோ சொல்லுகிருன். இவனையும் விடவேண்டாம். இவனையும் அழைத்து வாருங்கள். இந்த சாமியாரை தண்டிக்க இவர் சீடனுடைய சாக்ஷி அவசியம் வேண்டும்" என்ருன்.

சாமியாரையும் அவருடைய சீடனையும் பற்றிப் படிகட்டுக் கருகில் இழுத்துவந்தார்கள். மேல்வீட்டிலுள்ள சந்தடியால் திரிபுரஸுந்தரமும் விசாலாக்ஷியும் என்ன என்ன வென்று ஓடி வந்தார்கள். போலீசார் சாமியார் யாரென்று சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது, ஒருவர் ஓடிவந்து போலீஸ் சேவகன் பிடித்திருக்கும் சாமியாரைக் கட்டிபிடித்துக்கொண்டு, "தம்பி முருகேசம்! என்னுல் நீ என்னென்ன துன்பங்களை அனுபவித்தாய்? நான் முன் பின் யோசியாமல் என்னுடைய மனைவியின் நடத்தை கெட்டதென்று எண்ணி, அவளை அடித்து நீங்கினேன்" என்று முகத்தோடு முகம் வைத்துக்கொண்டு அழுதார். மாமுண்டியா பிள்ளையும் ஒண்டியா பிள்ளையும் "இதென்ன அதிசயம்? இறந்தார் என்ற தியாகராஜ பிள்ளை உயிரோடிருக்கிருர்" என்றவுடன், போலீஸார் சாமியார் கையைவிட்டு, "தியாகராஜ பிள்ளையை முருகேசம்பிள்ளை அடித்துக்கொன்றதற்கு ஸாக்ஷிகள் இருக்கிருர்களென்று சொன்னீர்களே" என்று மாமுண்டி பிள்ளையைப் பார்த்துக் கேட்டார். மாமுண்டி பிள்ளையும் ஒண்டியா பிள்ளையும் ஒன்றும் சொல்ல வகையற்று, "ஸர்க்காரிடத்திலிருந்து ஐந்நூறு ரூபா வெகுமதி கிடைக்குமென்றது இல்லா



அம்மா! இதில் ஒன்று என்னுடையது. மற்றது யாருடையதோ
எனக்குத் தெரியாது. (264-ம் பக்கம் பார்க்க).

மற்போனதே. பெருந்தொகையைச் செலவுசெய்து வீண் நஷ்டம் அடைந்தோம்" என்று மரம்போல் அசைவற்று நின்றார்கள். முருகேசம் பிள்ளையைப் பிடித்துக்கொண்டிருந்த தியாகராஜப் பிள்ளை, "தம்பி! நான் அடுத்த வீட்டிலிருந்து, நீ உன் சிடனிடத்தில் சொல்லிக்கொண்டிருந்ததை யெல்லாம் கேட்டிருந்தேன். உன்னையும், பதிவிரதா சிரோமணியாகிய என் மனைவியையும் இது காலம் வெறுத்ததோடு, என் பிள்ளைகளையும் மறந்திருந்தேனே! ஐயோ! நீ சொல்லியதை நம்பாமல் மோசம்போனேன். நான் என் மனைவியை விட்டுப் பிரிந்திருந்ததுபோல் உன்னையும் துறவியாக்கி ஊர்ஊராகத் திரியவிட்டதற்கு நானல்லவா காரணமாக இருந்தேன்? ஐயோ என் மனைவி தன் தாய் வீடே கதியாயிருக்கிறாளோ அல்லது மாண்டாளோ? தம்பி! உனக்கு என் மனைவி மக்களுடைய ஸமாசாரம் தெரியுமோ? தெரிந்தால் சொல்லுவாய், என் பிரிய சகோதரனே," என்று மார்போடணைத்துக்கொண்டு கேட்டார்.

**முருகேசம் பிள்ளை.**—அண்ணா! தாங்கள் இறந்தீர்களென்று கேள்விப்பட்டவுடன் இவ்வூரை விட்டுப் போனவன் இன்றே இவ்வூருக்குள் வந்தேன். அவர்களுடைய ஸமாசாரம் எனக்கு ஒன்றும் தெரியாது.

அத்தருணம் வெளியில் சென்றிருந்த முத்துவேலு பிள்ளையும் காமாக்ஷியம்மாளும் திரும்பி வீட்டுக்கு வரும்பொழுது, தாங்கள் குடியிருக்கும் வீட்டில் பெருங்கும்ப லிருப்பதைக் கண்டு பயந்து, என்ன என்னவென்று ஓடிவந்தார்கள். முத்துவேலு பிள்ளை மேல்மெத்தையி லேறிச்சென்று, அவ்விடத்தில் சாமியாரைக் கட்டிப் பிடித்துக்கொண்டிருப்பவர் யாரென்று தன் மனைவியை வினவி, அவள் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந்தார்.

**காமாக்ஷியம்மாள்.**—(கீழ் நின்றிருந்த விசாலாக்ஷியைப் பார்த்து) அதென்ன மேல்மெத்தையில் கூட்டம்.

**விசாலாக்ஷி.**—சேலத்தில் எங்கள் வீட்டிற்கு வந்திருந்த சாமியார் வந்திருக்கிறார். அவரைப் பார்க்க வந்திருக்கிறார்கள்.

தாங்கள் போன வேலை முடிந்ததா? தங்கள் குமாரனைப பார்த்தீர்களா?

**காமாக்ஷியம்மாள்.**—நாங்கள் போன வேலையும் முடியவில்லை. உன் அத்தானும் அகப்படவில்லை. ஆயினும் அவனை விரைவில் அழைத்துவருகிறேன்.

என்று விசாலாக்ஷியிடம் சொல்லித் தானும் சாமியாரைப் பார்த்து வரலாம் என்று காமாக்ஷியம்மாள் மேல்மெத்தைக்குச் சென்ருள்.

முருகேசம் பிள்ளையைப் பிடித்திருந்த தியாகராஜ பிள்ளை படிக்கட்டேறிவரும் பெண்பிள்ளையைப் பார்த்து, "ஆ! என் ஆருயிரே! நானிருக்கு மிடம் தேடியா வருகிருய்?" என்று காமாக்ஷியம்மாளைக் கட்டிப் பிடித்துக்கொண்டு "ஆ! என் கண்மணி! உன் நற்குணத்தை அறியாமல், உன்னை அடித்துப்போன கொலை பாதகனுகிய என்னை என்னென்ன சொல்லி நிந்தித்தாயோ? என்னென்ன சொல்லி வெறுத்தாயோ?" என்று கதறினர். காமாக்ஷியம்மாள், தன் நாயகன் உயிரோடிருக்கிருர் என்று அவரைப் பிடித்தணைத்துக்கொண்டு, ஆ! என் பிராண ஆதாரமே! நான் தங்களை நிந்தித்தேன் என்று சொல்லுவது அடுக்குமா? நான் என் வினையால் அனுபவிக்கவேண்டியதைத் தடுக்க யாரால் முடியும்? என்று ஆநந்தக்கண்ணீர் சொரிந்தாள்.

**தியாகராஜ பிள்ளை.**—(அவள் பிடித்திருந்ததை விடுவித்துக் கொண்டு) நம்முடைய சிறுவர்கள் எங்கே?

**காமாக்ஷியம்மாள்.**—ஐயோ! தாங்கள் என்னை வந்தடைந்த காலம் தங்களுடைய குழந்தைகள் உயிரோடிருக்கிருர்கள் என்று சொல்லும் நல்வினையைச் செய்யாமல் போனேன். ஆயினும், தங்களுடைய மூத்த குமாரன் தன் ஸமுஸாரத்துடன் க்ஷேமமாக இருக்கிருன் என்று சொல்லும் பாக்கியம் ஒன்றையே பெற்றேன் (என்று அழுதாள்).

அதைக் கேட்டவுடன் தியாகராஜ பிள்ளை கீழ் விழுந்து

மூர்ச்சையானார். உடனே முத்துவேலு பிள்ளை முருகேசம் பிள்ளை முதலானவர்கள் அவருக்கு உபசாரம் செய்தபின், அவர் மூர்ச்சை தெளிந்தெழுந்து உட்கார்ந்து, "அடா! என் செல்வமே! அடி என் கண்மணி! ஆ! ஞானசம்பந்தம், ஆ! ஆனந்தவல்லி, நீங்களிருவரும் இறந்தபின் நான் உயிரோடிருப்பது அழகா? ஐயோ! நான் என்ன செய்வேன்! கொடும் பாதகனைக் கொண்ட மனைவியின் கற்பைப் பழுதாக எண்ணிப்போன பாவி நான் இறக்குந்தனையும் துக்கமடையவோ எனக்கு வினையிருக்கிறது? ஐயோ! மக்களா! நீங்கள் எவ்விதம் மாண்டீர்களோ? உங்களைத் தகப்பனில்லாப் பிள்ளையென்றதைக் கேட்டு ஸகிக்காமலோ உயிர் துறந்தீர்கள்? உங்கள் அன்னையை நான் பாவி விட்டுவிட்டுப் போனபின் நீங்கள் இறந்தபொழுது உங்கள் அன்னை என்னென்ன சொல்லி அழுதாளோ? தன்மேல் குற்றமில்லையென் றறிந்த உங்கள் அன்னை நீங்கள் இறந்தால் தெய்வத்தை என்னென்ன சொல்லி நிந்தித்தழுதாளோ? நீங்கள் இறந்தபின் உங்கள் அன்னையை அவளைப் பெற்றோர்கள் கண்டு, புருஷனும் போனான் பிள்ளைகளும் போனதென்று எவ்விதம் கதறினார்களோ! ஆ! உங்கள் மரணத்தை அறியவா நான் இவ்விடம் வந்தேன்?" என்று கடகடவென்று புரண்டு புரண்டு அழுதார். அவ்விடத்தில் நின்றிருந்த யாவரும் தியாகராஜப்பிள்ளையின் துக்கம் மாற அனேகம் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

இந்த ஸமயத்தில் வாலிபனொருவன் வீட்டுக்குள் வந்து, கீழ்வீட்டில் நிற்கிற விசாலாக்ஷியைக் கட்டிப் பிடித்துக்கொண்டு முகமெல்லாம் முத்தங்கொடுத்து, "தங்காய்! உன்னை நெடுநாள் விட்டுப் பிரிந்திருந்ததால் நீ என்னை நினைத்து எந்நேரமும் அழுதுகொண்டிருந்தாயல்லவா என்றான்".

**விசாலாக்ஷி.**—தாங்கள் மதுரையில் எங்களைவிட்டுச் சொல்லாமற் போனபொழுது முதலில் துக்கப்பட்டேன். பின் ஆனந்தத்தோடிருந்தேன்.

**வடிவேலு.**—ஆனந்தத்தோடிருந்தாயா?

விசாலாக்ஷி.—ஆம் ! அத்தான்.

வடிவேலு.—அத்தானு ! நீ அவ்விதம் சொல்லலாமா ?

விசாலாக்ஷி.—அத்தான் என்று சொல்லாமல் மாமன் மகனை என்னவென்று சொல்லுவார்கள் !

வடிவேலு.—மாமன் மகனு ? யார் மாமன் மகன் ? அம்மா உனக்கு புத்தி மாறாட்டமாய் விட்டதோ என்று துக்கப்படுகிறேன்.

விசாலாக்ஷி.—எனக்கு புத்தி மாறாட்டமாக வில்லை. தாங்கள் எனக்குத் தமயனல்ல. தங்களுடைய பிறப்பு வெளிப்பட்டது. தாங்கள் என் தாயோடு பிறந்தவருடைய மகன். அவரும் அவர் மனைவியும் தங்களுடைய குழந்தைப் பருவத்தில் மரணமடைந்தார்கள். ஆனதால் தங்களை அத்தான் என்று அழைத்தது குற்றமோ (என்று கட்டிப்பிடித்துக்கொண்டாள்).

வடிவேலு.—விசாலாக்ஷி ! நீ சொல்லியது எனக்குப் பெரும் வியப்பைத் தருகிறது. இதுநாள் இவ்விரகசியத்தை அக்காளும் அப்பாவும் ஏன் மறைத்துவைத்திருந்தார்கள் ?

விசாலாக்ஷி.—தாங்கள் என் தந்தையை அப்பாவென்று சொல்லக்கூடாது. அப்பாவும் அக்காளும் வருகிறதற்கு முன் தங்களை ஒன்று கேட்கவேண்டும்.

வடிவேலு.—என்ன கேட்க வேண்டும் ?

விசாலாக்ஷி.—தாங்கள் என்னால் விவாகம் செய்துகொள்ள மாட்டேன் என்றீர்களே. இனிமேல் விவாகம் செய்துகொள்ளுவீர்களல்லவா ?

வடிவேலு.—(நகைத்து) ஆம், விவாகம் செய்துகொள்ளுவேன். நீயும் விவாகம் செய்துகொள்ளுவாயல்லவா ?

விசாலாக்ஷி.—தாங்கள் விவாகம் செய்துகொள்ளப்போகிறதால், நானும் விவாகம் செய்துகொள்ளுவேன்.

வடிவேலு.—நீ யாரை விவாகம் செய்துகொள்ளப்போகிறாய் ?

விசாலாக்ஷி.—தாங்கள் விவாகம் செய்துகொள்ளப் போகும்

பெண்ணின் புருடனையே நானும் விவாகம் செய்துகொள்ளு வேன் (என்று நகைத்தாள்).

வடிவேலு, அவளைப்பிடித் தணைத்துக்கொண்டு, "நீ என் மேல் வைத்திருக்கும் அன்பை நான் அறியாதவனல்ல" என்று சொல்லும்பொழுது, திரிபுரஸுந்தரம் நகைத்துக்கொண்டே வந்து, இருவரையும் தழுவிக்கொண்டு, "தம்பி! நீங்கள் இருவரும் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டுக்கொண்டிருந்தேன். உங்களுடைய இஷ்டப்பிரகாரம் முடியத் திருவருள் துணை செய்யவேண்டும்" என்று சொல்லி வீட்டுக்குள் சென்று, ஒரு செம்பில் ஜலம் மேல்மெத்தையில் கொண்டுபோய்க் கொடுத்துத் தன் நாயகனோடு அவர்களிருக்குமிடம் நின்றாள்.

**முத்துவேலு பிள்ளை.**—தம்பி வடிவேலு! நீ எங்களை மதுரையில் விட்டு என் தனித்து வந்தாய்? நீ கொடுத்த தந்தி பிரகாரம் நாங்கள் இவ்விடம் வந்த பின்னும், நீ இவ்வூரி லில்லாமல் எங்கு போயிருந்தாய்? (என்று கேட்டார்).

**வடிவேலு.**—நான் தங்களை விட்டுவந்த காரணத்தை அவகாசத்தில் சொல்லுகிறேன். உங்களை இங்கு வரச் சொல்லிய என்னை மீண்டும் வெளியில் போகும்படி செய்தது என்னிடத்திலிருக்கும் இந்தக் காப்பே (என்று முத்துவேலு பிள்ளையிடம் ஒரு காப்பை எடுத்துக்கொடுத்தான்).

**முத்துவேலு பிள்ளை.**—(தன் மனைவியை அழைத்து), இது நம் மிடத்திலிருந்த காப்பு அல்லவா?

**திரிபுரஸுந்தரம்.**—என்னிடத்திலிருக்கிற காப்பு என்னிடத்தி லிருக்கிறது. இதுவும் அதைப்போலவே யிருக்கிறது.

**முத்துவேலு பிள்ளை.**—அந்தக் காப்பைக் கொண்டுவா; பார்க்கலாம்.

அவள் உடனே காப்பைக் கொண்டுவந்து தன்னுடைய நாயகனிடம் கொடுத்தாள். அவர் அதை வடிவேலு கொண்டு வந்த காப்போடு வைத்துப்பார்த்து, இரண்டுக்கும் வித்தியாச மில்லாமல் இரண்டும் ஒருவன் கைவேலையைப்போல் இருப்ப

தைக் கண்டு, “ இந்தக் காப்பு உன்னிடத்தில் எப்படி வந்தது ?” என்று முத்துவேலு பிள்ளையும் அவர் மனைவியும் கேட்டார்கள்.

வடிவேலு.—இந்தக் காப்பைக் கொடுத்த பெண்பிள்ளையைத் தேடித் திரிந்தேன். அவள் அகப்படாமற் போனதால், அவள் வீட்டுக்கு வந்தவுடன் காலம் போக்காமல் இவ்விடம் வரவேண்டுமென்று சொல்லி வந்திருக்கிறேன்.

என்று சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது, ஒரு பெண் பிள்ளை வந்து, வடிவேலைப் பார்த்து “ அண்ணா ! தங்களை உடனே வந்து பார்க்கவேண்டுமென்று தாங்கள் சொல்லிவந்த பிரகாரம் வந்தேன். எதற்காகத் தாங்கள் விரைவில் வரும்படி சொன்னீர் கள் ?” என்று கேட்டாள். கேட்டதற்கு பதில் ஒன்றும் சொல்லா மல், “ இந்த அம்மாளே அந்தக் காப்பைக் கொடுத்தவர்கள் ” என்றான்.

திரிபுரஸுந்தரம்.—அம்மா ! நீ வடிவேலு இடத்தில் கொடுத்த காப்பு உனக்கு எப்படிக் கிடைத்தது (என்று அப்பெண் பிள்ளையைக் கேட்டாள்).

பெண்பிள்ளை.—அம்மா ! தாங்கள் கேட்பது வியப்பைத் தரு கிறது. என்னுடைய காப்பை (வடிவேலைக் காட்டி) இந்த அண்ணனுக்குக் கொடுத்தேயன்றி, நான் ஒருவர் வீட் டிலும்போய்த் திருடவில்லை (என்று கோபமாகச் சொன் னாள்).

திரிபுரஸுந்தரம்.—அம்மா ! கோபித்துக்கொள்ள வேண்டாம். என்னிடத்திலிருக்கும் மற்றொரு காப்போடு அதை வைத்துக் காட்டினால், உன்னுடைய காப்பு எதுவென்று காட்ட முடியுமா ?

பெண்பிள்ளை.—தாங்கள் ஆயிரம் காப்பில் அதை வைத்திருந் தாலும் என்னுடைய காப்பை எடுத்துக்கொள்ளுவேன். எனக்கு எவ்வளவோ கஷ்ட காலங்கள் வந்தபொழுதெல் லாம் அந்தக் காப்பை விற்காமல் என் தாயாரைப்போல் அதைப் பார்த்துக்கொண்டு வைத்திருக்கிறேன். அண்ண

னுக்கு என்னுடைய பையைக் கொடுக்கும்பொழுது, காப்பு அதிலிருக்கிறதென்ற நினைப்பில்லாமல் கொடுத்துவிட்டேன். அண்ணன் என்னைவிட்டு நீங்கியபின் காப்பின் ஞாபகம் வந்தாலும், நாம் திருச்சிராப்பள்ளியில் வாங்கிக் கொள்ளலாம் என்றிருந்தேன். அண்ணன் நானிருக்கும் இடத்திற்கு வந்து என்னை உடனே வரும்படி சொல்லி வந்ததால், இந்தக் காப்பு விஷயமாகவே வரச்சொல்லியிருப்பார்களென்று ஓடிவந்தேன். தாங்கள் சொல்லிய விதம் காப்பைக் காட்டுங்கள்.

திரிபுரஸுந்தரம் தன் நாயகன் மறைத்துவைத்திருந்த இரண்டு காப்பையும் வாங்கி பெண்பிள்ளையிடம் கொடுத்தாள். அவள் அதை வாங்கித் திருப்பித்திருப்பிப் பார்த்து, “ இதென்ன அதிசயம் ? என்னுடையது எது என்று எனக்குத் தெரியவில்லையே ” என்று பார்த்துக்கொண்டிருந்தாள்.

மேல்மெத்தையில் தியாகராஜ பிள்ளை அடிக்கடி மூர்ச்சையாய் எழுந்து தாகத்துக்கு வெந்நீர் வேண்டுமென்றதால், காமாக்ஷியம்மாள் தன்னருகில் நின்றிருந்த திரிபுரஸுந்தரம் அவ்விடம் இல்லாமையைக் கண்டு, தான் கொண்டுவருவதாகக் கீழிறங்கி வந்தாள். முத்துவேலு பிள்ளை படிக்கட்டிலிறங்கிவரும் காமாக்ஷியம்மாளை வடிவேலுக்குக் காட்டி “ தம்பி ! இந்த அம்மாளுடைய நாயகன் இறந்தாரென்பது அபத்தம். அவர் உயிரோடு வந்திருக்கிறார் ” என்றார்.

வடிவேலு.—(காமாக்ஷியம்மாளைப் பார்த்து) அம்மணி ! எனக்குத் தந்தையாக இருந்தவர் மாமனாகப் போனதால், எனக்கு வேறு தந்தை கிடைத்தது என்னை ஸந்தோஷத்தில் முழுகச்செய்தது.

வடிவேலு சொல்லியதைக் காமாக்ஷியம்மாள் கேட்டு நகைத்துக்கொண்டே, அங்கு புதிதாக வந்திருக்கும் பெண்பிள்ளையின் முகத்தையும் அவள் வைத்திருக்கும் காப்புகளையும் பார்த்து,

"இந்தக் காப்புகள் எங்கு கிடைத்தன ?" என வெடுக்கென்று பிடுங்கினாள்.

**பெண்பிள்ளை.**—(முகச்சுளிப்புடன்) அம்மா ! இதில் ஒன்று என்னுடையது. மற்றது யாருடையதோ எனக்குத் தெரியாது.

**வடிவேலு.**—அதில் ஒன்று என்னுடையது.

**காமாக்ஷியம்மாள்.**—உங்களுக்கு இதைப் போட்டவர் யார்? விலைக்கு வாங்கினீர்களோ ?

**வடிவேலு.**—அம்மா ! அந்த ஸமாசாரம் எனக்குத் தெரியாது.

**முத்துவேலு பிள்ளை.**—(காமாக்ஷியம்மாளை ஓர் பக்கம் அழைத்துப்போய்) இந்தக் காப்பைக் குறித்து ஏன் கேட்கிறீர்கள் ?

**காமாக்ஷியம்மாள்.**—ஐயா ! இந்தக் காப்பில் பெரிய ரகசியம் இருக்கிறது. ஒளிக்காமல் உண்மையைச்சொல்ல வேண்டுகிறேன்.

**முத்துவேலு பிள்ளை.**—அம்மா ! இந்தக் காப்பு வடிவேலுக்குச் சொந்தம். அவன் இந்தக் காப்போடும் காதில் நற்பச்சை மத்திக்கல் முருகோடும் எங்களுக்கு அகப்பட்டான்.

**காமாக்ஷியம்மாள்.**—(அந்தப் பெண்பிள்ளையை அழைத்து) அம்மா ! இந்தக் காப்பு உனக்கு எப்படிக் கிடைத்தது ?

**பெண்பிள்ளை.**—இந்தக் காப்பு என்னுடைய தாயார் எனக்கும் போட்டது. அதை என் தாயாரைப் பார்த்துக்கொண்டிருப்பதுபோல் வைத்திருக்கிறேன்.

**காமாக்ஷியம்மாள்.**—உன் தாயார் எங்கிருக்கிறார்கள் ?

**பெண்பிள்ளை.**—என் தாயார் உயிரோடில்லை. அவர்களை நான் அறியேன். எனக்கு வயது இரண்டு மூன்று இருக்கும் பொழுது இறந்து விட்டார்கள் என்று கேள்வி. என் பாட்டியாரே என்னை வளர்த்தார்கள்.

என்று சொன்னவுடன், காமாக்ஷியம்மாள் அப்பெண் பிள்ளையின் புறங்கழுத்தைப் பார்த்து, அங்கு ஓர் மச்சமிருக்கக்

கண்டு, தன் கண்களில் நீர் வடிய, வடிவேலையும் பெண்பிள்ளையையும் பிடித்து அணைத்துக்கொண்டு "ஆ! ஞானசம்பந்தம்! நீ என் மகனடா! ஆ! ஆனந்தவல்லி நீ என் மகளம்மா!" என்று சொல்லிக்கொண்டு அவர்களுடைய முகமெல்லாம் முத்தங்கொடுத்து, பின் ஞானசம்பந்தத்தைப் பார்த்து "அப்பா! இப்பாவி வயிற்றில் பிறந்து இப்புண்ணியர்களால் வளர்க்கப்பட்டாய். அம்மா! ஆனந்தவல்லி! உன்னை எந்தப் புண்ணியவான்கள் வளர்த்தார்களோ!" என்று ஆனந்தக்கண்ணீர் சொரிந்து, "அம்மா திரிபுரஸுந்தரம்! இந்தக் காப்புகளை என் நாயகர் தான் குறிப்பித்த விதமாதவும் எப்பொழுதும் போட்டுக்கொள்ளத்தக்க விதமாகவும் செய்யச் சொன்னார். நான் ஞானசம்பந்தத்துக்குச் சில ஸமயத்தில் போடுவதும் பின் எடுத்து விடுவதுமாக இருந்தேன். ஆனந்தவல்லிக்கு மூன்று வயது நடக்கும்பொழுது, ஞானசம்பந்தத்துக்குக் காப்புப்போட்டால், தனக்கும் போடச்சொல்லி அழுவாள், ஆனதால் அவளுக்கு வேறு காப்புச் செய்து போடுந்தனிலும் ஆளுக்கொன்று போட்டிருந்தேன். அப்படிப் போட்டிருந்ததே என் பிள்ளைகளைக் கண்டுகொள்ள இடங்கொடுத்தது" என்று சொல்லி, அவ்விருவரையும் மேல் மெத்தைக்கு அழைத்துப் போகும்பொழுது, யாவரும் ஆச்சரியத்தோடு பின் சென்றார்கள். காமாக்ஷியம்மாள், தன் நாயகன் தியாகராஜ பிள்ளையைப் பார்த்து, "தாங்கள் நம்முடைய சிறுவர்களுக்காக துக்கப்படவேண்டாம். அவர்கள் உயிரோடிருக்கிறார்கள். இவர்களே நம்முடைய பிள்ளைகள்" என்று அவருக்கு முன் விட்டாள்.

**தியாகராஜ பிள்ளை.**—"என்ன சொன்னாய்! என்ன சொன்னாய்! என் பிள்ளைகள் உயிரோடிருக்கிறார்களா? அவர்களா இவர்கள்?" என்றெழுந்து இருவரையும் கட்டிப் பிடித்து, "ஆ! ஞானசம்பந்தம்! ஆ! ஆனந்தவல்லி!" என்று இருவருக்கும் முகமெல்லாம் முத்தங்கொடுத்து, "என் துக்கம் நீங்கத் திருவருளே துணைசெய்தது" என்று ஆனந்தக்கண்ணீர் சொரிந்து, தன் மனைவியைப் பார்த்து

"இவர்கள் உயிரோடிருக்க ஏன் அவ்விதம் சொன்னுய்?" என்று கேட்டார்.

**காமாக்ஷியம்மாள்.**—"தாங்கள் என்னை விட்டு நீங்கியபின் நான் சுரத்தில் பீடிக்கப்பட்டு நெடுநாள் பிரக்ஞையற்றிருந்தேன். எனக்குப் பிரக்ஞை வந்தபின் மஹாமகத்துக்குப் போயிருந்த என் பாட்டியாரோடு இரு குழந்தைகளும் வாந்திபேதியால் இறந்துவிட்டார்களென்று துரைசாமி சொல்லியதை நம்பியிருந்தேன். இவ்விருவரும் சிறு வயதில் போட்டிருந்த காப்பால் இன்று உண்மை வெளி வந்தது" என்ருள்.

**திரிபுரஸுந்தரம்.**—(காக்ஷியம்மாளைப் பார்த்து) நீங்கள் மஹாமகத்துக்குப் போகாமல் குழந்தைகளைமட்டுமா அனுப்பினீர்கள்?

**காமாக்ஷியம்மாள்.**—ஐயோ! அம்மா! இவர்கள் விநாடியும் என் பாட்டியாரை விட்டிருக்கமாட்டார்கள். என் பாட்டியார் மஹாமகத்துக்குப் போய் வரவேண்டுமென்று சொன்னதால், தள்ளாத காலத்தில் அவர்கள் இஷ்டத்தைப் பூர்த்தி செய்யவேண்டுமென்று போகச்சொன்னேம். சிறுவர்கள் அந்தம்மாளை விட்டிருக்கமாட்டார்களே என்று நாங்கள் சொன்னபொழுது, தானழைத்துப்போவதாகச் சொன்னுர்கள். என் நாயகரும் துரைசாமியைத் துணைகூட்டி அனுப்பினுர்.

**முத்துவேலு பிள்ளை.**—தங்களுடைய குமாரனைக் கண்டு "உன் பேரென்ன?" என்று கேட்டபொழுது, 'தம்பி' என்ருன்.

**தியாகராஜ பிள்ளை.**—நாங்கள் யாவரும் ஞானசம்பந்தத்தைத் தம்பி யென்றே அழைத்துக்கொண்டிருந்தால், தன் பெயர் தம்பி என்று சொல்லியிருப்பான்.

**திரிபுரஸுந்தரம்.**—இன்று மாலை நம்முடைய வீட்டுப்பக்கம் சாமியார் வரவும், அவரை விசாலாக்ஷி கண்டு அழைக்கவும், எல்லா ஸங்கதியும் வெளியானது. அண்ணி! இனி தங்

களை அம்மா என்றழைக்காமல் அண்ணியென்றே அழைக்க வேண்டும். தங்களுடைய மகன் இதுநாள் எங்களுடைய மகனாக இருந்தான். இதுமுதல் அவனை எங்களுக்கு மருமகனாகவே கொள்ளப்போகிறோம்.

**காமாக்ஷியம்மாள்.**—தங்களுக்கு மகனாகவும் மருமகனாகவுமிருப்பான் (என்று திரிபுரஸுந்தரத்துக் கருகிலிருந்த விசாலாக்ஷியைப் பிடித்து அணைத்து முகமெல்லாம் முத்தங்கொடுத்து) என் கண்மணி! நீ அத்தையென்று அழைத்த சொல் நிலைத்து என்னை ஆனந்தக்கடலி லழுத்தியது (என்று சொல்லி, தன் மகள் ஆனந்தவல்லியைப் பார்த்து) அம்மா ஆனந்தவல்லி! உனக்கு விவாகம் முடிந்ததுபோ லிருக்கிறதே. நாங்கள் உயிரோடிருந்தும் உன் விவாகத்தைப் பார்க்க கொடுத்துவைக்கவில்லையே (என்று கண் கலங்கினாள்).

**ஆனந்தவல்லி.**—அம்மா! தாய் தந்தை அற்றவளா யிருந்தவளுக்குத் தாயும் தந்தையும் தமயனும் கிடைத்ததே என் தவப்பலன் (என்று தன் தமயன் கையைப் பிடித்துத் தன் முகத்தோடு சேர்த்துக்கொண்டு) தாங்களும் என் தந்தையும் என் விவாகத்தைப் பார்க்காமற்போனாலும், என் தமயனுடைய உத்தரவோடு நான் ஒருவரை மணம்புரிந்தேன்.

**காமாக்ஷியம்மாள்.**—(தன் மகன் ஞானசம்பந்தத்தைப் பார்த்து) அடா என் கண்மணி! நான் காவேரியாற்றக்கருகில் தடுக்கி விழுந்தபொழுதும், பின் என்னை துரைசாமி அடித்தபொழுதும், எனக்குத் துணையாக நின்று என்னைக் காப்பாற்றினாய்! பின் என்னைத் தாயாக மதித்து எனக்கு வேண்டியதெல்லாம் மகனைப்போலிருந்து செய்வேன் என்று வாக்களித்தாய். அடா என் கண்மணி! (என்று முகத்தோடு முகம் வைத்து ஆனந்தக்கண்ணீர் சொரிந்து) நீயா உன் தங்கைக்கு விவாகம் முடித்துவைத்தாய்?

**ஞானசம்பந்தம்.**—ஆம்! அம்மணி! ஆனந்தவல்லியும் எனக்கு.

உயிர்ப்பிச்சை கொடுத்தாள் (என்று தன் தங்கையின் கைகளைப் பிடித்துக் கண்களில் வைத்துக்கொண்டான்).

**தியாகராஜ பிள்ளை.**—தம்பி முருகேசம்! நீ வேசிவீடே கதி யென்றிருந்தமையால் நமக்கு நேரிட்ட கதியைப் பார்த்தாயா? இனியாகிலும் நன்னடக்கையோ டிருக்கவேண்டும்.

**முருகேசம் பிள்ளை.**—இனிமேல் என் மனைவியின் விருப்பத்தின் பிரகாரம் நடப்பதே என் விரதம் என்று நினைக்கிறேன் அண்ணா.

அந்த ஸமயத்தில் வண்டிக்காரனொருவன் மேல் மெத்தையில் வந்து, காமாக்ஷியம்மாள் இருக்கிறார்களா?" என்று கேட்டான்.

**காமாக்ஷியம்மாள்.**—ஏனப்பா என்னைத் தேடுகிறாய்?

**வண்டிக்காரன்.**—தங்களைப் பார்க்கவேண்டுமென்று சிலர் வந்திருக்கிறார்கள்.

காமாக்ஷியம்மாள், படிக்கட்டிறங்கி வீட்டுக்குள் வந்து, தன்னுடைய தாய் தந்தையும் இலக்கைய பிள்ளையும் அவர் மனைவி சுரும்பாயி அம்மாளும் நிற்கக்கண்டு, "ஆ! தங்காய்!" என்று அவளை ஒரு கையால் அணைத்துக்கொண்டு, மற்றொரு கையில் தன் தாயை அணைத்துக்கொண்டாள்.

**சுரும்பாயி யம்மாள்.**—அக்காள்! தங்களை துரைசாமி நடத்தியதை முற்றிலும் கேள்விப்பட்டோம். தாங்கள் தங்கள் தாய் வீட்டில் வந்திருக்க இஷ்டமில்லாமற் போனாலும் என்னோடு வந்திருக்கவேண்டும். நான் தங்களுக்குத் தங்கையல்லவா?

**காமாக்ஷியம்மாளின் தாய்.**—அம்மா! காமாக்ஷி! அப்படிபாவி வஞ்சித்தாலும், நாங்கள் உயிரோடிருக்கும்பொழுது உனக்கென்ன குறைவு? நீ மதுரைக்குச் சேலத்தாரோடு போயிருந்தவள் திண்டுகல்லுக்கு வாராமல் வந்துவிடலாமோ?

**சித்திவிநாயகம் பிள்ளை.**—அம்மா காமாக்ஷி! உன்னைவிட எங்

களுக்கு வேறு யாரிருக்கிறார்கள்? நீ ஏதோ மனதில் நினைத்து திண்டுகல்லுக்கு வராமற் போனாய்!

**இலக்கைய பிள்ளை.**—இனி வேறொன்றும் மறுத்துரைக்காமல் எங்களோடு வந்து உங்களுக்கு இஷ்டமான இடத்திலிருக் கலாம். வண்டியில் ஏறுங்கள்.

**சுரும்பாயி யம்மாள்.**—ஆம்! அக்காள்! நான் போய் சேலத் தம்மாளிடம் சொல்லிவிடுகிறேன். தாங்கள் வண்டியி லேறுங்கள்.

காமாக்ஷியம்மாள் நகைத்து, "நீங்கள் என் விஷயத்தில் காட்டும் பேரன்புக்கு என்ன கைம்மா றிருக்கிறது? நீங்கள் யாவ ரும் மேல்மெத்தைக்கு வாருங்கள். நாம் மற்றதைக் குறித்துப் பின் பேசலாம்" என்று அவர்களை மேல்மெத்தைக்கு அழைத்துப் போய், தன் தாய்தந்தைக்கும் சுரும்பாயி யம்மாளுக்கும் தியாக ராஜ பிள்ளையைக்காட்டி "அவர் யாரென்று பாருங்கள்!" என்றாள்.

அவர்கள் தியாகராஜ பிள்ளையைப் பார்த்து "எங்களுக் குத் தெரியவில்லையே" என்று சொல்லிக்கொண்டிருக்கும் பொழுது, தியாகராஜ பிள்ளை "என்னை மன்னியுங்கள்" என்று தன் மாமனார் மாமியார் காலில் விழுந்தார். சித்திவிநாயகம் பிள்ளை யும் அவர் மனைவியும் மலைத்து, "இவரார்?" என்று கேட் டார்கள்.

**காமாக்ஷியம்மாள்.**—(தன் தாய் தந்தையைப்பார்த்து), நான் படுந் துயரத்தைக் கண்டு, இறந்த என் நாயகன் திருவருளால் உயிர்பெற்று வந்திருக்கிறார். இறந்துபோன என் பிள்ளை களும் உயிரோடிருக்கிறார்கள் (என்று ஞானசம்பந்தத்தை யும் ஆனந்தவல்லியையும் காட்டினாள்).

அவர்களும் தங்கள் பாட்டன் பாட்டியாருக்குக் கீழ் விழுந்து நமஸ்காரம் செய்தார்கள். சித்திவிநாயகம் பிள்ளை அவர்களைத் தழுவிக்கொண்டு "அப்பா! எங்களுடைய அந்திய காலத்தில் உங்களையெல்லாம் உயிரோடு பார்க்கக் கொடுத்து

வைத்ததே எங்களுடைய தவப்பலன்" என்று ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். சுரும்பாயி யம்மாள் "ஆனந்தவல்லியைப் பிடித்துக்கொண்டு அம்மணி! நீ எங்கள் வீட்டில் வந்திருந்தபொழுது, நீ இன்னாள் என்று அறியாமற்போனது பெருங்குறைவே" என்று அணைத்துக்கொண்டு முகமெல்லாம் முத்தங்கொடுத்து, "அம்மா நீ அங்கயற்கண்ணியைப் பார்க்கவில்லையா? அவள் எங்கிருக்கிறாள் என்று எவ்விதம் அறிகிறது?" என்றாள். ஆனந்தவல்லி நகைத்துப் பேசாமலிருந்தாள்.

காமாக்ஷி யம்மாள்.—அம்மா சுரும்பாயி! அங்கு சாமியார் வேடத்தோ டிருப்பவர் யாரென்று பார். அவரே அங்கயற்கண்ணியின் கணவர்.

அண்ணாமலை.—(அருகிலிருந்த முருகேசம் பிள்ளையைப் பார்த்து) ஸ்வாமி! தாங்கள் இனி இவ்வேடத்தை நீக்கித் தங்களுடைய மனைவியைச் சேருகிறேன் என்று சொல்லுவதால், நான் இனி தங்களோடிருப்பது தங்களுக்குக் கஷ்டமாயிருக்குமென்று நினைக்கிறேன். எனக்கு உத்தரவு கொடுத்தால் தங்களுடைய மனைவியை அழைத்துவந்து விட்டுப் போகிறேன்" என்றான்.

முருகேசம் பிள்ளை.—அப்பா! நீ என்ன சொன்னாய்! அவள் எங்கிருக்கிறாள் என்று உனக்குத் தெரியுமா? அவள் திண்டுக்கல்லில் தன் தாய் வீட்டிலல்லவோ இருப்பாள்?

அண்ணாமலை.—ஸ்வாமி! அவள் அங்கில்லை, இவ்வூரிலேயே இருக்கிறாள்.

காமாக்ஷியம்மாளும், சுரும்பாயி யம்மாளும்.—(அண்ணாமலையைப் பார்த்து), அப்பா! அவள் இருப்பிடத்தைச் சொன்னால் நாங்களே போய் அவளை அழைத்துவருகிறோம்.

அண்ணாமலை.—அவள் இவ்வூரிலேயே இருக்கிறாள். நீங்கள் அவளைத் தேடிப்போக அவசியமில்லை. என் ஆசான் எனக்கு உத்தரவு கொடுப்பாரானால், நான் விநாடியில் அவளை அழைத்துவருகிறேன்.

மூருகேசம் பிள்ளை.—அப்பா ! அண்ணாமலை ! அவள் எங்கிருக்கிறாள் ? அதிக தூரத்தில் இருக்கிறாளோ ? அல்லது ஸமீபத்தில் இருக்கிறாளோ ? நீ என்னோடு எப்பொழுதும் இருக்கிறாயே ! நீ அவளிருக்கும் இடத்தை எவ்விதம் அறிந்தாய் ? (மற்றவர்களைப் பார்த்து) இவன் புத்திமாறாட்டத்தால் உளறுகிறான்போல் காணப்படுகிறது.

அண்ணாமலை.—ஸ்வாமி ! எனக்கு புத்தி மாறாட்டம் ஒன்றும் இல்லை. நான் தங்களை விட்டுப் பிரியாமலிருந்தாலும், எனக்கு அவளிருக்கும் இடம் தெரியும். அவள் ஸமீபத்திலேயே இருக்கிறாள்.

மூருகேசம் பிள்ளை.—ஸமீபத்தி லிருக்கிறாளா ? எங்கிருக்கிறாள்?

அண்ணாமலை.—ஸ்வாமி ! அவள் இவ்விடத்திலேயே இருக்கிறாள்.

அண்ணாமலை புத்திமாறாட்டத்தால் உளறுகிறான் என யாவரும் சொன்னார்கள்.

அண்ணாமலை, "எனக்கு புத்தி ஸ்வாதீனத்திலேயே இருக்கிறது. அவளைக் காட்டுகிறேன் பாருங்கள்" என்று தான் போட்டிருந்த காது குல்லாவையும் நீண்ட அங்கியையும் எடுத்தெறிந்த அளவில், யாவரும் அதிசயப்பட்டு மலைத்துப்போனார்கள்.

மூருகேசம் பிள்ளை.—(கட்டிப் பிடித்துக்கொண்டு), ஆ ! அங்கயற்கண்ணி ! நீயா எனக்குச் சேடிகை இதுநாள் இருந்தாய் ? ஆ ! என் கண்மணி ! எனக்குச் சேடிகை இருந்து எனக்கு வேண்டியதைச் செய்து கொண்டிருந்ததோடு, எனக்குக் காலாகாலத்தில் உணவு ஊட்டிக்கொண்டிருந்தாயே ! உனக்கு வேண்டிய செல்வம் இருக்க அதனால் நீ ஸுகத்தோடிருக்காமல் கல்லிலும் காட்டிலும் தரையிலும் படுத்துறங்கும் வினையா உனக்கும் இருந்தது ! புருடன் கொலைசெய்து கோலம் மாறித் திரிபவனைக் கண்டுபிடித்து

அவனுக்குத் தொண்டு செய்தது என்ன அநியாயம்?' (என்று கதறினார்).

காமாக்ஷியம்மாளும் சுரும்பாயி யம்மாளும் அங்கயற்கண்ணியைக் கட்டிப் பிடித்துக்கொண்டு, "தங்காய்! தங்காய்! நீ இக்கோலத்தோ டிருப்பதை நாங்கள் கண்டுகொள்ளவில்லையே. உன் தாய் தந்தைகள் உன்னைக் கேவலமாக மதித்திருந்தவர்கள் இப்பொழுது எவ்வளவு ஸந்தோஷம் அடைவார்கள்?" என்று புகழ்ந்தார்கள். "உருமாறித் திரியும் உன் நாயகனைக் கண்டு பிடிக்க நீயும் உருமாறி அவரைக் கண்டுபிடித்து அவருக்குச் சேடகை இருந்து அவருக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்த உத்தமியாகிய உன்னை என்னவென்று புகழ்வது? உனக்கு நாளாயணியும் நிகரல்லவே" என்று துதித்தார்கள்.

திரிபுரஸுந்தரம்.—இன்று சாமியாரை வீட்டுக்குள் அழைத்து வந்தது நல்ல நேரம். அவர் வீட்டுக்குள் வந்தவுடன் துக்கமாக இருந்தாலும் பின், யாவரும் அதிக ஸந்தோஷமடைய நேரிட்டது.

என்று சொல்லிக்கொண் டிருக்கும் பொழுது, போலீஸ் பெரிய உத்தியோகஸ்தர் வீட்டுக்கு வந்து போலீஸ் சேவகர்களால் உண்மை யறிந்து, சேவகர்களை அனுப்பி மேல்மெத்தைக்கு வந்து, ஞானசம்பந்தத்தைப் பிடித்து அணைத்துக்கொண்டு, "தம்பி! உனக்குத் தந்தையும் தாயும் கிடைத்ததைக் குறித்து அதிக ஸந்தோஷப்படுகிறேன். நான் உமக்குக் கொடுத்த கடிதத்தைத் திருசெங்கோட்டிலிருக்கும் போலீஸ் ஹெட்கான்ஸ்டெபில் பார்த்து அப்பெண் விரும்பிய வண்ணம் செய்ததைக்கேட்டு ஸந்தோஷ மடைந்தேன். என்றால் இன்னம் உமக்கு வேண்டிய உதவியைச் செய்ய சித்தமாயிருக்கிறேன். என்னுடைய உயிர் உனக்குச் சொந்தமல்லவோ?" என்று ஸந்தோஷம் கொண்டாடி, பின் வந்து பார்ப்பதாகச் சொல்லிச் சென்றார்.

தியாகராஜ பிள்ளை.—(தன் மனைவியைப் பார்த்து), காமாக்ஷி! நான் இருபதுகாணி நிலம் உனக்குச் சொந்தமாக வாங்கி

உன் பேருக்கு வைத்திருந்தேனே. அந்த நிலங்கள் உன் வசமிருந்தால் நீ இக்கோலத்தோடிருக்க நியாயமில்லையே ! நீ துரைசாமியோடிராமல் இங்கிருப்பதின் காரணமும் தெரியவில்லையே.

காமாக்ஷியம்மாள், தனக்கு நேரிட்டது யாவும் சொன்னதோடு, ஞானசம்பந்தத்தைக் கண்டது முதல் ஒன்றும் விடாமல் சொல்லிமுடித்தாள்.

**தியாகராஜ பிள்ளை.**—(*அதிகம் துக்கப்பட்டு*), *துரைசாமியின் மேல் எனக்கு நல்ல அபிப்பிராயம் இருந்ததேயாயினும், நாம் செய்யவேண்டியதைக் கிரமப்பிரகாரம் செய்ய வேண்டுமென்று, அவன்பேரில் நிலம் வாங்கி வைத்திருந்த தோடு, உன் பேருக்கும் வாங்கி வைத்திருந்தேன். ஆனால் அதை உனக்குச் சொல்லாமலிருந்தேன். துரைசாமி தன் பேரி லுள்ளதோடு உன் பேரில் உள்ளதையும் கைப்பற்றிக்கொண்டான். இனிமேல் நம்முடைய ஸம்ரக்ஷணைக்கு என்ன செய்யப்போகிறோம் ?*

**சித்திவிநாயகம் பிள்ளை.**—(*தன் மருமகனைப் பார்த்து*), *அப்பா ! நீ அது விஷயத்தில் கவலைகொள்ளவேண்டாம். நீங்கள் யாவரும் திண்டுக்கல்லுக்கு வந்து என்னோடிருந்து நான் குடிக்கும் கூழைக் குடித்துக்கொண்டிருக்கலாம் (என்று தைரியம் சொன்னார்).*

**காமாக்ஷியம்மாள்.**—(*தன் நாயகனைப் பார்த்து*) *தாங்கள் இது விஷயத்திற்காகக் கவலைகொள்ளலாமா ? நான் என்னாலியன்ற பாடுபட்டுத் தங்களைப் பாதுகாத்துக்கொள்ளுவேன்.*

**ஞானசம்பந்தம்.**—*தந்தையே ! பெற்றோரைக் காப்பாற்றவேண்டியதே பிள்ளையுடைய கடமையா யிருப்பதால், தாங்கள் அது விஷயத்தில் கவலைகொள்ளவேண்டாம்.*

**தியாகராஜ பிள்ளை.**—*அப்பா ! ஞானசம்பந்தம் ! நீ சொல்லு*

வதுபோல் உன் தமயனும் சொல்லுவானாதலால், நாம் கவலை கொள்ள அவசியமில்லை.

இவ்விதம் பல வேறு ஸங்கதிகள் பேசியிருந்து காலம் போக்கினார்கள். மறுநாள் யாவரும் காலையில் காப்பி சாப்பிட்ட பின், தியாகராஜ பிள்ளை, முத்துவேலு பிள்ளையை துரை சாமி இருக்கும் வீட்டுக்கு அழைத்துச் சென்றார். அந்த ஸமயத் தில் போஜனம் உண்டிருந்த துரைசாமி அவர்களை "யாரையா நீங்கள்?" என்று கேட்டான்.

**முத்துவேலு பிள்ளை.**—தம்பி துரைசாமி! என்னோடிருப்பவர் இன்னாரென்று உமக்குத் தெரியவில்லையா?

**துரைசாமி.**—(தியாகராஜ பிள்ளையைப் பார்த்து), எனக்குத் தெரியவில்லையே (என்று கவனித்துப் பார்த்து), இறந்து போன என் தந்தையா உயிர் பெற்று வந்திருக்கிறார்? (என் றெழுந்துவந்து, அவர் இருக்கும் ஈனஸ்திதியைப் பார்த்து அருவருப்படைந்து) உட்காருங்கள் (என்றான்).

**தியாகராஜ பிள்ளை.**—நான் உன் சிறிய தாயாரை அநியாய மாக வெறுத்துப் போனபின், அதிக கஷ்டப்பட்டு, சமயல் வேலை செய்து என் காலத்தைக் கழித்தேன். முடிவாக நான் சம்பளமாகப் பெற்றதைச் சேர்த்து ஐம்பது ரூபா வைத்திருந்தேன். நான் ஊருக்குப் பிரயாணப்பட உத் தேசித்திருந்த பொழுது எனக்கு நோய் கண்டதால், என் னிடத்திலிருந்த பொருளை யெல்லாம் வைத்தியனுக்குக் கொடுத்துவிட்டேன். கையில் ஓர் காசு மில்லாமல், யாசகம் செய்தாவது ஊருக்குப் போனால் ஸௌகரியமாக இருக் கலாம் என்று என் எண்ணத்தைப் பூர்த்தியாக்கி இங்கே வந்தேன்.

**துரைசாமி.**—தாங்கள் தங்கள் மனைவியைக் கண்டீர்களல்லவா?

**தியாகராஜ பிள்ளை.**—ஆம்! அவளைப் பார்த்தேன். அவள் இவர் கள் வீட்டில் இருக்கிறாள். ஞானசம்பந்தமும் ஆனந்தவல்லி யும் இறந்தார்களென்று சொல்லி துக்கப்பட்டாள். அவர்

கள் எவ்விதம் இறந்தார்களென்று கேட்டதற்கு, உன்னைக் கேட்டால் தெளிவாய் விளங்கும் என்றாள்.

**துரைசாமி.**—அந்த துன்மார்க்கிக்குப் பிள்ளைகளும் இருக்குமா! அவளுடைய துர்நடத்தையே அப்பிள்ளைகளைக் கொன்று விட்டது. அவளைக் குறித்து என்னிடத்தில் ஒன்றும் சொல்லவேண்டாம்.

**தியாகராஜ பிள்ளை.**—நான் இவ்வூரி லில்லாததால் அவளுடைய நடத்தை தெரியாது. நீ அறிந்திருப்பதால் இனி அவளை இங்கு வைத்திராமல் தாய்வீடு போகச்சொல்வதே உத்தமம். ஆனால், அவளுடைய ஜீவனும்சைக்கு நாம் ஏதாகிலும் கொடுத்தனுப்பிவிட்டால், உலகம் நம்மை நிந்திக்காதென்று நினைக்கிறேன்.

**துரைசாமி.**—ஐயா! தாங்கள் இது நாள் போயிருந்து தேடிவந்ததைத் தங்களுடைய பிரிய மனைவிக்குக் கொடுத்தனுப்புங்கள். அதைக் குறித்து என்னிடம் சொல்ல அவசியமில்லை.

**தியாகராஜ பிள்ளை.**—நான் பொருள்தேடி வந்திருந்தால் கொடுத்திருக்கலாம். நான் ஓட்டாண்டியாக வந்திருப்பதால், உன்னைக் கேட்கவேண்டியதா யிருக்கிறது. நான் அவள் பேருக்கு இருபது காணி நிலமும் உன் பேருக்கு இருபது காணி நிலமும் வாங்கி வைத்திருந்தேன். அதில் அவள் பேருக்குள்ள நிலத்தை அடைமானம் வைத்திருப்பதாகச் சொல்லுகிறாள். அதை நீ மீட்டுக் கொடுத்துவிட்டால், அவளை இப்பொழுதே அவள் தாய் வீட்டுக்கு அனுப்பிவிட்டு நான் சாகும்பரியந்தம் உன்னோடு வந்திருக்கிறேன்.

**துரைசாமி.**—ஐயா! என்ன சொன்னீர்! என் பேருக்கு இருபது காணி நிலத்தை வைத்திருந்ததை மட்டும் சொன்னீரே யன்றி அதன்மேலிருந்த கடனை நினைக்கவில்லையே! தாங்கள் கடன் ஒன்றுமில்லாமல் தங்களுடைய மனைவிக்கல்லவோ வைத்திருந்தீர்கள். அந்த துன்மார்க்கியும் நான் சொல்வதைக்

கிஞ்சித்தும் கவனிக்காமல் அதை ஈடுவைத்துப் பணத்தை வீணுகக் கண்டவர்களுக்கெல்லாம் கொட்டுவதைக் கண்டு, “இவ்விதம் செய்யலாமா?” என்றதற்கு “என் பொருளை நான் செலவழிக்கிறேன். நீ யார் கேட்பது?” என்று கோபித்துச் சென்றவள், என்மேல் பழி போட்டுவிட்டாள். நான் அவளுக்குச் சொந்தமானதைக் கேட்டாலும் கொடுப்பாளா? இது தங்களுக்குத் தெரியாமற்போனது அதிசயம்!

**தியாகராஜ பிள்ளை.**—நான் உனக்குக் கடன் வைத்துப் போனேன் என்கிருயே! நான் உன்பேரிலிருக்கும் நிலத்தை அடைமானம் வைத்துப் போனதுபோல் சொல்லுகிருயே!

**துரைசாமி.**—நீங்கள் என்னுடைய நிலத்தை அடைமானம் வைக்காமற் போனுலும், தாங்கள் பட்ட கடனை நான் கொடுக்க வேண்டியதில்லையா?

**தியாகராஜ பிள்ளை.**—நான் ஒருவருக்கும் ஒரு காசுகூட கொடுக்க வேண்டியதில்லையே!

**துரைசாமி.**—தாங்கள் கொடுக்க வேண்டுமென்று தங்களுடைய கையெழுத்தைக் கொண்ட பத்திரங்களைக் கொண்டுவந்து காட்டினுல், நான் என்ன செய்கிறது? நான் அவைகளுக்கு என்பேரிலிருந்த நிலத்தை விற்றுக் கடன் கொடுத்துக்கொண்டே வந்தேன்.

**தியாகராஜ பிள்ளை.**—சிலவேளை தப்புக் கையெழுத்து செய்து கொண்டுவந்து கேட்டிருந்தார்களோ என்னமோ!

**துரைசாமி.**—தப்புக் கையெழுத்தென்று நான் எவ்விதம் கண்டு கொள்ள முடியும்? தாங்கள் இல்லாமற் போனதால், தப்புக் கையெழுத்து செய்கிறவர்களுக் கெல்லாம் அனுகூலமாக முடிந்தது.

**தியாகராஜ பிள்ளை.**—அந்தப் பத்திரங்களை யெல்லாம் வைத்திருக்கிரு யல்லவா?

**துரைசாமி.**—இறந்தவர் உயிரோடு வருவார் என்று எண்ணியிருந்தால் நான் அவைகளை பதனமாக வைத்திருப்பேன்

நான் அவ்விதம் நினையாமற் போனதால், அப்பொழு தப்பொழுது பணத்தைக் கொடுத்து அவைகளைக் கிழித் தெறிந்தேன்.

**தியாகராஜ பிள்ளை.**—தம்பி! நடந்துபோனதைக் குறித்துப் பேசுவதில் பலன் ஒன்றுமில்லை. அவளுடைய புத்தியினைத் தால் நிலத்தைத் தோற்றாள். என்னுடைய பேர் கெடாமல் நான் பட்ட கடனென்று சொன்னவர்களுக்கெல்லாம் பண த்தைக் கொடுத்து என்னை மேன்மையாக்கினாய். நான் இதைக் கேட்டு ஸந்தோஷ மடைந்தேன். அதுபோலவே, இப்பொழுதும் உன் சிறிய தாயாருடைய மோராமலையை யாவது கொடுத்தால், அவளை அவள் தாயார் வீட்டுக்கு அனுப்பிவிடுகிறேன்.

**துரைசாமி.**—மோராமாலையையும் மற்ற நகைகளையும் தங்க ளுடைய மனைவி வைத்திருக்கிறாளென்றோ நினைக்கிறீர் கள்? எல்லா நகைகளையும் முதலில் விற்றுப் பின் நிலத்தை அடைமானம் வைத்தாள்.

**தியாகராஜ பிள்ளை.**—(தன்னோடிருந்த முத்துவேலு பிள்ளை யைப் பார்த்து), ஐயா! நான் காமாக்ஷியின் வார்த்தையைக் கேட்டு அவள் சொல்வதை யெல்லாம் நம்பியிருந்தேன். இப்பொழுது என் பிரிய குமாரன் சொல்வதைக் கேட்ட பின், அந்த துன்மார்க்கியின் நடத்தை இன்னதென்று தெ ளிவாய் விளங்கியது. அவளை இனிமேல் பார்க்க இஷ்டம் இல்லை. நான் என் மகனிடத்தில் ஐந்து ரூபா வாங்கிக் கொடுக்கிறேன். தாங்கள் அதை அவளிடத்தில் கொடுத்து அவள் தாய் வீட்டுக்கு அனுப்பிவிடுங்கள். நான் இனி அங்கு வருவதில் பிரயோசன மில்லை. (என்று துரைசாமியைப் பார்த்து) அப்பா! ஐந்து ரூபா கொண்டுவந்து கொடுத்து விடு (என்றார்).

**துரைசாமி.**—தாங்கள் வெகு தாராளமாகப் பெட்டியில் வைத் திருப்பதுபோல் ஐந்து ரூபா கொண்டுவந்து கொடுக்கச்

சொன்னீர்கள். என்னிடத்தில் ஒரு காசும் இல்லை. இருந் தாலும் அவனுக்குக் கொடுக்கமாட்டேன்.

**தியாகராஜ பிள்ளை.**—ஐயா! முத்துவேலு பிள்ளை! எவ்வளவு கொடுமையைச் செய்திருந்தால், என் பிரிய மகனுக்கு இவ் வளவு கோபம் வரும்? நான் அதை யோசியாமலே அந்த துன்மார்க்கிக்குப் பணங் கொடுத்தனுப்ப யோசித்தேன். தாங்கள் சென்று அவளை அனுப்பிவிடுங்கள்.

**முத்துவேலு பிள்ளை.**—தங்களுடைய இஷ்டம்போல் தங்க ளுடைய மனைவியை அனுப்பிவிடுகிறேன் (என்றெழுந் தார்).

**துரைசாமி.**—ஐயா! தங்களுடைய மனைவியைத் தனித்தனுப்பு வது அழகல்ல. தாங்களும் மனைவியை விட்டு என்னோ டிருப்பதும் அழகல்ல. தாங்கள் தங்களுடைய மனைவி யோடு போயிருப்பதே உத்தமம்.

**தியாகராஜ பிள்ளை.**—உன்னுடைய இஷ்டத்துக்கு விரோதம் சொல்ல இஷ்டமில்லை. நான் அவளைக் கொண்டுபோய் விட்டுச் சிலநாள் அங்கிருந்து, பின் இங்கு மங்குமாக இருக் கிறேன். ஏதாகிலும் செலவுக்குக் கொடுத்தால் போய் வருகிறேன்.

**துரைசாமி.**—ஐயா! என்னிடத்தில் தற்காலம் ஒரு காசுகூட இல்லை.

**தியாகராஜ பிள்ளை.**—தற்காலம் இல்லாமற்போனல் இரண் டொரு நாள் பொறுத்தாவது கொடு. அதுபரியந்தம் உன் னோ டிருக்கிறேன்.

**பார்வதி.**—(இந்த ஸமயத்தில் வீட்டுக்குள்ளிருந்து வெளியில் வந்து) ஆரடி இந்தக் கிழவன் விடமாட்டேன் என்று உள றிக்கொண்டிருக்கிறன்! உனக்கு அவித்துக் கொட்டிக் கொண்டிருக்க இங்கு ஆளில்லை. உனக்குக் கொடுக்க ரூபா வும் இல்லை. நீ இங்கு மங்குமாய் இருப்பதை விட்டு அங் கேயே இருக்கலாம், போய்வா. அவர் வெளியில் போக

வேண்டியவரைத் தடைப் படுத்திக்கொண் டிருக்கிருய் (என்று கடுகடுத்துச் சொன்னுள்).

**தியாகராஜ பிள்ளை.**—அம்மா! மருமகளே! என் மகனுடைய சம்பாதனையில் அற்பமேனும் நான் அனுபவிக்கக்கூடாதா? என்னைப் போவென்று சொல்லுகிருயே. இது உனக்கு தருமந்தானு?

**பார்வதி.**—மருமகளென்று முறைகொண்டாடும் முகத்தைப் பாருங்கள். (என்று தன் முகத்தை ஏளனமாகத் திருப்பிக் காட்டி) உன்னுடைய ஆஸ்தியை எவளுக்கு வைத்துப் போனுயோ, அவளிடத்திற்குப் போ! எங்களுக்கு வைத்த நிலத்தின் விலையைவிட அதிக கடனை வைத்துப்போனுய். நாங்கள் என் உனக்குப் போடவேண்டும்? நீ இப்பொழுது கொண்டுவந்திருக்கும் ஆஸ்தியை எங்களுக்கு கொடுக்க வேண்டாம். நாங்களும் உனக்குக் கொடுக்கவேண்டிய தில்லை. போ! போ!

**தியாகராஜ பிள்ளை.**—அப்பா! துரைசாமி! நான் கஷ்டப்பட்டுச் சாப்பிட முடியவில்லையென்று உன்னை நம்பி வந்திருக்க, என்னை நீயும் உன் மனைவியும் போகச் சொல்லுகிறீர்களே. என்கையி லொன்றுமில்லை யென்றல்லவா என்னைப் போகச் சொல்லுகிறீர்கள். நானும் பத்துப் பணத்துடன் வந்திருந்தால், இவ்விதம் சொல்லுவீர்களா? பிள்ளை வேண்டுமென்று தவம் செய்வது இதற்குத் தானு? தன்னுடைய பிள்ளை தள்ளாமையில் உதவுவான் என்றல்லவா? என்னை இக்காலத்தில் காப்பாற்றுமல்போனுல், நான் யாரைப்போய் அணுகுவேன்? உன் மனைவி சொல்வதைக் கேட்டு மௌனமாயிருப்பது அழகா? ஒருநாள் சாப்பாடாவது உன் வீட்டில் சாப்பிட எனக்கு ஸ்வதந்தரம் இல்லாமலா போய்விட்டது? உன்னுடைய தாயார் உயிரோடிருந்தால் இவ்விதம் சொல்லுவாயா? யோசித்துப் பார்த்து எனக்கு ஏதாகிலும் செலவுக்குக் கொடு (என்று கெஞ்சினுர்).

**துரைசாமி.**—ஐயா ! என் மனைவி நியாயமாகப் பேசுவதால் நான் என்ன செய்யவேண்டும் ? நீர் எதாகிலும் கொண்டுவந்திருந் தால் உம்முடைய மனைவிக்குக் கொடுப்பீரே யன்றி எனக் குக் கொடுக்கமாட்டீர். ஆனதால் உம்முடைய ஆஸ்தி எங்களுக்கு வேண்டாம். எங்களுடைய பொருளையும் உமக்குக் கொடுக்கமாட்டோம் என்று என் மனைவி சொல்லி யது நியாயமே! நானும் அவ்விதமே சொல்லுகிறேன். என் தாயார் உயிரோடிருந்தால், உம்முடைய சொத்தெல் லாம் என் தாயாரைச் சேரும். அப்பொழுது உம்மைக் காப் பாற்ற வேண்டியதே முறைமை. உமக்கு வேறு மனைவி வந்த பின் உம்முடைய ஆசை யன்பு அவளிடம் இருக்குமல் லாது என்மே லிருக்குமா ? போம்! போம்! நான் வெளியில் போகவேண்டும் (என்று எழுந்தான்).

துரைசாமி சொல்வதையெல்லாம் கேட்டிருந்த முத்து வேலுபிள்ளை எழுந்து, "ஐயா ! இனிமேல் நாம் இங்கிருப்பதில் பிரயோசனம் இல்லை" என்று தியாகராஜ பிள்ளையை அழைத் துக்கொண்டு வெளியில் வந்தபொழுது, ஒரு சிறுவன் துணி யில் மூடிவைத்திருந்த தொன்றைத் தியாகராஜ பிள்ளையிடம் கொடுத்து, "இதைக் கொண்டுபோய் ஆயாளும் தாங்களும் எடுத் துக்கொள்ளுங்கள்" என்றான்.

**தியாகராஜ பிள்ளை.**—(ஆச்சரியப்பட்டு, முகச்சாயலால் அவன் தன் பேரன் என நிதானித்து) இதில் என்ன இருக் கிறது ? தம்பி ! உன் பெயர் என்ன ?

**சிறுவன்.**—என் பெயர் சிவகுரு. இந்த உண்டிப்பெட்டியில் காசு போட்டு வைத்திருக்கிறேன்.

**தியாகராஜ பிள்ளை.**—இதில் எவ்வளவு காசு இருக்கும் !

**சிவகுரு.**—நிரம்பக் காசு போட்டு வைத்திருக்கிறேன். ஆயாள் கொடுத்ததெல்லாம் இதிலேயே இருக்கிறது.

**தியாகராஜ பிள்ளை.**—நீ இந்த உண்டிப் பெட்டியை எனக்கு என் கொடுக்கவந்தாய் ?

சிவகுரு.—தாங்கள் அப்பாவை ரூபா கேட்டீர்களே! அவர் கொடுக்கமாட்டேன் என்று சொன்னதால், என்னிடத்தி லிருந்த உண்டிப்பெட்டியைக் கொண்டுவந்தேன்.

தியாகராஜ பிள்ளை.—நீ எனக்கு இதைக் கொடுத்துவிட்டால், அப்பா அம்மா உன்னை அடிக்கமாட்டார்களா?

சிவகுரு.—நான் கொண்டுவந்ததை அவர்கள் பார்க்கவில்லை.

முத்துவேலு பிள்ளை.—தம்பி! இப்பொழுது பார்க்காமற் போனல், பின் உன் உண்டிப்பெட்டி எங்கே என்று கேட் பார்களே! அப்பொழுது என்ன சொல்லுவாய்?

சிவகுரு.—ஆயாளுக்குக் கொடுக்க நான் தாதா இடத்தில் கொடுத்துவிட்டேன் என்று சொல்லிவிடுவேன்.

தியாகராஜ பிள்ளை.—உன்னை அடிக்கமாட்டார்களா? என்று கேட்டதற்கு அவன் பதில் சொல்லாமல் விழித்தான்.

தியாகராஜ பிள்ளை.—அப்பா! உண்டிப்பெட்டியைக் கொடுத்து விட்டால் உன்னை அடிப்பார்கள். நான் உன் ஆயாளிடத் தில் நீ சொல்லியதெல்லாம் சொல்லுவேன். என்று உண் டிப்பெட்டியை சிவகுரு இடத்தில் கொடுத்து "வீட்டுக்குள் போ" என்றார்.

சிவகுரு.—என்னை ஆயாளிடத்தில் கொண்டுபோய் விட்டுவிடுங் கள் (என்று முகவாட்டத்தோடு கெஞ்சினன்).

தியாகராஜ பிள்ளை.—நான் போய் உன் ஆயாளை அனுப்பு கிறேன் (என்று முத்தங்கொடுத்து அவனை வீட்டுக்குள் அனுப்பிவிட்டார்).

தியாகராஜ பிள்ளையைக் கட்டாயப்படுத்தி அழைத்துக் கொண்டு வரும் மார்க்கத்தில், தியாகராஜ பிள்ளை தன் கண்ணை அடிக்கடி துடைத்துக்கொண்டு, "ஐயாவே! நான் துரை சாமியை அதிகம் நம்பி வந்தேன். என்னை இவ்விதம் நடத்துவானென்று நான் நினைக்கவில்லையே! அவன் மகன் சிறு குழந்தையாக இருந்தும், உண்டிப் பெட்டியைக் கொண்டு

வந்து கொடுத்தானே! அவ்வளவு தயாள குணம் துரை சாமியிடத்தில் இல்லையே! நாற்பது காணி நிலத்தைக்கொண்டு என்னை கவனியாமல் விட்டுவிட்டான்! இனி என் காலத்தை எவ்விதம் கழிக்கப்போகிறேன்!" என்று துக்கப்பட்டார்.

**முத்துவேலு பிள்ளை.**—ஐயா! தாங்கள் துக்கப்படுவதில் பிரயோசனம் இல்லை. முதல் தாரத்திற்குப் பிறந்த பிள்ளை தகப்பனுடைய உதவி அவனுக்குக் கிடைக்கும் பரியந்தம் அதிக அன்பைக் காட்டி நடந்து, தகப்பன் காலம் சென்றாலும், அல்லது தகப்பன் ஆஸ்தி தன்னைச் சேர்ந்தாலும், தகப்பனையும் சிற்றன்னையையும் கேவலமாக நடத்துவதை அனேக இடங்களில் பார்க்கலாம். தங்களுடைய கையில் நாலு பணமிருந்தால், அப்பொருளில் தனக்கு எதாகிலும் கிடைக்குமென்று வேறுவிதம் நடப்பான். தாங்கள் இவ்விதமாய்க் கிழிந்து அழுக்கேறியிருக்கிற வஸ்திரத்துடன் இருப்பதைக் கண்டவுடன், தங்களுடைய உண்மையான நிலைமை யறிந்து, தங்களிடத்திலிருந்து அவனுக்கு ஒன்றும் கிடைக்கப்போகிறதில்லை யென்றும் தாங்கள் அவனோடிருந்தால் அவனுக்குப் பொருட்செலவே யென்றும் எண்ணி கிஞ்சித்து இடங்கொடுத்தாலும் எங்கு பிடித்துக்கொள்ளுமோ என்று பயந்து, தங்களை ஒதுக்கிவிட்டான். ஆனதால், தாங்கள் துரைசாமியால் ஒன்றை அடையலாமென்ற எண்ணத்தை ஒழித்துவிடவேண்டியதே! நான் அதிகம் பொருளுள்ளவனா யிராமற்போனாலும், பதினாயிரம் ரூபா பெறக்கூடிய நிலங்கள் எனக்கிருக்கிறது. எனக்கிருப்பது ஒரே பெண். அந்தப் பெண்ணை வடிவேலு

(ஊம்) ஞானசம்பந்தம்,—நான் தங்களுடைய குமாரனை வடிவேலு என்று அழைத்துக்கொண்டிருந்ததால் அந்தப் பெயரே என் வாயில் வருகிறது.

**தியாகராஜ பிள்ளை.**—என் குமாரனைத் தாங்கள் வடிவேலென்றே அழைக்கலாம்.

**முத்துவேலு பிள்ளை.**—வேண்டாம் ! வேண்டாம் ! ஞானசம்பந்தம் என்ற பெயர் எவ்வளவு சிறப்பாக இருக்கிறது. நான் என் பெண்ணை ஞானசம்பந்தத்துக்குக் கொடுக்க எண்ணங்கொண்டிருப்பதால், என்னுடைய சொத்தெல்லாம் எங்களுக்குப் பின் அவனைச் சேரவேண்டும். தாங்கள் இப்போதே சேலத்துக்கு வந்து எங்களோ டிருக்கலாம். தாங்கள் ஒன்றுக்கும் கவலை கொள்ளவேண்டாம்.

**தியாகராஜ பிள்ளை.**—தங்கள் குமாரத்தியை என் குமாரனுக்குக் கொடுக்க யோசித்திருப்பதால், தங்களை இனிமேல் மைத்துனரென்றே அழைக்கவேண்டும். மைத்துனரே ! அப்பாவி துரைசாமி என்னைத் கைவிட்டபின், தாங்கள் என்னுடைய குமாரனை இதுகாலம் காப்பாற்றிவந்த புண்ணியம் போதாதென்று, என் குடும்பத்தை முற்றிலும் காப்பாற்றி அதிக புண்ணியத்தைக் கைக்கொள்ளப் பார்க்கிறீர். தாங்கள் கொண்டிருந்த நல்லெண்ணத்திற்கு நான் என்ன பதில் செய்யப்போகிறேன் ? ஆயினும் தாங்கள் சொல்லியவிதம் தங்களுடைய மனைவிக்கும் ஸம்மதமிருக்குமோ இருக்காதோ ? அல்லாமலும் பார்க்கிறவர்களுக்கு நகைப்பாக இருக்குமென்று அஞ்சுகிறேன்.

**முத்துவேலு பிள்ளை.**—என் மனைவிக்கு ஸம்மதமாகவே யிருக்கும். அவள் ஞானசம்பந்தத்தையும் விசாலாக்ஷியையும் விட்டுப் பிரிந்திருக்கமாட்டாள். பார்க்கிறவர்கள் என்ன காரணத்தால் நகைப்பார்கள் என்கிறீர்கள் ?

**தியாகராஜ பிள்ளை.**—பெண்ணைக் கொண்டவிடத்தில் குடும்பமே குடியேறிவிட்டதென்றும், மாப்பிள்ளையையும் அவன் தாய் தந்தையையும் பெண்வீட்டார் விலைக்கு வாங்கிக் கொண்டார்களென்றும் சொல்லுவார்களே ! மாப்பிள்ளை பணக்காரனாக இருந்தால், மாப்பிள்ளையின் குடும்பத்தோடு தாங்களும் தங்கள் மனைவியும் போயிருப்பீர்களா ?

**முத்துவேலு பிள்ளை.**—பெண்ணைவிட்டுப் பிரிய இஷ்டமில்லா

*தவர்கள் ஏன் போயிருக்கமாட்டார்கள்? அவ்விதம் ஞான சம்பந்தம் பணக்காரனு யிருந்தால், நாங்கள் அவனேடு போயிருக்கத் தடையில்லை.*

**தியாகராஜ பிள்ளை.**—*அவன் தனித்திருந்தால் போயிருப் பீர்கள்.*

**முத்துவேலு பிள்ளை.**—*இல்லை! இல்லை! அவன் தாய் தந்தை யோ டிருந்தாலும் போயிருக்கத் தடையில்லை.*

**தியாகராஜ பிள்ளை.**—*மைத்துனரே! ஞானசம்பந்தம் ஏழை யென்று கண்டுகொண்டதால், நீர் இன்னம் எவ்வளவு சொன்னுலும் சொல்லலாம். (என்று நகைத்து வீட்டை யடைந்து, மேல் மெத்தையில் யாவரும் உட்கார்ந்திருப்ப வர்களோடு போய் உட்கார்ந்து, தன் மனைவியைப் பார்த்து) காமாக்ஷி! நான் துரைசாமியை எவ்வளவு கெஞ்சியும் வழிச்செலவுக்காக ஐந்து ரூபா கேட்டும் கொடுக்காமல் துரத்திவிட்டான். ஆயினும், அவன் மகன் சிவகுரு தன்னிடத்திலிருந்த உண்டிப்பெட்டியைத் துணியில் சுற்றி இரகசியமாக நாங்கள் வெளியில் வந்தபின் கொண்டுவந்து கொடுத்தான் (என்று சிவகுரு சொல்லியதையெல்லாம் சொன்னர்).*

**காமாக்ஷியம்மாள்.**—*சிவகுருவுக்கு என்ன அறிவு பார்த்தீர் களா? என்று சிவ குருவை நினைத்து, அதிக கவலை கொண்டாள்).*

**தியாகராஜ பிள்ளை.**—*துரைசாமி நம்மைக் கைவிட்டுவிட்டாலும், என் மைத்துனர் முத்துவேலு பிள்ளை, தன் மகளை ஞானசம் பந்தத்துக்குக் கொடுத்து விவாகஞ்செய்ய எண்ணங்கொண் டிருப்பதால், நம்முடைய நிர்ப்பாக்கிய ஸ்திதியைக் கண்டு நம்மையும் வந்திருக்கச் சொல்லுகிருர். அது உனக்கும் என் தங்கை திரிபுரஸுந்தர அம்மாளுக்கும் ஸம்மதமா யிருந்தால், எனக்கும் ஸம்மதமே! நாம் அந்தப் படுபாவி துரைசாமி முகத்தைப் பார்க்காமல் போயிருக்கலாம்.*

**சித்திவிநாயகம் பிள்ளை.**—*அப்பா! நாங்கள் உயிரோடிருக்கும் பொழுது, நீங்கள் அவ்வித எண்ணங்கொள்வது நியாயமல்ல. நீரும் காமாக்ஷியம்மாளும் எங்களோடிருந்து உங்களுடைய குமாரனையும் உங்கள் மருமகளையும் அடிக்கடி போய்ப் பார்த்துக்கொண்டிருக்கலாம். வேண்டுமானால் அங்கு சில நாளும் எங்களோடு சில நாளுமாக இருக்கலாம். நீங்கள் அங்கு போய் நிலைத்திருப்பது உயர்வாகக் காணவில்லை.*

**முத்துவேலு பிள்ளை.**—*பெண்வீட்டார் ஏழையாக இருந்தால், பிள்ளைவீட்டாரோடு போயிருக்கிறதில்லையா?*

**இலக்கைய பிள்ளை.**—*அவ்விதமிருந்தாலும் அது கேவலமாக உலகிற்குக் காணப்படும். இது விஷயத்தைக் குறித்துப் பேசுமுன்னம், காமாக்ஷியம்மாள் பேரிலிருக்கும் நிலத்தை மீட்டுவிட்டால் என்ன? அந்த நிலம் இவர்களுக்குக் கிடைக்குமானால் இவர்களுக்கு அது போதாதா?*

**ஞானசம்பந்தம்.**—*என் தாய்பேரிலிருந்த நிலத்தைத் தான் கைப்பற்ற வேண்டுமென்று எண்ணியதால், அந்த நிலத்தை அவருக்குச் சொந்தமாக்கிவிடுவதே உத்தமம். மாணிக்க முதலியார் வீட்டில் ஓர் கணக்கப்பிள்ளை வேண்டுமென்றும், அவனுக்கு மாதம் பதினைந்து ரூபா சம்பளமென்றும், வருடத்திற்கு இருபது கலம் நெல் கொடுக்கிறோமென்றும் சொல்லுகிறார்கள். நான் அந்த வேலையைக கைப்பற்ற யோசித்திருக்கிறேன். ஆனதால் நாம் எங்கும் போக வேண்டிய வேலை யில்லை. இவ்வூரிலேயே இருக்கலாம். என் பாட்டனார் வீட்டுக்குப் போனாலும் அல்லது சேலத்துக்குப் போனாலும், கேவலமாகவே உலகம் சொல்லும். நானும் என் தாய்தந்தையை கவனிக்காமல் சேலத்தில் போயிருப்பது நன்றல்ல.*

**அ**ந்த ஸமயத்தில் சாப்பாடு சித்தமாக இருக்கிறதென்று திரிபுரஸுந்தரம்மாள் வந்து சொன்னவுடன், முத்துவேலு பிள்ளை யாவரையும் அழைத்துச் சென்றார்.

## 23—ம் அத்தியாயம்

அடுத்த நாள் யாவரும் மேல்மெத்தையில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கும்பொழுது, பெரிய பெட்டிகளும் மற்றும் பல ஸாமான்களும் அடங்கிய வண்டிகள் வீட்டுக்கெதிரில் நிற்க, சிலர் ஒரு வண்டியிலிருந்து இறங்கி, "தம்புசாமி பிள்ளை இந்த வீட்டிலா இருக்கிறார்?" என்று வீட்டுக்குள்ளிருந்த திரிபுர ஸுந்தரம்மாளைக் கேட்டார்கள்.

**திரிபுரஸுந்தரம்.**—அப்பெயர் கொண்டவர்கள் இவ்வீட்டில் இல்லை. மேல்மெத்தையில் போய்க்கேளுங்கள் (என்றாள்).

வந்தவர்களில் ஒருவன், மேல்மெத்தை படிக்கட்டில் ஏறிப்பார்த்துக் கீழிறங்கி, "அவர் இருக்கிறார்" என்று சொன்னவுடன், ஒருவர் மேல்மெத்தை ஏறி வருவதைக் கண்ட தியாக ராஜ பிள்ளை எழுந்து, "ஆ! ஆ! எஜமானுக்காக இந்த தொந்தரவைக் கொடுத்தார்கள்?" என்று அவர் கைகளைப் பிடித்துக் கொண்டு உட்கார வேண்டினார். வந்தவர், "அப்பா தம்புசாமி! நான் சாப்பாட்டுக்குப் பின் ஊருக்குப்போக யோசித்திருப்பதால், நான் உன்னைப் பார்த்துப்போக வந்தேன். உன்னுடைய கணக்கப்பிள்ளை உன்னுடைய சாமான்களை வண்டியிலேற்றிக்கொண்டு வந்திருக்கிறான். அவனுக்கு அவைகளை எங்கு வைக்கிறதென்று சொல்லிவிடு. அப்பா உனக்கு இரண்டு லக்ஷம் சொத்திருந்தும், நாட்டுக்கோட்டை செட்டிகளாகிய எங்களைப்போல அழுக்கேறிய வஸ்திரத்தைக் கட்டிக்கொண்டிருக்கிறாயே!" என்று நகைத்தார். அங்கிருந்தவர்கள் யாவரும் அசைவற்று ஆச்சரியமடைந்தார்கள்.

**தியாகராஜ பிள்ளை.**—(செட்டியாரோடு வந்த ஒருவனைப் பார்த்து), "அப்பா! கறுப்பண்ணு! அடுத்த வீடு காலியாக இருக்கிறது. அவ்வீட்டில் எல்லா ஸாமான்களையும் இறக்கி வை. நான் அவ்விடம் வருகிறேன்.

கிறுப்பண்ணன், வாய் பொத்திக்கொண்டு, தியாகராஜ பிள்ளையின் உத்தரவைப்பெற்று நீங்கினான்.

**தியாகராஜ பிள்ளை.**—(செட்டியாரைப் பார்த்து) எஜமானே! எல்லாம் தங்களால் வந்த ஐஸ்வர்யமேயன்றி வேறல்ல! எனக்கு இவ்வூரிலிருந்த வெறுப்பால் என் பெயரை நான் தங்களோடிருக்கும் பரியந்தம் மாற்றி வைத்துக்கொண்டிருந்தேன். இங்கு வந்தபின் என்னை அறிந்தவர்களிருப்பதால், நான் தியாகராஜன் என்கிற என் சொந்தப் பெயரோடிருக்க நேர்ந்தது. நான் முதலில் இவர்களுக்கு ஏழையென்று சொல்லியதால், என் குமாரன் மாதம் பதினைந்து ரூபாவும் வருடத்திற்கு இருபது கலம் நெல்லும் கிடைக்கும் வேலையிலமர்ந்து என்னைக் காப்பாற்றுகிறதாகச் சொல்லுகிறான். நானும் அனுப்பலாம் என்றிருக்கிறேன். தங்களுடைய அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள் (என்று தன் மகனைக் காட்டினார்).

**செட்டியார்.**—(எழுந்துபோய் ஞானசம்பந்தத்தைக் கட்டிப் பிடித்துக்கொண்டு) பதினைந்து ரூபா வேலையா உனக்கு வேண்டும்! நீ அநேகரை அதிக சம்பளத்தில் வைத்துக் கொள்ள வேண்டியதாயிருக்குமே! உன் தந்தைக்கிருக்கும் இரண்டு மூன்று லக்ஷம் போதாதென்று நீயும் சம்பாதிக்க வேண்டுமென்கிறாய் (என்று நகைத்தார்).

**தியாகராஜ பிள்ளை.**—மைத்துனரே! பிள்ளை வீட்டார் பணக்காரராயிருந்தால் அவர்களுடன் போயிருப்பதாகச் சொன்னதுபோல், நீங்கள் எங்களோடிருக்கவேண்டும். நான் இவ்வீட்டை விலைக்கு வாங்கியிருப்பதால், என்னைத் தங்களோடு வந்திருக்க விரும்பியவர்கள் யாவரும் என்னோடு வந்திருக்க வேண்டும் (என்று நகைத்தார்).

**முத்துவேலு பிள்ளை.**—நாங்கள் சொல்லியவண்ணம் தங்களோடிருக்க யாதொரு தடையுமில்லை. ஆயினும் தாங்கள் எங்களை வைக்க வசதிப்பீர்களென்று நினைக்க வெ...

வில்லை. இரண்டு மூன்று லக்ஷத்துக் கதிகாரியாயுள்ளவர்கள் கிழிந்து அழுக்கேறிய வஸ்திரத்தைக் கட்டிக்கொள்ளும் வழக்கமுடையவர்களானால், அவர்கள் சாப்பிடும் உணவு எத்தன்மையதா யிருக்குமென்று நினைக்கவேண்டும்? தாங்கள் இவ்வளவு உயர்ந்த ஆடையை உடுத்துக்கொண்டிருப்பதால், தங்களை அடுத்திருப்பவர்களுக்கு எவ்வித வஸ்திரம் கிடைக்குமென்று பயப்பட வேண்டியதாயிருக்கிறது (என்று நகைத்தார். யாவரும் நகைத்தார்கள்).

செட்டியார்.—ஆம்! ஆம்!! தியாகராஜ பிள்ளை ஒரு ரூபா பெறக்கூடியதை வாங்கிக் கட்டினால், அவரை அடுத்திருப்பவர்களுக்கு அரை ரூபா பெறக்கூடியதை வாங்கிக் கொடுப்பார். அவர் எட்டணா பெறக்கூடியதையே வாங்கிக் கட்டுவாரானால், அவரை அடுத்திருப்பவர்களுக்குக் கஷ்டந்தான் (என்று நகைத்தார். யாவரும் நகைத்தார்கள்).

காமாக்ஷியம்மாள்.—(ஆனந்தவல்லியைப் பார்த்து) அம்மா! நீ யாரை விவாகம் செய்துகொண்டாய்? விவாகம் ஸமீபத்தில் நடந்தேறியதுபோல் காண்கிறது. தாலிக்கயிறும் இன்னும் மாறவில்லையே! உன் நாயகன் எங்கே? நீ இங்கு எப்படி தனித்து வந்திருக்கிறாய்?

தியாகராஜ பிள்ளை.—ஆம்! அம்மணி! எனக்கெல்லாம் ஸந்தோஷமாக முடிந்தாலும், உன்னைத் தனித்து இவ்விடத்தில் பார்த்தது எனக்கு அதிக துக்கமாக இருக்கிறது. உன்னை யார் வளர்த்தார்களென்றும் உன் நாயகனை விட்டுத் தனித்திருப்பதின் காரணம் இன்னதென்றும் சொல்லவேண்டும்.

ஆனந்தவல்லி.—தாங்களும் அம்மாளும் இதைக் கேட்பீர்களென்று நினைத்தே, நேற்று என்னை இங்கு அழைத்துவந்த பெண்பிள்ளையைக் காலையில் அனுப்பி, என்னை வளர்த்துவந்த அம்மாளை அழைத்துவரும்படி சொல்லியிருக்கிறேன்.

என்று சொல்லும்பொழுது, ஒரு கிழவி மற்றோர் பெண்

பிள்ளையோடு அவ்விடத்தில் வந்து நின்று, "அம்மா! பாலம்பாள்! நீ நேற்று இந்தம்மாளோடு வந்தவள், உடனே வராமல் என்னை ஏன் அழைத்துவரச் சொன்னாய்? நான் இந்த அம்மாளைக் கேட்டதற்குத் தனக்கு ஒன்றும் தெரியாதென்று சொல்லிக்கொண்டிருந்தாளே" என்றாள்.

**ஆனந்தவல்லி.**—பாட்டி! தாங்கள் உட்கார்ந்து தங்களைக் கேட்பதற்கு பதில் சொல்லுங்கள். என்னை யாரிடத்திலிருந்து அழைத்துவந்து வளர்த்தீர்கள்? அப்பொழுது எனக்கு என்ன வயது?

**கிழவி.**—என்னடியம்மா! இப்படிக் கேட்கிறாய்! உன்னை யாரிடத்திலிருந்து அழைத்துவந்தோமா? நீ என் மகளுக்கு மகளல்லவா? என்ன காரணத்தால் இவ்விதம் கேட்கிறாய்?

**தியாகராஜ பிள்ளை.**—அம்மா! இப்பெண் உன்னுடைய பௌத்திரியல்ல! என்னுடைய மகள். இப்பெண்ணைப் பெற்றவள் இவள். (என்று தன் மனைவியைக் காட்டி) நீ ஒளிக்காமல் உண்மையைச் சொல்லுவாயாகில், உன் காலமெல்லாம் ஸுகமாக இருக்கும் விதம் நாங்கள் செய்வோம். நீ அது விஷயத்தில் கவலை கொள்ளாது உண்மையைச் சொல்.

**கிழவி.**—ஐயா! நீங்கள் இப்பெண்ணை என்ன காரணத்தால் உங்கள் மகளென்று சொல்லுகிறீர்கள்?

**காமாக்ஷியம்மாள்.**—அம்மா! என் மகளிடமிருந்த காப்பாலும், அவள் புறங்கழுத்திலிருக்கும் மச்சத்தாலும் என் மகளென்று கண்டுபிடித்தேன். அவள் முகச்சாயலும் யாரைப்போலிருக்கிறது பார்.

**கிழவி.**—முகச்சாயலைக் குறித்துப் பேசவேண்டாம். ஒருவரைப் போல் ஒருவரிருப்பது நூதனமல்ல! அதிக தூரம் போகவேண்டாம். (ஞானசம்பந்தத்தைக் காட்டி) இப்பிள்ளையாண்டானும் உன்னைப்போ லிருக்கிறான். ஆனதால் அவ

னும் உன்னுடைய மகன்தானே (என்று நகைத்தாள். யாவ ரும் கலீரென்று நகைத்தார்கள்).

காமாக்ஷியம்மாள்.—(நகைத்து) ஆம்! அம்மா! அவன் என் மகனே!

கிழவி.—ஊரார் பெற்ற பிள்ளைகளெல்லாம் உன் பிள்ளைகளா னல், பெற்றவர்களெல்லாம் பிள்ளைகளை இழந்துபோக வேண்டியதாய் முடியும். இந்தப் பிள்ளையாண்டான் தாய் தந்தை ஸமீபத்திலேயே இருக்கிறார்கள். நாங்களும் இவர் களும் சேலத்திலிருந்தோம் என்பதை அறியாமல் சொல்லு கிறாப்போல் காண்கிறது.

முத்துவேலு பிள்ளை.—ஆம்! அம்மா! இங்கிருக்கும் ஞானசம்பந் தம் எங்களுடைய குமாரனல்ல. நாங்கள் மஹாமகத்துக் குக் கும்பகோணம் போயிருந்தபொழுது அகப்பட்டு, இது நாள் எங்களுடைய சொந்த பிள்ளையைப்போல் வளர்த்து வந்தோம்.

கிழவி.—என்ன சொன்னீர்! மஹாமகத்திற்குப் போயிருந்த பொழுது கிடைத்தானா! (என்றெழுந்துபோய் ஞானசம்பந் தத்தை கவனித்துப் பார்த்து) இவன் காதில் மத்திக்கல் போட்டிருந்தானல்லவா?"

யாவரும் ஆச்சரியப்பட்டு, "இவன் காதில் மத்திக்கல் போட்டிருந்தானென்று எப்படித் தெரியும்?" என்று கேட் டார்கள்.

கிழவி.—என்னுடைய காலம் முடிய இன்னும் அதிக நாள் இல்லை. நான் இறக்குமுன் இவ்விஷயத்தை பாலம்பா ளுக்குச் சொல்லிவிட வேண்டுமென்று எண்ணியிருந்தேன். ஆ! ஆ!! பதினைந்து பதினாறு வருடமான பின், பெற்ற வர்களுக்குப் பிள்ளைகள் அகப்பட்டது என்ன அதிசயம்! நான் இனி மறைத்துப் பேசுவதில் பலன் ஒன்றுமில்லை. நான் என் மகள் மருமகளோடு மஹாமகத்துக்குப் போயிருந்த போது, ஒரு கோவிலுக்கருகில் பதினாறு அல்லது பதி

னேழு வயதென்று மதிக்கத்தகுந்த இளைஞன், மூன்றரை அல்லது நாலு வயதுடைய ஒரு ஆண் குழந்தையை நடத்திக்கொண்டும், இரண்டரை அல்லது மூன்றென்று மதிக்கத்தகுந்த ஓர் பெண் குழந்தையை இடுக்கிக்கொண்டும் போனான். சிறுவன் அவனோடு நடந்துபோக முடியாமல் அழுதான். அவன் சிறுவனை அடித்துக் கையைப்பற்றி இழுத்துப் போகும்போது, "நடக்கமுடியாத குழந்தையை ஏன் அடிக்கிறாய்?" என்று என் மகள் கேட்டாள். "நான் என்னசெய்வேன்? இருவரையும் எப்படித் தூக்கிக்கொண்டு போக முடியும்! கொஞ்ச தூரம் நடந்துவாடா என்றால் அழுகிறான். நீங்கள் சற்றுநேரம் இந்தக் குழந்தையை வைத்துக்கொண்டிருங்கள். நான் இவனை எங்கள் இருப்பிடத்தில் விட்டுவந்து, பின் குழந்தையை வாங்கிக்கொண்டு போகிறேன்" என்று சொன்னான். "இந்த ஜனசந்தடியில் எங்களை எங்கே கண்டு தேடுவாய்?" என்று கேட்டதற்கு "சற்று இவ்விடத்தில் நின்றிருங்கள். இதோ ஒரு விநாடியில் வந்துவிடுகிறேன்" என்றான். நான் ஒன்றும் சொல்லாமலிருக்கும்பொழுதே என் மகளருகில் பெண் குழந்தையை விட்டு ஓடினான். நாங்கள் நெடுநேரம் அவன் வருவானென்று எதிர்பார்த்திருந்தும் அவன் வாராமையைக் கண்டு எங்களிருப்பிடத்தை அடைந்தோம். என் மருமகன் அவனைத் தேடித் திரிந்து நெடுநேரத்திற்குப் பின் வந்து, "அவன் அகப்படவில்லை. பதினைந்து அல்லது பதினாறு வயதுடைய ஒரு சிறுவனும், மூன்று நான்கு வயதுடைய மற்றொரு சிறுவனும், ஓர் பெண்குழந்தையும் ஆக இம்மூவர்களோடு ஓர் கிழவி வந்து ஒரு வீட்டில் தங்கியிருந்தாள். அக்கிழவி வாந்திபேதியால் இறந்தாள். வாலிபன் அவ்விரு பிள்ளைகளையும் அழைத்துக்கொண்டு போனவன் திரும்பவேயில்லை. வீட்டுக்காரன் அப்பிணத்தை யெடுத்து அடக்கஞ்செய்ய ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறான். இதைப் பார்த்து

நான் ஒன்றும் சொல்லாமல் வந்துவிட்டேன்" என்று சொன்னார். போலீஸாரிடம் சொன்னால், குழந்தை ஒரு கையில்மட்டும் காப்பிருப்பதால் மற்றக் காப்பை நாங்கள் எடுத்துக்கொண்டோம் என்பார்களே என்று பயந்து, ஒரு வாரம் அங்கிருந்து சிறுவனைத் தேடித் திரிந்தோம். அவன் அகப்படாமற்போனதால், குழந்தையோடு நாங்கள் திருச்செங்கோட்டுக்கு வந்து சேர்ந்தோம். குழந்தையால் என்ன தீங்கு விளையுமோ என்று சில வாரம் வரையில் பயந்திருந்தோம். பின் பல மாதங்களும் ஆயின. குழந்தைக்கு என் மகள் பாலம்பாள் என்ற நாமஞ்சூட்டித் தன் மகள்போல் வளர்த்துவந்தாள். பாலம்பாள் கிடைத்த ஒரு வருடத்திற்குப் பின் என் தீவினையால் என் மகளும் மருமகனும் ஒருவர் பின் ஒருவராகக் காலஞ்சென்றார்கள். அவர்கள் இறந்தபின் அவ்வூரிலிருக்க ஸம்மதப்படாமல், அவர்களிருந்த வீட்டில் ஓர் குடித்தனம் வைத்துவிட்டு என் ஜனனவூராகிய சேலத்துக்கு வந்து காய் கிழங்குகளை விற்றுக் காலம் கழித்து, பாலம்பாளைப் பள்ளியில் வைத்து வளர்த்துவந்தேன். என்னை அறிந்தவர்களெல்லாம் பாலம்பாள் என் மகள் குமாரத்தியென்றே நினைத்திருந்தார்கள். சில மாதங்களுக்கு முன் நான் அதிக நலியா யிருந்தபொழுது, அவளுடைய மனம் நோக ஒன்று நடந்தமையால், அவ்வூரைவிட்டு மீண்டும் திருச்செங்கோட்டுக்குப் போகும்படி நேரிட்டது. நான் பணக்காரியாக இருந்தால் திரிபுரஸுந்தரம்மாள் உங்கள் குமாரனை வளர்த்துவந்ததுபோல் வளர்த்திருப்பேன். நான் ஏழை; என்ன செய்வேன்? பாலம்பாளை என் சக்திக்கேற்க வளர்த்தேன். நான் அதிக தள்ளாமையானபின், அவளே என்னை ஆதரித்துவந்தாள்.

தியாகராஜ பிள்ளை.—அம்மா! ஆனந்தவல்லி! உன் மனம் வருந்த என்ன நடந்தது?

**கிழவி.**—என் பௌத்திரியின் பெயர் ஆநந்தவல்லியா? நல்ல பெயர். இனிமேல் அவ்விதமே கூப்பிடுகிறேன் (என்று மகிழ்வடைந்தாள்).

**ஆனந்தவல்லி.**—(தன் தாயைக் கட்டிப் பிடித்துக்கொண்டு) அம்மா! எனக்கு நடந்ததைக் கேட்கிறார்களே! நான் எவ் விதம் சொல்லுவேன் (என்றழுதாள்).

**அங்கயற்கண்ணி.**—அதைச் சொல்லக்கூடாமல் மறைக்கக்கூடிய தாக இருந்தும், பின் தெய்வானுகூலத்தால் பகிரங்கமாய்ச் சொல்லக்கூடியதாய் முடிந்தது. அம்மா! ஆனந்தவல்லி நீ ஒன்றையும் ஒளிக்காமல் சொல்லலாம்.

**ஆனந்தவல்லி.**—தந்தையே! எனக்கு நேரிட்டதை என்னைக் கேட்கவேண்டாம். அண்ணனைக் கேளுங்கள். அவர் சொல்லுவார் (என்று அவ்விடத்தை விட்டு நீங்கினாள்).

**தியாகராஜ பிள்ளை.**—அப்பா! ஞானசம்பந்தம்! நீ நெடுநாளாக ஆனந்தவல்லியை அறிந்திருக்கிறாயென்று காண்கிறது. ஆனந்தவல்லி உன்னையே சொல்லச் சொல்லுவதால், நீயே சொல்லவேண்டும்.

**ஞானசம்பந்தம்.**—(தன் தந்தையைநோக்கி), ஆனந்தவல்லியை ஆதரித்து வந்த பெரிய அம்மாள், சிலகாலம் அதிக நலி யாக இருந்து, தன்னால் ஒன்றும் செய்யமுடியாது பாயும் படுக்கையுமா யிருந்தாள். தங்களுடைய ஸம்ரக்ஷணைக்காகச் சேலத்தருகிலுள்ள கிராமங்களில் காய் கிழங்குகளை வாங்கி வியாபாரஞ் செய்யும் பெண்பிள்ளைகளோடு ஆனந்தவல்லி யும் சென்று வியாபாரம் செய்துவந்தாள். ஒருநாள் மல் லூருக்குப் போய்த் திரும்புங்கால் திருஞானத்தால் அவ மானப்பட்டாள்.

தியாகராஜ பிள்ளையும் காமாக்ஷியம்மாளும் தங்கள் குமா ரத்தியை அழைத்து, அவளைக் கட்டிப் பிடித்துக்கொண்டு, ஓவென்றலறினார்கள்.

அங்கயற்கண்ணி.—யாவும் ஸந்தோஷமாக முடிந்தபின் துக்கப் படவேண்டிய காரண மில்லையே !

தியாகராஜ பிள்ளை.—அம்மா ! ஆநந்தவல்லி ! திருஞானம் உன்னை அவமானப்படுத்தியபின் நீயும் உன் பாட்டியாரும் சேலத்தைவிட்டு நீங்கினீர்களே ! அங்கு எவ்விதம் மணம் பூண்டாய் ?

ஆனந்தவல்லி.—தந்தையே ! சேலத்தில் அவமான மடைந்தபின் அவ்வூரிலிருக்க மனங்கொள்ளாமல், நாமிருந்த ஊருக்கே போய்விடலாமென்று என் பாட்டியாரை அழைத்துக் கொண்டு திருச்செங்கோட்டுக்குப் போய், நாங்கள் சேலத்தில் செய்துவந்த வியாபாரத்தையே செய்துகொண்டு வந்தோம். ஒருநாள் காலையில் இவ்விட மிருக்கும் சாமியாரும் அவர் சீடனும் நானிருந்த வீட்டின் வெளித்திண்ணையில் உட்கார்ந்திருந்தார்கள். நான் அவர்களுக்குப் பாலும் பழமும் வாங்கிவந்து கொடுத்து, கடைக்குப்போய்க் காய்களை விற்றுக்கொண்டிருந்து, பின் என் பாட்டியார் கடைக்கு வர அவர்களைக் கடையிலிருக்கவிட்டு, நான் சமையல் செய்ய வீட்டுக்குத் திரும்பினேன். திரும்பி வரும் பொழுது, மார்க்கத்தில் என் ஸகோதரனைக் கண்டேன். அவர் என்னைக் கண்டு ஆச்சரியப்பட்டு, நானிருக்கும் வீட்டுக்கு என்னோடு வந்து, என் நாயகன் விசாலாக்ஷியம் மாளை மோசமாகக் கொண்டுவந்து மணமுடிக்க யோசித் திருப்பதாகவும், அவர் எண்ணத்தைக் கெடுத்துவிடத் தான் எண்ணங்கொண்டிருப்பதாகவும், எனக்கு ஸம்மதமிருந்தால் அவளுக்கு பதிலாக என்னை விவாகஞ் செய்துகொள்ளும் படி ஏற்பாடு செய்வதாகவும் சொல்லி, என் ஸம்மதத்தைக் கேட்டார். நான் என்னைக் காப்பாற்றிக்கொள்ள வேறு வகை இல்லாமையால் ஒப்புக்கொண்டேன். என் கருத்தை யறிந்து ஸந்தோஷப்பட்டு, அன்றிரவு மணப்பெண்ணைச்

சிங்காரிக்க ஓர் பெண்பிள்ளை வேண்டுமென்றும், நான் அவளுடைய மகளென்ற முறையோடு போகவேண்டுமென்றும், அவ்விடத்திற்கும் போனபின் நான் மணப் பெண் ஆகவேண்டுமென்றும், என்னை அழைத்துப்போன பெண்பிள்ளை விசாலாக்ஷியம்மாளைத் தப்புவித்துத் தன் மகளென்று அழைத்து வந்துவிடவேண்டுமென்றும், என்னை அழைத்துக்கொண்டு போக ஓர் பெண்பிள்ளையைத் தேடிக் கொள்ளவேண்டுமென்று சொல்லி, பின்னுல் என்னை வந்து பார்க்கிறதாக நீங்கினூர். அவர் நீங்கியவுடன் சாமியாரின் சீடன் என்னிடம் வந்து, “ நீங்கள் பேசியிருந்ததைக் கேட்டிருந்தேன். நான் ஆண்பிள்ளையல்ல. நானும் உன்னைப்போல் பெண்பிள்ளையே. நான் ஓர் காரணத்தால் இவ்வேடத்தோ டிருக்கிறேன். உனக்கு வேண்டிய உதவியைச் செய்ய நான் உன்னோடு வருகிறேன். ஆனுல் என்னுடைய ரகசியத்தை வெளியிடக்கூடாது. என்னை வேறெங்காகிலும் கண்டால், என்னை ஆண்பிள்ளையாகவே எண்ணி வார்த்தையாடவேண்டும் ” என்று சொன்னூர்கள். நான் அவர்கள் சொல்லியவிதம் செய்வதாக வாக்குக் கொடுத்தேன். அன்றிரவு ஒன்பது மணிக்குமேல் என் ஸகோதரன் ஓர் கடிதத்தைக் கொண்டுவந்து கொடுத்து, “ இதை நீ வேண்டியவிதம் உபயோகப்படுத்திக்கொள்ளலாம். இதை எந்தப் போலீஸ் உத்தியோகஸ்தனிடம் காட்டினுலும் நீ விரும்பியவிதம் செய்வான். நான் விவாகமாகும் வீட்டிற்கருகில் வந்து நின்றிருந்து விசாலாக்ஷி வெளிவந்த உடன் அவளை அழைத்துப்போகிறேன் ” என்று சொல்லி எனக்கு ஆசிகூறி நீங்கினூர். சாமியார் சீடனுயிருந்த அங்கயற்கண்ணியம்மாள், சாமியாரை ஓர் அறையில் படுத்துக்கொள்ளச் செய்து, அவர் நித்திரையடைந்தபின் அவ்வறையின் கதவை மூடித் தாழ்ப்பாளிட்டு, என் பாட்டியாரு மறியாமல் தான் போட்டிருந்த அங்கியையும் குல்லா

யையும் எடுத்து பதனமாக வைத்துவிட்டு, கலியாண வீட்டுக்கு என்னை அழைத்துச் சென்றார். அங்கு அழுது கொண்டிருந்த விசாலக்ஷியம்மாளுக்கு எங்கள் கருத்தைச் சொன்னவுடன் அவள் ஸந்தோஷப்பட்டாள். அங்கயற் கண்ணியம்மாள் என்னைச் சிங்காரித்துவிட்டு விசாலாக்ஷி யம்மாளோடு வெளியிற் போகும்பொழுது, நான் அவர்க ளுக்கு நமஸ்காரஞ்செய்து, "தாங்கள் என் விஷயத்தில் காட்டிய அன்பிற்கு நான் என்ன செய்யப்போகிறேன்?" என்று கவலைகொண்டேன். என்னை அந்தம்மாள் தனித் தழைத்து "திண்டுக்கல்லுக்குப் போய்ச் சுரும்பாயி அம்மா ளைக் கண்டு சில சொற்களைச் சொன்னால் அதுவே போ தும்" என்று விசாலாக்ஷியம்மாளோடு வெளியிற் சென்றார் கள். என் கழுத்தில் தாலி ஏறுந்தனையும் நான் அதிக ஜாக் கிரதையாக இருந்தேன். விவாகம் முடிந்த மூன்றாம் நாள், என்னை யாரென்றறிந்து, என் நாயகன், என் மாமனார், மாமி யார் முதலானவர்களெல்லாம் என்னை நிந்தித்தார்கள். நான் அவர்களுடைய ஏளனத்தைக் கண்டு அஞ்சாமல், போலீஸ் இன்ஸ்பெக்டர் சுந்தரம் ஐயர் எழுதிக்கொடுத்த கடிதத்தின் உதவியால், என்னை என் நாயகன் ஒப்புக்கொண்டதாக எழுதி வாங்கிக்கொண்டேன். எனக்கு விவாகமான நாலாம் நாளே என்னைச் சேலத்துக்கு அழைத்துப்போக எண்ணங் கொண்டார்கள். நான் திண்டுக்கல்லுக்குப் போய் அங்கயற் கண்ணியம்மாள் சொல்லியதைச் செய்யவேண்டுமென்கிற விருப்பமிருந்ததால், "நான் உடனே வரமுடியாது. நான் இருக்கும் வீட்டில் வேறு குடித்தனம் வைத்து என் பாட்டி யாருக்கும் தக்க ஏற்பாடு செய்து வரவேண்டும். நீங்கள் இரண்டொருமாதம் பொறுத்துவந் தழைத்தால் வருகி றேன்" என்று சொன்னேன். அவர்கள் என்மேல் அருவருப்புக்கொண் டிருந்தார்க ளாதலால், நான் சொல்லி யதை ஒப்புக்கொண்டு நீங்கினார்கள். நான் காலம் போக்கா

மல் என் பாட்டியாரை அழைத்துக்கொண்டு திண்டுக்கல் லுக்குப் போய், சுரும்பாயி அம்மாளைக் கண்டுவந்தேன்.

காமாக்ஷியம்மாள், தன் மகளைப் பிடித்தணைத்துக்கொண்டு, "அம்மணி! நீ இவ்வளவு துன்பத்தை யடையக் காரணமாக இருந்தவன் அப்படுபாவி துரைசாமியல்லவா?" என்றழுதாள். தியாகராஜ பிள்ளை, கண்களிலிருந்து தாரை தாரையாக நீரை வடியவிட்டு, "நான் உயிரோடிருந்தும் என் பிள்ளைகள் துன் பத்தையடைய நேர்ந்ததே" என்றழுதுகொண்டிருந்தார். இலக் கைய பிள்ளை, தியாகராஜபிள்ளை துக்கத்தை யாற்றி, "ஆநந்த வல்லி செய்ததை முற்றிலும் சொல்லாமல் விட்டிருக்கிறாள்" என்று சொல்லி, துரைசாமி, அப்பாசாமி, திருஞானமாகிய இவர் கள் திண்டுக்கல்லுக்கு வந்ததையும், தானில்லாத காலத்தில் ஞான சம்பந்தத்தை மதுரையிலிருந்து கொண்டுவந்ததையும், துரைசாமி யும் அப்பாசாமியும் கொண்ட எண்ணத்தையும், திருஞானம் அதைத் தடுக்க முயன்றதையும், திருஞானத்தின் வார்த்தைக் குச் செவிகொடாமல் தாங்கள் கொண்ட கருத்தை முடிக்கப் பார்த்தும், அது ஆநந்தவல்லியால் தடைப்பட்டதையும் சொல்லி முடித்தார்.

தியாகராஜ பிள்ளையும் காமாக்ஷியம்மாளும் "ஞானசம்பந் தத்துக்கு உயிர்ப்பிச்சை கொடுத்தவள் நீயா!" என்று அவள் கைகளைப் பிடித்துக் கண்களில் ஒத்திக்கொண்டார்கள்.

செட்டியார்.—(இவர்கள் மனதை வேறு பக்கம் திருப்பிவிட வேண்டுமென் றெண்ணி) "தம்பி! தியாகராஜா! நீ எப் பொழுது இவ்வீடு வாங்கினாய்?" என்று கேட்டார்.

தியாகராஜ பிள்ளை.—எஜமானே! நான் இரங்கூனிலிருக்கும் பொழுது, நமக்கு முன்னால் பிரயாணப்பட்டுவந்த பழனி யப்ப செட்டியாரை, தியாகராஜ பிள்ளை பேருக்கு நல்ல வீடாக வாங்கிவைக்க வேண்டுமென்று கேட்டிருந்தேன். அவர் இவ்விடம் வந்தவுடன் விலைபேசி எனக்கு தந்தி மூலமாகத் தெரிவித்தார். நான் உடனே பணமனுப்பி

*னேன். அவர், வீட்டுப் பத்திரத்தை எனக்கனுப்பிவிட்டு, ஊர் போய்ச் சேர்ந்தார்.*

**செட்டியார்.**—*உன் பெயர் தியாகராஜ பிள்ளை யென்று அவருக்குத் தெரியுமா ?*

**தியாகராஜ பிள்ளை.**—*தெரியாது ! என்னுடைய சிநேகரொருவரிருக்கிறார். அவருக்காக வாங்கவேண்டுமென்று சொல்லியிருந்தேன், எஜமானே !*

**செட்டியார்.**—*தம்பி ! நீ என்னை எஜமான் ! எஜமான் ! என்று இன்னம் சொல்லிக்கொண்டிருப்பது நியாயமல்ல ! உனக்கிருக்கும் பொருள் எனக்கில்லை. இனிமேலும் அவ்விதம் சொல்லிக்கொண் டிருப்பாயாயின், நான் இப்பொழுதே உன்னை விட்டுப் போய்விடுவேன்.*

**தியாகராஜ பிள்ளை.**—*தாங்கள் இவ்விதம் சொல்லலாமா ? தங்களாலல்லவா எனக்குப் பொருள் கிடைத்தது ? தாங்கள் எனக்குப் பொருள் அதிகம் கொடுத்துவிட்டதால் நான் தங்களை மறந்துவிடலாமா ? தங்களை என் ஆயுள்காலமெல்லாம் என் எஜமானாகவே எண்ணுவேன். தாங்கள் என்னை விட்டுப் போகிறேன் என்பது நியாயமன்று. சிலநாள் என்னோடிருந்து போகவேண்டும் (என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்).*

**செட்டியார்.**—*என்னால் உனக்குப் பொருள் கிடைத்ததென்று சொல்வது தவறு. நீ என்னை வேதக்தாவுதிடமிருந்து மீட்காமல்விட்டால், இராமன் செட்டி கடை அப்பொழுதே தொலைந்துபோயிருக்கும். என்னுயுளும் முடிந்திருக்கும். உன்னிடத்திலல்லவா நான் உயிர்ப்பிச்சை பெற்றிருக்கிறேன்.*

**முத்துவேலு பிள்ளை.**—*அத்தான் ! தாங்கள் இராமன் செட்டியாரைத் துதிக்கிறதும், அவர் தங்களைத் துதிக்கிறதும் விந்தையாக இருக்கிறது. அவ்விரகசியத்தை மற்றோர் ஸமயத்தில் அறிந்துகொள்ளுகிறோம். தங்களுடைய மனைவி*

யின்பேரிலிருக்கிற நிலத்தை அபகரிக்க துரைசாமி பிள்ளை யோசித்து அதை அடைமானம் வைத்திருக்கிறானே ! அதைக்குறித்து என்னசெய்ய யோசித்திருக்கிறீர்கள் ?

**ஞானசம்பந்தம்.**—ஐயாவே ! என் தமயன் விரும்பிய வண்ணம் அந்த நிலத்தை அவருக்குச் சொந்தமாக்கி விடுதலே உத்தமம். அவர் அந்த நிலத்தை வைத்துக்கொண்டு ஸுகத்தை அனுபவிக்கட்டும்.

**முத்துவேலு பிள்ளை.**—தம்பி ! நீ யோசிக்காமல் பேசுகிறாய் ! நாம் அந்த நிலத்தை அவனுக்குக் கொடுத்துவிட்டாலும், அவன் அதை நெடுநாள் வைத்திராமல் தொலைத்துவிடுவான். தாமோதரம் பிள்ளையும் நடுக்கொள்ளையாகப் பெருந்தொகையைக் கேட்கிறான். வீணாக எல்லாம் போய்விடும். (என்று சொல்லிப் பின் தியாகராஜ பிள்ளையைப் பார்த்து) தாங்கள் நம் சிறுவர்களுக்குத் துணையாக இருக்கும்படி அவனைப் பெரியம்மாளோடு அனுப்பியிருக்க, அவன் என் சிறுவர்களை விட்டுவந்தானென்று அறியவேண்டியது அவசியம்.

**தியாகராஜ பிள்ளை.**—அவன் கருத்து நன்றாய் விளங்குகிறதே ! மஹாமகத்துக்குப் போன பெரியம்மாள் காலம் சென்றாள். அந்த ஸமயத்தை அனுகூலப்படுத்திக்கொள்ளவே சிறுவர்களை விட்டு நீங்கினான். சிறுவர்களில்லாமற் போனால் எங்களுக்குப் பின் யாவும் தன்னைச் சேருமென்றெண்ணி யாவரும் இறந்தார்களென்று சொல்லிவிட்டான். நாம் தாமோதரம் பிள்ளை வசம் இருப்பதை அவன் இஷ்டங்கொண்டு கேட்டதைக் கொடுத்துப் பெற்றுக்கொள்ளவேண்டுமேயொழிய வேறு வழி காணவில்லை.

**ஞானசம்பந்தம்.**—நாம் அவசரப்பட்டு ஒன்றும் செய்யாமல், என் சிநேகர் போலீஸ் இன்ஸ்பெக்டர் சுந்தரம் ஐயருடைய கருத்தை அனுசரித்து, யாவும் செய்யவேண்டும். நான் அவரை அழைத்துவருகிறேன் (என்று நீங்கினான்.

**தியாகராஜ பிள்ளை.**—மைத்துனரே ! என் குமாரத்தியின் கண

வனையும் அவர் தாய் தந்தையையும் பார்க்கவேண்டும். தயவுசெய்து அவர்களை வரவழைக்கிறீர்களா ?

**முத்துவேலு பிள்ளை.**—அத்தான் ! அவர்கள் என் பந்துக்களே. அவர்கள் வரும்படி ஏற்பாடு செய்கிறேன்.

அது ஸமயத்தில் வெளியில் சென்றிருந்த ஞானசம்பந்தம், சிலரோடு வந்து, திராகராஜ பிள்ளைக்கு முன் ஒருவரை உட்காரச் செய்து, "தந்தையே! இவரே நம்முடைய குல தெய்வம். இவருடைய உதவியால் என் தங்கையின் விவாகம் நிலைபெற்றது. தாமோதரம் பிள்ளை வீட்டில் நான் கேள்விப் பட்டதை சுவாமியவர்களிடத்தில் சொன்னேன். தங்களைக் கண்டறிந்தபின் வேண்டியதைச் செய்வதாக வந்திருக்கிறார்" என்றான்.

**சுந்தரம் ஐயர்.**—ஐயாவே! தங்கள் குமாரன் என்னைக் குல தெய்வ மென்றார்! நாங்கள் ஒருவருக்கொருவர் செய்த உதவியை நீங்கள் யாவரும் கேட்டு, யாருக்கு யார் குல தெய்வ மென்பதைச் சொல்லவேண்டும். நெடுநாளைக்கு முன் நான் ஹெட்கான்ஸ்டபிலாகச் சேலத்தி லிருந்தேன். பின் ஸப் இன்ஸ்பெக்டர் ஒருவர் தேகம் அசௌக்கியமா யிருந்ததால், அவர் வேலையை நான் பார்த்துவர நேரிட்டது. அனேக மாதங்களுக்கு முன் பொன்னம்மாள் பேட்டையில் தீவட்டிக் கொள்ளைக்காரர் ஓர் தனவந்தன் வீட்டில் நுழைந்து வீட்டுக்கெஜமானனையும் அவர் மனைவியையும் கொன்று வீட்டிலுள்ளவைகளைக் கொள்ளையாடிச் சென்றார்கள். போலீஸ் அதிகாரிகள் அதைக் கண்டுபிடிக்க ஒருவர்பின் னொருவருக்கு ஆக்கியாபித்தார்கள். அதை ஒருவரும் கண்டுபிடிக்க முடியாமல் தங்களால் முடியவில்லையென்றும் கொள்ளையாடியவர் அவ்வூரல்லவென்றும் சொல்லிவிட்டார்கள். யாவரும் கைவிட்டபின், போலீஸ் மேலதிகாரி என்னை யழைத்து, "நீ இதைக் கண்டுபிடித்தால் உனக்குப் பெரிய உத்தியோகம் கொடுக்கும்படி செய்கிறேன்"

என்றார். நான் அவ்வுத்தரவைப் பெற்று, அனுபவப்பட்டவர்களெல்லாம் தங்களால் முடியாதென்றபின் நாம் எவ்விதங் கண்டுபிடிக்கப்போகிறோம் என்ற கவலையோடு நெடுநாள் அநேக விடங்களுக்குச் சென்று விசாரித்துப் பார்த்தும் பயன்படாமல், இனி நம்மாலும் முடியாதென்று சொல்லிவிட வேண்டுமென்று எண்ணியிருந்து, ஒருநாள் பெரிய சேலத்தில் காசுக்கடை மார்க்கமாகப் போய்க் கொண்டிருந்தேன். போகும்பொழுது, ஒரு கடைக்காரன் பத்து பவுனில் செய்த ஒரு கொலுசை நிறுத்துக் கொண்டிருந்தான். கெடியார சங்கிலி வாங்குதலான விருப்பம் இருந்ததால், நான் அக்கடைக்குச் சென்று சங்கிலியைப் பார்த்து, "இது விற்கிற உடைமையோ?" என்று கேட்டேன். கடைக்காரன் ஆம் என்றும் தான் முதலில் விலைபேசி வாங்கிக்கொண்டபின் தருகிறேன் என்றும் எனக்குச் சொல்லிவிட்டு, கொலுசைக் கொண்டு வந்தவனிடம் விலை கேட்டுக்கொண்டிருந்தான். அவன் "நீர் நிறுத்துப்பார்த்து உள்ள நிறைக்கு விலைகொடும்" என்று கடைக்காரனைக் கேட்டான். கடைக்காரன் "இது ஐந்து பவுன் நிறையிருக்கிறது" என்றான். அவன் "உள்ள நிறைக்குத்தானே பணம் கொடுப்பீர்கள். பணங் கொடுங்கள்" என்றான். எனக்கு ஸந்தேகம் தோன்றி, "இது உன்னுடைய நகையல்லவா? எவ்வளவுக்குச் செய்ததென்பது உனக்குத் தெரியாதா?" என்றபொழுது "அது என்னுடையதல்ல. என் வீட்டில் வந்திருப்பவர்களில் ஒருவர் விற்றுவரச் சொன்னார்" என்று சொன்னான். இது திருட்டு நகையா யிருக்கக்கூடுமென்று ஸந்தேகந் தோன்றி, "நகை விற்கச் சொன்னவரைக் காட்டு" என்று நகையோடு அழைத்துக்கொண்டு போகும்பொழுது, அம் மார்க்கம் சென்ற போலீஸ் சேவகனை என்னோடு வரும்படி ஜாடைகாட்டி, நகை விற்கவந்தவன் இருப்பிடம் சென்

றேன். அங்கு ஐந்து பேர் வார்த்தையாடிக்கொண்டிருந்த வர்கள், என்னையும் நகை விற்க வந்தவனையும் பார்த்து, "என்ன என்ன?" என்றார்கள். நான் அவர்களைப் பார்த்து "இந்த தொலுசை நான் வாங்கிக்கொள்ளப் பிரியப்படு கிறேன்" என்றேன். அவர்களில் ஒருவன் "இதைக் காசுக் கடையில் நிறுத்துப்பார்த்து உள்ள நிறைக்கு விலை கொடுங்கள்" என்றான். நான் காசுக்கடையில் நிறுத் துப் பார்த்தேன். ஐந்து பவுன் நிறை யிருக்கிறது" என் றேன். அவன் "உள்ள நிறைக்கே பணம் கொடுப்பீரல் லது அதிகமாகக் கேட்டால் கொடுப்பீரா? நீர் அதன் விலை யைக் கொடுத்தனுப்புங்கள்" என்றான். "நீர் காசுக்கடைக்கு வந்தால் மற்றோர் முறை நிறுத்துப்பார்த்து விலை கொடுக் கிறேன் வாரும்" என்றழைத்ததற்கு, அவன் "வர முடியாது. எங்களுக்கு ஓர் அவசரமான வேலை யிருப்ப தால், இவனிடத்திலேயே கொடுத்தனுப்புங்கள்" என் றான். எனக்கு அவர்கள்மேல் ஸந்தேகம் அதிகம் தோன்றி, என்னோடு வந்து தூரத்தில் நின்றிருந்த சேவகனுக்கு போலீஸ் சேவகர் அதிகம் வேண்டுமென்று ஐந்து விர லைக் காட்டினேன். அவன் அக்குறியறிந்து (விஸ்லில்) சீக்காரம் செய்தான். அனேக சேவகர்கள் நானிருக்குமிடம் வந்து, என்ன என்றார்கள். நான் "இவர்கள் யாவரை யும் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துவாருங்கள்" என்று கட்டளையிட்டேன். அவர்களைப் போலீஸ் சேவகர்கள் கூப்பிட்டும் வாராமல் தடங்கல் செய்ததைக் கண்டு, அவர் களை பயமுறுத்திப் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போய்ப் பரிசோதனை செய்ததில், அவர்களிடத்திலிருந்து விலையுயர்ந்த நகைகள் அனேகம் அகப்பட்டன. இவ்வித நகைகள் ஏதாகிலும் திருட்டுப்போ யிருக்கிறதோ என்று புத் தகங்களைப் பார்த்ததில், அந்த நகைகள் யாவும் தீவட்டிக் கொள்ளையில் ஸம்பந்தப்பட்டவைகளாகத் தெரியவந்தன.

அதன்மேல் அதிக தைரியம் உண்டாய், அவர்களிடத்தி லிருந்து உண்மையை வெளிப்படுத்தி, அவர்களோடு சேர்ந் திருந்த பன்னிருவரில் பதின்மரைப் பிடித்து விலங்கிட்டுக் காவலில் வைத்திருந்தோம். மற்றிருவரும் அகப்படாமல் கவலையுற் றிருந்தபொழுது, அன்னியனொருவன் என்னி டத்தில் வண்டியோட்டும் வேலையில் அமர்ந்திருந்தான். ஒருநாள் அவன் என்னிடம் வந்து, "தாதகாபட்டிக் கருகில் ஒரு பெண் பிள்ளை இருக்கிறாள். நீங்கள் தேடிக் கொண்டிருக்கும் இருவரையும் அவள் மூலமாய்க் கண்டு பிடிக்கலாம்" என்று எனக்கு அனுகூலஞ் செய்வது போல் ஆசையுண்டாக்கி, என்னை வண்டியோடு மாலை ஏழு மணிக்கு அழைத்துச் சென்று வண்டியை மார்க்கத்தில் நிறுத்திவிட்டு, ஸமீபத்தில் வீடிருக்கிறதென்று காட்டுக்குள் அழைத்துப்போனான். காட்டுக்குள் பதிவிருந்த இருவர், நான் அறியாவிதம் எனக்குப்பின் வந்து என்னைப் பிடித் துக்கொண்டு, "இவனைக் கொன்றுவிட்டால் அகப்பட் டிருக்கும் யாவருக்கும் அனுகூலமாகும்" என்று என்னைக் கண்டவிதம் பேசி, மூவரும் என்னைத் தள்ளிக்கொண்டு போகும்பொழுது, நான் என்னுடைய ஆயுள் இன்றோடு முடிந்ததென்று நினைத்திருந்தேன். அப்பொழுது மற் றொருவன் ஓடிவந்து அம்மூவரையும் முகத்தில் குத்தி, மரணமூர்ச்சையோடு நிலத்தில் சாயவிட்டு என்னுயி ரைக் காப்பாற்றினான். அவன் சற்று நேரம் வராம லிருந்தால் என் காலம் முடிந்திருக்கும். அவன் எனக்கு உயிர்பிச்சை கொடுத்ததோடு எனக்கு முதல் வகுப்பு இன்ஸ்பெக்டர் வேலையும் கிடைக்கும்படி உதவி செய் தான். எனக்கு இதைச் செய்த புண்ணியவான் இவரே (என்று ஞானசம்பந்தத்தைக் கட்டிப் பிடித்துக்கொண்டு முகமெல்லாம் முத்தங் கொடுத்தார்). இவரல்லவா என் குலதெய்வம், திருச்செங்கோட்டி லிருந்தபொழுது, "இக்

கடிதம் கொடுக்கும் பெண்மணி விரும்பியவிதம் செய்து எனக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று நான் இவர் விரும்பியவிதம் எழுதிக்கொடுத்த சில வரிகளோ என்னை இவருடைய குலதெய்வ மாக்கும்? தம்பீ! நீர் செய்ததை எக்காலத்தும் நான் மறக்கேன்.

முத்துவேலு பிள்ளை.—சுவாமி! தங்களைக் கொல்லப்போனதைத் தடுத்தாரென்றதை ஒப்புக்கொண்டாலும், தங்களுக்கு உயர்வான உத்தியோகங் கிடைக்கும்படி இவர் செய்தா ரென்றது பொருத்தமாகக் காணவில்லை (என்று நகைத்தார்).

சுந்தரம் ஐயர்.—ஐயா! அந்த தீவட்டிக்கொள்ளைக் கேஸை ஒருவரும் கண்டுபிடிக்காமல் கைவிட்டபின், நான் எல்லாங் கண்டுபிடித்தாலும், அகப்படாமலிருந்த முக்கியமான இருவரையும் இவர் அடித்து மூர்ச்சையாக்கியதால், அவர்களும் அகப்பட்டு யாவரும் தண்டனை யடைந்தார்கள். அக்காலம் இவர் அவ்விருவரையும் அடித்திராமற் போனால், எனக்கு அவர்கள் அகப்படமாட்டார்கள். எனக்கு உயர்வான உத்தியோகம் கிடைத்திராது.

ஞானசம்பந்தம்.—தாங்கள் நெடுநேரம் ஒன்றுக்கும் உதவாத என்னை உயர்த்திப் பேசிக்கொண்டிருந்தீர்கள். நான் தங்களைத் திருச்செங்கோட்டில் கண்டபொழுது அதிக அன்பு பாராட்டி, விசாலாக்ஷி யம்மாளுக்கு ஆகவிருந்த விவாகத்தை நிறுத்திவிட நான் என் தங்கையைக் கண்டு சொல்லியதற் குடன்பட்டு என் இஷ்டப்பிரகாரம் கடிதங் கொடுத்து என் தங்கையைக் காப்பாற்றினீர்கள். தாங்கள் என் விஷயத்தில் முன் செய்த உபகாரமே போதுமென்றிராமல், பேராசையோடு தங்களிடத்தில் வேறோருபகாரத்தையும் எதிர்நோக்கித் தங்களை இப்பொழுது அழைத்து வந்தேன். (என்று தாமோதரம் பிள்ளையும் துரைசாமி பிள்ளையும் சேர்ந்து செய்திருந்த அக்கிரமங்களைத் தான்

கேட்டிருந்தவிதம் சொல்லி) இது விஷயத்தில் தாங்கள் வேண்டியதைச் செய்யவேண்டும்.

சுந்தரம் ஐயர் தன்னோடு வந்திருந்த சேவகனை தாமோதரம் பிள்ளையை அழைத்துவரச் சொல்லியனுப்பினார். இலக்கையபிள்ளை துரைசாமியால் நடந்தது யாவும் சொல்ல, சுந்தரம் ஐயர் கேட்டு, "இவ்விதமான கொலைபாதகனும் இருப்பானா? முதல் தாரத்தின் பிள்ளை, தகப்பன் விஷயத்தில் செய்ததைப் பார்த்தீர்களா?" என்று சொல்லும்பொழுது, தாமோதரம் பிள்ளை வந்தார்.

**சுந்தரம் ஐயர்.**—(அவரை உட்காரச்சொல்லி) இங்கிருப்பவர்களெல்லாம் உமக்குத் தெரியுமா?

**தாமோதரம் பிள்ளை.**—(காமாக்ஷியம்மாளைக் காட்டி) இந்தம்மாள் துரைசாமி பிள்ளையின் சிறிய தாயார். இவர் சேலத்திலிருந்து வந்திருக்கும் முத்துவேலு பிள்ளை. இவர் அவருடைய குமாரன் (என்று ஞானசம்பந்தத்தைக் காட்டினார்). மற்றவர்கள் இன்னாரென்பது தெரியாது."

**சுந்தரம் ஐயர்.**—ஐயா! தாமோதரம் பிள்ளை! இறந்துபோனாரென்று எண்ணியிருந்த துரைசாமி பிள்ளையின் தந்தை இவரே! இவர் நெடுநாள் இரங்கூனிலிருந்து இரண்டு மூன்று லக்ஷத்துக் கதிகாரியாய் இங்கு வந்து இவ்வீட்டை விலைக்கு வாங்கியிருக்கிறார். கும்பகோணத்து மாமாங்கத்துக்குப் போயிருந்து குழந்தைகள் வாந்திபேதியால் இறந்துவிட்டார்களென்று துரைசாமி பிள்ளை சொல்லியவிதம் அவர்கள் இறந்துபோகாமல் உயிரோடிருக்கிறார்கள். நீர் இந்தம்மாளிடம் இருபது காணி நிலத்தை ஈடுகட்டிக்கொண்டு ஐயாயிரத்துக்கு எழுதி வாங்கியிருப்பதோடு, இந்தம்மாளுடைய நகைகளையெல்லாம் வைத்திருக்கிறீராமே. அதனுடைய விவரம் என்ன?

தாமோதரம் பிள்ளை, இடியோசை கேட்ட நாகம்போல் பயந்து, வாய்குளறி "சுவாமி" என்று மற்றதைச் சொல்லுமுன்—

**சுந்தரம் ஐயர்.**—ஓய் ! தாமோதரம்பிள்ளை ! நீர் பத்திரம் எழுதி வாங்கும்பொழுது ஞானசம்பந்தம் பிள்ளையை ஸாக்ஷி கை எழுத்துப் போடச் சொன்னதும், அவர் மறுத்ததற்கு துரைசாமி பிள்ளை வேறொருவரிடம் கையெழுத்து வாங்கிக் கொடுக்கிறேன் என்று உம்மை அழைத்துப் போனதும், இந்தம்மாளிடம் பணம் ஒன்றும் கொடுக்காம லிருந்ததும், "மாசூலை இந்தம்மாளே வாங்கிக்கொள்ள வேண்டும். என்றால் அதை வசூல் செய்ய முடியாது. ஒப் புக்கு நான் எழுதி வாங்கிக்கொள்ளுகிறேன்" என்று பத்திரத்தில் எழுதியிருப்பதும், பின் முத்துவேலு பிள்ளை யிடம் மோராமாலை விலைக்குக் கொடுத்ததும், அது தனக்கு வேண்டுவதில்லை யென்று ஞானசம்பந்தம் பிள்ளையிடம் கொடுத்தனுப்பியதும், உம்முடைய வீட்டுக்கு ஞானசம்பந் தம் பிள்ளை வந்தபொழுது உம்முடைய வீட்டிலுள்ளவர்கள் நீரொருவருடன் பேசிக்கொண்டிருந்ததனால் அது முடி யுந்தனிலும் அவரை உம்முடை திண்ணையில் உட்கார வைத் ததும், அவர் நீங்கள் பேசுவதையெல்லாங் கேட்டிருந்து உம்மைப் பார்க்காமல் வந்து தங்களுக்கு மோராமாலை வேண் டியதில்லை யென்று கொடுத்துவிட்டதும், யாவருக்கும் தெரிந்ததே. நீர் இது விஷயத்தில் அதிக ஜாக்கிரதையாகப் பேசவேண்டும். நீர் உண்மையைவிட்டு உம்முடைய கையி லகப்பட்டதை அபகரிக்க எண்ணங் கொள்ளுவீராகில், உமதுமேல் அனேக குற்றங்களைச் சுமத்தி உம்மை நியாய ஸ்தலத்துக் கிழுத்து உமக்கிருக்கும் பொருள் முற்றிலும் தொலைந்துபோகச் செய்து, உம்மைச் சிறைச்சாலை போய்ச் சேரும்படியும் செய்துவிடுவேன். அற்பத்துக்கு ஆசை பட்டு அளவிறந்ததைத் தொலைத்துவிடவேண்டாம். உண் மையைச் சொன்னால் உமக்கு நட்டம் வராமல் நான் பார்த் துக்கொள்ளுகிறேன்.

**தாமோதரம் பிள்ளை.**—(சுந்தரம் ஐயர் சொல்லியதை யெல்லாம்

கேட்டு, "எல்லாம் இவருக்குத் தெரிந்திருக்கிறது. நாம் மோசஞ்செய்ய யோசித்தால் ஒன்றும் பயன்படாமல் நமது கைப்பொருளையே இழக்கவேண்டி வரும். அல்லாமலும் போலீஸாருடைய பகை இருந்தால் நம்மை விசாரணையில் கெடுத்து விடுவதோடு சிறையிலும் போட்டுவிடுவார்கள்" என்றெண்ணி, ஐயரைப் பார்த்து), சுவாமி! தன் சிற்றன்னை தன்பேரிலிருக்கும் நிலத்தை பாருக்காகிலும் கொடுத்துவிடுவார்களென்றும், அந்நிலத்தை ஈடுகாட்டி எழுதி வாங்கிக்கொண்டால் அது வேறொருவரிடம் போக நியாயமில்லை யென்றும் என்னிடம் சொல்லி, துரைசாமி பிள்ளை என்னை எழுதி வாங்கிக்கொள்ளச்சொன்னார். நான் முதவில் ஸம்மதிக்காமலிருந்ததை அறிந்து வேறு யாரைக் கொண்டாவது செய்துவிட வேண்டுமென்று சொன்னதால், நான் பரிதாபப்பட்டு இது யாரிடத்திலாவது போனால் அவர்கள் நசுக்கொள்ளையாடிவிடுவார்களென்றெண்ணி, நான் ஒப்புக்கொண்டு எழுதி வாங்கிக்கொண்டேன். மேலும் அவர் தன் பேரிலுள்ள நிலத்தைக் குறைந்த விலைக்கு விற்று விடுவதாக யோசித்திருப்பதை அறிந்து, நானே அதையும் வாங்கி வைத்திருப்பதோடு, அவர் கையிலிருந்த நகைகளையெல்லாம் வாங்கி வைத்திருக்கிறேன். அவர் எனக்குக் கைமாற்றாகக் கொடுக்கவேண்டிய தெல்லாம் ஆயிரத்தைந்நூற்றுக் கதிகம் இராது. அவருடைய இருபதுகாணி நன்செய் நிலத்தை எழாயிரத்துக்கு வாங்கியிருக்கிறேன். இவைகளை எப்பொழுது கேட்டாலும் கொடுத்துவிட சித்தமாயிருக்கிறேன். அம்மாள் பேரிலுள்ள நிலத்தில் கிடைத்த மாசூலை வசூல் செய்து துண்டாக வரவு வைத்திருக்கிறேன். நான் ஒருவருடைய சொத்தை அபகரிக்க எண்ணங் கொள்ளவில்லையே.

**சுந்தரம் ஐயர்.**—(தியாகராஜ பிள்ளையைப் பார்த்து) ஐயாவே! தாமோதரம் பிள்ளை மிக்க யோக்கியர்! தங்களுடைய

இஷ்டத்தைச் சொன்னால் அவர் அதுபோலவே செய்வார்.

**தியாகராஜ பிள்ளை.**—ஆம்! தாமோதரம் பிள்ளை மிக்க யோக்கியராகவே காண்கிறார். அவரை நஷ்டப்படுத்த எனக்கு மனமில்லை. அவரிடத்தி லிருப்பவைகளைக் கொண்டுவந்து கொடுத்தால், அவருக்குச் சேரவேண்டியதைக் கொடுத்து விடலாம்.

**சுந்தரம் ஐயர்.**—ஐயா! தாமோதரம் பிள்ளை! உம்முடைய நற்குணத்தைக் கண்டு அதிக ஸந்தோஷம் அடைந்தேன். ஐயா அவர்கள் இஷ்டப்பிரகாரம் கணக்குப் புத்தகங்களோடு வந்து உமக்குச் சேரவேண்டியதைப் பெற்றுக்கொள்ளும். தாமோதரம் பிள்ளை விரைவில் வருவதாக நீங்கினார்.

**முத்துவேலு பிள்ளை.**—தாமோதரம் பிள்ளை துரைசாமி பிள்ளையிடம் வாங்கிய நிலத்தைக் கொடுத்துவிடுகிறேன் என்றதின் கருத்தே எனக்கு விளங்கவில்லை.

**தியாகராஜ பிள்ளை.**—என்பேரிலிருந்த நிலத்தை துரைசாமிக்கு இனும் சாதனமாக எழுதிவைத்தேன். அதை என் காலத்தில் விற்கக்கூடாதென்றும், அப்படி விற்றால் அது என்னைச் சேர்ந்துவிடவேண்டுமென்றும் எழுதியிருப்பதால், என்னை தாமோதரம் பிள்ளை பார்த்து பயந்துவிட்டார். நாம் அவரை நஷ்டப்படுத்தாமல் அவர் துரைசாமிக்குக் கொடுத்த தொகையைக் கொடுத்துவிடவேண்டும்.

இங்கு இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டிருக்க தாமோதரம் பிள்ளை நேராக துரைசாமி பிள்ளை வீட்டுக்குச் சென்று அவரை அழைத்தார்.

துரைசாமி வெளியில் வந்து, "வாரும்! வாரும்! ஏது அத்தி பூத்ததுபோல் வந்தீர்" என்று வீட்டுக்குள் அழைத்துச் சென்றார்.

**தாமோதரம் பிள்ளை.**—இறந்து போனாரென்ற உமது தந்தை உயிரோடு வந்திருக்கிறாரே! அவரைப் பார்த்தீரா?

துரைசாமி பிள்ளை.—ஆம்! ஆம்! பார்த்தேன். அந்தக் கிழவன் என்னிடம் வந்து என்னோ டிருக்கவேண்டு மென்றும், தன் மனைவியை அவள் தாய்வீடு அனுப்பிவிட ஐந்து ரூபா வேண்டுமென்றும் கேட்டான். நான் ஒன்றுங் கொடுக்காமல் துரத்திவிட்டேன் (என்று நகைத்தான்).

தாமோதரம் பிள்ளை.—நல்ல வேலை செய்தீர்! ஆண்டாத் தெருவிலுள்ள பெரிய மெத்தை வீட்டை யார் விலைக்கு வாங்கினார்களென்பது உமக்குத் தெரியுமா?

துரைசாமி பிள்ளை.—யாரோ ஒருவர் இரங்கூனி லிருப்பதாகவும் அவருக்காக ஒரு செட்டியார் வாங்கினதாகவும் கேள்வி அது பொய். முத்துவேலு பிள்ளையே அவ்வீட்டை வாங்கியிருக்கிறானென்றோ சொல்லப்போகிறீர்? அவனிடத்தில் அவ்வளவு தொகை ஏது?

தாமோதரம் பிள்ளை.—நீர் எனக்கு முன்னால் ஓடவேண்டாம். அன்று நாம் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, பித்தளைப் பிடிகள் போட்ட பெட்டிகளும் ஸாமான்களும் அனேக வண்டிகளில் போனதே, அது யாருடையதென்பது உமக்குத் தெரியுமா?

துரைசாமி பிள்ளை.—நாட்டுக்கோட்டைச் செட்டியா ரொருவர் கொண்டுபோனார். ஆனதால் அப்பெட்டிகள் அவருக்குச் சொந்தமாக இருக்கலாம்.

தாமோதரம் பிள்ளை.—ஆண்டாத்தெருவில் மெத்தை வீட்டை வாங்கியவரும் அந்தப் பெட்டிகளுக்கும் ஸாமான்களுக்கும் சொந்தக்காரரு மாகியவர் உம்முடைய தந்தை தியாகராஜ பிள்ளை யென்று அறியும்.

துரைசாமி பிள்ளை.—ஐயா! நீர் கனவு கண்டீரா? கிழிந்த ஆடையோடு என்னிடம் வந்து போனவனைப் பெரும் பணக்காரனாக்கிவிட்டீர். அவ்விதம் அவன் பெரும் பணக்காரனாயிருந்தால், எனக்கு ஸந்தோஷமே! பெரும் பணக்காரனை

என்னிடத்தில் ஐந்து ரூபாவுக்கு கெஞ்சினான் (என்று தன் தேகங் குலுங்க நகைத்தான்).

**பார்வதி.**—(இவர்கள் பேசுவதை அருகில் நின்று கேட்டிருந்து) அண்ணன் கனவே கண்டு வந்திருக்கிறார் (என்று தானும் நகைத்தாள்).

**தாமோதரம் பிள்ளை.**—நான் கனவுகண்டு வரவில்லை. நான் பெட்டிகளைப் பார்த்து வந்திருக்கிறேன். நீங்கள் உண்மையை அறியாமல் மோசம்போனீர்கள். உம்முடைய தந்தை உயிரோ டிருக்குந்தனையும் உமது பேராலாகிய நிலத்தை விற்கக் கூடாதபடி நிலசாஸனத்தில் கண்டிருக்கிறது உமக்கு கியாபகத்தி லிருக்கிறதா? உமது தந்தை இரண்டு மூன்று லக்ஷத்திற் கதிகாரியாக வந்து தன் மனைவியின்பேரிலிருக்கும் நிலப்பத்திரத்தையும், அந்தம்மாளுடைய நகைகளையும் கேட்கிறார். நீர் என்னசொல்லுகிறீர்?

**துரைசாமி பிள்ளை.**—கிழவன் லேசானவனென்று நினைக்க வேண்டாம். அவன் உம்மை ஏமாற்றப் பார்க்கிறான். நீர் ஒன்றையும் அவனிடத்தில் காட்டவேண்டாம். ஐந்து ரூபாவுக்கு கெஞ்சியவன் பெரும் பணக்காரனாய்விட்டான்! போம்!! போம்!! (என்று மீண்டும் தேகங்குலுங்க நகைத்தான்).

**பார்வதி.**—என்ன சொன்னீர்கள்! நிலத்தையும் நகைகளையும் கேட்கிறாரா! துடைப்பக்கட்டைப்பூசை கிடைக்குமென்று சொல்லிவிடுங்கள்.

**தாமோதரம் பிள்ளை.**—தியாகராஜ பிள்ளை உங்கள் மனதை யறிய நிர்ப்பாக்கிய ஸ்திதியி லிருப்பவர்போல் அபிநயித்து வந்து போனார்போல் காண்கிறது. உமது தந்தை இன்ஸ்பெக்டர் சுந்தரம் ஐயரோடிருந்து, யாவையுங் கண்க்கோடு கொண்டுவரச் சொன்னார். நான் உம்மிடத்தில் சொல்லிப்போகலாமென்று வந்தேன். நீங்கள் உங்கள் பிள்ளைகளோடு சென்று அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்

டுக்கொள்ளுங்கள். உங்களுடைய சொல்லைக் கேட்டுக் கொண்டிருந்தால் என் கழுத்துக்கே கயிறு வந்துவிடும். கும்பகோணத்தில் ஞானசம்பந்தத்தை ஓர் கடைக்கருகி லும் ஆநந்தவல்லியை ஓர் பெண்பிள்ளையிடத்தும் விட்டு வந்து அவர்கள் இறந்து விட்டார்களென்று சொல்லி விட்டீர். இப்போது உமது தம்பியும் தங்கையும் அவர்கள் தாய் தந்தையைச் சேர்ந்திருக்கிறார்கள். நீங்கள் போய் உங்கள் கண்குளிரப் பாருங்கள் (என்றுசொல்லி நீங்கினார்).

அதைக் கேட்டவுடன் பார்வதி திடுக்கிட்டாள். துரை சாமி பிள்ளை மெய்மறந்து விழித்த கண் இமைக்காதிருந்தான்.

அரைமணி நேரத்துக்குப்பின் தாமோதரம் பிள்ளை தன் னிடமிருந்த நகைகளையும், பத்திரங்களையும் கணக்குப் புத்தகத் தையும் எடுத்துக்கொண்டு சென்று, தியாகராஜ பிள்ளையிடம் கொடுத்து, தனக்குக் கிரமமாகக் கிடைக்கவேண்டியதைச் சொன் னார். தியாகராஜ பிள்ளை தன் கணக்கப்பிள்ளையை அழைத்து, தாமோதரம் பிள்ளைக்குக் கொடுக்கவேண்டியதைக் கொடுத்தனுப் பச் சொன்னார்.

**சுந்தரம் ஐயர்.**—தாமோதரம் பிள்ளை! துரைசாமி பிள்ளை போாலிருக்கும் நிலத்தை நீர் வாங்க நியாயமில்லை. ஆயி னும் நீர் நட்டமடையாவண்ணம் ஐயா அவர்கள் அத்தொ கையைக் கொடுத்துவிட உத்தரவு செய்துவிட்டார். நீர் காலம் போக்காமல் நிலத்தை உம்முடைய பெயரிலிருந்து மாற்றிவிடவேண்டும்.

**தாமோதரம் பிள்ளை.**—அதை முதலில் செய்துவிட்டு மறு வேலை பார்க்கிறேன். (என்று கணக்கப்பிள்ளை கொண்டு வந்து கொடுத்த தொகையைப் பெற்று நீங்கினார்).

**தியாகராஜ பிள்ளை.**—(தாமோதரம் பிள்ளை கொடுத்துப்போன நகைகளில் மோாமாலையை எடுத்து விசாலாக்ஷி யம்மாளை அழைத்து அவள் கழுத்தில் போட்டு), இதை உன் தாய்

தந்தை வாங்கி உனக்கணிய யோசித்தார்கள். ஆதலால் நீயே இதைப் போட்டுக்கொள் (என்றார்).

**இராமன் செட்டியார்.**—நீ உன் குமாரத்திக்கு ஒன்றும் போடாமல் உன் மருமகளுக்குப் போட்டாயே! அது நியாயமா?

**தியாகராஜ பிள்ளை.**—எஜமானே! என் குமாரத்திக்குப் போட வேறு நகைகள் வைத்திருக்கிறேன்.

என்று தன் கணக்கப்பிள்ளையை அழைத்து நகைப் பெட்டிகளையும் வஸ்திரங்களடங்கிய பெட்டிகளையும் கொண்டு வரச் செய்தார். தன் குமாரத்தியை அழைத்து இரண்டு பெட்டிகளைக் காட்டி, "இவ்விரண்டு பெட்டியும் உன்னுடையதே" என்று அதன் சாவிகளைக் கொடுத்தார். ஆநந்தவல்லி தன் தந்தைக்கு நமஸ்காரஞ் செய்து சாவிகளைப் பெற்று நின்றாள்.

**திரிபுரஸுந்தரம்.**—(சாவிகளை வாங்கி முதலில் நகைப்பெட்டியைத் திறந்து பார்த்து) இதில் வயிரக்கம்மல், வயிர புல்லாக்கு, வயிர மூக்குத்தி, வயிர அட்டிகை, வயிரக்காப்பு, மோராமாலை, வயிரம் பதித்த ஒட்டியாணம், வயிரமோதிரங்கள் முதலியதும், வெள்ளியில் பாதசரம் சுருள்கொலுசு, மற்றின்னம் சில்லரை நகைகளும் இருக்கின்றன. (மற்றப் பெட்டியைத் திறந்து) இதில் விலையுயர்ந்த சேலைகள், இரவிக்கைகள், பாவாடைகள், தாவணிகள் முதலானதும் நிறைந்திருக்கின்றன. நான் இவைகளை உனக்கணிந்து சிங்காரிக்கிறேன் வா (என்று ஆநந்தவல்லியை அழைத்தாள்).

**அங்கயற்கண்ணி.**—நான் முன்னொரு தடவை ஆநந்தவல்லியைச் சிங்காரித்தேன். ஆதலால் இப்பொழுதும் நானே சிங்காரிக்கவேண்டும் (என்று ஆனந்தவல்லியை அழைத்துச் சென்றாள்).

**தியாகராஜ பிள்ளை.**—(தன் குமாரனைப் பார்த்து) தம்பி! ஞானசம்பந்தம்! அங்கிருக்கும் மூன்று பெட்டிகளும் உன்

னுடையவை. ஒரு பெட்டியில் உனக்கு வேண்டிய வைகள் இருக்கின்றன. மற்ற இரண்டு பெட்டிகளில் உன்னுடைய மனைவிக்கு வேண்டியவைகள் இருக்கின் றன (என்று அவைகளின் சாவிகளைக் கொடுத்தார். தன் மனைவியை அழைத்து), காமாக்ஷி! நான் உன்மேல் அருவருப்புக் கொண்டு போனதால் உனக்கு ஒன்றும் கொண்டுவரவில்லை. சிலவேளை நான் வேறு விவாகம் முடிக்கிறதானால் அவளுக்கு வேண்டுமென்று இரண்டு பெட்டிகளைக் கொண்டுவந்தேன்! ஆனதால் அப்பெட்டின் சாவிகளை நீ ஒப்புக்கொள் (என்று நகைப்புடன் இரண்டு சாவிகளையும் தாமோதரம் பிள்ளை கொண்டுவந்து கொடுத்த நகைகளையும் கொடுத்தார்).

காமாக்ஷியம்மாள் அவைகளை இருகைகளாலும் வாங்கிக் கொண்டாள்.

**சுரும்பாயி யம்மாள்.**—அத்தான் தங்களுக்கென்ன கொண்டு வந்தார்கள் பார்க்கலாம் என்று (பெட்டியைத் திறந்து) தங்களுக்கும் எல்லாம் வயிரத்தாலேயே செய்த நகைகளைக் கொண்டுவந்திருக்கிறார். ஆ! இதென்ன முழுப்பவுனில் மாலை செய்திருக்கிறதே. இதைச் சுமக்கிற தெப்படி! (என்று நகைத்தாள்).

**இராமன் செட்டியார்.**—ஆத்தா! முழுப்பவுன் மாலையையா சுமக்கமுடியா தென்கிறீர்கள்? குழவிக்கல் பருமன் நற்பச் சைகள் அகப்பட்டு அவைகளைத் தாயித்துபோல் இருபக்க மும் தங்கத்தால் மூடிக் காதுவைத்துக் கொடுத்தால் அவைகளையும் போட்டுக்கொள்வீர்களே! குற்றஞ்செய்த ஒரு பெண்பிள்ளையை தண்டிக்க வேண்டுமாயின் எங்க ளிடத்திலிருக்கும் கழுத்திருகல் என்ற நகையை ஒருமணி நேரம் அவள் கழுத்தில் போட்டுவைத்தால் அது போது மான தண்டனையாகும் (என்று நகைத்து) தம்பி! உன் மருமகளுக்கு என்ன கொண்டுவந்தாய்?

**தியாகராஜ பிள்ளை.**—எஜமானே ! என் குமாரத்திக்கும் என் மனைவிக்கும் கொண்டுவந்ததுபோல், என் மருமகளுக்கும் கொண்டுவந்தேன். என் குமாரனுக்குமட்டும் அதிகம் கொண்டுவராமல் ஓர் ஜதை வயிரக்கடுக்கனும், கைக்கு கெட்டிக்காப்பும், ஓர் வயிர மோதிரமும், கைக் கெடியார மும் அதற்கோர் சங்கிலியும், உடுப்புகள் தைத்துக்கொள் ளப் பட்டுகளும் கொண்டுவந்தேன்.

சு மாக்ஷியம்மாள், ஞானசம்பந்தத்தினிடம் கொடுத்த நகைப்பெட்டியைத் திறந்து, அதிலுள்ள நகைகளை யெல்லாம் விசாலாக்ஷிக்கணிந்து, அவளை ஆநந்தவல்லியோடு அழைத்து வந்து யாவருக்கும் முன்விட்டு, நமஸ்காரஞ் செய்துகொள்ளச் சொன்னாள்.

அது ஸமயத்தில் மூவர் படிக்கட்டேறி வருவதை முத்துவேலு பிள்ளை பார்த்து "வருக ! வருக !" என்று முகமன் கூறி, தியாகராஜ பிள்ளையைப் பார்த்து "இவரே தங்களுடைய ஸம்பந்தி ! அந்தம்மாள் இவருடைய மனைவி. அவரே தங்களுடைய மருமகப்பிள்ளை" என்றார். தியாகராஜ பிள்ளை எழுந்து அவர்களுக்கு முகமன் கூறி, "அம்மா ! ஆநந்த வல்லி ! நீ இவர்களுக்கு நமஸ்காரம் செய்துகொள்" என்றார். ஆநந்தவல்லி நமஸ்காரம் செய்து தலைகுனிந்து நின்றாள். வந்த மூவரும் அவ்விடத்திலிருக்கும் பெண் பிள்ளைகளை யெல் லாம் பார்த்து, "பாலம்பாள் எங்கே ?" என்று கேட்டார்கள்.

**தியாகராஜ பிள்ளை.**—சேலத்தில் கத்தரிக்காய் விற்றுக்கொண் டிருந்த பாலம்பாள் என்ற பெண்ணை விவாகஞ் செய்த பின் உங்களுக்கு மனச்சலிப்பு உண்டானதாகக் கேள்விப் பட்டு, அப்பெண்ணை நீக்கி, உங்களெதிரில் நிற்கும் என் குமாரத்தி ஆநந்தவல்லியைக் கொடுத்துவிடலாம் என்று நினைத்திருக்கிறேன் (என்றார். யாவரும் கலீரென்று நகைத்தார்கள்).

திருஞானம் ஆனந்தவல்லியை கவனித்துப்பார்த்துத் தன்

மனைவியென்றறிந்து, தன் மாமனார் காலில் விழுந்து நமஸ்காரம் செய்து, "நான் அறியாமற்செய்த குற்றங்களை மன்னிக்க வேண்டும்" என்றான். தியாகராஜ பிள்ளை தன் மருமகனுக்கு ஆசிகூறித் தூக்கிவிட்டார். திருஞானத்துக்கு முத்துவேலுபிள்ளை காமாக்ஷியம்மாளைக் காட்டி, "அவர்கள் உன் மாமியார்" என்று ரகசியமாக சொன்னார். திருஞானம் தன் மாமியார் காலில் விழுந்து நமஸ்காரம் செய்து "என்னை மன்னிக்கவேண்டும்" என்று வேண்டினான். அவளும் ஆசி கூறினாள்.

**திருஞானம்.**—(முத்துவேலு பிள்ளையை அடுத்து), நாங்கள் இன்று பாலம்பாளின் தாய் தந்தை தமயன் வந்திருக்கிறார்களென்று உறையூரில் அகஸ்மாத்தாய்க் கேள்விப்பட்டு வந்தோம். இங்கு வந்தபின் பாலம்பாளின் பெயர் ஆநந்தவல்லி என்றறிந்தோம். அவளுடைய ஸகோதரன் எங்கே? அவரைக் காட்டவேண்டும் (என்று கெஞ்சினான்).

**முத்துவேலு பிள்ளை.**—தம்பி! நீ இதுநாள் என் மகனென்று நினைத்திருந்தவனே உன் மைத்துனன். அவன் பெயர் வடிவேலு அல்ல. அவன் பெயர் ஞானசம்பந்தம்.

**திருஞானம்.**—(அதைக்கேட்டவுடன் திகைத்து, தன்னைத்தானே தைரியப்படுத்திக்கொண்டு ஞானசம்பந்தத்தின் அருகில் சென்று, அவன் இருகரங்களையும் பிடித்துக்கொண்டு), மைத்துனரே! நான் உமக்குச் செய்த தீங்குகளை மன்னிக்கக்கூடுமோ (என்று கண்கலங்கினான்).

**ஞானசம்பந்தம்.**—மைத்துனரே! உம்முடைய நற்குணங்களை நன்றாய் அறிவேன். நீர் துரைசாமி பிள்ளை, அப்பாசாமி பிள்ளை இவர்களிடத்தில் "நம்மைப்போல் அவனும் வாலிபன். அவன் ஆயுளைக் குறைக்கக்கூடாது" என்று சொன்னதை என் தங்கையின் உதவியால் நான் நேரில் நின்று கேட்டிருந்தேன். ஆனதால் நீர் ஒன்றுக்கும் கவலை கொள்ளவேண்டாம் (என்று அவன் கவலையை நீக்கினான்).

**தியாகராஜ பிள்ளை.**—(முத்துவேலு பிள்ளையைத் தனித்த இடத்

திற் கழைத்துப்போய்) மைத்துனரே! திருஞானத்தைக் கண்டபின் அவன் விஷயத்திலிருந்த அருவருப்பு நீங்கியிருக்கிறது. அவன் தன் மனைவியை வைத்து ஆதரிக்கத் தகுந்தவனு (என்று கேட்டார்).

முத்துவேலு பிள்ளை.—அவன் மிக்க யோக்கியன். அவனைக் கெடுத்ததெல்லாம் அவன் சிநேகன் அப்பாசாமியே யன்றி வேறொருவருமல்ல. அப்பாசாமி நடத்தை கெட்டதெனக் கண்டபின் திருஞானம் அவனோடு மீண்டும் சேருவானென்று நான் நினைக்கவில்லை. நாம் சிலநாள் திருஞானத்தை அப்பாசாமியுடன் சேரவிடாமல் பார்த்துக்கொண்டால், திருஞானம் நல்ல வழிக்கு வந்துவிடுவான். திருஞானத்தின் விஷயத்தில் ஓர் இரகசியம் இருக்கிறது. அதைத் தங்களிடத்திலிருந்து மறைத்துவைப்பது நியாயமல்ல. அவனுக்குக் காக்காய் வலிப்பு வருகிறது உண்டு. ஆயினும் காக்காய் வலிப்புள்ளவர்களுக்கு விவாகமானுல் அது நீங்கிவிடும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். முன் சிறுபிள்ளைத் தனமாய்த் தகாத காரியத்தைச் செய்தானென்று அவனைக் கோபித்து நீக்கிவிடுவது நலமல்ல.

தியாகராஜ பிள்ளை.—ஆம்! ஆம்!

"பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும்."

என்ற திருவள்ளுவர் வாக்கியத்தை யோசித்தால், நாம் அவனுடைய வயதில் என்னென்ன குற்றம் செய்தோமோ அவைகளை நினைப்புக்குக் கொண்டுவந்தால், நாம் ஒருவர் மேல் குற்றஞ்சொல்வது முடியாது (என்று முத்துவேலு பிள்ளையை வெளியி லழைத்துவந்தார்).

அப்போது இருவர் படிக்கட்டேறி வந்தார்கள். சாமியாராக இருந்த முருகேசம்பிள்ளை ஓடி, அவர்களுக்கு விழுந்து நமஸ்காரம் செய்து, "என்னை மன்னிக்கவேண்டும் மாமா, மாமி" என்று கண்ணீர் சொரிந்தார். அங்கயற்கண்ணி யம்மாளும் அவர்

களுக்கு நமஸ்காரஞ் செய்து எழுந்துநின்றாள். அவ்விருவரும் தங்கள் மருமகனுக்கு ஆசிகூறிப் பின் மகளைப் பிடித்தணைத்துக் கொண்டு, "மகளே! மகளே! உன் நாயகனைக் கண்டுபிடிக்கச் சன்னியாசி வேடத்தோடு சென்று அவரைக் கண்டுபிடித்து அவருக்கு சீடப்பிள்ளையாக இருந்ததாகக் கேள்விப்பட்டோம். அம்மணி! உனக்கெல்லா ஸுகமும் இருந்தும் அவைகளை வெறுத்து வெளியில் சென்றவள் என்னென்ன துன்பத்தை அனுபவித்தாயோ" என்று கதறினார்கள். அங்கிருந்த யாவரும் அவர்களுடைய துக்கத்தை மாற்றி ஸந்தோஷத்தோடிருந்தார்கள்.

**சுந்தரம் ஐயர்.**—ஐயாவே! எனக்கு உத்தரவு கொடுக்க வேண்டும். என்றால் ஆகவேண்டியதைத் தங்களுக்குச் செய்யக் காத்திருக்கிறேன் (என்று விடைபெற்று நீங்கினார்).

**தியாகராஜ பிள்ளை.**—(சுந்தரம் ஐயருக்கு விடை கொடுத்தனுப்பிய பின், முருகேசம் பிள்ளையைப் பார்த்து) தம்பி நீ என்றால் அதிக துன்பம் அனுபவித்துக்கொண் டிருக்கும்பொழுது, உன்மனைவி சீடப்பிள்ளையாக எவ்விதம் வந்து சேர்ந்தாள்? அதைத் சொல்லவேண்டும்.

**முருகேசம் பிள்ளை.**—அண்ணா! என் வரலாற்றை சீடனாகவிருந்த என் மனைவிக்குச் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுது தாங்கள் கேட்டிருந்தீர்கள். அங்கயற்கண்ணி வெளிப்பட்டதையும் அவள் என்னிடம் வந்து சேர்ந்ததையும் நாம் அவளால் அறியலாம், (என்று அங்கயற்கண்ணியை அழைத்தார்).

**அங்கயற்கண்ணி.**—(வந்து) ஏன் சாமி! அழைத்தீர்கள்? (என்று நகைத்தாள். யாவரும் நகைத்தார்கள்).

**தியாகராஜ பிள்ளை.**—அம்மா! அங்கயற்கண்ணி! உன் நாயகன் ஊரைவிட்டு நீங்கியபின் நீ எவ்விதம் வெளியேறினாய்? அதைக் கேட்கவே உன்னை அழைத்தோம்.

**அங்கயற்கண்ணி.**—அத்தான்! எனக்கு விவாகமானபின் என்

நாயகன் என்னைக் கருதாதிருந்ததால், என் தமக்கை அவரைக் கண்டு பேசியதைத் தாங்கள் குற்றமாகக் கொண்டு அவருடன் போராடி மாய்ந்தீர்களென்று நான் அடைந்த துக்கத்திற்கு அளவில்லை. என்னுடைய நாயகன் என்னை கவனிக்காமல் விட்ட குறைவால் என் தமக்கையின் குடும்பம் நிலை குலைந்ததென்று வியாகூலத்தால் என்னுயிரை விட்டுவிடுதல் உத்தமமென்றும் எவ்விதத்தில் இறக்கலாமென்றும் நெடுநாள் யோசித்து, அரளிவேரை அரைத்துக்குடித்து இறக்கலாமென்று இதை ரகசியமாகக் கொண்டுவந்து வைத்து ஸமயம் பார்த்துக் கொண்டிருந்தேன். அக்காலத்தில் திண்டுக்கல்லிலிருக்கும் வைத்தியரொருவர் எங்கள் வீட்டுத் திண்ணையில் வந்து உட்கார்ந்து பெருமூச்சு விட்டார். என் தாயார் அவரை "என் பெருமூச்சுவிட்டீர்கள்? என்ன ஸமாசாரம்?" என்று கேட்டார்கள். அவர் என் தாயாரைப் பார்த்து "என்ன அநியாயத்தைச் சொல்லுகிறது. அடுத்த தெருவில் மாமியார் கொடுமையை ஸகிக்க முடியாமல் ஒரு பெண் அரளிவேரை அரைத்துக் கரைத்துக் குடித்துவிட்டாள். அவளுக்கு வாந்தியும் பேதியும் ஆகிறது. என்னை அழைத்துப்போய்க் காட்டினார்கள். நான் அவளுக்கு அசங்கியமான வஸ்துவைக் கொடுத்துவந்தேன். இதைப் போலீஸார் அறிந்தால், அவள்மேல் குற்றஞ் சுமத்திச் சிறையிலும் போட்டுவிடுவார்கள். மாமியார் கொடுமையால் மாளப்போனவள் இவ்வளவு துன்பப்பட வேண்டியதா யிருக்கிறதே" என்று சொல்லி நீங்கினர். நான் வைத்தியர் சொல்லிப்போனதைக்கேட்டு பயந்து, நான் கொண்டுவந்து வைத்திருந்ததை எறிந்துவிட்டு, நம்மை இறக்கவிடமாட்டார்களென்று நாளெல்லாம் அழுதுகொண்டிருப்பதே வேலையாயிருந்தேன். என்னைப் பெற்றவர்கள் என் துக்கத்தை ஆற்ற முயன்றதெல்லாம் பிரயோசனப்படாமல் நெடுநாள்

அவ்வித மிருந்தேன். நம்முடைய நாயகன உயிரோடிருந் தால் அவர் என்ன கோலத்தோடிருப்பார் என்று பலநாள் அந்தக் கேள்வியை நானே கேட்டுக்கொண்டிருந்தேன். அவர் ஓர் பரதேசியைப் போலவே இருக்க வேண்டுமென்ற எண் ணந் தோன்றியது. அதன்மேல், பாலியம் முதல் சேர்த்து வைத்திருந்த ரூபாவைப் பவுஞக மாற்றி வைத்துக்கொண்டு, என் அன்னை யறியாமல் நீண்ட அங்கியும் காதுமூடு குல்லாவும் ஒரு சோல்நாவும் ஆகிய இவைகளை நானே தைத்து இரவில் ஒருவருமறியாமல் அவைகளைத் தரித்து வெளியேறினேன். அனேக ஸ்தலங்களையெல்லாம் தரிசித் துப் பரதேசிகள் தங்கும் மடங்களில் தங்கியிருந்து அவ்வவ் விடங்களில் பரதேசிகள் பாடும் பாட்டுகளைப் பாடிப் பிச்சை யேற்று அதைப் பரதேசிகளுக்கு உபகரித்துவந்தேன். இவ்விதம் என் காலத்தைக் கழித்துவரும் நாளில், சேலத் துக்கருகில் திருச்சிராப்பள்ளிக்குச் செல்லும் மார்க்கத்தில் ஒருநாள் நான் விசாரத்தோடு உட்கார்ந்து, “நாம் எண்ணங் கொண்டதுபோல் நம் நாயகன் பரதேசியாயிராமல் கப்ப லேறிச் சென்றிருந்தால், நாம் கொண்டிருக்கும் கோலத்தால் பிரயோசன மில்லையே” என்று யோசித்துக்கொண்டிருக் கும்பொழுது, (தன் நாயகனைக் காட்டி) இந்த சாமியார் சடைமுடியோடும் நீண்ட தாடியோடும் அம்மார்க்கம் போவ தைக் கண்டேன். இவர்தானே அவர் என்று ஸந்தேகந் தோன்றி, “நடை அவருடையதுபோ லிருக்கிறது; முகச் சாயலும் அவர்போ லிருக்கிறது; வார்த்தையாடினுல் குரலால் அறியலாம்” என்று இவரைப் பின்தொடர்ந்து சென்றேன். இவர் என்னைத் தன்பின் வராதபடி வேண் டியதைச் சொல்லி, கல்லைக் கையிலெடுத்து, “தொடர்ந்து வந்தால் அடிப்பேன்” என்று பயங்காட்டினுர். குரலால் இவர் என் நாயகனே என்றறிந்து இவர் காட்டிய பயத்துக் கஞ்சாது, இவரை விடாமல் பின்தொடர்ந்தேன். என்னைத்

துரத்திவிட வேண்டுமென்ற எண்ணம் கைகூடாமல் இவர் என்னை சீடனாக ஒப்புக்கொண்டார். நாங்கள் இரவில் படுத்துக்கொள்ளும் இடங்களிலெல்லாம் எங்கள் காலத்தை நினைத்து நான் அழுவதை, இவர் என்ன என்னவென்று கேட்பார். நான் கனவுகண்டழுதேன் என்று சொல்லிக் கொண்டு வந்தேன். நான் அனேக தடவை இவர் வாயி லிருந்து உண்மையை வெளிப்படுத்த வேண்டுமென்று, “சாமி! தங்களுக்குப் பெண்டாட்டி உண்டா? பிள்ளைகள் உண்டா?” என்று கேட்டால், அதைக் கேட்க வேண்டா மென்று தடுத்துவிடுவார். நான் இவருக்கு சீடனாக இருந்ததால், இவருடைய சொல்லுக்கடங்கிப் பேசாம லிருக்க வேண்டியதா யிருந்தது. இவர் தம்முடைய ரகசி யத்தைச் சொல்லாம லிருக்கும்பொழுது, நாம் நம் முடைய ரகசியத்தை இவருக்குச் சொல்லக்கூடாதென் றிருந்தேன். நாங்கள் இவ்வூருக்கு வந்து இத்தெருவழி யாய்ப் போகும்பொழுது, விசாலாக்ஷியம்மாள் எங்களைப் பார்த்து அழைத்துவந்தாள். பின் இவர் சொல்லியதைத் தாங்கள் (ஒருவர் பேசுவதை மறைந்து நின்று கேட்கும் வழக்கம்போல்) கேட்டுக்கொண்டிருந்தீர்கள் (என்று தன் வரலாற்றைச் சொல்லி நகைத்தாள்).

அங்கயற்கண்ணியம்மாள் சொல்லியதைக் கேட்டிருந்த அவள் தாய், தந்தை, சுரும்பாயி அம்மாள், காமாக்ஷியம்மாள், முத லானவர்களெல்லாம், கண்களில் தாரை தாரையாக நீரை வடிய விட்டு, “நீ பிச்சையெடுத் துண்ண உன் தலையில் எழுதியிருந் ததா!” என்று துக்கப்பட்டார்கள்.

**சித்திவிநாயகம் பிள்ளை.**—(தியாகராஜ பிள்ளையைப் பார்த்து) தம்பி! நீர் மனைவி மக்களைவிட்டுப் போனபின் இதுநாள் எங்கிருந்தீர்? அதைச் சொல்லவேண்டும்.

**தியாகராஜ பிள்ளை.**—மாமா! என் மனைவியின் நடக்கையை அறியாமல் அவளை நெடுநாள் துன்பத்திலிருக்கவிட்டிருந்த

பாவியாகிய நான், என் மனைவி தன் ஸகோதரிக்காகப் பரிந்து தம்பி முருகேசத்தோடு பேசியதைக் குற்றமாகக் கொண்டு, அவளையடித்து மூர்ச்சையாக்கி, தம்பி முருகேசத்தை என் கைத்தடியால் அவன் தேகம் வருந்த ஓடி ஓடி அடித்தேன். அவன் பதிலுக்கு ஓரடியாகிலும் அடிக்காமலே என்னைத் தன்னிடம் வராதபடி தள்ளிக்கொண்டிருந்தான். நான் என்மேல் போட்டிருந்த அங்கவஸ்திரம் என் கையைத் தடுத்துக்கொண்டு பஞ்சபஞ்சாய்ப் போனது. முடிவாக முருகேசம் என்னைப் பிடித்துத் தள்ளியபொழுது கீழ்விழுந்து மூர்ச்சையானேன். எவ்வளவு நேரம் மூர்ச்சையா யிருந்தே னென்பது எனக்குத் தெரியாது. மூர்ச்சை தெளிந்து எழுந்து பார்க்கும்போது அதிக இருட்டாயிருந்தது. "நாம் அந்த துன்மார்க்கனை அடித்த அடி போதுமானது; இனி அந்த துன்மார்க்கியைப் பார்க்கக்கூடாது; எங்காகிலும் போய்விடுகிறதே உத்தமம்" என்று எண்ணி, நான் வீட்டிலிருந்து வரும்பொழுதே கொண்டுவந்த ரூபா மடியிலிருக்கிறதா என்று தடவிப் பார்த்தேன். மடியில் ஒன்றும் இல்லாமையைக் கண்டு, கீழ் விழுந்திருக்குமென்று தேடிப்பார்த்து எடுத்துக்கொண்டு, அன்றிரவே ரெயிலேறி சென்னைக்குச் சென்றேன். அடுத்த நாள் இரங்கூனுக்குக் கப்பல் போகிறதென்று கேள்விப்பட்டு, கப்பலேறி இரங்கூனுக்குப் பிரயாணமானேன். கப்பலேறிய மறுநாள் கப்பல் அதிக ஆட்டங்கொடுத்ததால், கப்பலி லிருப்பவர்களில் அனேகர் தலையெடுக்காமல் வாந்தியெடுத்துக்கொண்டிருந்தார்கள். மூன்றாநாள் எனக்கு மயக்கம் நீங்கியதால் நான் கப்பலைச் சுற்றிப் பார்த்துக்கொண்டிருந்தேன். நான் படுக்கை போட்டிருந்த இடத்திற் கருகில் நாட்டுக்கோட்டைச் செட்டிப்பிள்ளைகள் அனேகர் இருந்தார்கள். அவர்கள் அனேகருக்கு மயக்கமில்லாதிருந்தாலும், அவர்கள் அழைத்துவந்த சமையற்காரர்கள்

தலையெடுக்காமல் மயக்கத்தோடிருந்தார்கள். செட்டிப் பிள்ளைகள் தாங்கள் கொண்டுவந்த தின்பண்டங்களைச் சாப்பிட்டுக்கொண்டு, "என்ன செய்கிறது? சமையற்கார ரெல்லாம் தலையெடுக்காம லிருக்கிறார்களே" என்று கவலையோ டிருக்கும்பொழுது, நான் சமையல் செய்கிறேன் என்று ஒப்புக்கொண்டு, அவர்களுடைய உதவி யோடு சமையல் செய்து முடித்தேன். நான் செய்த குழம்பு நன்றாயிருந்ததென்று அவர்கள் யாவரும் என்னைக் கொண் டாடினார்கள். நான் அதுமுதல் அவர்களுக்குச் சமையல் செய்துகொண்டிருந்தேன். ஒவ்வொரு நாளும் என் கைபாகத்தைப் புகழ்ந்துகொண்டிருந்தார்கள். பின் அவர் களுக்கும் எனக்கும் அதிக சினேகமாய், அவர்கள் என் க்ஷேமலாபத்தை விசாரித்து, "உன் பெயர் என்ன? இரங்கூனில் என்ன செய்யப் போகிறாய்? யாராகிலும் தெரிந்தவர்கள் இருக்கிறார்களா?" என்று என்னைக் கேட் டுக்கொண்டிருந்தார்கள். கேட்பவர்களுக்கெல்லாம் நான் "எனக்கு ஒன்றும் தெரியவில்லை. என்னை அறிந்தவர்கள் அங்கே ஒருவருமில்லை. என் பெயர் தம்புசாமி" என்று சொல்லிக்கொண்டிருந்தேன். ஒருநாள் நான் நள்ளிரவில் எழுந்து வெளிக்குச் சென்றேன். செல்லும்பொழுது காலில் ஏதோ தட்டுப்பட்டதுபோலிருந்தது. அது என்ன வென்று குனிந்து பார்த்து, அது பட்டுக் கைகுட்டையில் கட்டிய ஒரு பெரு முடிச்சாக இருக்கக்கண்டு, அதை எடுத் தேன். அதிக கனமாக இருந்ததால், அதில் என்ன இருக்கிற தென்று அவிழ்த்துப் பார்த்து, அதில் ஆயிரம் ரூபா நோட்டு கள் இருபதும், நூறு ரூபா நோட்டுகள் அனேகமும், ரூபா வும் இருக்கவே, அதைக் கட்டி மடியில் வைத்துக்கொண்டு, என்னுடைய படுக்கையில் போய்ப் படுத்துக்கொண்டேன். காலை ஐந்து மணிக்கு நல்ல நித்திரையி லிருக்கும்பொழுது, இரண்டாவது வகுப்பில் பிரயாணஞ்செய்யும் ஓர் முகம்மதி

பர், தலையில் அடித்துக்கொண்டும், தாடி மயிரைப் பிய்த்துக் கொண்டும், கடகடவென்று புரண்டு புரண்டு அழுகிறதை நாட்டுக்கோட்டைச் செட்டிப்பிள்ளைகள் கண்டு, என்ன என்ன வென்று விசாரித்தார்கள். அவர் தன்னிடத்தி லிருந்த நாற்பதினாயிரத்துக் கதிகமான நோட்டுகள் காணா மற் போய்விட்டதென் றழுதார். "நோட்டுகளுடைய நம் பரை எழுதிவைத்திருக்கிறீரா?" என்று செட்டிப்பிள்ளை கள் கேட்டதற்கு, "நான் அங்கு மிங்கு மலைந்து கிடைத்த நோட்டுகளைக் கொண்டுவந்தேன். என்னிடத்தில் நோட்டு களின் நம்பர் இல்லை. எடுத்தவர்கள் கொடுத்துவிட்டால் அவர்களுக்குப் பெரும் புண்ணியமாகும்" என்று சொன் னார். செட்டிப்பிள்ளைகள் "இத்தொகையைக் கையில் கொண்டுவந்தது தவறு. இப்பெருந் தொகையைக் கையில் எடுத்தவன் கொடுப்பானா? எடுத்தவனுக்கு ஏதாகி லும் தொகை கொடுத்தாலன்றிக் கொடுக்கமாட்டான்" என்று சொன்னார்கள். அதன்மேல் அவர் "நான்கிலொரு பங்கு கொடுத்துவிடுகிறேன். சென்னையில் செட்டிப் பிள்ளைகள் நூற்றுக்கு முக்கால் ரூபா வட்டம் கேட்டதால், அது அதிகமென்று நோட்டுகளாகக் கொண்டுவந்து விட் டேன். நான் ரத்தின வியாபாரி" என்று செட்டிப்பிள்ளை களிடம் சொல்லியதைக் கேட்டுவந்தவர்கள் மற்றவர்களிடம் சொல்லிக்கொண்டிருந்தனர். அப்பொழுது நான் விழித் துக்கொண்டு, அவர்கள் சொல்வதையெல்லாம் கேட் டிருந்து, "அதைக் கண்டெடுத்தவன் பெரும் பணக்கார னாய்விடலாம்போ லிருக்கிறதே" என்றேன். எனக்கு அதிக நேசமாயிருந்த செட்டியாரொருவர், "ஆம்! தம்பி! உன் கையில் அத்தொகை அகப்பட்டால், நீ பணக்காரனாய் விடலாம். ஆனதால் அதைத் தேடிப் பார்த்துக்கொண்டு வா" என்றார். "நான் அவ்வளவு அதிட்டமுள்ளவனல்ல, அந்த ரத்தின வியாபாரியைப் பார்த்துவரலாம் வாருங்

கள்" என்று செட்டியாரை அழைத்துக்கொண்டு போய், அவ்விரத்தின வியாபாரிக் குண்டாயிருந்த வியாகூலத்தைக் கண்டு ஸகியாமல் அவரைப் பார்த்து, "ஐயா! நீர் கவலை கொள்வதில் பிரயோசனம் இல்லை. எடுத்தவர்கள் அது நாற் பதினாயிரமென்று அறிந்த பின் கொடுப்பார்களா? அதைக் கொண்டுவந்து கொடுப்பவனுக்கு நான்கிலொரு பங்கு கொடுக்கிறதாகச் சொல்லுகிறீரே! நாற்பதினாயிரத்தை யும் ஒருவன் எடுத்துக்கொள்ளக் கூடியதாயிருக்க, அதை விட்டு உம்மிடத்தில் பதினாயிரத்தைப் பெற்றுக்கொள்ள வருவானா?" என்றேன். அவர் "ஐயோ! அவன் பாதியை யாகிலும் "எடுத்துக்கொண்டு எனக்குப் பாதியைக் கொடுக் கட்டும். நான் அல்லா அறிய ஸந்தோஷத்தோடு வாங்கிக் கொள்ளுகிறேன்" என்று கதறியழுதார். அவரை இன் னும் துன்பத்தில் அழுந்தவிடுவது நியாயமல்ல வென்று, நான் மறைத்துவைத்திருந்த முடிச்சை அவரிடங்கொடுத்து, "உம்முடைய பணம் ஸரியாக இருக்கிறதா? பாரும்" என் றேன். அவர் என்னைக் கட்டிப்பிடித்து அணைத்துக்கொண்டு பின் முடிச்சை அவிழ்த்துப்பார்த்து, "எல்லாம் ஸரியாக இருக்கிறது" என்று சொல்லி, இருபதினாயிரத்தை யெடுத்து முன் வைத்து "எடுத்துக்கொள்ளும்" என்றார். நான் அதை யெடுக்காமல் "ஐயாவே! உம்முடைய அஜாக் கிரதையினிமித்தம் நான் இருபதினாயிரத்தைக் கொள்ளை யடிப்பது தெய்வத்துக் கடுக்காது. உம்முடைய பணத்தை நீரே வைத்துக்கொள்ளும்" என்று திரும்பினேன். அவர் என்னைப்பிடித்து "என்னுயிரை நிறுத்தச்செய்தவன் நீ. உனக் கிஷ்டமானதை எடுத்துக்கொள்" என்று வேண்டினார். நான் அவரைப் பார்த்து "ஐயாவே! எனக்கிஷ்டமானதை நான் என்னிஷ்டப்பிரகாரம் செய்தால், நீர் மனக்கவலை கொள்ளமாட்டீரல்லவா" என்றேன். அவர் "மனக்கவலை கொள்கிறதற்கு பதிலாக அல்லா அறிய ஸந்தோஷப்படு

வேன்" என்றார். "அவ்விதமாயின், நீர் எனக்குக் கொடுக்க விரும்பிய இருபதினாயிரம் என்னுடையதே! இதைத் தங்களுக்கு இனாமாகக் கொடுத்துவிட்டேன்" என்று எனக்காக வைத்திருந்த நோட்டுகளை யெடுத்து அவர் கையில் கொடுத்து, "நீர் மனக்கவலை அற்றிரும்" என்று சொல்லி அவர் கூப்பிடக் கூப்பிடத் திரும்பிப்பார்க்காமல் வந்துவிட்டேன். என்னோடு வந்திருந்த செட்டியார் மலைத்து நின்று, பின் என்னிடம் வந்து என்னைக் கட்டிப்பிடித்துக்கொண்டு, "அப்பா! தம்புசாமி! உன்போலும் உத்தமர் உலகில் இருப்பார்களென்று நான் நினைக்கவில்லை; பார்த்ததுமில்லை. இருக்கிறார்களென்று ஒருவர் சொன்னாலும் நம்பேனே" என்று என்னைப் பலவிதம் புகழ்ந்து, தம்மோடிருப்பவர்களுக் கெல்லாம் என்னைக்குறித்து மேன்மையாகச் சொல்லிக்கொண்டிருந்தார். ரத்தின வியாபாரி என்னிடம் வந்து என்னுடைய நிலைமையை அறிந்து, ஏதாகிலும் பெற்றுக்கொண்டு போமென்று அடிக்கடி என்னை வருத்திக் கொண்டிருந்தார். ஆயினும் நான் ஒன்றுக்கும் இடங்கொடுக்கவில்லை. எல்லாரும் இரங்கூன் போய்ச் சேர்ந்தோம். எனக்கு அதிக நேசமாக இருந்த செட்டியார் என்னை எங்கும் போகவேண்டாமென்று தம்மோடழைத்துச்சென்று, "என் கடையில் இரு. நான் அற்ப முதலை வைத்துக்கொண்டு வட்டிக்குக் கொடுத்து வாங்குவதால் எனக்கு அடுத்த ஆள் வேண்டியதில்லை. என்னிடத்திலிருந்து கணக்கெழுதவும் வட்டி சிட்டை போடவும் கற்றுக்கொண்டபின், உன்னை வேறொருவரிடம் சேர்த்து விடுகிறேன். அது பரியந்தம் என்னுடைய கடையில் இருக்கலாம்" என்று சொன்னார். நான் அவருக்கு பாரமாயிருக்க ஸம்மதப்படாமல் அவருக்குச் சமையற்காரனாக இருந்து, "என் அவகாசத்தில் வேலை கற்றுக்கொள்ளுகிறேன்" என்று அவரை கெஞ்சிக் கேட்டுக்கொண்ட

தற்கு, அவர் அப்படியே செய்யென்று ஒப்புக்கொண்டார். முடிவாகச் சொல்லுமிடத்து நான் அவருடைய மனம் ஸந்தோஷமடையும் விதம் நடந்து, செட்டிகள் சடை வேலையை நன்ருய்க் கற்றுக்கொண்டேன். இவ் விதம் மூன்று வருடம் கழித்தபின் அவர் ஊருக்குப் பிரயாணப்பட இருந்தபொழுது, என்னையும் ஊருக்குப் வரும்படி வேண்டினர். நான் பின்னும் சிலகாலம் அங்கே இருக்கவேண்டு மென்று சொன்னதால், அவர் "தம்பி! நீ இவ்வூரில் இன்னம் இருக்க விரும்புவ தால், நீ ஒருவரிடத்தும் வேலைக்கமராமல் உனக்கிருக் கும் முதலை வைத்துக்கொண்டு ஜாக்கிரதையாக நல்ல இனத்தில் கொடுத்து வாங்கினல் விருத்தியடைவாய்" என்ருர். நான் நகைத்து, "ஐயாவே! எனக்கு என்ன முதல் இருக்கிறது? என்னை நம்பி யார் எனக்குக் கடன் கொடுப்பார்கள்? நான் முதலில்லாமல் என்ன வியாபாரம் செய்யமுடியும்?" என்றேன். அவர் நகைத்து, "அப்பா! நாம் கப்பலில் வரும்பொழுது, நீ ரத்தின வியாபாரிக்கு உன்னுடையதென்று உன்னுடைய கையா லெடுத்துக் கொடுத்த இருபதினுயிரத்தைத் துண்டாக வைத்து, உன் னுடைய அதிட்டத்தைப் பார்க்கலாம் என்று அவர் ரத் தினங்கள் வாங்கி விற்ருர். விற்றதில், மற்ற இருபதி னுயிரத்தைவிட அதிகம் கிடைத்ததென்றும், தம்முடைய இருபதினுயிரத்துக்கு என்ன லாபங் கிடைத்ததோ அதுபோல நீ எடுத்துக்கொடுத்த தொகைக்கும் உள்ள லாபத்தை எடுத்துக்கொண்டு, உன்னுடைய அதிட்டத் தால் கிடைத்த லாபம் உன்னையே சேரவேண்டுமே யொழியத் தம்முடைய தல்லவென்றும் சொல்லி, அவர் என்னிடம் ஐயாயிரம் கொடுத்தார். அதை உனக்குச் சொல்லாமல் வைத்திருந்து நீ ஊருக்குப் போகும் பொழுது உன்னிடத்தில் கட்டாயப்படுத்திக் கொடுக்

கும்படி கெஞ்சிக் கேட்டுக்கொண்டார். நான் அவரு டைய நல்ல எண்ணத்துக்கு ஸந்தோஷப்பட்டு வாங்கி வைத்துக்கொண்டேன். நீ அதைப் பெற்று வியாபாரஞ் செய்தால் உன்னுடைய நல்ல அதிட்டத்தால் பெருந் தன வந்தனவாய்" என்று சொல்லி, ஆறு நோட்டாக ஆரு யிரத்தைக் கொடுத்தார். "ஐயாயிரத்துக்கு பதிலாக ஆரு யிரத்தைக் கொடுத்தீர்களே" என்று ஒரு நோட்டைக் கொடுக்கப் போனேன். அவர் "அந்த நோட்டும் உன் னுடையதே! அதில் உன்னுடைய சம்பளம் முதலானதும் அடங்கியிருக்கிறது" என்ருர். "என் சம்பளம் ஆயிர மாகாது. அந்தப் புண்ணியவான் கொடுத்த ஐயாயிரத்தை யும் பெற்றுக்கொள்ள நியாயமில்லை. நான் இதையும் வாங் காமலிருந்தால், அவர் மனம் புண்ணுகுமென்று ஒப்புக் கொண்டேன். இத்தொகையே போதுமானது. தாங்கள் வேறென்றும் கொடுக்கவேண்டாம்" என்றேன். அவர் "தம்பி! நான் அதிகம் ஒன்றும் கொடுக்கவில்லை" என்று என்னை யறியாமல் வைத்திருந்த ஓர் சிறிய புத்தகத்தை எடுத்துக் காட்டி, "இதில் உன் சம்பளம் நாற்பது மாதத் துக்கு ரூபா நானூறு. நான்கு தீபாவளிக்கும் நீ வேட்டி வேண்டா மென்றதால், அதன் விலை நாலிருபது எண்பது. ரத்தின வியாபாரி கொடுத்த ஐயாயிரத்துக்கு வட்டி ஐந்நூற்றுப் பத்தொன்பதே முக்கால், ஆகத் தொளாயிரத் துத் தொண்ணூற்றென்பதே முக்கால். ஆனதால் நான் அதிகம் கொடுத்தது நாலணுவே" என்று சொன்னுர். நான் மறுத்து ஒன்றும் சொல்லாமல், அந்த ஆருயிரத்தை அவரிடமே கொடுத்துவைத்திருந்தேன். அவர் சுபதினத் தில் கணக்குப்போட்டு என்னைத் தொழில் செய்யவிட்டு நீங்கினுர். நான் துவக்கத்தில் வட்டிக்குக் கொடுத்து வாங் கியதில் அதிக லாபம் கிடைத்து மூன்று வருடத்தில் என்னிடத்திலிருந்த முதல் இரட்டித்துவிட்டது. பின்

யூதரிடத்தில் பற்று வரவு செய்து என் முதலைத் தொலைத்து விட்டுச் சாப்பாட்டுக்குச் சங்கடப்பட்டுக்கொண்டிருந்து, பின் வட்டிக்குக் கொடுக்கும் வியாபாரத்தை விட்டு, பழைய கறுப்பனே கறுப்பன் என்று இப்புண்ணியவானிடம் சமை யல் வேலையில் அமர்ந்தேன். இவ்விதம் இருக்குங்காலத்தில் இவருடைய அடுத்தாள் நலியாக இருந்து காலஞ்சென்றார். என் எஜமானுக்கு அடுத்த ஆள் கிடைக்காமல் கணக்குக ளெல்லாம் எழுதாமலிருக்கின்றனவென்று கவலையோடிருக் கும்பொழுது, "எனக்குக் கணக்குவேலை தெரியும், தங்க ளுக்கு ஆள் கிடைக்கும் வரையில் நான் இரண்டு வேலையும் பார்த்துக்கொள்ளுகிறேன்" என்று சொன்னது உண் மையோ வென்றறிய என்னைக் கணக்கெழுதச் சொன்னார். நான் எழுதியதைப் பார்த்துத் திருப்தியடைந்து, "இனி நீ சமையல் வேலை செய்யவேண்டாம்" என்று சொல்லி என்னை அடுத்தாளாக்கிவிட்டார். முடிவாக எஜமான் ஊருக்குப் பிரயாணப்பட்டதால், எனக்கும் சிறுவர்களைப் பார்க்கவேண்டு மென்கிற விருப்பம் அதிகரிக்கவே, எஜமா னோடு சென்னை வந்தேன். அவர்கள் அங்கு சிலநாளிருந்து அவ்விடத்தில் கணக்குகள் பார்க்கவேண்டு மென்றதால், எஜமானைச் சென்னையில் விட்டு நான் முன்னதாக இவ் விடம் வந்துசேர்ந்தேன்.

இராமன் செட்டியார்.—தியாகராஜ பிள்ளை முக்கியமாகச் சொல்ல வேண்டியதைச் சொல்லாமல் விட்டார். இவ ருக்கு ரத்தின வியாபாரியால் கிடைத்த தொகையை வைத்து வியாபாரஞ் செய்து தம்முடைய முதல் இரட் டித்தபொழுது, அதில் ஒரு யூதனுக்கு இரண்டாயிரம் ரூபா கடன் கொடுத்திருந்தார். அவன் நட்டமடையுங் காலத்தில் இவர்மேல் அன்புகொண்டு தன்னிடம் மீதி யாயிருந்த நூறு ஏக்கர் நிலத்தை இவர் பெயருக்கு விலைக் கிரயம் செய்து கொடுத்திருந்தான்.

"இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்"

ஆசை யென்னும் துன்பத்தின் மிகுந்த துன்பங் கெட டால் இன்பம் இடையறாது வரும் என்று திருவள்ளுவர் சொல்லியிருக்கிறார். இவருக்குக் கிடைத்த நாற்பதினா யிரத்தின்மேல் ஆசை வைக்காமல் அவ்வாசையை நீக்கி விட்டவர், ரத்தின வியாபாரி கொடுத்த ரூபாவில் இரண் டாயிரம் யூதனிடத்தில் கொடுத்திருந்தார். அவன் ஆயிரத் துக்கு வாங்கிய நிலத்தை இவருக்குக் கொடுத்துக் காலஞ் சென்றான். அதனால் இவருக்கு லக்ஷத்தெழுபத்தையா யிரம் கிடைத்தது. நானும் இவர் அதிட்டத்தைப் பார்க்கலாமென்று நெல்லுவாங்கிக் கட்டச் செய்ததில், அதிக லாபமே கிடைத்தது. என்னையும் க்ஷேத்தாவுது இடத்திலிருந்து காப்பாற்றினார். உலகில் நன்மை செய் பவர்களுக்கு முதலில் துன்பம் உண்டானாலும், முடிவில் அது இன்பத்தையே உண்டாக்கும்.

---

## 24—ம் அத்தியாயம்

தியாகராஜ பிள்ளை யாவருடன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கும்பொழுது, தாமோதரம் பிள்ளை தோன்றி, பத்தி ரத்தைக் கொடுத்து, "ஐயா ! நான் ஓர் அபாக்கியமான ஸமா சாரத்தைக் கொண்டுவந்தேன். தாங்கள் விரைவில் துரைசாமி பிள்ளையைப் போய்ப் பார்க்கவேண்டும். அவர்பேரில் வண்டி யேறி மரணஸ்திதியி லிருக்கிறார்" என்றார். யாவரும் திடுக்கிட்டு "என்ன ! என்ன ! வண்டியேறியதா ? எங்கு வண்டி யேறியது ? எவ்விடத்தில் ? எப்பொழுது ?" என்று பலரும் பல கேள்விகளை ஆத்திரத்தோடு கேட்டார்கள்.

**தாமோதரம் பிள்ளை.**—ஐயா ! நாம் அன்று ரிஜிஸ்டர் செய்யக் கொடுத்திருந்த பத்திரத்தை வாங்கிப்போய்த் திரும்பி வரும்பொழுது, துரைசாமி பிள்ளை வீட்டில் ஜனசந்தடி அதிகமாக இருந்ததைக் கண்டு என்னவென்று போய் விசாரித்தேன். துரைசாமி பிள்ளை சேலத்திலிருந்து வந்த அப்பாசாமி பிள்ளை யென்பவரோடு மார்க்கத்தில் நின்று வார்த்தையாடிக்கொண் டிருந்தாராம். அவர்களுக்குப் பின் இரண்டு பருத்த குதிரைகள் பூட்டிய நான்கு சக்கரவண்டி யொன்று வர, யானையொன்று எதிராக வருவதைக் கண்ட குதிரைகள் பயந்து, குதிரை யோட்டுகிறவன் கைக்கடங்காமல் ஓடி, மார்க்கத்தில் நின்றிருந்த இருவரையும் கீழே தள்ளி மிதித்து ஓடியதால், அவர்க ளிருவர்பேரிலும் வண்டி ஏறிவிட்டது. சேலத்திலிருந்து வந்தவர் பேச்சு மூச்சு ஒன்றுமில்லாம லிருந்ததால், அவரை வைத்திய சாலைக்குக் கொண்டுபோயிருக்கிறார்கள். துரைசாமி பிள்ளைக்குத் தொடை முறிந்துவிட்டதெனச் சொல்லுகிறார்கள்.

**தா**மோதரம் பிள்ளை சொல்லியதைக் கேட்ட ஞானசம்பந்தம் வெளியில் ஓடினன். அவ்விடத்திலிருந்த யாவரும் விரைந்து துரைசாமி வீட்டுக்குள் சென்றதும், சிவகுரு ஓடிவந்து காமாக்ஷியம்மாளைப் பிடித்துக்கொண்டு “ஆயா ! ஆயா ! அன்று தாதாவை அழைத்துப் போகச் சொன்னேன். அப்பா திட்டுவார்களென்று போய்விட்டார்கள்” என்றான். காமாக்ஷியம்மாள் அவனைத் தூக்கி முத்தங்கொடுத்து வீட்டுக்குள் போய், துரைசாமி படுக்கையில் மூர்ச்சையா யிருப்பதைப் பார்த்தாள். யாவரும் கண்கலங்கினார்கள். பார்வதி அழுதுகொண்டே பெரிய சமுக்காளமொன்று கொண்டுவந்து விரித்து யாவரையும் உட்கார வேண்டினள்.

**காமாக்ஷியம்மாள்.**—(பார்வதியை அழைத்து) துரைசாமிக்கு என்ன நேரிட்டது ? என்ன செய்தீர்கள் ? வைத்தியர்

யாராகிலும் வந்தார்களா? (என்று பல கேள்விகளைக் கேட்டாள்).

**பார்வதி.**—அத்தை! நான் என்ன சொல்லுவேன்! இன்று காலை தங்களுடைய மகன் வீட்டி லிருக்கும்பொழுது, எமனைப்போல் சேலத்திலிருந்து வந்த அப்பாசாமி பிள்ளை அழைத்தான். நான் "அவர்களுடைய சினேகமெல்லாம் என்னத்திற்கு? நீங்கள் அவருடன் போகவேண்டாம்" என்று தடுத்ததையும் கேட்காமல் வெளியிற் சென்றார். சற்று நேரத்துக்கு முன் வண்டியொன்று வீட்டுக் கெதிரில் வந்து நிற்க, நான் என்னவென்று ஓடிப்பார்த்ததில் இவர் இக்கதியோடு வந்திருக்கிறார். நான் எந்த வைத்தியனைக் கண்டேன்? நான் யாரை அனுப்புவேன் (என் றழுதாள்).

அதற்குள் ஞானசம்பந்தம் ஓர் இங்கிலீஷ் வைத்தியரை அழைத்து வந்து, துரைசாமி பிள்ளையைக் காட்டினன். அவர் துரைசாமி பிள்ளையின் அவயவங்களைப் பரிசோதனை செய்து பார்த்து, ஞானசம்பந்தத்தையும் தியாகராஜ பிள்ளையையும் தனித்தழைத்து, "அவருக்கு இரண்டு தொடைகளும் முறிந்துபோய்விட்டன. கால்களை அறுத்துவிடலாம் என்றால் மார்பெலும்புகளும் முறிந்துபோயிருக்கின்றன. ஆனதால் என்னால் செய்யத்தக்கது ஒன்றும் இல்லை" என்றார்.

தியாகராஜ பிள்ளை தன் மனைவியை அழைத்து, வைத்தியர் சொல்வதைக் கேளென்றார். காமாக்ஷியம்மாள் வைத்தியர் பாதங்களைப் பிடித்துக்கொண்டு "ஐயாவே! எவ்விதமும் என் மகனை குணப்படுத்துங்கள்" என் றழுதாள்.

**வைத்தியர்.**—(காமக்ஷியம்மாளைப் பார்த்து) நான் என்னாலியன்றதைச் செய்யத் தடையொன்று மில்லை. நான் வீட்டுக்குச் சென்று வேண்டிய ஔடதம் கொண்டுவருகிறேன் (என்று சொல்லி ஞானசம்பந்தத்தை வெளியிலழைத்துப் போய்) உம்முடைய தாயாரைப் பார்க்க என்மனம் பதறு

கிறது. எனக்கிருக்க இஷ்டமில்லை; நான் போய் வருகிறேன் (என்று நீங்கினார்).

ஞானசம்பந்தம் வைத்தியரை அனுப்பிவிட்டு வீட்டுக்குள் வந்து, துரைசாமி யருகில் நின்று அழுதுகொண்டிருந்த ஆநந்தவல்லி யருகில் தானும்போய் நின்று, கண்களில் தாரை தாரையாக நீரை வடிய விட்டுக்கொண்டிருந்தான். மூர்ச்சையாக இருந்த துரைசாமி கண்களை விழித்துப் பார்த்தான். பார்வதி அவனருகில் சென்று, "உங்களுக்கு எப்படியிருக்கிறது? என்று கேட்டாள்.

**துரைசாமி பிள்ளை.**—(மிரள மிரள யாவரையும் பார்த்து, மார்பைக் காட்டி) இவ்விடத்தில் குதிரை மிதித்துவிட்டது. எனக்கு மூச்சுவிட முடியவில்லை (என்று தன் மனைவிக்குச் சொல்லிவிட்டு, தன்னருகில் நின்று அழுதுகொண்டிருக்கும் ஞானசம்பந்தத்தையும் ஆநந்தவல்லியையும் ஸமீபத்தி லழைத்து), தம்பி! தங்கையே! எனக்காகவா நீங்கள் துக்கப்படுகிறீர்கள்! (என்று அவர்கள் இருகாங்களையும் பிடித்துக் கண்களில் ஒற்றிக்கொண்டு), நான் கொடியவன். என்போலும் பாவிகள் உலகி லிருப்பார்களென்று நான் நினைக்கவில்லை. ஐயோ! சகோதரர்களே! நீங்கள் நம்முடைய தாய்தந்தையோடிருந்தால் நம்முடைய தாய் தந்தை சொத்தெல்லாம் என்னைச் சேராதென்று நினைத்து, நீங்கள் எப்பொழுது இறப்பீர்களென்றே எதிர்பார்த்திருந்தேன். பின் பாட்டியாரோடு சென்ற உங்களுக்கு நான் துணையாக வந்து, கும்பகோணத்தில் நம்முடைய பாட்டியார் வாந்திபேதியால் இறந்துபோனதால் அந்தஸமயத்தைக் கைவிடக்கூடாதென்று, உங்களை அழைத்துப்போய்க் கடைக்கருகிலும் முன்பின்னறியாத ஓர் பெண்பிள்ளையிடத்தும் விட்டு வந்து, நீங்களிருவரும் வாந்திபேதியால் இறந்தீர்களென்று சொன்ன துன்மார்க்கனுக்காக நீங்கள் துக்கப்படலாமா?

ஐயோ ! தம்பி ! நீ முதல் முதல் நம்முடைய தாயோடு வீட்டுக்கு வந்தபொழுது, நீ என் தம்பியென் றறிந்து கொண்டும், அவ்விஷயம் நம்முடைய தாய்க்கும் தெரியுமோவென்று பயந்திருந்தேன். பின் உன்னை யாரென் றறியாமல் அழைத்துவந்திருக்கிறார்க ளென்று அறிந்து, எனக்கு தைரியம் உண்டாகியது. உன்னை எவ்விதமும் முடித்துவிட வேண்டும்; அதற்கு என்ன ஏற்பாடு செய்யலாம் என்று ஆலோசித்து, மனச்சநெல்லூரில் நானறிந்த வீடு ஒன்று காலியாக இருந்ததால், அவ்வீட்டிலுள்ள கிணற்றில் உன்னைக் கட்டிப் போட்டுவிட ஏற்பாடு செய்திருந்தேன். அதிலும் நீ தப்பியதால், மதுரையிலிருந்த உனக்கு கஞ்சாவைக் காப்பியில் கலந்து கொடுக்கச் செய்து, மயக்கமாக இருந்த உன்னை திண்டுக்கல்லுக்குக் கொண்டுவந்து உன்னை உயிரோடு புதைத்துவிட யோசித்துக்கொண்டிருக்கும் பொழுது, (திருஞானத்தைக் காட்டி) இப்புண்ணியவான் "அவ்விதம் செய்யக்கூடாது. எனக்கல்லவா அவர் கெடுதலைச் செய்தார். நான் வேண்டாமென்று தடுக்கும்பொழுது நீங்கள் அவர் உயிரை வாங்குவது நியாயமல்ல" என்று தடுத்ததையுங் கேட்காமல் உன்னைப் புதைத்துவிடவே துணிந்தேன். நீ தெய்வ ஸகாயத்தால் தப்பித்துக்கொண்டாய். நான் உன் விஷயத்தில் செய்ததெல்லாம் போதாதென்று சற்று நேரத்திற்குமுன் நானும் அப்பாசாமியும் உன்னை எப்படி முடித்துவிடலாமென்று ஆழ்ந்த யோசனை செய்துகொண் டிருக்கும்பொழுது, குதிரைவண்டி எங்களிருவருடைய உயிரையும் கொண்டுபோக வந்தது. நான் செய்த குற்றங்களை நினைத்துப் பார்க்காமல் எனக்காக நீங்கள் துக்கப்படுகிறீர்களே ! இது அடுக்காது ! அடுக்காது ! ! (என்று கண்ணீர் சொரியவிட்டு, காமாக்ஷியம்மாளை அழைத்து) அம்மணி ! தாங்கள் பெற்ற பிள்ளையைவிட மேலாக பாவித்து வளர்த்த

தோஷம் தங்களை அதிக துன்பத்தில் அழுத்தியதோடு கண்டவிதம் பேசினேன்! (என்று அவன் இருபாதங்களை யும் பிடித்துக்கொண்டு), நான் இறக்குந் தருணத்தில் என்னை மன்னிக்கப் பிரார்த்திக்கிறேன் (என்றான்).

காமாக்ஷியம்மாள்.—(துரைசாமி பிள்ளை முகத்தில் முத்த மிட்டு) அடா என் செல்வமே! அவரவர்கள் வினையை அவ ரவர்கள் அனுபவிக்கவேண்டும். நீ எனக்கு ஒன்றும் செய்யவில்லை. நீ ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். வைத்தி யர் ஔஷதங் கொண்டுவரப் போயிருக்கிறார். நீ விரை வில் சுகப்படுவாய் (என்று கண்ணீர் சோரவிட்டாள்).

துரைசாமி பிள்ளை.—(தன் தந்தையை அழைத்து), "தந் தையே! நான் தங்கள் விஷயத்திலும் மற்றவர்கள் விஷ யத்திலும் செய்த குற்றங்களை நினைத்து நினைத்து துக்கப் பட்டுக்கொண்டிராமல் நான் போய்விடுகிறேன். என்னை மன்னித்துவிடுங்கள். அதோ! அப்பாசாமி வந்து கூப்பிடு கிறான். (என்று இரத்தங்கக்கி உயிரைவிட்டான்).

காமாக்ஷியம்மாள் ஆநந்தவல்லி ஞானசம்பந்தம் பார்வதி முதலானவர்கள் ஓவென்றலறினார்கள். தியாகராஜ பிள்ளை கண்களிலிருந்து தாரைதாரையாக நீர் வடிகிறதைக் கண்ட முத்துவேலு பிள்ளை முதலானவர்கள் அவரை வெளியில் அழை த்துவந்தார்கள். அத்தருணத்தில், அன்னியனொருவன் வந்து வைத்தியசாலைக்குக் கொண்டுபோகப்பட்டவர் இறந்துவிட்டா ரென்று சொல்லி நீங்கினான். ஞானசம்பந்தம் பிரேதத்தைப் பார்த்து, "அண்ணா! அண்ணா!! தாங்கள் எங்களை விட்டுப் போனது நியாயமா? நான் தங்களை மேன்மையாக வைத்திருக் கலாமென்று எண்ணியிருந்த எண்ணம் நிலைகுலைந்ததே! நான் இனி என்ன செய்வேன்?" என்று கடகடவென்று புரண்டு புரண்டு அழுதான். ஆநந்தவல்லியும் "எனக்கிரண்டு லகோ

தார்க ளிருக்கிறார்களென்று மகிழ்ந்திருந்தேனே. ஒருவரை தெய்வம் கொண்டுபோய்விட்டதே" என்று கதறினாள். பார்வதி, தலையிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு, "என்னை யும் என் பிள்ளைகளையும் இனிமேல் யார் ஆதரிக்கப்போகிறார் கள்? கெடுமதி கண்ணுக்குத் தெரியாமல் நான் அனேக கொடு மைகளைச் செய்துவிட்டேனே" என்றழுகிறதைக் காமாக்ஷியம் மாள் பார்த்து, "அம்மா பார்வதி, நீ ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம். எங்கள் தீவினையால் நாங்கள் அனுபவிக்கவேண் டியதை அனுபவித்தோம். உன்மேல் குற்றம் ஒன்றுமில்லை" என்று தைரியஞ்சொல்லி, அவளுடைய துக்கத்தைக் கண்டு தானும் துக்கப்பட்டுக்கொண்டிருந்தாள். இலக்கைய பிள்ளை முதலானவர்கள் தியாகராஜ பிள்ளை துக்கப்படுவதைக் கண்டு "நாம் என்ன செய்யலாம்? இறந்துபோனவன் இனி உயிர் பெற்று வரப்போகிறதில்லை" என்று அவருக்கு ஆறுதலைச் சொல்லி, பின் தொழிலாளிகளை அழைத்து வேண்டியதைச் செய்ய ஏவி, அன்றிரவே பிரேதத்தை யெடுத்துக்கொண்டு போய் தகனஞ்செய்து, பின்னும் செய்யவேண்டிய கிரியைகளை யெல்லாம் கிரமமாகச் செய்து முடித்தார்கள். இராமன் செட்டி யாரும் சில மாதங்களுக்குப்பின் வருவதாகத் தியாகராஜ பிள்ளை யிடம் விடைபெற்று நீங்கினார்.

ஒருமாதத்துக்குப் பின் சுபதினத்தில் விசாலாக்ஷியம்மாள் புஷ்பவதியானாள். முத்துவேலுபிள்ளையும் அவர் மனைவி திரிபுர ஸுந்தரம்மாளும் மிக்க மகிழ்வடைந்து, அதிகம் பொருள் செலவுசெய்து யாவரையும் ஸந்தோஷப்படுத்தினார்கள்.

**காமாக்ஷியம்மாள்.**—(சில வாரங்களுக்குப் பின் தன் நாயகனை அடுத்து) நாம் ஞானசம்பந்தத்துக்குப் பெண் கேட்கவேண் டாமோ? பெண் வீட்டார் தாமே வலிந்துவந்து பெண் கொடுக்கிறோமென்று சொல்லுவார்களோ?

**தியாகராஜ பிள்ளை.**—ஆம்! காமாக்ஷி! நீ சொல்லுகிறது நியா

யமே! முறை பேதமா யிருக்கிறதென்றே யோசித்துக் கொண்டிருக்கிறேன்.

**காமாக்ஷியம்மாள்.**—என்ன முறை பேதமாயிருக்கிறது என்கிறீர்கள்? நம்மவர்களில் அக்காளும் தங்கையும் அப்பனையும் மகனையும் விவாகஞ்செய்துகொள்ளுகிறார்கள். ஆநந்தவல்லியின் மாமனார் அண்ணன் முத்துவேலு பிள்ளைக்கு ஸகோதரராக வேண்டுமென்றும், அவர் மனைவி வழியில் மைத்துனராக வேண்டுமென்றும் சொல்லுகிறார்கள். ஆனதால், நாம் அதுவிஷயத்தில் கவலைகொள்ளாமல் சுபதினத்தில் நம்முடைய வழக்கப்பிரகாரம் பெண் கேட்கவேண்டும்.

**தி**யாகராஜபிள்ளை ஸம்மதித்து, தன் மாமனாரிடத்தும் மற்றவர்களிடத்தும் தாம் ஞானசம்பந்தத்துக்குப் பெண் கேட்க இருக்கும் கருத்தைச் சொல்லி, சுபதினத்தில் பெண் கேட்டதில், முத்துவேலுபிள்ளையும் அவர் மனைவியும் "நீங்கள் விசாலாக்ஷியை ஞானசம்பந்தத்துக்கு விவாகஞ் செய்துகொள்ள ஸம்மதிக்காமற் போனாலும் நாங்கள் விடமாட்டோமே" என்று சொல்லிப் பெண் கொடுப்பதாக ஸம்மதித்தார்கள்.

**பெ**ண்வீட்டார் ஸம்மதத்தைக் கைக்கொண்டு முகூர்த்த நாள் நியமித்து, விவாகத்துக்கு வேண்டிய ஸாமான்கள் யாவுஞ் சேகரித்து, தஞ்சாவூரிலிருந்து ஆட்களை வரவழைத்துக் கொட்டைப்பந்தல் போட்டு, இராமன் செட்டியார் பழனியப்ப செட்டியார் மற்றும் தம்மையறிந்த பந்துமித்ரர் புடைசூழ, ஆநந்தவல்லியால் யானையேற்றம் பார்த்து, சுபதினத்தில் ஞானசம்பந்தத்துக்கும் விசாலாக்ஷிக்கும் விவாகத்தை முடித்தார்கள். பெண்ணும் பிள்ளையும் பெரியோர்களுக்கெல்லாம் நமஸ்காரஞ்செய்து அவர்கள் வாழ்த்துதலைப் பெற்றார்கள். விவாகத்துக்கு வந்திருந்தவர்கள் யாவரும் ஞானசம்பந்தத்துக்கேற்ற பெண்ணே கிடைத்ததென்றும், இவ்வளவு சிறப்பாக விவாகம் முடிந்ததை எங்கும் பார்க்கவில்லையென்றும் பேசிக்கொண்டார்கள்.

முத்துவேலு பிள்ளையும் அவர் மனைவியும் பெண்ணையும் பிள்ளையையும் சேலத்துக் கழைத்துப்போகவேண்டு மென்றும், யாவரும் அவ்விடம் வரவேண்டுமென்றும் வருந்திக் கேட்டுக் கொண்டு, யாவரையும் அழைத்துச் சென்று தாங்கள் செய்ய வேண்டிய மரியாதையைக் குறைவறச் செய்து, ஐயாயிரம் ரூபா பெண்ணுக்கு ஸ்ரீதனமாகக் கொடுத்தார்கள். பெரியசாமி பிள்ளையும் யாவரையும் தம்முடைய வீட்டுக் கழைத்துப்போய் விருந்து செய்தனுப்பினார். தியாகராஜ பிள்ளை திருச்சிராப்பள்ளிக்குத் திரும்புங்கால் திருஞானத்தையும் அவன் தாய் தந்தையையும், ஆநந்தவல்லியையும் அழைத்துவந்து, ஆனந்தவல்லிக்கு ஸ்ரீதனமாக இருபது காணி நன்செய் நிலம் வாங்கிக்கொடுத்தார். இலக்கைய பிள்ளையும் அவர் மனைவியும், முருகேசம் பிள்ளையும் அவர் மனைவியும், சித்திவிநாயகம் பிள்ளையும் அவர் மனைவியும், யாவரையும் திண்டுக்கல்லுக்கு அழைத்துப்போய்ப் பெரிய விருந்துகள் செய்தார்கள். தியாகராஜ பிள்ளை, தன் மாமனார் வீட்டிலிருந்து அவர்களுடைய நிலைமையை அறிந்து, நிலத்தின் பேரி லிருந்த கடனைத் தீர்த்து அவர்களை ஸௌகரியமாக இருக்கச்செய்து திரிச்சிராப்பள்ளிக்கு வந்து சேர்ந்தார். பின்பு ஆநந்தவல்லியை வளர்த்த கிழவிக்கு நிலம் வாங்கிக்கொடுக்கிறேன் என்றதற்கு, அவள் ஸம்மதிக்காம லிருந்தாள். ஆநந்தவல்லி "என்னோடு என் பாட்டியார் எப்பொழுதும் இருப்பார்கள். அவர்களுக்கு ஒன்றும் வேண்டியதில்லை" என்று சொல்லிவிட்டாள்.

துரைசாமி பிள்ளையும் அப்பாசாமி பிள்ளையும் காலஞ் சென்றபின், திருஞானம் ஆநந்தவல்லியை அதிகம் நேசித்து உலகத்துக்கு பயந்து நன்னடக்கையைக் கைப்பற்றி யாவரும் தன்னை மேலாகப் பேசும் விதம் நடந்துகொண்டான். அவனுக் கிருந்த காக்காய்வலியும் அவனுக்கு விவாகமானபின் நீங்கியது.

பார்வதி, தன் நாயகன் போனபின் செருக்கழிந்து, மாமனார் மாமியாரைக் கண்டால் பயந்து அவர்கள் சொல்வதற்கு

எதிர்வார்த்தை யாடாமல் நடப்பதைக் கண்டு, தியாகராஜ பிள்ளை அவளுக்கு வேண்டியதைக் கொடுத்துக்கொண்டிருந்தார். துரைசாமிக்குத் தலைதிவசங் கொடுத்தபின், பார்வதி தன்மாமனார் மாமியாரோடு வந்திருப்பதாகக் கேட்டுக்கொண்டு, அவர்களுக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தாள். துரைசாமி காலஞ் சென்றது முதல் சிவகுரு தன் பாட்டியாரை விநாடியும் விட்டு நீங்காதிருந்தான். தியாகராஜ பிள்ளை அவன் பேருக்கும் இருபதுகாணி நிலம் வாங்கிக்கொடுத்து, பார்வதியை அழைத்து, "நீங்கள் இஷ்டமானால் தனிக்குடித்தனம் செய்யலாம்" என்று பத்திரத்தைக் கொடுத்தார். அவள் அதை வாங்காமல் அவர் காலில் விழுந்து, "நான் அறியாமல் செய்த குற்றங்களை மனதில் வைத்து என்னை வேறாகப் போகச் சொல்லுகிறீர்கள். என்னை மன்னித்துத் தங்களுக்கும் மாமிக்கும் பணிவிடை செய்துகொண்டிருக்க உத்தரவு கொடுக்கவேண்டும்" என்று கண்ணீர் சோர வேண்டினாள். உன்னிஷ்டம்போல இருக்கலாமென்று அனுப்பி விட்டுத் தன் மனைவியை அழைத்து சிவகுருபேருக்கு நிலம்வாங்கியதையும் பார்வதிக்குத் தான் சொல்லியதையும் அவள் விரும்பியதையும் சொன்னார். அதைக் கேட்ட காமாக்ஷியம்மாள், "துரைசாமி இறந்தபின் பார்வதியின் குணம் முற்றிலும் மாறியிருக்கிறது. விசாலாக்ஷியை ஒரு வேலையும் செய்யவிடாமல் தானே யாவற்றையும் செய்கிறாள். விசாலாக்ஷிக்குத் தலைவாருவதும் பூச் சூடுவதும் அவளைச் சிங்காரிப்பதுமே அவளுக்கு வேலையாக இருக்கிறது. அவளுடைய பெண் கோகிலமும் விசாலாக்ஷியை விடாமல் அவளையே பிடித்துக்கொண்டு திரிகிறது. ஆனதால் அவர்கள் நம்மைவிட்டுப் போகார்கள்; நாம் நம்மிடத்திலே வைத்திருக்கவேண்டும்" என்றாள். தியாகராஜ பிள்ளை காமாக்ஷி சொல்லியதற்கு ஸம்மதித்திருந்தார்.

முருகேசம் பிள்ளை திருவளர்சோலையி லுள்ள நிலத்தை ஒப்புக்கொண்டு, அதை வாரத்திற்கு விட்டு, திண்டுக்கல்லில் மனைவியோடு தன் மாமனார் வீட்டிலிருந்தாலும், அடிக்கடி திரிச்சி

ராப்பள்ளிக்குத் தன் மனைவியோடு வந்து நெடுநாளிருந்து போவார்.

சுந்தரம் ஐயர் ஞானசம்பந்தத்தைப் பார்க்கும்பொழுதெல்லாம்,

"அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள."

என்ற திருக்குறளைச் சொல்லிக்கொண்டு தம்முடைய ஓய்வு காலத்தில் ஞானசம்பந்தத்தோ டிருப்பார்.

திரிச்சிராப்பள்ளியில் விசேடமான திருவிழா வரும் பொழுதெல்லாம், சேலத்திலிருந்தும் திண்டுக்கல்லிலிருந்தும் யாவரும் வந்து, எக்காலமும் சாஸ்திர ஆராய்ச்சி செய்து ஞானபூசையில் அழுந்தியிருந்தார்கள். சுபம்.

முற்றும்

